# கீன்ஸியப் பொருளாதாரம்

(KEYNESIAN ECONOMICS)

எம். ஜே. கே. தவராஜ்



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—453

# கீன்ஸீயப் பொருளாதாரம்

ஆசிரியர்
டாக்டர் எம். ஜே. கே. தவராஜ், எம்.ஏ, பி.எச்டி.,
நிதி நிருவாகப் பேராசிரியர்,
இந்தியப் பொதுத்துறை நிருவாக நிலையம்,
(Indian Institute of Public Administration)
இந்திரப் பிரஸ்தா எஸ்டேட்,
புது டில்லி,



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—May, 1973

T.N.T.B.S. (C.P.) No. 453

Tamil Nadu Text Book Society

**Keynesian Economics**

Dr. M. J. K. THAVARAJ

Price Rs. 6-60

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.'

Printed by
Metropolitan Printers,
Madras-600002.

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்

(தமிழகக் கல்வி – உள்ளாட்சித்துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பன்னிரண்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி. ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்திலிருந்து புகுமுக வகுப்பிலும் (P. U. C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்த நூலாசிரியர்களின் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது. இவ் வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெரு முயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வாணியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டுவருகிறது.

இவற்றுள் ஒன்றான 'கீன்ஸியப் பொருளாதாரம்' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 453ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க்குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 488 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை. ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# நூன்முகம்

தமிழ்நாட்டின் கல்லூரிகளில் தமிழன்னைக்கு உரிய இடம் அளிக்கப்பட வேண்டும் என்னும் என் கனவு நனவாகி வருவதைக் கண்டு பெருமிதம் அடைகிறேன்.

ஆதம்ஸ்மித், கார்ல்மார்க்ஸ் போன்ற மாபெரும் அரசியல்—பொருளாதார மேதைகளின் வரிசையில் ஒருங்கே வைத்து எண்ணப்பட வேண்டியவர் ஜான் மேனுர்ட் கீன்ஸ்; பொருளியல் உலகிலே மாபெரும் புலவர் எனக் கருதப்பட்ட மார்ஷலின் நிழலிலே வளர்ந்து வந்தவரெனினும் குருவை மிஞ்சிய சீடனாகித் தொன்மைப் பொருளாதாரப் பரம்பரையைக் கிழித்தெறிந்து புதுமையைப் புகுத்த முயன்றவர். கோட்பாட்டு ரீதியிலும் கொள்கை வடிவிலும் கீன்ஸ் உருவாக்கியளித்துள்ள சிந்தனைக் கருவூலங்கள் எண்ணிறந்தவை. முதலாம் உலகப்போருக்கு முன்பிருந்தே உள்நாட்டிலும் உலக அரங்கிலும் அவர் கலந்து கொள்ளாத பிரச்சினைகளே இல்லை என்னலாம். கீன்ஸ் வரைந்துள்ள அத்தனை நூல்களையும் கட்டுரைகளையும் கடைந்தெடுத்துக் கீன்ஸியப் பொருளாதாரமாக வடிப்பது எளிதான வேலையன்று. எனினும், கீன்ஸியப் பரம்பரையில் வந்த மாணவரும் ரசிகரும் ஏற்கெனவே இவ் வேலையைச் செய்துள்ளனர். எனவே, புதிய ஆராய்ச்சி எதுவும் இந் நூலில் மேற்கொள்ளப்படவில்லை. கீன்ஸியப் பொருளாதாரக் கருத்துகளைச் சுருக்கி விளக்கும் வகையில் வெளியிடப்பட்டுள்ள பல்வேறு நூல்களையும் தழுவி எழுதப்பட்டது இந் நூல். குறிப்பாக, டட்லி டில்லர்ட் (Dudley Dillard), க்லேன் (Klein), ஹாரிஸ் (Harris), ஹான்சன் (Hansen), குரிகரா (Kurikara) போன்ற பொருளியல் புலவர்கள் பலர் வடித்தெடுத்த பல்வேறு நூல்களையும் கட்டுரைகளையும் தழுவி எழுதப்பட்ட வழிநூல் என இதைச் சொல்லலாம்.

எனினும், தொடக்கத்திலிருந்து இறுதிவரை கீன்ஸியக் கருத்தோட்டங்களைச் ச ம த ர் ம க் கண்ணோட்டத்துடன் அணுகியிருப்பது விளங்கும். இப் புதுமையைப் புகுத்திய பொறுப்பு பெரும்பாலும் ஆசிரியரையே சாரும். சமதர்மச் சமுதாயத்தின் குறிக்கோள்களை முன்வைத்து இயங்கிவரும் இந் நாட்டில் பொருளாதாரக் கோட்பாடுகளையும் கொள்கைகளையும் சமதர்மக் கண்ணோட்டத்தில் அணுகுவது மிகவும் பயன் தருவதாகும். நடைமுறைப் பொருளாதாரப் பிரச்சினைகளில் ஆர்வங்கொண்ட அனைவருக்கும் இந் நூல் பெருந்துணையாக இருக்கும் என்பது எனது நம்பிக்கை.

எத்துணைச் சிக்கலான பொருளாக இருப்பினும் அதைத் தமிழின் வாயிலாய்ப் படித்து இன்புறும் வகையில் வரைய முடியும் என்ற நம்பிக்கையுடன் எழுதப்படுவது இந் நூல். பாமரரும் படித்துப் பயன் பெறலாமென்றாலும் கல்லூரி மாணவர்களையும் ஆசிரியப் பெருமக்களையும் மனத்திற்கொண்டே இந் நூல் எழுதப்பட்டுள்ளது. பொருளியலிலுள்ள கடினமான பகுதிகளுள் கீன்ஸீயப் பொருளாதாரமும் ஒன்றாகும். எனவே, ஒருமுறை படித்துவிட்டால் மட்டும் நூலின் உள்ளடக்கத்தைத் தெளிவுற மனத்திற் பதித்திட இயலாது. கலைச்சொற்கள் பலவற்றைக் கொண்ட கடினமான பகுதிகளில் காணப்படும் கருத்துகளைப் பன்முறை படித்தாலே மனத்திலிறுத்த முடியும். அத்தகைய சிக்கலான பகுதிகள் பல சிறு எழுத்தில் உள்ளடக்கி அச்சிடப்பட்டுள்ளன.

சமத்துவத்தோடு கூடிய பொருளாதார வளர்ச்சிக்குத் தனி உடைமை உகந்ததா? பொதுவுடைமை பொருத்தமானதா? சந்தையைச் சார்ந்து இயங்குவது போதுமா? பொருளாதாரத்தின் பல்வேறு பகுதிகளையும் ஒருங்கே இணைக்கக் கூடிய திட்டத்துக்குட் பட்டு இயங்குகின்ற பொருளாதார அமைப்பு வேண்டுமா? அல்லது, ஆக்ககரமான துறைகளைத் தனியாரின் கையில் விட்டுவைக்கும் கலந்த பொருளாதாரந்தான் சமத்துவத்தையும் துரிதமான பொருள் வளர்ச்சியையும் ஒருங்கே அடைவதற்கு வசதியான வாகனமா? என்ற பல கேள்விகள் நொடிக்குநொடி எழுவது இயற்கை. இச் சூழ்நிலையில் தனிவுடைமையின் அடிப்படையில் பெரும்பாலும் சந்தையைச் சார்ந்து இயங்குகின்ற சமுதாயங்களில் கொள்கைகள் சுரக்கும் சுனைகளிலெல்லாம் கீன்ஸீயக் கருத்துகள் குடிகொண்டிருப் பதைக் காணலாம். பெரும் பொருளாதார மந்தத்தின்போது (Great Economic Depression) சவக்குழியின் வாயிலை நெருங்கித் திரும்பி வந்த முதலாளித்துவப் பொருளாதாரங்களுக்கு உயிர்ப்பிச்சையளித்து மீட்பதற்கு உதவியது கீன்ஸீயக் கருத்துகள். அதே அடிப்படையில் பின்தங்கிய நாடுகளில் நிலவிவரும் எளிமைத்தனத்தையும் ஏற்றத் தாழ்வுகளையும் போக்க முடியுமா? என்பது பெரும் பிரச்சினையாக இருந்து வருகிறது. எனவே அரசியல், பொருளாதாரப் பிரச்சினை களில் ஆர்வங்கொண்ட அனைவரும் கீன்ஸீயப் பொருளாதாரத்தை ஊன்றிப் படிப்பது இன்றியமையாததாகும்.

எம். ஜே. கே. தவராஜ்

# பொருளடக்கம்

# பட்டியல்

பக்கம்



# வரைபடங்களின் பட்டியல்

பக்கம்

# 1. கீன்ஸீயக் கருத்துகளின் வளர்ச்சி

*[தொன்மைப் பொருளாதாரக் கோட்பாடுகளில் தோய்ந்தவர் — மார்ஷலின் மரபில் வளர்ந்த மாணவன் — கிட்டிய வாய்ப்புகள் — சூழ்நிலையால் சுரந்த சிந்தனைகள் — தங்க நாணய முறையால் நேர்ந்த பங்கம் — பணப்பரிமாணக் கோட்பாட்டின் குறைபாடு — மந்தச் சேற்றில் பதிந்த பொருளாதாரச் சகடம் — மிஞ்சிய சேமிப்பால் விளைந்த கேடு — தலையிடாக் கொள்கையின் தோல்வி.]*

காட்டுமிராண்டியாகவும், நாடோடியாகவும் இருந்த மனிதன் எப்படி நாகரிக வாழ்க்கையை நோக்கிப் படிப்படியாக முன்னேறி வந்திருக்கிறானோ அதைப் போலவே அவனது அரசியல் பொருளாதார வாழ்க்கையும் அமைப்பும் உருமாறி வந்திருப்பது கண்கூடு. இயற்கையின் இயல்புக்கு இயைந்ததோர் பொதுவுடைமைப் பொருளாதார அடிப்படையில் வாழ்ந்து வந்தான், ஆதிமனிதன். நாம், நமது என்ற பொதுநிலை இருந்தபோதே ஒரு கூட்டமோ, இனமோ அண்டை அயலாரை அடிமை கொண்டு அவர்களது சொத்துகளை அபகரித்து, மக்களை அடிமைகளாக்கும் பழக்கம் ஆரம்பித்தது. நாம் என்ற நிலைமாறி நான், எனது என்ற எண்ணம் தலைதூக்கிய பின்னர் அடிமைமுறை பலமாக வேரூன்றியது. நாளடைவில் அடிமைமுறை மாறிப் பண்ணையடிமைமுறையை அடிப்படையாகக் கொண்ட பிரபுத் துவமாக வடிவெடுத்தது. காலப்போக்கில் நிலத்தினடியாக அமைந்த பொருளாதாரத்தில் வாணிகமும் ஆங்காங்கே தலைகாட்டலாயிற்று. வாணிகமும், தொழில் வளர்ச்சியைத் தூண்டியது. பொருளாதார அடிப்படை இவ்வாறு உருமாறி வளர்ந்தது போலவே தேசிய உணர்ச்சியினடியாகப் பலமிக்க நாட்டு அரசியலும் கட்டி எழுப்பப் பட்டது. ஒவ்வொரு நாடும் தனது பொருளாதாரம் வளம் பெற்று ஓங்கவேண்டும் என்ற ஆசையால் உந்தப்பட்டது. தன்னாட்டின் செல்வத்தைப் பெருக்கக்கூடிய வகையில் அரசாங்கம் பொருளாதார வாழ்க்கையில் தலையிட்டு விவசாயத்தை விருத்தி செய்ய வேண்டும்; தொழில் வளர்ச்சியைத் தூண்ட வேண்டும்; ஏற்றுமதியை அதிகரிக்க வேண்டும்; இறக்குமதியைத் தடுத்துக் குறைக்க வேண்டும் என்பன

போன்ற கோட்பாடுகளையும், கொள்கைகளையும், கொண்டதுதான் வணிகத்துவம் (Mercantalism). சுருங்கக் கூறின், தேசீய உணர்ச்சியின் பொருளாதார வடிவமே வணிகத்துவம். மாறாக, அரசியல் தலையீடு எதுவுமின்றி விலைவாசியைச் சமன்செய் சக்கரமாகக் (Balance Wheel) கொண்டு தானாக இயங்கும் பொருளாதார அமைப்பை ஆதரிப்பவர்களைத் தொன்மைப்பொருளாதாரிகள் (Classical Economists) என்று அழைப்பர்.

தொன்மைப் பொருளாதாரக் கோட்பாடுகளில் தோய்ந்தவர்

தனிநபர் ஒவ்வொருவரும் தனது நலனுக்கு உகந்தது எது என்று தெரிந்து அதன்படி தனது பொருளாதார நடவடிக்கைகளை அமைத்துக் கொண்டால், பொருளாதாரம் முழுவதும் திறமையுடன் இயங்கி வளரும் என்ற சித்தாந்தத்தை அடிப்படையாகக் கொண்டது தான் தொன்மைப் பொருளாதாரம். அதன்படி ஒவ்வொரு நாடும் எந்தெந்தத் துறையில் அல்லது தொழிலில் சிறந்து விளங்கக் கூடிய வாய்ப்புகளும் வளங்களும் பெற்றுள்ளதோ அதன்படி அதன்பொருளா தாரம் வளருவதற்கான வாய்ப்புகள் வேண்டும். பொருளுற்பத்தியின் தராதரச் செலவுகளுக்கேற்ப (Comparative Cost) தங்குதடையற்ற பொருளாதார வளர்ச்சியும் அயல்நாட்டு வாணிகமும் அமைதல் வேண்டும் என்பது தொன்மைப் பொருளாதாரிகளின் கருத்து.

அரசாங்கத் தலையீடின்றித் தராதரச்செலவின் அடிப்படையில் வளரும் அயல்நாட்டு வாணிகத்தைத் தடையிலா வாணிகம் (Free Trade) என்று அழைத்தனர். அதைப் போலவே உள்நாட்டுப் பொருளாதாரம் அரசாங்கத் தலையீடின்றி விலைவாசிகளின் தூண்டு தலால் இயங்கி வருமானால், அதைத் தடையிலாப்போட்டி (Free Competition) என்று அழைத்தனர்.

பண்ணையடிமைமுறையின்கீழ் நிலமே முக்கியமான உற்பத்திச் சாதனமாக இருந்தது. அதில் உழைத்த மக்கள் அடிப்படை உரிமைகள் எதுவுமின்றி வழிவழியாக நிலத்தோடு பிணைக்கப்பட்டிருந்தனர். உற்பத்தியில் பண்ணையடிமைகளின் வயிறு கழுவுவதற்குப் பகிர்ந் தளித்தது போக, உபரியைப் பலதரப்பட்ட நிலப்பிரபுக்களும் அவர் களின் மகாப் பிரபுவான மன்னனும் ஆண்டு அனுபவித்து வந்தனர். ஆனால் முதலாளித்துவப் பொருளாதாரத்தில் மூலதனம் முக்கிய இடம் வகிக்கின்றது. நிலம் இயற்கையின் கொடை எனலாம். ஆனால் இயற்கையும், மனித உழைப்பும் இணைந்தே பொருளுற்பத்தியாகிறது. உற்பத்தியில் நுகர்ந்தது போக, எஞ்சியதை மேன்மேலும் உற்பத்தியைப் பெருக்குவதற்கு உறுதுணையாகப் பயன்படுத்தினால் அதை மூலதனம் என்கிறோம். எனவேதான் தொன்மைப்

பொருளாதாரத்தின் தந்தையெனப்படும் ஆதம்ஸ்மித் (Adam Smith) உழைப்பே பொருள்களுக்கு மதிப்பூட்டுகிறது என்று வலியுறுத்தினர். அதையொட்டியே காரல் மார்க்ஸ் (Karl Marx) முன்னுள் உழைப்பின் திரட்சியே மூலதனம் என்று மொழிந்தார். உழைப்பாளர் நல்கும் எச்ச உழைப்பே மூலதனமாக வடிவெடுக்கிறது. ஆனுல், அதே சமயத்தில் அம் மூலதனத்தை ஆட்கொள்ளுபவர்களைச் சார்ந்தே உழைப்பாளர்கள் அன்ருடம் வயிறு வளர்க்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுள்ளது. பாட்டாளிகளின் இந்த அவலநிலையைப் பயன் படுத்தித்தான் முதலாளிகள் தங்கள் மூலதனத்தைப் பெருக்க முடிகிறது. இவ்வாறு முதலாளிகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் பொருளாதாரத்திற்கு முதலாளித்துவம் என்று பெயர்.

முதலாளித்துவப் பொருளாதாரத்தில், உழைப்புக்கு ஊதிய மாகக் கூலி கிடைக்கிறது. முதலாளித்துவப் பொருளாதார வளர்ச்சியை நீண்டகாலக் கண்ணேட்டத்தோடு நோக்கிய ஆதம் ஸ்மித் போன்றவர்கள், உழைப்பாளருக்குக் கொடுக்கும் ஊதியம் அவர்கள் உடலோடு உயிர் ஒட்டியிருந்து சோர்வற்று உழைப்பு நல்கக் கூடிய பிழைப்புக் கூலியாக (Subsistance Wage) இருக்க வேண்டும்; அதற்குமேல் கொடுத்தால் மூலதன வளர்ச்சி குன்றும்; எனவே உழைப்பாளர்கள் அனைவருக்கும் வேலை கொடுப்பதற்குப் போதுமான கூலி நிதி (Wages Fund) இருக்காது; அதன் காரணமாக உழைப் பாளரில் சிலருக்கு வேலை கிடைக்காமல் போகும்; எனவே, இருக்கின்ற வேலைவாய்ப்புகளைக் கைப்பற்றுவதற்காக இல்லாதவர்கள் உள்ளவர் களோடு போட்டியிட்டுக் கூலியைக் குறைத்துப் பிழைப்புக்கூலியின் அளவிற்குக் கொண்டு வந்துவிடுவர்; அவ்வாறின்றிக் கூலி, பிழைப்புக் கூலிக்கும் குறைந்தால் அன்ருடம் வயிறு கழுவவே அது போதாது; எனவே உழைப்பிலே தெம்பு குன்றும்; சோர்வு ஏற்படும்; வியாதி, கொள்ளைநோய்க்கு இலகுவில் இலக்காவர்; ஆயுள்நாள் குன்றும்; எனவே, உழைப்பாளரின் எண்ணிக்கை தேவையைக் காட்டிலும் குறைவாக இருக்கும்; ஆகவே கூலி உயர்ந்து பிழைப்புக்கூலியை எட்டிப்பிடிக்கும் என்று வாதாடினர். இவ்வாறு இலகுவில் நெகிழ்ந்து கொடுக்காமல் இரும்புபோல் உறுதியாகவும், கடுமையாகவும் இருந் தமையால் இவ் விதியைக் கூலி நிர்ணய இரும்பு விதி என (Iron Law of Wages) அழைத்தனர். இந்த அடிப்படையிலேயே மறைத் திரு. தாமஸ் மல்த்தஸ் (Thomas Malthus) என்ற தொன்மைப் பொருளா தாரியும் உணவுப்பொருள்களைக் காட்டிலும் மக்கள்தொகை அதிவேகமாக வளருவதால், பஞ்சம், பட்டினி, பசி, வியாதி, கொள்ளை நோய், போர் ஆகியவற்றின் அழிவுக்கரங்களால் தீண்டப்பட்டு அப்போதைக்கப்போது மட்டுப்படுத்தப்படும் என்று அச்சுறுத்தினர். அதைப்போலவே டேவிட் ரிக்கார்டோவும் (David Ricardo)

மூலதனத்திற்கு ஊதியமாகக் கொடுக்கும் இலாபம் ஆக்கமுள்ளது; ஆனால் நிலம் படைத்தவர்களுக்குக் கொடுக்கும் வாரம் (Rent) ஆக்க மற்றது; எனவே வாரத்தைக் குறைத்து இலாபத்தை பெருக்க வேண்டும் என்று வாதாடினார் என்பதுவும் குறிப்பிடத்தக்கது. சுருங்கக்கூறின், தொன்மைப் பொருளாதாரிகள், இலாபத்தையும், அதனடியாகப் பிறக்கும் சேமிப்பையும், அதை நாடிச் செல்லும் முதலீட்டையும், அதன் காரணமாகத் திரளும் முதல் திரட்சியையும் கரமேந்தி வரவேற்றனர். செலவைச் சுருக்கிச் சிக்கனப்படுத்திச் சேமிப்பவர்களைப் போற்றி, பாராட்டினர். அதே சமயத்தில், உழைப்பாளர்களுக்குக் கிடைக்கும் ஊதியத்தைப் பிழைப்புக் கூலிக்குமேல் உயரவிடுவது தவறு என்று கருதி வந்தனர்.

குறுகிய காலக் கண்ணோட்டத்தில் முனைந்திருந்த புதுச்சம்பிர தாயப் பொருளாதாரிகள் (Neo Classical School of Economists) நாட்டுவருவாயை, இலாபம், கூலி என்று இரு கூறுகப் பகுத்தனர். முதலாளிகள் இலாபத்தில் ஒரு பகுதியைத் தங்களது அன்றாடத் தேவைகள், வசதிகள், சல்லாபங்கள் போன்ற நுகர்வுப் பொருள்களில் செலவிடுவர்; எஞ்சியதை மீதம் பிடிப்பர். உழைப்பாளர்கள் தங்களுக்குக் கிடைக்கும் பிழைப்புக் கூலியை அத்தியாவசிய மான அன்றாட நுகர்வுப் பொருள்களில் செலவிடுவர். எனவே நாட்டுவருவாய், நுகர்வு (Consumption), சேமிப்பு (Savings) என்றாகிறது. சேமிப்பை, முதலாளிகள் மூட்டைகட்டி முடக்கி வைக்காமல் முதலீடு செய்வர். வெளிநாட்டுத் தொடர்பே இல்லாத தொரு பொருளாதாரத்தில் சேமிப்பும், முதலீடும் (Investment) சமநிலையில் இருத்தல் வேண்டும். அவ்வாறின்றி, நாட்டுவருவாய் நுகர்வின் பங்கு மிகுந்து சேமிப்புக் குன்றினால் நுகர்வுப்பொருள் களுக்கு உள்ள தேவை அதிகரிக்கும்; அப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்களில் முதலீடு தேவைப்படும். ஆனால், போதுமான சேமிப்பு இராது. எனவே, சேமிப்பைத் தூண்டக் கூடிய வகையிலும், முதலீட்டை மட்டுப்படுத்தக்கூடிய வகையிலும் வட்டிவீதம் (Rate of Interest) உயரும். அதன் விளைவாக, சேமிப்பும், முதலீடும், சமன்செய்யப்படும். மாறாக, நாட்டு வருவாயில் நுகர்வின் பங்கு குன்றி, சேமிப்பு மிகுந்தால், நுகர்வுப் பொருள்களுக்குள்ள தேவை குறையும். அப் பொருள்களை உற்பத்தி செய்யும் ஆலைகளில் முதலீடு குன்றும். சேமிப்பு முழுவதும் முதலீட்டில் உறிஞ்சப்படாமல் எஞ்சி நிற்கும். எனவே, சேமிப்பைக் குறைத்து முதலீட்டைத் தூண்டக்கூடிய வகையில் வட்டிவீதம் குறையும். அதன் பயனாகச் சேமிப்பும் முதலீடும் சமன்செய்யப்படும். சுருங்கக் கூறின், வட்டிவீதம், சேமிப்பையும், முதலீட்டையும்

சமநிலையில் வைத்திருக்க உதவும் கருவியாகும் என்பது தொன்மைப் பொருளாதாரக் கோட்பாடுகளில் ஒன்று.

மேலும் பணத்தின் மொத்த அளவிற்கும் விலைவாசிகளுக்கும் நேரடித் தொடர்பு உண்டு என்று தொன்மைப் பொருளாதாரிகள் நம்பினார்கள். இத்தகைய நேரடித் தொடர்பை இர்விங் பிஷர் (Irving Fisher) என்பவர் தமது பணப்பரிமாணக் கோட்பாட்டின் (Quantity Theory of Money) மூலம் வலியுறுத்தினார். பொருளுற்பத்திக்கும் அவற்றைக் கைமாற்றி நுகர்வோரிடம் சேர்ப்பதற்கும் பணம் தேவைப்படும், ஆனால் தேவைக்கு மிஞ்சி பணம் அளிக்கப்படுமானால் விலைகாட்டி (Price Index) உயரும்; பணவீக்கம் (Inflation) ஏற்படும். மாறாக, தேவைக்குப் போதுமான பணம் அளிக்கப்படாவிட்டால், பணவாட்டம் (Deflation) ஏற்படும்; விலைகாட்டி சரியும் என்பது தொன்மைப் பொருளாதாரிகளின் பொதுப்படையான கருதுகோள்.

தொன்மைப் பொருளாதார மரபின்கீழ் ஒவ்வொரு நாட்டின் நாணயத்தின் (செலாவணி) மதிப்பு ஒரு குறிப்பிட்ட அளவான தங்கத்தின் மதிப்போடு இணைக்கப்பட்டிருந்தது. அத்தோடு அயல் நாட்டுக் கொடுக்கல் நிலையை (Balancc of Payments) சமன்செய்யும் பொருட்டு ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்குத்தாராளமாகத் தங்கம் ஏற்றுமதி, இறக்குமதி செய்யப்பட்டது. வாணிகக் கொடுக்கல் நிலை ஒரு நாட்டிற்குச் சாதகமாக இருப்பின், அந் நாட்டிற்குள் அயல் நாட்டுத் தங்கம் இறக்குமதியாகும். நாட்டிலுள்ள தங்கத்தின் அளவு அதிகரிப்பதால் அதற்கேற்ப நாணயங்களும் செலாவணியும் பெருக்கப்படும். தேவைக்கு மிஞ்சியிருக்குமானால் அப் பணப்பெருக்கத்தால் விலைகாட்டி உயரும். ஏற்றுமதிப் பொருள்களின் விலைவாசிகள் அதிகரித்தால், அயல்நாட்டவர் அவற்றை முன்போல் விரும்பி வாங்கமாட்டார். எனவே ஏற்றுமதி குறையும். அந்தச் சமயத்தில், உள்நாட்டுப் பொருள்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, அயல் நாட்டுப் பொருள்கள் மலிவாகும். எனவே அவற்றின் இறக்குமதி அதிகரிக்கும். இவ்வாறு ஏற்றுமதி குறைந்து, இறக்குமதி அதிகரிப்பதால் வாணிகக் கொடுக்கல் நிலையில் (Balance of Trade) உள்ள சாதகமான நிலைமாறிச் சமநிலை ஏற்பட ஏதுவாகும். மாறாக, அயல் நாட்டுக் கொடுக்கல்நிலை பாதமாக இருப்பின் அதை ஈடு செய்யும் அளவிற்குத் தங்கம் நாட்டைவிட்டு வெளியேறும். அதன் பயனாகத் தங்கத்தின் அளவோடு இணைக்கப்பட்ட உள்நாட்டுச் செலாவணி (நாணயம்)யின் அளவு குன்றும். தேவைக்கு வேண்டிய பணமில்லாமல் பொருளாதாரம் வாடுமானால், விலைகாட்டிச் சரியும். ஏற்றுமதிப் பொருள்கள் மலிவதால் அயல்நாட்டவர் அவற்றை

விரும்பி வாங்குவர். அயல்நாட்டுப் பொருள்கள் கிராக்கியாவதால் அவற்றை விரும்பி இறக்குமதி செய்யத் தயங்குவர். இவ்வாறு ஏற்றுமதி தூண்டப்பட்டு, இறக்குமதி மட்டுப்படுத்தப்படுவதால் கொடுக்கல் நிலையிலுள்ள பாதகநிலை மாறி சமநிலை ஏற்பட ஏதுவாகும். இவ்வாறு தங்கத்தின் துணைகொண்டு உள்நாட்டு விலைவாசிகளையும் அயல்நாட்டுக் கொடுக்கல் நிலையையும் சமநிலையில் வைத்திருக்க வேண்டி வகுத்த முறையைத்தான் பொன் (நாணயத்) திட்டம் (Gold Standard) என்று தொன்மைப் பொருளாதாரிகள் வழங்கலாயினர்.

மேலே சுருக்கி விளக்கியதுபோல், கூலி, சேமிப்பு, வட்டிவீதம், விலை, வெளிநாட்டு வாணிகம் இன்ன பல பொதுவான விதிகளை அடிப்படையாகக் கொண்டு கட்டப்பட்ட பொருளாதாரக் கோட்பாடுகளையே தொன்மைப் பொருளாதாரம் என்பர். இவ் விதிகளுக்கு உட்பட்டு முதலாளித்துவப் பொருளாதாரம் தானாகவே இயங்க வல்லது என்று தொன்மைப் பொருளாதாரிகள் நம்பினார்கள். அரசாங்கத் தலையீடின்றி அது இயங்கவல்லது என்று அவர்கள் எடுத்தோதினார்கள். அத்துடன் பொருளாதாரத்தின் ஒவ்வொரு உறுப்பும் திறம்பட செயலாற்றினால், வேலை நாடி வரும் உழைப்பாளர்கள் அனைவருக்குமே வேலை கிடைக்கும் என்பது அவர்களது துணிபு. இத்தகைய தொன்மைப் பொருளாதாரக் கோட்பாடுகளில் தோய்ந்தவர்தாம் ஜான் மேனார்ட் கீன்ஸ் (John Maynard Keynes).

**மார்ஷலின் மரபில் வந்த மாணவன்**

தொன்மைப் பொருளாதாரிகளுள் முக்கியமான ஆதம் ஸ்மித், மால்த்தஸ், ரிக்கார்டோ போன்றவர்கள் இங்கிலாந்தைச் சேர்ந்தவர்கள். சற்றேறக்குறைய 18ஆம் நூற்றாண்டின் பின்பகுதியிலிருந்து 19ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதி வரையிலும் உலகப் பொருளாதாரத்தின் முன்னணியில் இருந்து வந்தது இங்கிலாந்து. எனவே, தலையிடா வாணிகம், தலையிடாப் போட்டி போன்ற கொள்கைகள் அன்றைய இங்கிலாந்தில் பொருளாதார நலன்களுக்கு உகந்ததாக இருந்தன. அதே சமயத்தில் இங்கிலாந்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது பொருள் வளர்ச்சியில் அன்று பின் தங்கியிருந்த அமெரிக்கா, ஜெர்மனி, ரஷ்யா போன்ற நாடுகள் தலையிடாக் கொள்கையையோ தலையிடாப் போட்டியையோ வரவேற்கவில்லை. மாறாக, அமெரிக்காவில் அலெக்சாண்டர் ஹாமில்டனும் (Alexander Hamilton), ஜெர்மனியில் பிரெடரிக் லிஸ்டும் (Frederick List), ரஷ்யாவில் கவுன்ட் செர்ஜியஸ் விட்டியும் (Count Sergius Witte) அரசாங்கம் காப்புவரிகளின்மூலம் இனத்தொழில்களைப்

பாதுகாத்தால்தான் அவை பலமடைந்து வேகமாக வளர்ந்து, பின் தங்கிய பொருளாதாரங்களின் பிற்போக்குத் தன்மையைப் போக்கி, துரிதமான வளர்ச்சி வேகத்தைத் தூண்ட முடியும் என்று வாதாடினர்கள். அதற்கேற்ப தங்கள் நாட்டுத் தொழில்கள், விவசாயம், வாணிகம் ஆகியவற்றை மேம்படுத்தும்பொருட்டு அரசாங்கம் தலையிட்டுக் காப்புவரிகள், உதவிகள், கொடைகள் போன்ற தலையீட்டுக் கொள்கைகளைக் கையாளவேண்டும் என்று அவர்கள் அவ்வப்போது தங்கள் அரசுகளுக்கு ஆலோசனைகள் அளித்து வந்தனர். இவர்கள் முதலாளித்துவப் பொருளாதார அடிப்படையிலேயே செயல்பட்டார்கள் என்றாலும், தொன்மைப் பொருளாதாரிகளின் கோட்பாடுகளை அப்படியே ஏற்றுக்கொள்ளவில்லை. ஆகவே அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலுமுள்ள பொருளாதார மேதைகள் பலரைத் தொன்மைப் பொருளாதாரிகளின் பட்டியலில் சேர்ப்பதில்லை. இருந்தாலும் உலகெங்கும் தொன்மைப் பொருளாதாரிகளை ஆதரிப்பவர்கள் இருக்கத்தான் செய்தார்கள். எனவே, தொன்மைப்பொருளாதாரத்தின் ஆணிவேர் இங்கிலாந்தில்தான் ஊன்றப்பட்டதென்றாலும் அதன் விழுதுகள் ஊன்றாத நாடுகளே இல்லை என்னலாம். அவர்களிலே ஒரு சாரார் நுகர்வோர் தங்கள் பயன்பாட்டையும், முதலீடு செய்வோர் தங்கள் இலாபத்தையும், உற்பத்திக் காரணிகளை உடையவர்கள் தங்கள் ஆக்க சக்தியையும் உச்சப்படுத்துவது எப்படி என்பன போன்ற கேள்விகளுக்கு விடையளிக்கக்கூடிய விதிகளையும் கோட்பாடுகளையும் வகுப்பதில் முனைந்திருந்தனர். இவர்களை இறுதிநிலைக் கருத்தோர் (Marginalist School) என்று அழைப்பர். ஜெவன்ஸ் (Jevons), வால்ரஸ் (Walrus), வெங்கர்ஸ் (Wengers) போன்றவர்கள் இறுதிநிலைக் கருத்தோரில் முக்கியமானவர்கள். இவர்களும் தொன்மைப்பொருளாதாரத் துறையினரில் ஒரு பிரிவினர்தாம்.

இதுபோக, ஆல்பிரெட் மார்ஷல் (Alfred Marshall), ஏ. ஸி. பிகு (A. C. Pigow), ஜான் மேனர்ட் கீன்ஸ் (John Maynard Keynes) போன்றவர்களையும் புதுச்சம்பிரதாயக் கருத்தோர் (Neo classical School) என்று அழைப்பதுண்டு. இவர்களுள் மார்ஷல் மிக முக்கியமானவர். இவர் புதுச்சம்பிரதாயக் கருத்தினராயினும் ஆதம்ஸ்மித் முதல் ஆல்பிரட் மார்ஷல் வரையுள்ள எழுத்தாளர்களில் தலைசிறந்த எழுத்தாளர்களின், கருத்தோட்டங்களைக் கடைந்து வடித்து எடுத்தார்; ஆங்காங்கே சிதறிக் கிடந்த ஆராய்ச்சியின் முடிவுகளைச் சுண்டி எடுத்து வகைப்படுத்தி ஒருங்கே தொடுத்தார்; தொன்மைப் பொருளாதாரத்தினடியாகப் பிறந்த மாறுபட்ட பல்வேறு கருத்துக்களனைத்தையும் பொருத்தி இணைத்தார். அதுவரை பொருளாதாரம் கண்ட கருத்தோட்டங்களை முறைப்படுத்திப்

'பொருளாதாரத் தத்துவங்கள்' (Principles of Economics) என்ற ஒப்பற்றதோர் நூலாக வெளியிட்ட பெருமை மார்ஷலையே சாரும். மார்ஷல் ஒரு சிந்தனைச் சிற்பி. அவரைக் கண்டவர்களும் கேட்டவர்களும் அவரது நூலைப் படித்தவர்களும் பிரமிக்கத்தக்க அவரது ஆழ்ந்த அனுபவத்தையும் அறிவாற்றலையும் கண்டு வியந்தனர். பொருளாதாரக் கோட்பாடுகளை உள்ளும் புறமும் துருவி ஆராய்ந்து கரைகண்டுவிட்டார் எனப் பலர் பாராட்டினர். மார்ஷலும், தமது மாணவரிடையே பொருளாதாரத்தின் அடிப்படைக் கோட்பாடுகளைப் புரட்சிகரமான வகையில் மாற்றி அமைக்க முடியும் என மனப்பால் குடிப்பது தவறு; அவ்வாறு மாற்ற முயலுவது வீண் முயற்சி என்று வலியுறுத்தி வந்தார். அதே சமயத்தில், தமது நூலில் கண்ட தத்துவங்களின் துணைகொண்டு நடைமுறையில் பொருளாதார அமைப்பும் அதன் உட்பிரிவுகளும் எவ்வாறு இயங்கி வருகின்றன, கோட்பாடுகளை நடைமுறையில் அமலாக்குவதால் ஏற்படும் விளைவுகள் என்ன என்பன போன்ற ஆராய்ச்சிகள் நடத்துவதற்கு எண்ணிறந்த வாய்ப்புகள் உண்டு; எனவே அத்தகைய ஆராய்ச்சியில் ஈடுபடும்படி மார்ஷல் தமது மாணவர்களை ஊக்குவித்து வந்தார். இத்தகையதோர் குருவின் வாயிலாகப் பாடம் கேட்டவர் கீன்ஸ்.

குருவைப் போலவே அடிப்படைக் கோட்பாடுகளை அலசி ஆராய்ந்து புத்தம் புதுக்கருத்தோட்டங்களை வகுக்கும் அறிவும் ஆற்றலும் கீன்ஸுக்கு இருந்தது. அளவை இயலில் (Logic) அவருக்கு அளவற்ற ஈடுபாடு இருந்தது. தலைசிறந்த தத்துவ மேதைகளான ஒயிட் ஹெட் (Whitehead), மூர் (Moore), பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் (Bertrand Russel) ஆகியோரோடு தொடர்பும் தோழமையும் கொண்டிருந்தார். எனவே, தத்துவத்தின் அடிப்படையாகப் பொருளாதாரக் கோட்பாடுகளை அலசி ஆராயும் தகுதியும் அவருக்கு இருந்தது. அதே சமயத்தில், நடைமுறைப் பிரச்சினைகளிலும் நடைமுறைப் பொருளாதாரத்திலும் (Applied Economics) கீன்ஸுக்கு ஆர்வமும் ஈடுபாடும் இருந்தது. எனவே, மார்ஷல் தமது மாணவருக்கென வகுத்த திட்டத்துக்கு உட்பட்டுப் பொருளாதார ஆராய்ச்சியில் முனைந்து செயல்படுவதற்கு கீன்ஸ் தயங்கவில்லை. கீன்ஸின் சிறந்த ஆராய்ச்சிகளில் பல அவரது குருவின் செல்வாக்குக்கு உட்பட்டுப் பணியாற்றியபோது பிறந்தவை. குறிப்பாக, 'இந்தியச் செலாவணியும் நிதியும்' (Indian Currency and Finance, 1913) என்ற நூலில் பொன்மாற்றுத்திட்டத்தின் (Gold Exchange Standard) அம்சங்களை அழகுபட எடுத்துரைத்தார்; அதைப் போலவே, இந்திய நிதியையும் செலாவணியையும் பற்றிய ராயல் கமிஷனது அறிக்கையில் (Report of the Royal Commission on Indian Finance and Currency, 1914) பணவியல் கோட்பாட்டை (Monitary Theory) அக் காலத்

துக்கு ஏற்றவகையில் மாற்றியமைத்தார். மார்ஷலின் மாணவர் தாமென்றாலும் குருவை மிஞ்சிய சீடனாகக் கீன்ஸ் இருந்தார். சான்றாக, மார்ஷல் வலியுறுத்தி வந்ததுபோல அவர் வகுத்த தத்துவங்களும் கோட்பாடுகளும் காலவரையின்றி நின்று நிலவும் என்று அவர் நம்பவில்லை. மார்ஷலது கருத்துகள் முழுமை பெற்றவை அல்ல. நடைமுறைக்கு ஒத்ததாகவும் அமையவில்லை. எனவே, நடைமுறைக்கு ஏற்றவகையில் அவற்றை அடியோடு மாற்றியமைக்க வேண்டியது அவசியம் என்று கீன்ஸ் வலியுறுத்தி வந்தார். கீன்ஸின் ஆக்கத்திறனைக் கண்டு மார்ஷலே மகிழ்ந்து பாராட்டியுள்ளார். குறிப்பாக, ராயல் கமிஷனில் பணவியல் கோட்பாட்டைத் திருத்தியமைத்த பணியை வியந்து கீன்ஸ் கைத்திறங் கொண்டதோர் கருத்தாளர், சிந்தனைச் சிற்பி, அபூர்வமான ஆக்கத் திறம் படைத்தவர் என்று மார்ஷல் பாராட்டினார். இது குருவின் பெருந்தன்மைக்கும் சீடனின் சிறப்புக்கும் ஓர் எடுத்துக்காட்டாகும்.

### கிட்டிய வாய்ப்புகள்

கீன்ஸுக்குக் கிட்டிய வாய்ப்புகள் அலாதியானவை. அவர் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் பதிவாளராகப் பணியாற்றி வந்தார். அவருடைய மனைவி, கேம்பிரிட்ஜ் நகரின் மேயராகப் பணியாற்றியவர். அன்றைய அறிவுலகிலே ஒப்பற்றதோர் இடம் வகித்து வந்தது கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகம் (Cambridge University). அதன் அறிவுச் சுனையின் சாரலிலே வளர்ந்தவர் கீன்ஸ். அவர் ஈட்டனிலே (Eaton) பள்ளிப்படிப்பை முடித்து கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தின் ஓர் உறுப்பான கிங்ஸ் கல்லூரியிலே (King's College) மாணவரானார்; தலைசிறந்த மாணவர்களிலொருவர் எனப் பெயர் பெற்றது மட்டுமின்றி 1905-ல் கேம்பிரிட்ஜ் மாணவர்மன்றத்தின் தலைமைப் பீடத்தையும் எட்டிப் பிடித்தார். போருக்குப் பின்னர் அதே கல்லூரியில் பொருளாளராகப் பணியாற்றும் வாய்ப்பு அவருக்குக் கிடைத்தது. கணக்கிலும் பொருளாதாரத்திலும் ஒருங்கே நிபுணத்துவம் கொண்டிருந்ததால் விரைவில் எக்கனாமெட்ரிக்ஸ் குழுவின் (Econometrics Society) தலைவருமானார். ஊக அளவைப் பற்றிய முடிவு (Treatise on Probability) என்ற ஆராய்ச்சியின் வாயிலாகக் கீன்ஸ், கிங்ஸ் கல்லூரியில் புகுவதற்கான வாய்ப்புக் கிட்டியது. அவரது அறிவுத்திறனைப் பாராட்டி கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகம் அவருக்கு உபகாரச் சம்பளம் வழங்கி (1909-ல்) ஆராய்ச்சித்துறையில் பணி புரியத் தூண்டியது. கூரியவாள் போன்ற அவரது கருத்துகள் பல வாதங்களைக் கிளப்பின. அனைவரும் அவரைப் பாராட்டினார்கள் என்றாலும் ஒரு சிலரே அவருடன் நெருங்கிய நட்பு கொண்டனர். 1911-ல் ராயல் பொருளாதாரக் குழுவினரால் (Royal Economics

Society) வெளியிடப்பட்ட 'பொருளாதாரப் பத்திரிகைக்கு' (Economic Journal) ஆசிரியராக நியமிக்கப் பெற்றூர். அன்று அது பொருளாதாரக் கருத்தரங்கின் முன்னணியில் நின்ற பத்திரிகை யாதலால், அதன் ஆசிரியர் என்ற முறையில் அதன் கொள்கைகளை வகுத்ததோடல்லாமல் பல்வேறு கருத்தோட்டங்களுக்கும் உயிரூட்டி உருவமளிக்கும் வாய்ப்பும் அவருக்குக் கிட்டியது. 1911 முதல் 1945 வரையில் கீன்ஸ் கொஞ்சங்கூட உற்சாகம் குன்றுமல் தொடர்ந்து இப் பொறுப்பை மேற்கொண்டு பணியாற்றி வந்தார். போருக்குப் பின்னரும் பொதுவாழ்வில் ஒரு சில வாய்ப்புகள் கீன்ஸுக்குக் கிடைத்தன. பொருளாதாரம் பற்றிய பல்வேறு ஆலோசனைக் குழுக் களில் அங்கம் வகித்ததுமட்டுமல்லாமல் நிதி, தொழில், ஆகியவை பற்றி அமைக்கப்பட்ட 'மாக்மில்லன் குழு'விலும் (Macmillan Committee) அவர் இடம் பெற்றூர். 1921 - 28 வரை தேசீய ஒருமித்த ஆயுள்கால இன்சூரன்ஸ் சங்கத்தின் (National Mutual Life Insurance Society) தலைவராகவும் நிருவாகப் பொறுப்பேற்றுச் செயலாற்றினூர். இவ்வாறு அரசாங்கம், தனியாரின் துறை இரண்டிலுமே நிறைந்த அனுபவம் பெறுவதற்கு அவருக்கு வாய்ப்புகள் கிட்டின.

முதலாளித்துவத்திலே ஆழ்ந்த பற்றும் அனுதாபமும் கொண்டவ ரென்றூலும், அரசியலிலே நேரடியாகப் பங்கு கொள்வதிலே அவருக்கு ஆர்வம் கிடையாது. ஆனூல் தமது கருத்துகளையோ கொள்கை களையோ கடைப்பிடிக்க விரும்பும் அரசியல்வாதிகளையோ கட்சி களையோ பயன்படுத்திக்கொள்ள அவர் தயங்கியதில்லை. அதே போல் நிருவாகத்திலும் அவருக்கு நிரந்தரமான விருப்பம் கிடையாது. வாலாய (Routine) வேலைகளை அவர் வெறுத்தொதுக்கினூர்; ஆனூல் படிப்பை முடித்ததும் இரண்டாண்டுகள் (1906–1908 வரை) பிரிட்டிஷ் நிருவாகத்தில் பணியாற்றினூர். அக் காலத்தில் அவர் இந்தியா இல்லத்தில் (India House) பணியாற்றியபோது இந்தியச் செலாவணி நிதி விவகாரங்களை ஊன்றிப் படிக்கும் வாய்ப்பைப்பெற்றூர். அதன் பயனூகப் பிறந்ததுதான் 'இந்தியச் செலாவணியும் நிதியும்' ஆகும். நிருவாகத் துறையைத் துறந்த கீன்ஸை, மார்ஷல் கல்வித்துறைக்குக் கவர்ந்த காரணத்தால் 1908-ல் கீன்ஸ், கிங்ஸ் கல்லூரியில் புகுந்தார் என்று கண்டோம். இவ்வாறு கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் விரிவுரையாளராகப் பணியாற்றி வந்த அவர் 1915-ல் மேலும் ஒரு சில ஆண்டுகள் அரசாங்க அலுவலை நாடி நிதியமைச்சவையில் சேர்ந்து பணியாற்றினூர்.

பொதுவாக நிதியமைச்சவையின் கொள்கைகளிலும் கோட்பாடு களிலும் அடிப்படையான கருத்து வேறுபாடுகள் இருந்த போதிலும் புத்தி தீட்சண்யமானதோர் நிருவாகி என்று கீன்ஸ் பெயர் பெற்றூர்.

அரசாங்கத்தில் பணியாற்றியபோதுதான் முதலாவது உலகப் போரை ஒட்டிக் கூட்டப்பட்ட உலகச் சமாதான மாநாட்டில் கலந்து கொள்ளும் வாய்ப்புக் கிடைத்தது. அம் மாநாட்டுக்குப்பின் திடீரென அரசாங்க அலுவலிலிருந்து அவர் விடுதலை பெற்றார். ஆனால்அரசாங்கத்துள் இருந்தபோதும் சமாதான மாநாட்டில் கலந்து கொண்டபோதும் பிறந்து, வளர்ந்த கருத்தோட்டங்களே 'சமாதானத்தால் ஏற்பட்ட பொருளாதார விளைவுகள்' (Economic Consequences of Peace), 1919) என்ற நூலாக வடிவமெடுத்தன. சமாதான ஒப்பந்தத்தின் விளைவுகளைத் தொடர்ந்து ஆராய்ந்த அவர், 1922-ல் ஒப்பந்தத்தின் சாராம்சங்களை மாற்ற வேண்டு மென்று வாதாடினார்.

மாணவனாக இருந்தகாலத்தில் பணப்பரிணாமக் கோட்பாட்டின் அடிப்படையை உற்றுநோக்கும் வாய்ப்பு கீன்ஸுக்குக் கிட்டியது. 1911-ல் பிஷருடைய கோட்பாடுகளில் அவர் அதிருப்தி தெரிவித்தார். பணப்பரிமாணக் கோட்பாட்டுக்கும் பொன்நாணய முறைக்கும் எத்தகைய தொடர்பு இருந்து வந்தது என்று ஏற்கனவே குறிப் பிட்டோம். 1898-ல் பௌலர் குழு (Fowler Committee) பொன் நாணய முறைதான் இந்தியாவுக்குப் பொருத்தமானது என்று கூறி இந்தியச் செலாவணியை பிரிட்டிஷ் செலாவணியோடு பிணைத்தது. 1913-ல் கீன்ஸ் இப் பிணைப்பு எத்துணைப் பொருத்தமானது என்று ஆராய்ந்து இந்தியச் செலாவணியும் நிதியும் என்ற தமது நூலில் (Indian Currency and Finance) வெளியிட்டார். அடுத்த ஆண்டில் ராயல் கமிஷனது அறிக்கையில் பணவியல் கோட்பாட்டின் அடிப்படைகளை ஆராயவும் அவருக்குக் வாய்ப்பு கிடைத்தது. முதலாம் உலகப்போர் முடிந்த பின்னரும், பணம், செலாவணி, நாணயமாற்று போன்ற பொருள்களைப்பற்றித் தொடர்ந்து சிந்தனை செய்ததன் விளைவாகப் பணவியல் சீர்திருத்தங்கள் பற்றிய சிந்தனையாகவும் (Treatise on Monetary Reform, 1923), பணம்பற்றிய சித்தாந்த மாகவும், (Treatise on Money, 1925) உருவெடுத்தன. ஒரு வகையில் முதலாம் உலகப்போருக்கு முன்னரே அரும்பிய பணம் பற்றிய சிந்தனைகள், போருக்குப்பின்னால் வளர்ந்த பொதுக்கோட்பாட்டின் (General Theory, 1936) ஒரு முக்கியமான பகுதியாக மலர்ந்தது எனலாம். கீன்ஸும் தமது 'பொதுக் கோட்பாட்டுக்கு' முன்னுரை எழுதும்போது தமது கருத்துகள் திடீரென்று தோன்றியவை என்று கொள்ளலாகாது என்றும் இளமைப் பருவத்திலேயே உதித்த கருத்துகள் காலப்போக்கிலே வளர்ந்து வடிவம் பெற்றுப் பொதுக் கோட்பாட்டில் பொறிக்கப்பட்டன என்றுதான் சொல்ல வேண்டும், என்றும் குறிப்பிட்டார். தொன்மைப்பொருளாதாரக் கோட்பாடுகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, கீன்ஸின் 'பொதுக்

கோட்பாடு' அடிப்படையில் முற்றிலும் வேறுபட்டதென்பது தெற்றென விளங்கும். ஆனால் இவ் வேறுபாட்டின் அறிகுறிகள் அவர் ஏற்கனவே எழுதிய நூல்களில் காணப்பட்டன. நாளடைவில் முதிர்ச்சி பெற்ற அக் கருத்தோட்டங்கள் தெளிவுடன் விளங்கும் வகையாகப் 'பொதுக்கோட்பாட்டில்' பொறிக்கப் பெற்றன. அத்தகைய கருத்தோட்டங்கள் அவர் மனதில் உதித்தவைதானென் ருலும் அவருக்குக் கிடைத்த ஒப்பற்ற வாய்ப்புகளினுலேயே அவற்றுக்கு உரமிட்டு, நீர்ப்பாய்ச்சி, ஊக்குவித்து, உருவாக்க முடிந்தது.

சூழ்நிலையால் சுரந்த சிந்தனைகள்

முதலாம் உலகப்போர் வரையில் மேற்கத்திய நாடுகளில் நிலவி வந்த முதலாளித்துவப் பொருளாதாரங்கள் சமாளிக்க முடியாத சிக்கல்கள் எதுவுமின்றிச் சுமுகமாக இயங்கி வந்தன. அப்போதைக்கப் போது வாணிகச் சுழல்களின் தாக்குதலுக்கு உள்ளானபோதிலும் அவற்றின் அடிப்படையை உலுக்கும் வகையில் விபரீதம் எதுவும் விளையவில்லை. போருக்குப் பின்னுல் பொருளாதாரத்தைத் தீண்டிய ஒருசில பீடைகளின் அறிகுறிகள் போருக்கு முன்னதாகவே காணப் பட்டன. இவற்றுள். பொன் நாணயத் திட்டத்தில் (Gold Standard) காணப்பட்ட உடைவும் அதன் பயனுகக் காணப்பட்ட பண வாட்டமும் குறிப்பிடத்தக்கவை.

பொன் (நாணய) முறையால் விளைந்த பங்கம்

பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியில் மேற்கத்திய நாடுகள் அனைத்துமே பொன் (நாணயத்) திட்டத்தைப் பின்பற்றலாயின. அக் காலத்தில் தென்னுப்பிரிக்காவிலும் அமெரிக்காவிலும் ஏராளமான தங்கம் கிடைத்தது. எனவே வாணிகக் கொடுக்கல் நிலையில் விழும் இடைவெளியை நிரப்பும்பொருட்டு, ஏற்றுமதி, இறக்குமதி செய்வதில் போதுமான தங்கம் தாராளமாகக் கிடைத்தது. அதைப் போலவே தங்கத்தின் அளவோடு இணைக்கப்பட்டிருந்த நாணயத் துக்கும் பெரிய தட்டுப்பாடு எதுவும் ஏற்படவில்லை. ஆனுல் அக்காலத் தில் தங்கத்தில் கணிசமான பகுதியை நுகர்வுப் பொருளாக இந்தியா இறக்குமதி செய்து வந்தது. அதன் காரணமாக உலகநாடுகளிடையே குறிப்பாக ஓரளவு பணவாட்டம் தோன்றலாயிற்று. பணவாட்டத் தின் அறிகுறிகளை உற்றுநோக்கிய கீன்ஸ், இந்தியச் செலவாணியும் நிதியும் என்ற தமது நூலில் இந்தியா, பொன் (நாணயத்) திட்டத் தைக் (Gold Standard) கைவிட்டுவிட்டுப் பொன்மாற்றுத் திட்டத்தைக் (Gold Exchange Standard) கையாளுவது நல்லது என்று ஆலோசனை கூறினர்.

முதலாவது உலகப்போருக்குப்பின் ஏற்பட்ட பொருளாதாரச் சிக்கல்களால், போரில் சம்பந்தப்பட்ட நாடுகளனைத்துமே பொன் (நாணயத்) திட்டத்தைக் கைவிட வேண்டியதாயிற்று. போரில் தோல்வியுற்ற ஜெர்மனி, வெற்றி பெற்ற நாடுகளுக்குப் போர்ப் பரிகாரமாக (War Reparations) பெருந்தொகையை ஆண்டுதோறும் செலுத்தி வரவேண்டும் என்று போர் ஒப்பந்தத்தில் கையெழுத்தாயிற்று. அதன்படி ஜெர்மனி உள்நாட்டில் பணவீக்க முறைகளைக் கையாண்டு பிரான்ஸுக்கும், இங்கிலாந்துக்கும் ஏற்றுமதி செய்ய வேண்டிய பொருள்களையும் தங்கத்தையும் சேகரிக்க முயன்றது. அதே சமயத்தில் போர்க்காலத்தில் நேசநாடுகள் அமெரிக்காவிடம்பட்ட கடனை அடைப்பதற்காகத் தங்களிடமிருந்த தங்கத்தை ஏற்றுமதி செய்ய வேண்டியதாயிற்று. அமெரிக்காவில் புகுந்த தங்கத்தால் உள்நாட்டுச் செலாவணிப் பெருக்கம் ஏற்படா வண்ணம் தடுக்கும் பொருட்டு அமெரிக்க அரசு தங்கத்தைப் புழக்கத்தில் இல்லாதபடி மலடாக்குவதற்கான (Sterilise) ஏற்பாடுகளைச் செய்தது. மாறாக, ஜெர்மனி, பணவீக்கமுறைகளை அத்துமீறிக் கையாண்டுப் பொருளாதாரத்தைச் சீரமைக்க முடியாமல் திணறியது. பொதுவாக, சுங்கச் சுவர் எழுப்புவது, செலவாணிகளைத் தரமிழக்கச் செய்வது, தொழில்களுக்கும் ஏற்றுமதிக்கும் மான்யங்களும் உதவிக்கொடைகளும் அளிப்பது, நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளைப் புகுத்துவது, இறக்குமதியைத் தடுப்பது போன்ற பல்வேறு உபாயங்களையும் கையாண்டு ஐரோப்பிய அரசுகள் தங்களை எதிர்நோக்கிய பிரச்சினைகளுக்குப் பரிகாரம் காண விழைந்தன.

இத்தகைய சீர்குலைவை எதிர்பார்த்த கீன்ஸ், தோல்வியுற்ற நாட்டின்மீது இத்தகைய பெரும்பாரத்தைச் சுமத்துவது தவறு என்று "சமாதானத்தால் ஏற்பட்ட பொருளாதார விளைவுகள்" என்ற தமது நூலில் சுட்டிக் காட்டினார். அதேபோல போர்க்காலத்தில் கொடுத்துதவிய கடனை அமெரிக்கா திரும்பிப் பெற முயலுவதும் தவறு என்பது அவரது வாதம். போர்ப்பரிகரிப்புப் பளுவைப் பத்து மில்லியன் டாலராகக் குறைப்பதுடன் நேச நாடுகள் ஒன்றுக்கொன்று கொடுக்கவேண்டிய போர்க்காலக் கடனை அடியோடு ரத்து செய்ய வேண்டும் என்பது அவரது கருத்து. உலகத் தலைவர்களும் பொருளாதார மேதைகளுமாகச்சேர்ந்து சம்மதித்து செய்துகொண்ட ஓர் ஏற்பாட்டைத் தன்னந்தனியாக நின்று எதிர்த்து, தவறு என்று ஆணித்தரமாக இடித்துரைத்த துணிவைக் கண்டு வியக்காதவரிலர்.

இரத்தினச் சுருக்கமாக எழுதப்பட்ட 'சமாதானத்தால் ஏற்பட்ட பொருளாதார விளைவுகள்' என்ற நூல் கருத்துச் செறிவும் காரிய சாத்தியமும் ஒருங்கே பொருந்தியதாக இருந்தது. அதில் அவர்

உண்மையை நன்கு மதித்து, நடைமுறைக்கு உகந்த ஆலோசனைகளை அழகுபட வழங்கினர். 'கொண்டார்', 'கொடுப்பார்' ஆகிய இருதரப்பினரின் நலன்களையும் மனத்தில் கொண்டு வகுக்கப்பட்ட அவரது கருத்துகள் செவிடன் காதில் ஊதிய சங்குபோல் வீணாயிற்றென்றாலும், நம்பிக்கையை இழக்காமல் போர் ஒப்பந்தத்தை மாற்றியமைக்க வேண்டும் என்று அவர் மேன்மேலும் வலியுறுத்தி வந்தார்.

போருக்குப் பின்னர் எழுந்த பொருளாதாரப் பிரச்சினைகளை உன்னிப்பாகக் கவனித்து வந்த அவர், போர்க்காலக் கடன் பளுவையும், போர்ப்பரிகரிப்புச் சுமைகளையும் எதிர்த்து வந்தது போலவே இங்கிலாந்து கடைபிடிக்க முயன்ற பணவாட்டக் கொள்கைகளையும் எதிர்க்கலானார். பொதுவாக, கீன்ஸ் பணவீக்கத்தையோ, பணவாட்டத்தையோ விரும்பியதில்லையென்றாலும், பணவீக்கத்தைக் காட்டிலும் பணவாட்டம் பாதகம் விளைக்கக்கூடியது என்று கருதினார்.

குறிப்பாகப் போருக்கு முன்னிருந்ததுபோல பிரிட்டன் பொன் (நாணயத்) திட்டத்துக்குத் திரும்பினால் கேடு விளையும் என்று கீன்ஸ் அஞ்சினார். 1924-ல் வின்ஸ்டன் சர்ச்சில் நிதி மந்திரியானார். பாராளுமன்றத்தில் பட்ஜட்டை (வரவு-செலவுத்திட்டம்) சமர்ப்பித்துப் பேசிய போது போருக்கு முன்னால் உலக அரங்கில் நிலவிய பொன்திட்ட (நாணய) விகிதத்துக்கு பிரிட்டன் திரும்பப்போவதாகக் கூறினார். அதையொட்டி முன்போலவே தங்கத்தைத் தாராளமாக ஏற்றுமதி, இறக்குமதி செய்ய அனுமதிக்கப்போவதாகவும் சர்ச்சில் அறிவித்தார். இதைக் கேட்டு கீன்ஸ் திடுக்கிட்டார். சர்ச்சிலால் ஏற்படக்கூடிய பொருளாதார விளைவுகள் (The Economic Consequences of Mr. Churchill) என்ற தலைப்பில் பொன் (நாணயத்) திட்டத்துக்குத் திரும்பினால், பணவாட்டம் பிரிட்டனை வாட்டும் என்றும் தொழில் வளர்ச்சி தேக்கமுறும் என்றும் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகும் என்றும் தொழிலாளரின் போராட்டங்கள் நாடெங்கும் பரவும் என்றும் கீன்ஸ் தெளிவுற எடுத்துரைத்தார்.

பொன் (நாணயத்) திட்டத்திற்கு திரும்புவதற்கு முன்னால் பவுன் ஸ்டெர்லிங்குக்கும், டாலருக்குமுள்ள நாணய மாற்றுவிகிதம் 1:4·40 என்றிருந்தது. ஆனால் போருக்கு முன்னாலிருந்த பொன் திட்ட முறைப்படி அவ் விகிதம் 1 : 4·86 ஆக இருந்தது. எனவே நிலையான நாணயமாற்று விகிதத்தை நாடிப் பொன் (நாணயத்) திட்டத்துக்குத் திரும்பினால் உள்நாட்டு விலைவாசிகள் சரியும். அது விரும்பத்தக்கதன்று. மாறாக, இங்கிலாந்தின் தலைமை வங்கி (Bank of England) தனது நடவடிக்கைகளின்மூலம் தங்கத்தின் விலையை நிலையாக வைத்திருக்க முயலுவதே விவேகமானது என்பது கீன்ஸின் கருத்து

எனவே போருக்கு முன்னுள்ள விகிதத்தை மேற்கொண்டதன் விளைவாக பிரிட்டனிலிருந்து ஏற்றுமதியான பொருள்களின் விலைவாசிகள் சட்டென்று 10 சதவீதம் கீழே சரிந்தது. ஆனால் அதை ஈடு செய்யக்கூடிய வகையில் உற்பத்திச் செலவுகள் குறைவதாக இல்லை. எனவே, ஏற்றுமதியை நம்பியிருந்த தொழில்கள், தொழிலாளரை வேலையிலிருந்து தள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. ஏற்கனவே வேலையில்லாத் திண்டாட்டம் என்றுமிலாத அளவு அதிகமாக இருந்தது. இந் நிலையில் சர்ச்சில்-பால்ட்வின் (Churchill-Baldwin) அரசாங்கம் கூலியைக் குறைக்க முயன்றது. எனவே தொழிலாளர் போராட்டங்கள் ஆங்காங்கே வெடித்து, நாடெங்கும் பரவிப் பொருளாதாரத்தை அலங்கோலப்படுத்தின. எனவே பொன் (நாணயத்) திட்டத்துக்குத் திரும்பினால் என்னென்ன நடக்கும் என்று கீன்ஸ் எச்சரித்தாரோ அத்தனையும் தீர்க்கதரிசனம் போல உண்மையாயிற்று என்றால் மிகையாகாது.

### பணப்பரிமாணக் கோட்பாட்டின் குறைபாடு

'பொதுக் கோட்பாடு' வெளிவரும்வரை கீன்ஸ் தொன்மைப் பொருளாதாரத்தின் தூண்களில் ஒன்றான பணப்பரிமாணக் கோட்பாட்டுக்கு மாற்றுக் கண்டுபிடித்தார் என்று சொல்ல இயலாது. பொதுவாக, அக் கோட்பாட்டுக்கு உட்பட்டே பணப் பிரச்சினைகளை அணுகி வந்தார் என்றாலும் அக் கோட்பாட்டில் உள்ள குறைபாடுகள் அப்போதைக்கப்போது அவரது மனத்தைக் கிளறிக் கொண்டே இருந்தன. போருக்கு முன்னர் இந்தியச் செலாவணியும் நிதியும் பற்றி எழுதும்போதே தங்கத்தை ஒரு சல்லாபப் பொருளாகப் பயன் படுத்தி அணிகலன்களாகவும், கட்டியாகவும் முடக்கி வைப்பதால் எப்படி விலைவாசிகள் பாதிக்கப்படும் என்பதை ஒருவாறு உணரலானார். போருக்குப் பின்னர் அமெரிக்காவுக்குள் புகுந்த தங்கம் புழக்கத்தில் இல்லாதபடி மலடாக்கப்பட்டு (Sterilize) எப்படி அதன் மதிப்புக்கும் விலைவாசிகளுக்கும் சம்பந்தமில்லாமல் போய்விட்டது என்பதையும் அவர் நன்குணர்ந்தார். ஆனால் அவ்வுணர்வு கருத்து வடிவம் பெறுவதற்குப் பல்லாண்டுகளாயின.

ஆரம்பத்தில் டாலரின் ஆடலே வாணிகச் சுழல் என்று அவர் நம்பினார்; எனவே விலைவாசியை நிலைநிறுத்தினால், பொருளாதாரமும் சிக்கலின்றிச் சுமுகமாக இயங்க முடியும் என்று எண்ணினார்; எனவே பணத்தின் அளவைக் கூட்டிக் குறைப்பதன்மூலம் விலைவாசிகளில் ஏற்படும் அலையோட்டத்தை மட்டுப்படுத்தலாம் என்று கருதலானார். இப் பணியில் வங்கிகளுக்குப் பெரிய பொறுப்பு உண்டென்று அவர் நினைத்தார். மக்கள் கையிருப்பாக வைத்திருக்க விரும்பிய பணத்தின் அளவு அவருக்கு ஒரு புதிராகவே இருந்து வந்தது. பொதுக்

கோட்பாடு வெளியாகும் வரையில் அக் காரணங்களை ஆழமாக அலசி ஆராய்ந்து அதற்கேற்ற பரிகாரம் காண இயலவில்லை. எனவேதான் மக்கள் கையிலுள்ள பணத்துக்கேற்ப வங்கிகள் தங்கள் கையிருப்பையும் புழக்கத்திலுள்ள பணத்தின் அளவையும் கூட்டவோ குறைக்கவோ செய்து விலைவாசிகளைச் சீர்ப்படுத்த வேண்டுமென்று விரும்பினர். ஆனால் நடைமுறையில் பணவாக்கமுறைகளின்மூலம் வாணிகச் சுழல்களைத் தடுத்து நிறுத்த முடியவில்லை.

மந்தச் சேற்றில் பதிந்த பொருளாதாரச் சகடம்

முதல் உலகப்போருக்குப் பின்னர் மேற்கத்திய நாடுகளின் பொருளாதாரங்கள் தயங்கித் தள்ளாடி இயங்கிக் கொண்டிருந்ததைக் கீன்ஸ் கானலுற்றார். போர்ப்பரிகாரத்தின் பாரந்தாங்காமல் திணறிக் கொண்டிருந்தது ஜெர்மன் பொருளாதாரம். அத்துமீறிய பணவீக்கத்தின் அழுத்தத்தின்கீழ் அப் பொருளாதாரம் அவதிப் பட்டது. ஷாட்டின் (Shaat) பணச்சீர்திருத்த முயற்சிகளாலும் பொருளாதாரச் சீர்குலைவை அணையிட்டுத் தடுத்து நிறுத்த முடியவில்லை. பணவீக்கமும் வேலையில்லாத் திண்டாட்டமும் ஒருங்கிணைந்து வந்தன. டாஸ்-யங் திட்டத்தின் (Daws-Young Plan) மூலம் ஜெர்மனி சுமந்துவந்த போர்ப்பளுவைக் குறைக்க முயன்றும் முடியவில்லை. சீர்குலைந்த பொருளாதார அடிப்படைதான் பாஸிஸ சக்திகள் தலைதூக்கக் காரணமாக இருந்தது. அதன்பயனாக அயல்நாட்டுக் கடன்களை ஜெர்மனி ஏப்பமிட்டது; உள்நாட்டுப் பொருளாதாரத்தையும் போர்ப் பாதையில் இழுத்துச் சென்றது.

நேச நாடுகளின் நிலையும் கவலைக்கிடமாகவே இருந்தது. பொன் (நாணய) திட்டத்துக்குத் திரும்பியதால் ஏற்பட்ட பணவாட்டத்தின் காரணமாக, பிரிட்டனில் வேலையில்லாத் திண்டாட்டம் தலைதூக்கியது. கூலியைக் குறைத்து உற்பத்திச் செலவுகளைக் குறைத்து வேலைவாய்ப்புகளைப் பெருக்கும் முயற்சிகளும் வீணாயின. எனவே பொருளாதாரத்தின் கால்கள் மந்தச் சேற்றில் பதிந்தவண்ண மிருந்தன.

உலகிலேயே செல்வமிக்க நாடான அமெரிக்காவில் ஆரம்பித்த வாணிகச் சுழல் உலகெங்குமே பற்றிப் படரத் தொடங்கியது. 1929 அக்டோபர் இறுதியில் அமெரிக்கப் பங்கு மார்க்கெட் உடைந்தது. அதையொட்டி அமெரிக்கப் பொருளாதாரம் முழுவதையும் பொருளாதார மந்தமென்னும் சூறுவளி பற்றிப் பிடித்து உலுக்கி ஆட்டியது. அதன் விளைவாக ஆயிரக்கணக்கான பாங்குகள் உடைந்தன. வேலையில்லாத் திண்டாட்டம் காட்டுத்தீப்போலப் பரவியது. தொழிலுற்பத்தி அடிமட்டத்தை நோக்கி விரைந்தது,

அயல்நாட்டு விவசாயப் பொருள்கள் வாங்குவோரின்றித் தேங்கின. வாணிகம் சுருங்கியது. அதன் விளைவாக மந்தச் சூறாவளி முதலாளித்துவ நாடுகளனைத்தையும் சுற்றி வளைத்து அவற்றின் ஆணிவேரையே ஆட்டி அசைத்தது.

முதலாளித்துவப் பொருளாதாரங்கள் இப்படிச் சின்னாபின்ன மாவதைக் கண்ணெதிரில் கண்டதனால் தொன்மைப் பொருளாதாரக் கோட்பாடுகளில் கீன்ஸ் கொண்டிருந்த அவநம்பிக்கைகள் வலுத்து, அவரைப் புதுமைப் பாதையில் இழுத்துச் செல்லலாயின.

### எஞ்சிய சேமிப்பால் விளைந்த கேடு

மந்தத்தால் பாதிக்கப்பட்ட பொருளாதாரங்களில் வேலையின்றி வாடிவதங்கும் மக்கள் ஒருபுறமும், வாங்குவோரின்றித் தேங்கிக் கிடக்கும் பொருள்கள் மற்றொருபுறமுமாகக் காட்சியளித்தன. தொழில்களில் எச்சவல்லமை (Unutilised Capacity) இருந்தது. ஆனால் வேலைநாடி வருபவர்களுக்கு வேலை வழங்க இயலவில்லை. விவசாயப் பொருள்களை விற்கமுடியாத காரணத்தால், வெளியே வீசி எறிந்து நாசமாக்க வேண்டியதாயிற்று. இத்தகைய அறிகுறிகளிலிருந்து அளிப்பு (Supply)க்கேற்ற தேவை, மந்தம் பிடித்த பொருளாதாரங்களில் பிறப்பதில்லை என்பது கீன்ஸுக்குப் புலனாயிற்று.

பொருளாதாரத்திலுள்ள ஏற்றத்தாழ்வுகளின் காரணமாக நாட்டுவருவாயில் சேமிப்பின் பங்கு நாளுக்குநாள் உயர்ந்து வந்தது. சிக்கனம், சேமிப்பு ஆகியவற்றைப் போற்றிப் பாராட்டியது தொன்மைப்பொருளாதாரம். வட்டிவீதத்தின் துணைகொண்டு சேமிப்பையும் முதலீட்டையும் சமன்செய்யலாம் என்பது அதன் அடிப்படைக் கருத்து. கீன்ஸும் சரியான அளவில் வட்டிவீதத்தைக் குறைப்பது, வெளிச்சந்தை நடவடிக்கைகளை மேற்கொள்ளுவது ஆகியவற்றின்மூலம் பொருளாதாரத்தினுள் போதுமான பணத்தைச் செலுத்திப் பணப்புழக்கத்தைப் பெருக்கிச் சோம்பிக் கிடக்கும் சேமிப்பைச் செயற்படுத்தலாம் என்று நெடுங்காலமாக நம்பி வந்தார். ஆனால் அந்த நம்பிக்கைப் பாழானது. குறிப்பாக, பெரும் பொருளாதார மந்தத்தின்போது (1929—32) மிதமிஞ்சிய சேமிப்பைக் குறைத்து முதலீட்டைப் பெருக்கும் பணியை ஆற்ற இயலாமல் வட்டிவீதம் வலிவிழந்து நின்றது. மேலும், நாட்டு வருவாயில் ஆக்கத் தன்மையற்ற வட்டியின் பங்கு குன்றி ஆக்கமுள்ள தொழில்களுக்குக் கிடைக்கும் இலாபத்தைப் பெருக்க வேண்டுமென்று அவர் விரும்பினார். ஆனால் நடைமுறையில் ஓர் அளவுக்குமேல்

வட்டிவீதத்தைக் குறைக்க முடியாது என்பதையும் குறைந்த வட்டி தானே என்று கடன் வாங்கி முதலீடு செய்து பொருளுற்பத்தியையும் இலாபத்தையும் பெருக்கும் வாய்ப்பும் பொருளாதார மந்தத்தின் போது சுருங்கி வருவதை அவர் கண்டுணர்ந்தார். எனவே பணக்கொள்கையின் வலிமையில் அவருக்கிருந்த நம்பிக்கை நாளடைவில் குன்றி வரலாயிற்று.

சோம்பிக் கிடந்த சேமிப்பைக் கண்ட கீன்ஸ் அதைக் கண்மூடித் தனமான செயல் என்று கண்டிக்கலானார். ஏனெனில் சேமிப்புச் செயலற்றுப்போனால் அதன் பயனைச் சேமித்தவரும் அனுபவிக்க முடியாது; அதை முதலீடு செய்து பொருளுற்பத்தியைப் பெருக்கும் வாய்ப்பும் அவர்களது சந்ததியாருக்குக் கிடைக்கப் போவதில்லை என்று அவர் அங்கலாய்த்தார். அத்துடன், மிதமிஞ்சிய சேமிப்புக் காரணமாக இருக்கும் ஏற்றத்தாழ்வுகளையும் குறைக்கவேண்டும் என்ற எண்ணம் அவருக்கு உதித்தது. சமதர்மத்தால் ஏற்பட்ட கருத்தோட்டமன்று அது. மாறாக, முதலாளித்துவப் பொருளாதாரத் துக்கு ஏற்பட்டுள்ள அஜீரணத்தைக் குணமாக்கி மந்தத்தைப் போக்க வேண்டுமென்பதே அவரது அவா.

**தலையிடாக் கொள்கையின் (Laisser faire) தோல்வி**

முதலாம் உலகப்போரோடு தலையிடாக் கொள்கை செத்துப் போயிற்று என்பது கீன்ஸின் கருத்து. பொன் (நாணயத்) திட்டத்தால் பணவாட்டம் ஏற்பட்டது. பணவாட்டம் வேலையில்லாத் திண்டாட்டத்துக்கு வழி வகுத்தது. கடன் பளுவால் அழுந்திய ஜெர்மனில் பணவீக்கமும் வேலையில்லாத் திண்டாட்டமும் கைகோத்து வீறுநடை போட்டன. அமெரிக்காவில் மலடாக்கப்பட்ட தங்கமும் மந்தத்துக்கே அடிகோலியது. தயங்கித் தள்ளாடிய பொருளாதாரங்களைத் தூக்கிவிட்டு ஊக்குவிக்கும் திறம் பணவாக்க முறைகளுக்கு இல்லை. எனவே, மந்தப் படுகுழியில் விழுந்த பொருளாதாரம் தானாகவே எழுந்து முன்போல் முழுவலிவுடன் இயங்குமென்ற எண்ணத்துக்கு வழியில்லாமல் போயிற்று.

ஆக்கத்துறைகளின் தேவைகள் சுருங்கிய காரணத்தால் சோம்பலுற்ற சேமிப்புகள் ஊகவாணிகத்தில் ஊக்கம் காட்டின. குறிப்பாகப் பங்குச்சந்தையில் புகுந்த பணத்தால் பாங்குகளின் விலை நாளுக்குநாள் 'விண்'ணென்று ஏறியது. நங்கூரமும், சுக்கானும் இல்லாத மரக்கலம்போல் போய்க் கொண்டிருந்த பங்குச்சந்தை திடீரெனப் பயமெனும் பாறையில் மோதியது. பங்கு மார்க்கட்டில் திளைத்து விளையாடி வந்தவர்களைக் கிலி அடித்தது. பீதியுற்ற ஊகவணிகர்கள் பேரளவில் தங்கள் பங்குகளை விற்றுப் பணமாக்க

விரும்பினர். பங்கு விலைகள் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாகக் கீழ்நோக்கிச் சென்றன. ஆரம்பத்தில் அமெரிக்கப் பங்கு மார்க்கட்டில் ஏற்பட்ட சரிவைக் கண்டு கீன்ஸ் அவ்வளவாகப் பயந்துவிடவில்லை. ஆனால் மந்தவிருள் விசுவரூபமெடுத்து உலகெங்கணும் பரவியதைக் கண்டதும் கீன்ஸ் பதறிப் போனார்.

அரசுகள் கடைப்பிடித்து வந்த கொள்கைகள் கொஞ்சமும் நடைமுறைக்கு உகந்ததாக அமையவில்லை. 1931 ஆகஸ்டில் அமுலுக்கு வந்த வரவு - செலவுச் சிக்கனச் சட்டம் (Budget and Economic Act) மந்தச் சக்திகளைப் பலப்படுத்துவதாகவே இருந்தது. கூலிவெட்டு, உதவித்தொகைக் குறைப்பு, வீடு கட்டுதல், சாலைகள் அமைத்தல் போன்ற துறைகளில் ஈடுபட்டிருந்தவர்களை வேலை யிலிருந்து நீக்குதல் போன்ற கவைக்குதவாத கொள்கைகளைக் கண்டு கீன்ஸ் வெகுண்டெழுந்தார். தலையிடாக் கொள்கையின் பிரதி பிம்பமான அச் சட்டத்தைச் சரிவர அமுல் நடத்தினால் சுயதேவைக்கு வேண்டிய பொருள்களை உற்பத்திச் செய்பவர்களைத் தவிர, ஏனையோர் வேலையிழக்க நேரிடும் என்று எள்ளி நகையாடியதோடு எச்சரிக்கையும் விடுத்தார்.

### முதலாளித்துவத்துக்கு முட்டுகொடுத்த மேதை

தொன்மைப்பொருளாதாரக் கோட்பாடுகளினடியாகப் பிறந்த கொள்கைகளுக்கும் முதலாளித்துவப் பொருளாதாரத்தை எதிர் நோக்கிய நடைமுறைப் பிரச்சினைகளுக்குமிடையே ஏற்பட்ட முரண் பாடுகளையும் சிக்கல்களையும் தீர்ப்பதிலேயே கீன்ஸ் கண்ணுங் கருத்து மாக இருந்து வந்தார்; நடைமுறைக்கு ஒவ்வாத காரணத்தால் பொன் (நாணயத்) திட்டத்தைத் தூக்கி எறிய வேண்டுமென்று வற்புறுத் தினார்; பணவாட்டக் கொள்கைகளைக் கைவிட வேண்டுமென்று வாதாடிவந்தார்; வட்டிவீதத்தைக் குறைத்து முதலாளிகளின் வருவாயைக் குறைக்க முயன்றார்; ஆனால் ஓர் அளவுக்குக்கீழ் வட்டி வீதத்தைக் குறைக்க முடியாமலிருந்ததைக் கண்டு மனந்தளர்ந்தார்; தலையிடா வாணிகக் கொள்கையைக் கைவிட்டுச் சுங்கச்சுவர் எழுப்பினாலும் பரவாயில்லை என்றும் வேலையின்மையை விரட்டியடிக்க வேண்டும் என்றும் வலியுறுத்தினார்.

இக் கண்ணோட்டத்தோடு அரசாங்கக் கொள்கைகளை அணுகிய அவருக்கு, கூலிவெட்டு, உதவிக் குறைப்பு, கட்டுமானச் சிக்கனம், வேலைநீக்கம் போன்ற கொள்கைகள் பத்தாம்பசலித்தனமாகப் பட்டது. வேலையில்லாத்திண்டாட்டம் மலிந்துள்ள மந்தப்பட்ட பொருளாதாரத்தைத் தூண்டிவிடுவதற்குப் பதிலாக மட்டந் தட்டுவதுபோல் அவருக்குத் தோன்றியது. எனவேதான் கூலி

வெட்டையும், வேலைக்குறைப்பையும் அவர் அடியோடு வெறுத்தார். வேலைவாய்ப்புகளைப் பெருக்கக்கூடிய பொதுத்துறைப் பணிகளில் அரசு பெரும் அளவில் பணம் செலவிட வேண்டுமென்று அவர் விரும்பினர். அத்தகைய செலவினங்களால் வேலை வாய்ப்புகள் பெருகும்; வருவாய் வளரும்; வரி வசூலும் கூடிவரும்; வேலையில்லாதோருக்கு வழங்கப்பட வேண்டிய உதவித்தொகையிலும் சிக்கனம் ஏற்படும். இக் கண்ணேட்டத்தினடியாகப் பிறந்ததுதான் பெருக்கிக் கோட்பாடு (Multiflier Theory). கீன்ஸின் மனதில் பதிந்த இதே கருத்துகளை அதே காலத்தில் ஆர். எப். கான் (R. F. Khan) என்பவர் தெளிவுபட விளக்கி வந்தார். கருத்துக்கு உரியவர் எவராக இருப்பினும், ஒரு சில ஆண்டுகளில் அது கீன்ஸின் பொதுக் கோட்பாட்டில் முக்கியமான இடம் பெறலாயிற்று.

அரசாங்கச் செலவின் அவசியம் இவ்வாறு கருத்துப் பூர்வமாக விளக்கப்பட்ட போதிலும், அதில் நம்பிக்கை வைத்த அரசுகள் இருந்தனவா என்பது ஐயத்திற்குரியதேயாகும். 1931–ல் இங்கிலாந்தின் பிரதமராயிருந்த லாயிட் ஜியார்ஜ் (Lloyd George) பொதுப் பணிப் பெருக்கக் கொள்கையைக் கடைப்பிடிப்பாரா என்று கீன்ஸ் சவால்விட்டுப் பார்த்தார். ஆனால் பிரிட்டிஷ் அரசு அவரது அறைகூவலுக்குச்செவிமடுக்கவில்லை. அதைக் குறித்து அங்காலாய்த்து எவ்வளவுதான் தீர்க்கதரிசனமாக எடுத்துரைத்தாலும், அதை எடுத்தாள்பவரில்லாவிட்டால் என்ன பயன், என்று கீன்ஸ் கேட்கலானர். சொந்த ஊரில் விலையாகாத கீன்ஸியக் கருத்துகளை 1932-க்குப் பின் அமெரிக்க ஜனதிபதியான பிராங்க்ளின் ரூஸ்வெல்ட் (Franklin Roosevelt) அமெரிக்கப் பொருளாதாரத்துக்கு உயிரூட்டும் வகையில் பயன்படுத்த முற்பட்டார் என்பது குறிப்பிடத்தக்கதோர் செய்தியாகும்.

பொதுநலப் பணிகளில் கருத்தூன்றியது போலவே, பற்றுக்குறை நிதி (Deficit Finance) முறைகளைக் கையாளுவது, வளர்வீத வரி விதிப்பது (Progressive Taxation) சமுதாயத் தொண்டுகளில் அக்கறை காட்டுவதுபோன்ற பொதுநிதிக் கொள்கைகளை வகுப்பது, சுங்கச்சுவர் எழுப்புவது, செலாவணியைத் தரமிழக்கச் செய்வது (Devaluation) தொழில்களுக்கும் ஏற்றுமதிகளுக்கும் மான்யங்களும் கொடைகளும் அளிப்பது, இறக்குமதியைத் தடுப்பது, நாணய மாற்றுக் கட்டுப்பாடுகளைப் புகுத்துவதுபோன்ற பல்வேறு கொள்கைகளிலும் கீன்ஸ் அனுதாபம் காட்டலானர். இக் கொள்கைகள் தலையிடாக்கொள்கைக்குச் சமாதி கட்டி அரசின் தலையீட்டைக் கரம்கூப்பி வரவேற்பதுபோல் அமைந்திருந்தன. எனவே கீன்ஸ் தொன்மைப்பொருளாதாரத்தில் தோய்ந்தவராக இருந்தபோதிலும்

காலப்போக்கில் அவற்றின் அடிப்படைக் கோட்பாடுகளை ஒவ்வொன்ருகக் கைவிட்டார். தலையிடாக் கொள்கை நடைமுறைக்கு ஒவ்வாதது என்பதை அவர் நன்குணர்ந்தார்; தானுக இயங்கும் தன்மையை இழந்த முதலாளித்துவப் பொருளாதாரத்தை முடுக்கிவிட வேண்டுமாளுல், பரந்த அடிப்படையில் அரசின் தலையீடு அவசியம் என்பதை வலியுறுத்தும் வகையில் பொருளாதாரக் கோட்பாடுகளை மாற்றியமைத்தார். எனவே, அவரை முதலாளித்துவப் பொருளா தாரத்துக்கு முட்டுக்கொடுத்த மேதை என்ருல் மிகையாகாது.

## மேலும் படித்தற்குரியவை

1. Dillard, D. *Economic of John M. Keynes*, Lockwood, London, Ninth Print, October 1966, Chapter 12.

2. Klein, L. R. *The Keynesian Revolutions*, Macmillan, London, Second Edition, 1968, Chapters I & II.

3. Hariss, S. E. *The New Economics*, Denis Dobson, London, Fourth Impression, 1947, Chapters VIII, IX & XIII.

4. Lackachman, R. *Age of Keynes Road to General Theory*, London, 1963, Chapter I.

# 2. தொன்மைப் பொருளாதாரிகளின் வேலைக்கோட்பாடு

*[அளிப்பில் தேவையும் அடங்கியுள்ளதா? — வேலையின்மையில் பலவகை — வேலையின்மைக்கான காரணங்கள் — தொன்மைப் பொருளாதாரிகளின் முதற்கோள்கள் — கீன்ஸின் மறுப்புகள் — நடைமுறைக்குகந்த கருத்துகள்.]*

முதலாளித்துவப் பொருளாதாரத்தை அப்போதைக்கப்போது பல பீடைகள் வாட்டி, வருத்தி வந்துள்ளன. அவற்றுள் பொருளாதார மந்தமே மிகக் கொடியது. இது முதலாளித்துவப் பொருளாதாரத்துக்கே உரித்தானது. அப் பொருளாதாரத்தின் வளர்ச்சி எப்போதும் ஒரே சீராக இருப்பதில்லை. மேடு பள்ளம் மிகுந்தது. சில்லாண்டுகள் செல்வம் பொங்கும். அடுத்துச் சுணக்கம் ஏற்படும். இவ்வாறு சகடக்கால் போல் ஏறி, இறங்கி வரும் வாணிகச் சுழலின் ஒரு பகுதியே பொருளாதார மந்தம் (Economic Depression) எனப்படுவது. பொதுவாக மந்தம் பிடித்த பொருளாதாரத்தில் வருவாய் குன்றும்; விலைவாசிகள் படுக்கும்; இயந்திரங்கள் சோம்பிக் கிடக்கும்; ஆனால், உற்பத்தியைப் பெருக்குக என்ற தேவையின் ஆணை பிறக்காது; பொருள்களிருக்கும்; ஆனால், வாங்க ஆளிருக்காது. ஆக்கிய பண்டங்களை அழிப்பர் ஒரு சிலர்; உண்ண உணவின்றி உடுக்க உடையின்றி, இருக்க வீடின்றி வாடுவர் வேறு பலர்.

குறிப்பாக, பொருளாதார மந்தத்துக்கும் வேலையில்லாத் திண்டாட்டத்துக்கும் நெருங்கிய தொடர்பு காணப்பட்டது. முதலாம் உலகப்போர் முடிந்ததிலிருந்தே முதலாளித்துவப் பொருளாதாரங்களில் வேலையின்மை தலைதூக்கி வந்தது என்றாலும், 1929-க்குப் பின் ஏற்பட்ட பெரும் பொருளாதார மந்தத்தின்போது நிகழ்ந்ததுபோல் விசுவரூபம் எடுக்கவில்லை. வேலையில்லாத் திண்டாட்டம் முதலாளித்துவப் பொருளாதாரத்தை ஒரு நிரந்

தரமான நோயாக வருத்தி வந்த போதிலும், தொன்மைப் பொருளாதாரிகள் அதை ஒரு தற்காலிகமான தலைவலியாகவே கருதி வந்தனர். தலையிடாக் கொள்கையின்கீழ் தானாக இயங்கிவரும் பொருளாதாரத்தில் வேலையின்மைக்கே இடம் கிடையாது என்பது தொன்மைப் பொருளாதாரத்தின் அடிப்படை சித்தாந்தங்களுள் ஒன்று. அதன்படி தற்காலிகமாக வேலையை நாடி வரும் ஒரு சிலருக்கு வேலைக்கான வாய்ப்புகள் கிட்டாமல் போயினும் பொருளாதாரம் நெகிழ்ந்து கொடுத்து வேலையின்மை நீடித்து நிலைக்காமல் போக்கிவிடும் என்று அவர்கள் நம்பினார்கள். எனவே வேலையில்லாமைக்கான காரணங்கள் என்ன என்ற கேள்வியை எழுப்பிக் கொள்கை வடிவிலோ கோட்பாட்டு அடிப்படையிலோ அதற்கு விடை காண அவர்கள் விழையவில்லை.

மாறாக நிறைவேலையை (Full employment) எடுகோளாகக் கொண்டு குறுகியகாலக் கண்ணோட்டத்தில் ஒரு குறிப்பிட்ட அளவான உற்பத்திச் சாதனங்களை எப்படி உற்பத்தியில் ஈடுபடுத்துவது, உற்பத்தியிலிருந்து உருவாகும் வருவாயை எப்படி உற்பத்தியில் கலந்து கொண்ட பல்வேறு சாதனங்களினிடையே பங்கிடுவது என்பன போன்ற கேள்விகளுக்கு விடை காண்பதிலேயே தொன்மைப் பொருளாதாரிகள் கண்ணுங்கருத்துமாக இருந்து வந்தனர். சந்தையைச் சார்ந்து இயங்கும் பொருளாதாரமாதலால், அங்காடியை ஆட்டி வைக்கும் அளிப்பு, தேவை ஆகிய சக்திகளுக்கேற்ப பொருளுற்பத்தியில் பங்கு கொள்ளும் உற்பத்திச் சாதனங்களின் அளவும் அவற்றின் ஊதியமும் நிர்ணயிக்கப்படும் என்பது அவர்களது அடிப்படைக் கோட்பாடுகளுள் ஒன்று. உற்பத்திச் சாதனங்களின் மதிப்பு அவ்வவற்றின் அளிப்பையும் அவற்றுக்குள்ள தேவைகளையும் பொறுத்தது; அம் மதிப்பினைப் பணவடிவில் கணித்தால்,அஃது உற்பத்திச்சாதனத்தின் விலையாகிறது. எனவே, அங்காடியில் நிலவிவரும் விலைவாசிகளே பொருளாதாரத்தின் சமன்செய் சக்கரமாக (Balancing Wheel) இயங்கி வருகிறது. அவ்வியக்கத்துக்குட்பட்டுத்தான் உற்பத்திச் சாதனங்களை வழங்கும் தனிப்பட்டவர்கள் தங்கள் ஊதியங்களை உச்சப்படுத்த முயல்கின்றனர். இத்தகைய தனியாரின் முயற்சிதான் பொருளாதாரத்திலுள்ள உற்பத்திச் சாதனங்களனைத்தையும் சிக்கனமான வகையில் உற்பத்தியில் ஈடுபடுத்த உதவுகிறது என்று அவர்கள் நம்பினார்கள். சுருங்கக்கூறின், அங்காடியில் இயங்கி வரும் சக்திகளே பொருளுற்பத்தி, அவற்றின் மதிப்பு, உற்பத்திச் சாதனங்களின் மதிப்பீடு, ஊதியத்தில் அவற்றின் பங்கு ஆகியவற்றை நிர்ணயிக்கும் அடிப்படை கோட்பாடுகளை வகுக்க உதவுகின்றன என்பது தொன்மைப் பொருளாதாரிகளின் தத்துவ மரபு.

பொருளாதாரம் முழுவதையும் பற்றிய இக் கோட்பாடுகளுக் குட்பட்டே தனிப்பட்ட நிறுவனங்களும் தொழில்களும் உற்பத்திச் சாதனங்களைப் பகிர்ந்து கொள்ளுகின்றன என்பது தொன்மைப் பொருளாதாரிகளின் துணிபு. ஒரு தொழில் அதிகமான சாதனங்களைப் பயன்படுத்தினுல் ஏனைய தொழில்கள் அவற்றை விடுவித்தாக வேண்டும். அதேபோல் ஒரு நிறுவனம் அதிக சாதனங்களை ஈடுபடுத்தினுல் ஏனைய நிறுவனங்கள் அவற்றைக் கைவிட வேண்டும். எனவே, உற்பத்திச் சாதனங்கள் ஒரு தொழிலிலிருந்து மற்றத் தொழில்களுக்கோ, ஒரு நிறுவனத்திலிருந்து ஏனைய நிறுவனங்களுக்கோ பெயர்ந்து போகலாமே ஒழிய, செயலற்று (வேலைக்கான வாய்ப்புகளின்றி) வாடி வதங்க வேண்டிய அவசிய மில்லை. பொதுவாக, உற்பத்திச் சாதனங்கள் அங்காடியின் அசைவுகளுக்கேற்ப ஆக்கச் சக்தி குன்றிய நிறுவனங்களையும் தொழில்களையும்விட்டு ஆக்கப் பெருக்கமுள்ள நிறுவனங்களையும், தொழில்களையும் நாடிச் செல்வது உண்டு. அதன் பயனுகப் பொருளுற்பத்தி மொத்தத்தில் சற்றே மேம்படலாம். அதேபோல் நீண்டகாலக் கண்ணேட்டத்தில் நோக்கினுல் மக்கட்தொகை பெருகும், ஆக்கச் சக்தியும் அதிகரிக்கும். புத்தம்புது உற்பத்திச் சாதனங்களும் கண்டுபிடிக்கப்படும். எனவே, அவற்றைப் பயன் படுத்துவதால் மொத்தப் பொருளுற்பத்தியில் முன்னேற்றம் காண முடியும். ஆனுல் குறுகியகாலக் கண்ணேட்டத்தில் காணும்போது, உற்பத்திச் சாதனங்கள் அனைத்தும் ஆக்கத்திறம் வாய்ந்த துறைகளில் ஈடுபட்டிருக்குமானுல் அவை இடம் பெயருவதால் மொத்தப் பொருளுற்பத்தியில் எவ்விதமான முன்னேற்றமும் காண்பது இயலாது. எனவே உற்பத்திச் சாதனங்களை எப்படி ஆக்கத் திறம் குறைந்த துறைகளிலிருந்து கிளப்பி ஆக்கத்திறம் மிகுந்த துறைகளுள் திருப்புவது என்ற கண்ணேட்டத்திலேயே தொன்மைப் பொருளாதாரக் கோட்பாடுகள் அமைந்துள்ளன. வேலையின்றி வாடும் உற்பத்திச் சாதனங்களுக்கு எவ்வாறு வேலை வாய்ப்புகளை உருவாக்கிக் கொடுப்பது என்ற கவலையே அவர்களைத் தீண்டியதில்லை.

முதலாவது உலகப் போருக்குப் பின்னுல் ஏற்பட்ட அனுபவங்கள் "தலையிடாக் கொள்கை முதலாம் உலகப் போரோடு செத்து விட்டது" என்று கீன்ஸைச் சொல்லத் தூண்டின. முதலாளித்துவப் பொருளாதாரம் தானுக இயங்கும் தன்மையை இழந்துவிட்டது என்பது அவருக்குப் புலனுயிற்று. எனவே, அங்காடியின் ஆணைக்கு உட்பட்டு இயங்கினுல், பொருளாதாரத்தில் உற்பத்திச் சாதனங்கள் நிறைவேலை நிலையை எய்த முடியாது என்பதை அவர் நன்குணர்ந்தார். முதலாளித்துவப் பொருளாதாரத்தில் நிறைவேலை என்பது குதிரைக் கொம்பாகும். பொருளாதாரம் சுறுசுறுப்பாக

இயங்கும்போது வேலை வாய்ப்புகள் பெருகும். மந்தப்படும் பொழுது வேலைவாய்ப்புகள் சுருங்கும். எனவே, வேலையின்மை முதலாளித்துவப் பொருளாதாரத்தின் நிரந்தரமானதோர் நோய். ஆதலின் வேலையின்மையின் மூலக்காரணங்களை அலசி ஆராய்வதில் கீன்ஸ் முனையலானார். அதன்பயனாக உற்பத்திச் சாதனங்கள் பயன் படுத்தப்படும் அளவிற்கேற்ப பொருளுற்பத்தியும் வேலைவாய்ப்புகளும் எவ்வாறு மாறுபடும் என்ற கேள்விக்கு விடையளிக்கும் வகையில் "வேலை, வட்டி, பணம் பற்றிய பொதுக்கோட்பாடு" (General Theory of Employment, Interest, and Money) என்ற தமது நூலை, கீன்ஸ் 1936-ல் வெளியிட்டார்.

அளிப்பில் தேவையும் அடங்கியுள்ளதா ?

பொருளாக்கத்தில் பொருளின் தேவையும் அடங்கியிருக்கிறது என்ற சித்தாந்தத்தை முதன்முதலாக எடுத்துக்கூறிய பெருமை பிரெஞ்சுத் தொன்மைப் பொருளாதாரியான ஜே. பி. சே (J.B. Say) என்பவரைச் சாரும். 'அங்காடி விதி' (Law of the Market) என்ற தலைப்பில் வெளியிட்ட தமது கருத்தின்படி பொருளுற்பத்தி செய்யும் ஒவ்வொருவரும் ஏனைய பொருள்களோடு பரிவர்த்தனை செய்து கொள்ளும்பொருட்டே அங்காடிக்குத் தத்தம் பொருள்களைக் கொண்டு வருகிறார்கள் என்று சே வலியுறுத்தினார். அடிப்படையில் நுகரும் பொருட்டே மக்கள் பொருள்களை உற்பத்தி செய்கிறார்கள். பொருளுற்பத்தியின் ஒரு பகுதியை உற்பத்தி செய்தவர்களே தத்தம் நுகர்வுக்காக வைத்துக் கொண்ட போதிலும், எஞ்சியவற்றை அங்காடிக்குக் கொண்டு வந்து ஏனைய நுகர்வுப் பொருள்களுடன் பரிவர்த்தனை செய்து கொள்ள விழைகின்றனர். தங்களுக்கென்று எதுவுமே வைத்துக் கொள்ளாமல் உற்பத்தி செய்த அத்தனை பொருள்களையும் அங்காடிக்குக் கொண்டு வந்தபோதிலும், அப் பொருள்கள் ஏனைய பொருள்களுக்குள்ள தேவையையே பிரதிபலிக்கின்றன என்பது அவரது நம்பிக்கை. அவ்வாறு அளிக்கப்படும் பொருள்கள் ஏனைய பொருள்களுக்குள்ள தேவையைக் குறிப்பதால் அளிப்பில், தேவையும் அடங்கியுள்ளது என்று சே வலியுறுத்தினார். பண்டமாற்றுக்குப் பொருத்தமான இக் கருத்து பணத்தின் துணைகொண்டு செய்யப்படும் பரிவர்த்தனைக்கும் பொருந்துவதாகும் என்று தொன்மைப் பொருளாதாரிகள் நம்பினார்கள். பணம் பயன்படுத்தப்படுவதால் பொருள்பரிவர்த்தனை சிக்கலின்றிச் சுமுகமாக நடைபெற ஏதுவாகிறது என்பது அல்லாது மற்றில்லை என்பது அவர்களது கருத்து. அதன்படி பொருள்களை ஆக்குவதில் ஏற்படும் மொத்த செலவு நேரடியாகவோ மறைமுகமாகவோ அவற்றை வாங்குவதில் செலவிடப்படும் என்பது பொருளாகும்.

சேயின் விதியை, ஜே. எஸ். மில் (J.S. Mill), ஆல்பிரெட் மார்ஷல் (Alfred Marshall) போன்றவர்களும் விளக்க முற்பட்டனர். விற்போரெல்லாம் வாங்குவோராகவும் இருப்பதால், விற்பனையின் மூலம் பெற்ற பணத்தைக் கொண்டு ஏனையோரின் பொருள்களை வாங்க முடிகிறது என்பது மில்லின் கருத்து. நாட்டின் பொருளுற்பத்தி இரட்டித்தால் அங்காடியை நாடிச் செல்லும் பொருள்களின் அளிப்பும் இரட்டிக்கும். இரட்டித்த அளிப்புக்கு இணையாக தேவையும் இரட்டிக்குமாதலால், பொருள்பரிவர்த்தனையின் அளவும் இரட்டிக்கும் என்பது மில் அளித்த விளக்கமாகும். இக் கருத்தினை ஒட்டியே சேமிப்பால் விளையும் சிக்கலையும் விளக்க முடியும். அதன்படி தனியொருவன் தன் வருவாயில் ஒரு பகுதியை நுகர்ச்சியில் செலவிடாமல் சேமிக்க முற்பட்டால் அதற்கேற்ப உழைப்பவரும் ஏனைய உற்பத்திச் சாதனங்களும் நுகர்வுப் பொருளுற்பத்தியிலிருந்து விடுவிக்கப்பட்டு முதற்கருவி பொருள்களின் உற்பத்தியில் புகுத்தப் படுவர். எனவே நுகர்வுப் பொருள்களையும் முதற்கருவிப் பொருள்களையும் சேர்த்துப் பார்க்கும்போது அளிப்பில் தேவையும் அடங்கியிருப்பது விளங்கும் என்றார்.

மார்ஷலும் இந்தப் கருத்தையே எதிரொலி செய்துள்ளார். ஒவ்வொரு மனிதனும் தனது வருவாய் முழுவதையும் பொருள்களையும் சேவைகளையும், வாங்குவதில் செலவிடுகிறான் என்பது மார்ஷலது துணிபு. பொதுவாக மனிதன் தனது வருவாயில் ஒரு பகுதியை நுகர்வுப் பொருள்களில் செலவிட்டு எஞ்சியதை சேமிக்கிறான். ஆனால் செலவிடும் பகுதியைக் கொண்டு எப்படிப் பொருள்களையும் சேவைகளையும் வாங்குகிறானோ, அதைப் போலவே சேமிக்கும் பணத்தைக் கொண்டும் பொருள்களையும் சேவைகளையும் வாங்குகிறான் என்றால் மிகையாகாது. செலவிடும் பகுதியைக் கொண்டு கெழ்காலத்துக்கான நுகர்ச்சி இன்பத்தைத் தேடுகிறான். சேமிப்பைக் கொண்டு எதிர்கால நுகர்ச்சியை நாடுகிறான். அதற்கான பண்டங்களையும் சேவைகளையும் ஆக்கிப் படைக்கும் வகையில் சேமிப்பு முதலீடு செய்யப்படுகிறது என்று மார்ஷல் விளக்கியுள்ளார்.

எனவே, மொத்த பொருள்களின் உற்பத்திச் செலவில் அப் பொருள்களை வாங்கும் சக்தியும் அடங்கியுள்ளது என்பதே சே விதியின் சாரம். எடுத்துக்காட்டாக உழைப்பு (தொழிலாளி) உற்பத்தியில் ஈடுபடுத்தப்படுவதன் காரணமாகப் பொருள் உருவாகிறது. அதற்காக அப் பொருளை ஆக்கிப்படைத்த உழைப்பாளி ஊதியம் பெறுகிறான். அவன் ஆக்கிய பொருள்களை விற்பதன்மூலம் கிடைக்கும் வரவைக் கொண்டு உற்பத்திச் செலவுகளை ஈடு செய்ய முடியும். ஒவ்வொரு தொழிலாளியும் தான் ஆக்கிய பண்டங்களைத் தானே வாங்க வேண்டு

மென்பதில்லை. ஆனால் அவனது உழைப்புக்குக் கிடைக்கும் ஊதியம் அதற்குச் சமமான ஏனைய பண்டங்களை வாங்குவதற்கு உதவியாக இருக்கும் என்பது சேயின் பொதுப்படையான கருத்து. சில சமயங்களில் உற்பத்திச் சாதனங்கள் ஆக்கமற்ற துறைகளில் விரயம் செய்யப்படலாம். அதன் காரணமாக அளிப்பு, தேவையை மிஞ்சி நிற்கலாம். ஆனால் இது தற்காலிகமானதொரு நிலை. அத்தகைய தவறுகள் நிகழும்போது முதலாளிகள் உற்பத்திச் சாதனங்களை இலாபகரமாக விற்கமுடியாத பொருளுற்பத்தியிலிருந்து இலாப கரமாக விற்கக்கூடிய பொருளுற்பத்திக்குத் திருப்புவர். சுருங்கக் கூறின், சேயின் அங்காடி விதியின்படி பொதுவாகப் பொருளா தாரத்தில் அமிதஉற்பத்தியையோ போதாத்தேவையையோ காண முடியாது. பொருளாதாரத்தில் உள்ள உற்பத்திச் சாதனங்கள் அனைத்தையுமே இலாபகரமான வகையில் உற்பத்தியில் ஈடுபடுத்த முடியும் என்பது அவ் விதியிலிருந்து பெறப்படுகிறது. இந்த முடிபு ஒரு நிபந்தனைக்கு உள்பட்டது. அதாவது, உற்பத்திச் சாதனங்கள் தத்தம் ஆக்கசக்திக்கு ஏற்றவாறு ஊதியம் பெறத் தயாராக இருக்க வேண்டும். அவ்வாறின்றி, தத்தம் தகுதிக்கு மேல் ஊதியம் பெற விரும்பினால் வேலையின்மை தோன்றும். இது சே விதியிலிருந்து பிறக்கும் முக்கிய கருத்தாகும்.

பணத்தின் துணைகொண்டு பொருள்பரிவர்த்தனை செய்து கொள்ளும் பொருளாதாரத்தில், நிறைவேலை நிரந்தரமாக நிலைக்கச் செய்யும் வகையில், ஆக்க சாதனங்களின் ஊதிய அளவு மாறிவரும் என்று சே விதியின்மூலம் கொள்ளலாம். பெரும்பாலான மக்கள் தங்கள் வருவாயில் பெரும்பகுதியைத் தங்கள் அன்றாட நுகர்ச்சிக்கான பொருள்களில் செலவிடத் தயங்குவதில்லை. வருவாயில் ஒரு பகுதியை சேமிப்பதுமுண்டு. ஆனால் சேமிப்பு முதற்கருவிப் பொருள்களை உருவாக்கும் பொருட்டு முதலீடு செய்யப்படுகிறது. எனவே, மொத்தத்தில் வருவாய் முழுவதுமே செலவிடப்படுவதால், அளிக்கப்படும் பொருள்கள் அனைத்துக்குமே எப்போதும் போதிய தேவையிருக்கும் என்று இதனால் கருதி வந்தனர்.

பொருளாதாரத்தில் ஒதுக்கப்படும் சேமிப்பு முழுவதையும் முதலீடு செய்வதற்கு உறுதுணையாக நின்று உதவுவது, வட்டிவீதம் என்பதே தொன்மைப் பொருளாதாரிகளின் நம்பிக்கை. சேமிப்பு மிதமிஞ்சிப்போனால் வட்டிவீதத்தில் வெட்டு விழும். எனவே சேமிப்புக் குறையும்; முதலீடு தூண்டப்படும். மாறாகப் போதிய சேமிப்பு இல்லா விட்டால் வட்டிவீதம் வளரும்; அதன்பயனாகச் சேமிப்பு தூண்டப் படும்; முதலீடு சேமிப்பின் அளவாகச் சுருங்கும். எனவே வட்டிவீதம்

நெகிழ்ந்து கொடுப்பதால் சேமிப்பும் முதலீடும் சமநிலையில் வைக்கப் படும் என்பது சேயின் கருத்து.

வட்டிவீதத்தைப் போல வேறு பல சக்திகளும் நிறைவேலையை நிலைநாட்டும் வகையில் சேமிப்பையும் முதலீட்டையும் சமநிலையில் வைத்திருக்க உதவும் என்று தொன்மைப் பொருளாதாரிகள் நம்பினார்கள். சேமிப்பு அதிகரித்தால் நுகர்வுப் பொருள்களுக்கான தேவை சுருங்கி அவற்றின் விலைவாசிகள் படுக்கும். அதன் பயனாக இலாபம் குன்றும். எனவே, முதலாளிகள் இலாபம் குறைந்த நுகர்வுப் பொருளுற்பத்தியிலிருந்து இலாபம் அதிகமாக உள்ள முதற்கருவிப் பொருள்களின் உற்பத்தியை நாடித் தங்கள் உற்பத்திச் சாதனங்களைத் திருப்புவர் என்று அவர்கள் எதிர்பார்த்தார்கள்.

முதலாவது உலகப்போருக்குப்பின் மேற்கத்திய நாடுகளில் நிரந்தரமாக நிலவி வந்த வேலையின்மையைக் கண்டு மனந்தளர்ந்த கீன்ஸ், சே விதியில் நம்பிக்கை இழந்தார். தொன்மைப் பொருளா தாரிகள் எண்ணியதுபோல் வட்டிவீதத்தின் துணைகொண்டு அவ்வளவு எளிதாகச் சேமிப்பையும் முதலீட்டையும் சமநிலையில் வைத்திருக்க இயலாது. நுகர்வு குறையும். அதே சமயத்தில் முதலீடு பெருகும் என்று எதிர்பார்ப்பது விசித்திரமானது. நுகர்வைக் குறைத்துக் கொள்ளுவதற்கு இன்று எடுக்கும் முடிவுக்கும் எதிர்காலத்தில் எவ் விதமாக நுகர்வைப் பெருக்குவது என்று எடுக்கப் போகும் முடிவுக்கும் நேரடித் தொடர்பு இருப்பதாக எண்ணுவது தவறு. உண்மையிலேயே சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் உள்ள உறவு மிகவும் சிக்கலானது. குறிப்பாக நுகர்வு குறைவதால் முதலீட்டு முயற்சிகளுக்குப் பங்கம் ஏற்பட்டு அதன் விளைவாகப் பொருள்களுக் குள்ள மொத்த தேவை குறைவது மட்டுமல்லாமல், வேலையின்மையும் தலைதூக்கலாம் என்ற எண்ணம் தொன்மைப் பொருளாதாரி களின் மனதில் உதிக்கவில்லை என்று கீன்ஸ் சுட்டிக் காட்டினார். அத்துடன் பணத்தையே ஒரு சொத்தாகப் பதுக்கி வைக்கும் மனோபாவம் சேமிப்பு நிகழுவதற்குரிய முக்கியமான காரணங்களுள் ஒன்று என்பதையும் தொன்மைப் பொருளாதாரிகள் புரிந்து கொள்ள வில்லை என்று கீன்ஸ் எடுத்துரைத்தார். சுருங்கக்கூறின், அளிப்பில் தேவையும் அடங்கியுள்ளது என்ற சே விதியைக் கீன்ஸ் ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை.

**வேலையின்மையில் பலவகை**

தொன்மைப் பொருளாதாரிகள் வேலையின்மையை, விருப்பத் துக்கு மாறான கட்டாய வேலையின்மை (Involuntary unemployment), பிறழ்ச்சி காரணமான வேலையின்மை (Frictional unemployment),

தன் விருப்பப்படி வேலையின்மை (Voluntary unemployment) என மூவகையாகப் பகுத்தனர். தொழிலாளரின் உழைப்புக்கான ஊதியம் பணக்கூலியாக (money wage) கொடுக்கப்படுகிறது. அதைக் கொண்டு உழைப்பாளரின் அன்றாட வாழ்க்கைக்கு இன்றியமையாத அத்தியாவசியமான பொருள்களை உழைப்பாளர் விரும்பிவாங்குவர்; கூலிப் பொருள்கள் (Wage goods) என்று அவற்றை அழைப்பர். பணக்கூலி உயராத நிலையில் கூலிப் பொருள்களின் விலை அதிகரித்தால் உண்மைக்கூலி (Real Wage) குறைந்துவிடும். இருந்தாலும் உண்மைக்கூலிவெட்டைப் பொருட்படுத்தாமல், மொத்தத்தில் தொழிலாளர் தங்கள் உழைப்பை நல்க (அளிக்க) முன்வரலாம். அக் கூலியில் மொத்த உழைப்புக்குரிய தேவையும் இருக்கலாம். எனினும் வேலையை நாடி வருவோரின் எண்ணிக்கை வேலையில் ஈடுபடுத்தப்படுவோரின் எண்ணிக்கையைக் காட்டிலும் குறைவாக இருக்கலாம். உழைப்பாளர் தங்கள் விருப்பத்துக்கு மாறாக வேலையின்றி வாடும் இந் நிலையைத்தான் கட்டாயவேலையின்மை (Involuntary unemployment) என்றனர்.

பிறழ்ச்சி காரணமாக ஏற்படும் வேலையின்மை (frictional unemployment) தற்காலிகமானது. உழைப்பாளரின் அங்காடியில் காணப்படும் குறைபாடுகளின் காரணமாக இத்தகைய வேலையின்மை ஏற்படுவதுண்டு. தொழிலாளர், வேலையில்லாத இடத்தைவிட்டு வேலையுள்ள இடங்களை நாடி இடம் பெயர மனமில்லாதிருக்கலாம்; ஆண்டிலே ஒரு குறிப்பிட்ட பருவத்தில் மட்டும் வேலை வாய்ப்புகள் கிட்டலாம்; கச்சாப்பொருள்களுக்கு தட்டுப்பாடு உண்டாகலாம்; இயந்திரங்கள் பழுதுபட்டு வேலை செய்ய மறுக்கலாம்; வேலைக்கான வாய்ப்புகள் எங்கெங்கே இருக்கின்றன என்ற செய்தியே காதுக் கெட்டாமல் போகலாம். இன்ன பல காரணங்களால் தற்காலிகமாகத் தொழிலாளர் வேலையின்றி வாடலாம். முற்போக்காக இயங்கி வரும் பொருளாதாரங்களில் பிறழ்ச்சி காரணமாக வேலையின்மை காணப்படுவது இயல்பு. இருப்பினும், இந் நிலையில் உள்ளவர்களுக்கு ஒரு சில வாரங்களில் அல்லது மாதங்களில் வேலை கிடைக்காமல் போகாது.

சிலருக்கு வேலை செய்யவே விருப்பமிருக்காது. பரம்பரைப் பணக்காரராக உள்ளவர்களிடையே பல சோம்பேறிகள் உண்டு. காமாதிவிகாரங்களில் காலத்தைப் போக்குபவர்களுமுண்டு. தங்களுக்குக் கூலி உயர்வு வேண்டும் என்று கோரி வேலை நிறுத்தம் செய்யும் தொழிலாளர்களும் உண்டு. இவ்வாறு கூலி உயர்வு கோரியோ, சிறிதளவு கூலிவெட்டு ஏற்படினும் அதை எதிர்த்தோ

வேலை செய்ய மறுப்பவர்களைத்தான், தன் விருப்பப்படி வேலையில் லாமல் இருப்பவர்கள் (Voluntary unemployment) என்று அழைப்பர்.

தொன்மைப் பொருளாதாரிகளின் கருத்துப்படி தன் விருப்பத்துக்கு இசைந்து வேலையில்லாமல் இருப்பவர்களை வேலையில்லா தவர்களின் கணக்கில் சேர்ப்பதில்லை. வேலையை நாடி வருபவர்கள்கூட பிறழ்ச்சி காரணமாகத் தற்காலிகமாக வேலையில்லாமல் இருந்தால் அதைப் பற்றிக் கவலைப்படுவதற்கில்லை என்ற எண்ணம் நிலவியது. எனவே கட்டாய வேலையின்மையைத்தான் வேலையில்லாதவர்கள் கணக்கில் சேர்ப்பதுண்டு. ஆனால் அளிப்பில் தேவையும் அடங்கி யுள்ளது என்ற தொன்மைப் பொருளாதாரக் கோட்பாடுகளில் கட்டாய வேலையின்மைக்கு இடமே கிடையாது. எனவேதான் அங்காடியின் அசைவுகளுக்கு இசைந்து இயங்கும் முதலாளித்துவப் பொருளாதாரத்தில் எப்போதும் நிறைவேலை (full employment) நிலவுமென அவர்கள் நம்பினார்கள். ஆனால் நடைமுறை உண்மை, தொன்மைப் பொருளாதாரக் கோட்பாடுகளுக்கு முரண்பட்டதாக இருந்தது. உதாரணமாக, நாட்டுவருவாயிலும் நுட்பத் தொழில் வளர்ச்சியிலும் உலகத்தில் முன்னணியில் இருந்து வந்த அமெரிக்கப் பொருளாதாரத்தில் பிறழ்ச்சி காரணமான வேலையின்மை உழைப் பாளரின்தொகையில் 3 சதவீதத்துக்கு மேலாக இருக்காது என்று கணித்தனர். அத் தொகை 1932-ல் 3 மில்லியன் என்று வைத்துக்கொண்டாலும் அக் காலத்தில் வேலையின்றி வாடியவர்களின் எண்ணிக்கை 15 மில்லியனை எட்டிப் பிடித்தது. இலட்சக் கணக்கான வர்கள் எவ்வளவுதான் குறைந்த கூலியானாலும் வேலை கிடைத்தால் போதும் என்று தவித்தனர். 1937-ல் பெரும் பொருளாதாரத்தின் பிடிப்பிலிருந்து விடுபடும் தருவாயில்கூட 7.5 மில்லியன் உழைப் பாளர்கள் வேலையில்லாதிருந்தனர். இரண்டு உலகப்போர்களுக்கும் இடைப்பட்ட காலத்தை எடுத்துக் கொண்டால், உழைப்பாளர் படையில் வேலையில்லாதோரின் விகிதம் என்றுமே 10 சதத்துக்குள் குறைந்ததாகக் காணோம். இவ்வாறு நடைமுறையில் வேலையின்மை நிரந்தரமானதோர் நிலையாக இருந்து வந்தது. கோடிக்கணக்கான வர்கள் வேலைக்கான வாய்ப்புகளை நாடித் தவித்துக் கொண்டிருந் தனர்; குறைந்த கூலியானாலும் விரும்பி உழைக்கத் தயாராக இருந் தார்கள். எனவே, கோடிக்கணக்கானவர்கள் வேலையில்லாமல் வாடியபோது கோட்பாட்டினடியாக நிறைவேலை நிலவும் என்று முதற்கோளை வலியுறுத்தி வந்த தொன்மைப் பொருளாதாரிகளைக் கீன்ஸ் மறுக்கலானார்.

**வேலையின்மைக்கான காரணங்கள்**

தொன்மைப் பொருளாதாரிகளோ தங்கள் கோட்பாட்டில் தவறொன்றுமில்லை, ஆனால், சங்கங்களின் செயல்முறைகளும் அரசின் தலையீடுமே வேலையின்மைக்கான காரணங்கள் என்று விளக்க முற்பட்டனர். தொழிற்சங்கங்கள் கூலிஉயர்வு கோரி வந்தன; கூலி ஒரு குறிப்பிட்ட அளவுக்குக் கீழே சரியாமல் பாதுகாக்க முயன்றன; வேலை விதிகளைத் தொழிலாளருக்குச் சாதகமாகத் திருப்ப முயன்றன. உழைப்புக்கான சூழ்நிலையும் வசதிகளும் மேம்பட வேண்டும் என விரும்பினர். தங்கள் கோரிக்கைகளும் முயற்சிகளும் வெற்றிபெறும் வகையில் தொழிலாளர் ஒன்றுபட்டுச் சங்கங்கள் அமைத்துக் கூட்டாகக் கிளர்ச்சிகளும் போராட்டங்களும் நடத்தி முதலாளிகளோடு பேரம் பேசித் தங்கள் நலன்களை அபிவிருத்தி செய்து வந்தனர். இக் கிளர்ச்சியில் பயன்படுத்தப்பட்ட சக்தி வாய்ந்ததொரு ஆயுதம்தான் வேலை நிறுத்தம்.

தொழிலாளரின் கிளர்ச்சிகளையும் போராட்டங்களையும் வேலை நிறுத்தங்களையும் பார்த்து அரசு வாளாயிருக்கவில்லை. ஆரம்பத்தில் தொழிற்சங்கங்கள் வளராமல் முளையிலேயே கிள்ளி எறியும் வகையில் எடுத்த முயற்சிகள் வெற்றி பெறவில்லை. எனவே, தொழிலாளரின் நியாயமான கோரிக்கைகளையும் சமூக நலன்களையும் பாதுகாக்கக் கூடிய வகையில் பல சட்டங்களைச் சமைத்து அமலுக்குக் கொண்டு வந்தது. குறைந்தபட்ச கூலிச்சட்டம், வேலையில்லாதோருக்குக் காப்புறுதிச் சட்டம் (Unemployment Insurance) வேலை நிவாரணம் போன்ற பல சட்டங்களின் மூலம் அரசு தொழிலுறவுப் பிரச்சினைகளில் தலையிட்டுக் கூலி ஒரு குறிப்பிட்ட அளவுக்குக் குறையாமல் தடுத்து வந்தது. பொதுவாகத் தொழிற் சங்கங்களின் செயல்களும் அரசின் தலையீடும் கூலியை ஒரு குறைந்தபட்ச வரம்புக்குக் கீழே விழாமல் பாதுகாத்து வந்தன.

உழைப்பாளரின் அங்காடியில் ஏற்படும் இத்தகைய சிக்கல்கள்தான் வேலையின்மைக்கு முக்கியமான காரணம் என்பது தொன்மைப் பொருளாதாரிகளின் கருத்து. கூலி ஒரு குறிப்பிட்ட அளவுக்குக் கீழே இறங்காததால், அக் கூலிவீதத்தில் உழைப்பாளருக்குள்ள தேவை வேலை நாடி வரும் அத்தனை பேருக்கும் வேலை வழங்குவதற்குப் போதியதாக இல்லாமல் குறைந்துபடும். எனவே, கூலிவெட்டை எதிர்த்துக் கூட்டாகப் போராடும் தொழிலாளரே வேலையின்மைக்குப் பொறுப்பாளராவார்கள் என்பது தொன்மைப் பொருளாதாரிகளின் வாதம். அதனடிப்படையில்தான் ஏ. சி. பிகு (A. C. Pigu) என்ற (புதுச் சம்பிரதாயக் கருத்துகளைக் கடைப்பிடித்து வந்த) தொன்மைப்

பொருளாதாரி, கூலி வீதத்தை மட்டந்தட்டினாலல்லாமல், வேலையை நாடி வரும் அனைவருக்கும் வேலைக்கான வாய்ப்புகள் கிட்டாது என்று வலியுறுத்தினர்.

### தொன்மைப் பொருளாதாரிகளின் முதற்கோள்கள்

நிறைவேலையை (full employment) நிரந்தரமானதோர் நிலையாகக் கொண்டது தொன்மைப் பொருளாதாரம். எனினும் அக் கோட்பாடு ஒரு சில முதற்கோள்களின் (postulates) எழுப்பப் பட்டது என்பது கண்கூடு. முதற்கண், சேயின் அங்காடி விதியின்படி எப்படித் தேவை, அளிப்பில் அடங்கியுள்ளது என்ற நம்பிக்கை வலுத்தது என்று கண்டோம். குறிப்பாக, உற்பத்தி, வேலை ஆகியவை எந்த அளவில் இருந்தாலும் அந்தந்த அளவுக்குரிய மொத்த அளிப்பின் விலையும் மொத்த தேவையின் விலையும் சமமாக இருக்கும் என்பது தொன்மைப் பொருளாதாரிகளின் முதற்கோள்களுள் ஒன்றாகும். இக் கருத்தை மேற்கண்ட பிரிவில் தெளிவுற விளக்கியுள்ளோம். இரண்டாவது, வேலையில் ஈடுபடுத்தப்பட்ட ஒரு குறிப்பிட்ட அளவான உழைப்பின் கூலியின் பயன் (utility of wage) அவ்வளவான உழைப்பின் இறுதிநிலைப்பயன்கேட்டுக்குச் (marginal disutility of employment) சமமாக இருக்கும். உழைப்பாளி ஒருவன் தனது உழைப்பை நல்குவதால் கிடைக்கவிருக்கும் கூலி ஒரு குறைந்தபட்ச அளவிற்கும் குறைவாக இருப்பதால் அவ் வேலையை ஒப்புக்கொள்வதைவிட சும்மா இருக்கலாம் என்று எண்ணுவானேயானால் அவ் வெண்ணத்தைத் தூண்டும் காரணகாரியங்களை வேலையின்பயன்கேடு (disutility of employment) என்று குறிப்பிடலாம். இக் கருத்தை ஒட்டியே மூன்றாவதாக, கூலி உழைப்பின் இறுதிநிலையாக்கத்துக்கும் (marginal product of labour) சமமாகும் என்பதோர் முதற்கோளையும் கையாண்டு வந்தனர். மேற்கண்ட முதற்கோள்கள் மூன்றுமே ஒன்றையொன்று சார்ந்தவை என்பது தெளிவு. அவற்றுள் ஒன்று கவைக்குதவாதது என்றுபட்டால் அதனடிப்படையாகத் தொன்மைப் பொருளாதாரிகள் எழுப்பிய கோட்டை, கொத்தளங்கள் அத்தனையும் சரியும் என்பது சொல்லாமலே விளங்கும்.

எனினும் மேற்கண்ட முதற்கோள்களின்படி வேலைக்கான வாய்ப்புகளைப் பெருக்குவதற்கு நான்கு வழிகளுண்டு. முதலாவதாகப் பொருளாதார அமைப்பை அபிவிருத்தி செய்வதன்மூலம் பிறழ்ச்சி காரணமான வேலையின்மையைக் குறைக்கலாம். இரண்டாவது, தொழிலாளரின் செலவினங்களில் முக்கிய இடம் வகிக்கும் நுகர்வுப் பொருள்களின் (கூலிப் பொருள்களின் — wage goods). இறுதிநிலையான

(உற்பத்தித்)திறன் (marginal physical productivity) மேம்படுமானால் அப் பொருள்கள் மலியும். அதன் விளைவாக உழைப்பாளர் கூலியின் பயன் அதிகரிக்கும். இவ்வாறு கூடிவரும் கூலியின் பயன் (வேலையின்) இறுதிநிலைப் பயன்கேட்டை ஈடு செய்யுமாதலால், மொத்தத்தில் வேலையின் அளவு அதிகரிக்கும். மூன்றாவதாகக் கூலியை நம்பி வாழாதவர்கள் (தொழிலாளரல்லாதவர்கள்) கூலிப் பொருள்கள் வாங்குவதைக் குறைத்துக் கொண்டு, வசதிப் பொருள்களையும் சல்லாபங்களையும் விரும்பி வாங்க முற்பட்டால், கூலிப்பொருள் களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது ஏனைய பொருள்களின் விலை அதிகமாகலாம். அதே சமயத்தில், கூலிப் பொருள்களுக்குள்ள மொத்த தேவை குன்றுவதால் அப் பொருள்கள் மலிவாகும். இருவகையிலும் கூலியின் பயன் மேம்படும். அத்தகைய மேம்பாடு உழைப்பின் பயன்கேட்டை ஈடு செய்யுமாதலால் மொத்தத்தில் வேலையின் அளவு அதிகரிக்கும் வாய்ப்புண்டாகும். நான்காவதாக, வேலையின் இறுதிநிலைப் பயன்கேடு குன்றுமானால் குறைந்துபடும் கூலியை ஏற்றுக்கொண்டு தொழிலாளர் வேலை செய்ய முன்வருவர். அதன் பயனாகத் தன் விருப்பப்படி வேலை செய்ய முன்வராமல் இருப்பவர்களின் எண்ணிக்கை குறையும். மொத்தத்தில் வேலையில் ஈடுபடுபவர்களின் எண்ணிக்கை பெருகும். எனவே, தொன்மைப் பொருளாதார அடிப்படையில் மேற்கண்ட நான்கு வழிகளைக் கடைப்பிடித்தாலன்றி, வேலையின்மையைப் போக்க இயலாது என்பது எளிதில் புலனாகும். இவற்றுள் பிறழ்ச்சி காரணமாக எழும் வேலையின்மையைக் குறைப்பதற்குப் பொருளாதார அமைப்பை அபிவிருத்தி செய்யவேண்டியது அவசியமாகிறது. ஏனைய காரணங்களைக் களைவதற்கு உண்மைக் கூலியை குறைப்பது பற்றி உழைப்பாளர்கள் கொண்டுள்ள மனப்பான்மையை மாற்றுவதும் அவசியமாகிறது.

### கீன்ஸின் மறுப்பு

தொன்மைப் பொருளாதாரிகள் மேற்கொண்டுள்ள முதற் கோளில் உண்மைக் கூலிக்கு (real wage) முக்கிய இடம் கொடுக்கப் பட்டிருப்பது கண்கூடு. கூலிப் பொருள்களின் இறுதிநிலையாக்கத் திறன் மேம்பட்டால் கூலியின் பயன் கூடும் என்றனர் ஒருபுறம். தொழிலாளரல்லாதார் கூலிப்பொருள்கள் வாங்குவதைக் குறைத்துக் கொண்டாலும், அப் பொருள்கள் மலிவாவதன்மூலம் கூலிப்பயன் மேம்படும் என்றனர் மற்றொரு புறம். இத்தகைய கருத்துகள் வேலைவாய்ப்புகள் பெருகுவதற்கு உண்மைக் கூலியைக் குறைத்துக் கொள்ளுவது எவ்வளவு அவசியமாகும் என்பதை வலியுறுத்துவதாக அமைந்துள்ளன. தொழிலாளரும், தொழிற்சங்கங்களும் உண்மைக்

கூலியிலே கண்ணுங்கருத்துமாக இருந்து வருகின்றன. உண்மைக் கூலியில் வெட்டுவிழும் என்று அஞ்சி அதை எதிர்த்துக் கிளர்ச்சி செய்து, போராடி, வேலை நிறுத்தங்கள் செய்து, கூட்டுப்பேரம் பேசி உண்மைக்கூலி குறையாமல் பாதுகாத்து வருகின்றனர். இந் நிலை மாறினால்தான் வேலையின்மையைப் போக்க முடியும் என்று அவர்கள் நம்பினார்கள். மேலும் நிறைவேலையை நிலைநாட்டுவதற்குரிய உண்மைக்கூலி எது என்பது தொழிலாளருக்குத் தெரியும்; அத்தகையதோர் உண்மைக்கூலியை ஏற்றுக்கொள்ளும் மனோபாவத்தையும் அவர்களால் வளர்த்துக் கொள்ள முடியும் என்று தொன்மைப் பொருளாதாரிகள் நம்பினார்கள். கீன்ஸைத் தொழிலாளரின் தோழன் என்று எவரும் சொல்ல இயலாதென்றாலும் தொன்மைப் பொருளாதாரிகளின் வாதத்தை அவர் ஏற்றுக் கொள்ளுவதாக இல்லை.

பணக்கூலிக்கும் உண்மைக் கூலிக்கும் உள்ள உறவைக் கீன்ஸ் தெளிவுறத் தெரிந்தவரென்றாலும், வேலையின்மையைப் போக்கு வதற்கு உண்மைக்கூலியை வெட்ட வேண்டுமென்ற சிகிச்சை பயனற்றது என்று அவருக்குப்பட்டது. முதற்கண், குறைந்துசெல் விளைவுவிதியின்கீழ் (Law of Diminishing Returns) இயங்கி வரும் தொழில்களில் வேலை குறைந்தால், முதலினக் கருவிகளின் இறுதி விளைவு (marginal return in Capital equipment) அதிகரிக்கும். அதன் பயனாக உண்மைக்கூலி மேம்படும். உண்மைக் கூலியும் பணக்கூலியும் எப்போதும் எதிர்த்திசையில் இயங்குமாதலால் உண்மைக்கூலி மேம்படும்போது, பணக்கூலி குறைந்துபடும். சுருங்கக் கூறின், வேலையின்மை பெருகும்போது உண்மைக்கூலி உயருவதும் பணக்கூலி தாழ்வதும் இயல்பு. ஆனால், பணக்கூலிக்குச் சமமான கூலிப்பொருள்களை (உண்மைக் கூலியை) உழைப்பின் இறுதிப் பயன்கேட்டை அளவிடும் சரியான அளவுகோல் என்று கருதுவது தவறு என்று கீன்ஸ் குறிப்பிட்டார்.

இரண்டாவதாக, உழைப்பாளர்கள் தங்கள் ஆக்கத்திறனுக்கு அதிகமான உண்மைக்கூலி வேண்டுமென்று கோருகிறார்கள். பணக்கூலியில் வெட்டு விழுவதை அவர்கள் ஒருபோதும் விரும்புவதில்லை என்பன போன்ற தொன்மைப் பொருளாதாரிகளின் கருத்துகள் ஆதாரமற்றவை என்பது கீன்ஸின் வாதம். நிறைவேலையை நிலைநாட்டக் கூடிய உண்மைக்கூலி இதுதான் போதும் என்ற உழைப்பாளருக்கு இருப்பதையும் அதற்கேற்ப தொழிற்சங்கங்கள் கிடைக்கும் பணக்கூலியைக் குறைத்துக் கொள்ள முடியும் என்ப தையும் கீன்ஸ் நம்பவில்லை. கூலிவெட்டைத் தொழிலாளர்கள் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள் என்பதால் அன்று. தொழிலாளி

பணக்கூலியைக் குறைத்துக்கொள்ள விரும்பினுல்கூட, நிறை வேலையை நிலைநாட்டக்கூடிய வகையில் உண்மைக்கூலியை மாற்றி யமைக்க முடியும்; அதன் பயனுக நிறைவேலையை நிலைநாட்ட முடியும் என்று எண்ண இடமில்லை என்பது கீன்ஸின் கருத்து.

நடைமுறையில் கூலிப் பிரச்சினையால் தொழிலாளரின் மனோபாவம் எப்படி வேலை செய்கிறது; கூலி வெட்டு சம்பந்தமாக அவர்கள் எவ்வாறு நடந்து கொள்கிருர்கள் என்ற அடிப்படையிலே தான் கீன்ஸ் தொன்மைப் பொருளாதாரிகளின் முதற்கோள்களை மறுக்க முற்பட்டார். முதலாவது, பணக்கூலி குறையாதபோது கூலிப் பொருள்களின் விலைவாசி ஏறுவதால் உண்மை வருவாய் குறைந்து பட்டாலும், தொழிலாளர் வேலை செய்ய மறுப்பதில்லை. அதாவது, வாழ்க்கைச் செலவுகள் உயருகிறது என்பதனுல் தொழிலாளர் கட்டாயமாக வேலைநிறுத்தம் செய்வார்கள் என்று சொல்வதற் கில்லை. இரண்டாவது, உழைப்பாளரனைவரும், ஒன்றுகூடி நிறை வேலைக்கேற்ற வகையில் தங்கள் உண்மைக்கூலியைக் குறைத்துக் கொள்ளக் கூடிய நடைமுறையைக் காண்பது அரிது. உண்மையில் தொழிலாளரிடையே பல தொகுதியினருண்டு. பொதுவாக வேலை களினிடையே காணப்படும் நிகர அனுகூலக் குறைவுக்கு (net disadvantage) ஏற்ப, கூலி வேறுபடுவதில்லை. ஒரு தொகுதியினருக்குப் பணக்கூலி குறைந்தால் அவர்களது உண்மைக்கூலி குறையும் என்பது உண்மை. ஆனுல், அதன் காரணமாகத் தொழிலாளரனைவரின் உண்மை வருவாயும் ஒரே சீராகக் குறையும் என்று எண்ண இயலாது. மாறுக, பணத்தின் வாங்கும் சக்தி குறைந்தால் பெரும்பாலும் தொழிலாளரனைவரும் ஒரே சீராகப் பாதிக்கப்படுவது கண்கூடு.

அங்காடியில் நிலவிவரும் உண்மைக்கூலி அப்போதுள்ள வேலையில் இறுதிப்பயன்கேட்டைக் காட்டிலும் அதிகமாக இருக்கலாம். ஆயினும், தொழிலாளரில் ஒரு தொகுதியினர் தங்கள் பணக்கூலியில் வெட்டு விழுவதைக் கண்டு வாளாயிருக்கமாட்டார்கள். ஆனுல் வேலைக்கான வாய்ப்புகள் பெருகுகின்ற வேளையில் விலைவாசிகளும் ஏறி அதன் விளைவாகத் தொழிலாளரனைவரையும் ஒரே சீராகப் பாதிக்கக்கூடிய வகையில் உண்மைக்கூலி குறைந்துபட்டால் அதைத் தொழிலாளர்கள் பெரும்பாலும் எதிர்ப்பதில்லை; எனவே, எல்லாத் தொழிலாளரையும் சமமாகப் பாதிக்கக்கூடிய உண்மைக்கூலி வெட்டைத் தொழிற்சங்கங்கள் பெரும்பாலும் எதிர்த்துப் போராடுவதில்லை; ஆனுல், அதேசமயத்தில் ஒரு குறிப்பிட்ட தொகுதியினரின் உண்மை வருவாயைப் பாதிக்கக் கூடிய வகையில் கூலிவெட்டு விழுமானுல், அத் தொகுதியினரின் நலன்களைப் பாதுகாக்கும் வகையில் தொழிற்சங்கங்கள் செயல்படுவது இயல்பு.

சுருங்கக்கூறின், வேலைக்கான வாய்ப்புகளைப் பெருக்கக்கூடிய வகையில் வாழ்க்கைச் செலவுகள் உயருவதைத் தொழிற்சங்கங்கள் எதிர்க்கும் என்ற தொன்மைப் பொருளாதாரிகளின் கருத்து நடைமுறைக்கு ஒவ்வாதது என்பது கீன்ஸின் கருத்து.

அப்பழுக்கற்ற போட்டியை அடிப்படையாகக் கொண்ட உழைப்பு அங்காடியிருக்குமானால், அப்படிப்பட்டதோர் பொருளாதார அமைப்பிலே ஒரு வேளை தொன்மைப் பொருளாதாரக் கண்ணோட்டத்தில் வேலைப்பிரச்சினையை அணுகிய பிகுவின் பரிகாரங்கள் பொருத்தமாக இருக்கலாம். அல்லது எதேச்சாதிகாரச் சக்திபடைத்த அரசுகள் உழைப்பாளருக்குச் சேரவேண்டிய கூலியைத் தங்களிஷ்டப்படி ஏற்றவோ, இறக்கவோ முடியுமானாலும் அத்தகைய கோட்பாடுகள் சித்தி பெறலாம். ஆனால், மக்களாட்சியை ஒட்டி அமைந்த பொருளாதாரங்களில் தொழிலாளரின் அடிப்படை உரிமைகளைத் தட்டிப் பறிக்கவோ, தங்களிஷ்டம்போல் அவர்களை ஆட்டிவைக்க முயல்வதோ முறையற்ற அரசியலாகும் என்பது கீன்ஸின் கருத்து. தொழிற்சங்கங்கள் மக்களாட்சியமைப்பின் ஒரு பிரிக்க முடியாத அங்கமாகிவிட்டன. பொதுமக்களின் நலன்களை அபிவிருத்தி செய்வதற்காக இயற்றப்பட்ட சமூக நல அபிவிருத்திச் சட்டங்களையோ திட்டங்களையோ கைவிடுவதும் விரும்பத் தக்கதன்று என்பதைக் கீன்ஸ் நன்குணர்ந்தார்.

கோட்பாட்டு அடிப்படையில் நோக்கினாலும் கீன்ஸினது வேலைக்கோட்பாடு கூலி விகிதத்தையோ அதைக் குறைப்பதிலுள்ள சிக்கல்களையோ சார்ந்திருக்கவில்லை. வேலையினளவு பொருளாதாரத்திலுள்ள பயனுள்ள தேவையைப் (Effective demand) பொறுத்திருக்கிறது; தொழிலாளரும் முதலாளிகளும் எப்படிக் கூலி நிருணய பேரம் பேசுகிறார்கள் என்பதைப் பொறுத்ததன்று என்பது அவரது அடிப்படை கருத்து. உண்மையில் கீன்ஸ் கோட்பாட்டின்படி வட்டிவீதம் நெகிழ்ந்து கொடுக்காத காரணத்தாலும் நிலையுறு முதலீட்டின் இறுதிநிலைத் திறன் (marginal efficiency of investment in durable capital assests) விளக்கமுறுமா இல்லையா என்ற சந்தேகமும் வேலைக்கான வாய்ப்புகளைப் பெருக்குவதற்குப் பெரிய முட்டுக் கட்டைகளாக உள்ளன என்பது வலியுறுத்தப்படுகிறது. முதிர்ச்சியுற்றதோர் முதலாளித்துவப் பொருளாதாரத்தில் கூலிகள் நெகிழ்ச்சியுள்ளதாக இருக்கலாம். பொருள்களின் விலைவாசி ஏகபோக சக்திகளின் தலையீடின்றிப் போட்டியின் அடிப்படையில் நிருணயிக்கப் படலாம். இருப்பினும் அத்தகைய பொருளாதாரத்திலும் வேலை இல்லாத் திண்டாட்டம் தலைதூக்க முடியும் என்பது கீன்ஸின்

நம்பிக்கை. எனவேதான் அங்காடியில் ஏற்படும் குறைபாடுகளைச் சுட்டிக்காட்டி வேலையின்மைக்கு விளக்கம் கூற அவர் முற்படவில்லை.

**நடைமுறைக்குகந்த கருதுகோள்:**

வேலையின்மை என்பது முதலாளித்துவப் பொருளாதாரத்தைப் பற்றிவரும் ஒரு பீடை; பொதுவாக, விஞ்ஞான அடிப்படையில் சமதர்மச் சமுதாயங்களைக் கட்டி வளர்க்கும் பொருளாதாரங்களை அப் பீடை தீண்டுவதில்லை. கீன்ஸ் சமதர்மச் சமுதாயத்தில் விருப்புக் கொண்டவரல்லர்; எனினும் தொன்மைப் பொருளாதாரத்தினடியில் வேலையின்மையைப் போக்குவதென்பது இயலாத காரியம் என்பதை நன்கு உணர்ந்தார். எனவே பணக்கூலிவெட்டு, தலையிடாக் கொள்கை போன்ற தொன்மைப் பொருளாதாரிகளின் மருந்துகளைக் கைவிட்டுப் புத்தம்புது சிகிச்சைகளைக் கையாளலானார். எனவே, முதலாளித்துவம் அழிந்து போகாமல் பாதுகாத்து அதன் ஆயுள் காலத்தை நீடிக்கச் செய்த பெருமை கீன்ஸைச் சாரும் என்றால் அது மிகையாகாது.

முதலாளித்துவப் பொருளாதாரங்கள் தானாக இயங்கும் தன்மையை இழந்துவிட்டன. அவற்றை வளர்ச்சிப் பாதையில் கொண்டு சென்ற சக்கரங்கள் மந்தச் சேற்றில் பதிந்து விட்டன. எண்ணிறந்த மக்கள் வேலையின்றி வாடினர். மனித உழைப்பு பயன் படுத்தப்படாமல் சோம்பிக் கிடந்தது. இயற்கையில் சுரந்த வளங்கள் பல வீணாயின. போதிய வளங்களும் தொழிலறிவும் இருந்தும் பொருள் வளத்தைப் பெருக்க இயலவில்லை. தொன்மைப் பொருளாதாரிகளின் கொள்கைகளும், கோட்பாடுகளும் மந்தத்தைப் போக்கி நிறைவேலையை நிலைநாட்டுவதாக இல்லை. தலையிடாக் கொள்கை என்ற மந்திரக் கோலினால் நிறைவேலை என்ற மாங்காய் விழவில்லை. கூலி வெட்டு அரசியலின் அடிப்படையையே உலுக்கி விடும் என்ற பயமிருந்தது. தலையிடாக் கொள்கையைத் தலைமுழுகித் தொன்மைப் பொருளாதாரக் கோட்பாடுகளை அடியோடு மாற்றி அமைத்தாலன்றி முதலாளித்துவப் பொருளாதாரங்கள் உருப்படாது என்பது கீன்ஸைப் பொறுத்த அளவில் வெள்ளிடை மலையாயிற்று.

தனிவுடைமையை அடிப்படையாகக் கொண்ட முதலாளித்துவப் பொருளாதாரம் அங்காடியின் விதிகளுக்குட்பட்டுத் தானாக இயங்கி நிறைவேலையை நிலைநாட்டும் தகைமையற்றது என்பதை நன்குணர்ந்த தொன்மைப் பொருளாதாரிகள் ஒரு சிலரே உண்டு. பத்தொன்பதாம் நூற்றாண்டில் மால்த்தஸ் அத்தகைய அடிப்படையான அவநம்பிக்கையைத் தெரிவித்தார். ஆயினும் அவர்,

பின்னர் கார்ல்மார்க்ஸ் கோரியதுபோல், தனிஉடைமையைத் தகர்த்துப் பொதுவுடைமையை நிலைநாட்ட வேண்டும் என்ற முடிவிற்கு வரவில்லை. மால்த்தஸைப் போலவே கீன்ஸூம் முதலாளித்துவப் பொருளாதாரத்தைப் பாதுகாக்க விரும்பினு ரென்றாலும், தங்குதடையற்ற தனிஉடைமையால் முதலாளித் துவத்தின் அடிப்படையே ஆட்டங்கொடுப்பதை அவர் காணலுற்றார். முட்டுக்கொடுத்துத்தாங்கினாலன்றி முதலாளித்துவப் பொருளாதாரம் தனது சொந்த பலத்திலே திடமாக நிற்கவோ நடக்கவோ சக்தி யற்றது என்பதை நன்குணர்ந்த அவர், அரசின் தலையீட்டினால் அடிப்படை உரிமைகள் பறிபோகும் என்பதை நம்பவில்லை. மாறாக, முதலாளித்துவப் பொருளாதாரத்தையும் அடிப்படையாக எழுப்பப் பட்ட அரசியல் அமைப்புகளையும் பாதுகாக்க வேண்டுமாயின், அரசின் தலையீடு மிகமிக அவசியம் என்று வலியுறுத்தினார். அத்துடன் முதலாளித்துவப் பொருளாதாரத்தை அவ்வப்போது வாட்டி வந்த வாணிகச்சுழல், வேலையின்மை போன்ற பல பிணிகளின் கூறுகளை அலசி ஆராயத் தக்க கோட்பாடுகளை உருவாக்கி, அவற்றினடியாக அப் பிணிகளை அகற்றவும், அவற்றின் கோரங்களை மட்டுப்படுத்தவும் பயன்படக் கூடிய கொள்கைகளையும் பரிகாரங் களையும் கண்டுபிடிக்க வேண்டும் என்று கங்கணம் கட்டினார். அதன் பயனாய்ப் பிறந்ததுதான் "வேலை, வட்டி, பணம்" பற்றிய "பொதுக் கோட்பாடு."

1. Dillard D., Op., Cit., Chapter 2.
2. Keynes J. M., *Genral Theory of Employment, Interest and Money*, Macmillan, London, 1836, Chapter 2.
3. Klein L. R., Op , Cit , Chapter 2.

# 3. வேலைபற்றிய பொதுக் கோட்பாட்டின் சாரம்

*[பயனுள்ள தேவை பற்றிய தத்துவம் — நுகர்வுக்கான நாட்டம்— முதலீட்டுக்குத் தூண்டுதல் — முதலீட்டின் இறுதிநிலைத் திறன் — வட்டி வீதம் — சேமிப்புக்கும் துய்ப்புக்குமுள்ள தொடர்பு — பொதுக்கோட்பாட்டின் சுருக்கம் — கருத்துகளின் நடைமுறைப் பொருள்—வளமும் வறுமையும்]*

மந்தத்துக்கும், செரிக்காமைக்கும் (அஜீரணத்துக்கும்) நெருங்கிய உறவு உண்டு. உண்ட உணவு செரிக்காமல் வயிற்றுக்குள் ஒதுங்கி நிற்பதையே அஜீரணம் என்கிறோம். அதைப் போலவே மந்தம் பிடித்த முதலாளித்துவப் பொருளாதாரத்திலும் ஆக்கிய பண்டங்களைப் பணம் கொடுத்து வாங்கி அனுபவிக்கப் போதிய சக்தி இன்மையால் பொருளாதாரம்பொலிவிழந்து, சோர்வுற்று அசதியாகப் படுத்துவிடும். பொதுவாக, மந்தச் சேற்றில் பதிந்த பொருளாதாரத்தில் பொருள்களிருக்கும்; ஆனால், வாங்க ஆளிருக்காது. இயந்திரங்கள் சோம்பிக் கிடக்கும்; ஆனால், உற்பத்தியைப் பெருக்குங்கள் என்ற தேவையின் ஆணை பிறக்காது. ஆக்கிய பண்டங்களை அழிப்பர் ஒரு சிலர்; உண்ண உணவின்றி, உடுக்க உடையின்றி, வசிக்க வீடின்றி வாடுவர் எண்ணிறந்தவர். வேலையின்மையின் காரணமாக வறியோரின் கையில் வாங்கும் சக்தி வற்றிப்போவதே இத்தகைய முரண்பாட்டுக்கு ஆதிகாரணம் என்பது தெளிவு. வளமிக்க பொருளாதாரங்களிலே பொதிந்துள்ள பொருளுற்பத்திக்கும் உண்மையிலேயே கைவசமாகும் உற்பத்திக்கும் கணிசமான வேறுபாடு உண்டு. இத்தகைய எச்சவல்லமை (Excess capacity) முதலாளித்துவப் பொருளாதாரம் எவ்வாறு முடங்கிக் கிடக்கிறது என்பதை எடுத்துக் காட்டுவதாகும்.

## பயனுள்ள தேவை பற்றிய தத்துவம்

பொருளாதாரத்தின் பல்வேறு உறுப்புகளுக்குள்ள தனிப்பட்ட தேவைகளை மொத்தமாகத் தொகுத்தால் அதைத் தொகுவனதேவை

(aggregate demand) என்று அழைக்கலாம். அதேபோல் பொருளாதாரத்தில் பல்வேறு முனைகளிலும் வழங்கப்படும் மொத்த அளிப்பைத் தொகுத்தால், அதைத் தொகுவனஅளிப்பு (aggregate supply) என்று அழைப்பர். இவ்வாறு மொத்தமாகத் தொகுக்கப்பட்ட தேவையும் அளிப்பும் சமமாக இருக்குமானால் அதைப் பயனுள்ள தேவை (effective demand) என்று குறிப்பர். தொகுவனதேவையையும் அளிப்பையும் பிரதிபலிக்கும் வளைகோடுகளின் சந்திப்பே பொருளாதாரத்தில் பயன்படுத்தப்படும் வேலையின் அளவை நிருணயிக்க உதவும். தொகுவனதேவையைக் குறிக்கும் வளைகோட்டிலுள்ள ஏனைய புள்ளிகள் பயனுள்ள தேவையை அளவிடப் பயன்படுவதில்லை. அத்துடன் பொருள்களை வாங்க வேண்டும் என்ற ஆசைமட்டும் இருந்தால் அதைப் பயனுள்ள தேவை என்று கருத இயலாது. வாங்க வேண்டும் என்ற ஆசையோடு, வாங்கும் சக்தியும் இருந்தால் தான் அந்த ஆசை பயனுள்ள தேவையாகும்.

வேலையின் அளவு பொருள்களுக்குள்ள மொத்த தேவையைப் பொறுத்தது. மொத்த தேவை குறைந்துபட்டால் (போதாமலிருந்தால்) வேலையின்மை தலைதூக்கும். வருவாய் செலவிடப்படும் போதுதான் தேவையாக வடிவெடுக்கிறது. பொருளாதாரத்தில் வேலை அதிகரிக்கும்போது நாட்டு வருவாயும் அதிகரிக்கும். ஆனால், அவ் வருவாயிலிருந்து நுகர்வுக்காகச் செலவிடப்படும் பகுதி வருவாய்ப் பெருக்கத்துக்கு ஏற்ப வளருவதில்லை. எனவே, பொருள்களுக்குள்ள தேவை போதிய அளவில் இருக்கவேண்டுமாயின் வருவாய்க்கும் நுகர்வுக்குமுள்ள இடைவெளியை முதலீட்டின்மூலம் நிரப்ப வேண்டும். அதாவது, வேலைக்கான வாய்ப்புகள் வளர வேண்டுமானல் முதலீடு அதிகரிக்க வேண்டும். இதுதான் பயனுள்ள தேவையின் அடிப்படை தத்துவமாகும்.

உட்படுத்தப்படும் உழைப்பின் அளவைக் கொண்டு மொத்த பொருளுற்பத்தியைக் கணிக்க முயன்றார் கீன்ஸ். பொருள்களுக்குள்ள மொத்த கேள்விலை (demand price) ஒரு குறிப்பிட்ட அளவு உழைப்பைக் கொண்டு உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின் விற்று வரவுக்குச் (Sales Proceeds) சமமாகும். வேலையின் பல்வேறு அளவுகளுக்கேற்ப ஆக்கிய பொருள்களின் விற்றுவரவும் மாறுபடும். வேலையினளவோடு சார்பு கொண்ட விற்றுமுதல்களை அட்டவணையாகத் தொகுத்துத் தொகுவன தேவையின் விலைகோடாகப் படம் 1ல் AD என்று குறிக்கப்பட்டுள்ளது. அதன்படி வேலையில் ஈடுபடுத்தப்படும் உழைப்பாளரின் எண்ணிக்கை அதிகரிக்க அதிகரிக்க அவர்கள் ஆக்கிய பண்டங்களின் அளவும் அவற்றின் விற்று வரவும் அதிகரிக்கும் என்பது புலனாகும்.




படம் 1.

AD தொகுதேவையின் பட்டியல் (Aggregate demand Schedule) ஆக்கப்படும் பொருளுற்பத்தியைப் பொறுத்து மாறுபடும். As தொகுஅளிப்பின் பட்டியல் (Aggregate Supply Schedule) : ஒரு குறிப்பிட்ட அளவு வேலையைத் தூண்டக்கூடிய விற்றுவரவு வேறுவிதமாகக் கூறவேண்டுமாயின், தொகு கேள்விலை (Aggregate demand Price) அதிகரித்தால் வேலை அதிகரிக்கும்; மாறாகக் குறைந்தால் வேலையும் குறையும்.

ஒரு தனிப்பட்ட நிறுவனத்தின் அல்லது தொழிலின் பொருள்களுக்குள்ள தேவையைக் குறிக்கும் வளைகோடு இடமிருந்து வலமாகக்கீழ்நோக்கிச் சரியும். விலை கொஞ்சங்கொஞ்சமாகக் குறைந்தால்தான் அதிகமாக அளிக்கப்படும் பொருளை விற்க முடியும் என்பது அதன் பொருள். மாறாக, பொருளாதாரம் முழுவதையும் சேர்த்துத் தொகுக்கப்பட்ட தேவையைப்பிரதிபலிக்கும் வளைகோடு இடமிருந்து வலமாக மேல்நோக்கிச் செல்லும். வேலை அதிகரிக்க அதிகரிக்க பொருள்களுக்குள்ள மொத்த தேவையும் அதிகரிக்கும் என்பது அதன் பொருள்.

முதலாளித்துவ அமைப்பின்கீழ் எத்தனை பேரை வேலையில் அமர்த்தினால் இலாபம் உச்சநிலையில் இருக்கும் என்ற கண்ணோட்டத் தோடேயே தொழிற்துணிவு கொண்ட ஒவ்வொருவரும் பொருளுற்

பத்தியில் ஈடுபடுவர். இப்படி முழுவதையும் தனிப்பட்ட முறையில் தொழில் துணிவு கொண்ட ஒவ்வொருவரும் வேலையில் அமர்த்தும் தொழிலாளரின் கூட்டுத் தொகையைக் கணக்கிட்டால், பொருளாதாரம் முழுவதிலும் எத்தனை பேர் வேலை செய்து வருகிறார்கள் என்பது தெரியவரும். விற்றுவரவு குறைந்தபட்ச அளவாவது இருந்தால்தான், மொத்தத்தில் ஒரு குறிப்பிட்ட தொகையினரான தொழிலாளரை வேலையில் அமர்த்துமாறு தொழில் முனைவர்களைத் (entrepreneures) தூண்ட முடியும். இதைத்தான் தொகுஅளிப்பு விலை (aggregate supply price) என்பர். மொத்த வேலையின் மாறுபட்ட அளவுகளுக்கேற்ப அவ் வேலைகளில் ஆள்களை அமர்த்துமாறு தூண்டக்கூடிய வகையில் குறைந்தபட்ச விற்றுவரவு அமைதல் வேண்டும். இவ்வாறு வேலையின் அளவுக்கும் அதைத் தூண்டுவதற்குரிய குறைந்தபட்ச விற்றுவரவுக்கும் உள்ள உறவைக் காட்டக் கூடிய வகையில் ஓர் அட்டவணை தயாரித்தால் விற்றுவரவின் அளவு அதிகரிக்க, அதிகரிக்க அதற்கேற்ப அதிகப்படியான தொழிலாளரை வேலையில் அமர்த்த தொழில் முனைவர்கள் முன் வருவார்கள் என்பது தெளிவாகும். படம் 1ல் AS என்ற வளைகோடு தொகுஅளிப்பு அட்டவணையைப் (Aggregate Supply Schedule) பிரதிபலிப்பதாகும். தொகுதேவையைப்போலவே அளிப்பின் வளைகோடும் இடமிருந்து வலமாக மேல்நோக்கிச் செல்லும். ஆனால், அதன் போக்குச் சற்று மாறுபட்டிருக்கும். சில அளவு வேலைகளில் எதிர்பார்க்கப்படும் விற்றுவரவு அவ்வளவு உழைப்பாளரை வேலையில் அமர்த்துமாறு தூண்டுவதற்குத் தேவையான விற்றுவரவைக் காட்டிலும் அதிகமாக இருக்கும். மாறாக, வேறு அளவு வேலைகளில் எதிர்பார்க்கப்படும் விற்றுவரவு அத்தனை உழைப்பாளரை வேலையில் அமர்த்தும்படி தூண்டுவதற்குத்தேவையான விற்றுவரவைக் காட்டிலும் குறைவாக இருக்கலாம். இந் நிலைகளுக்கு இடையில் வேலை ஒரு குறிப்பிட்ட அளவினதாக இருக்கும்போது அவ் வேலையினடியாக எதிர்பார்க்கப் படும் விற்றுவரவும் அவ்வளவு உழைப்பாளரை வேலையில் அமர்த்தும் படி தூண்டுவதற்குப் போதுமான விற்று முதலும் சமமாக இருக்கும். இச் சமநிலையில் தொகுதேவையின் வளைகோடும் தொகுஅளிப்பின் வளைகோடும் ஒன்றையொன்று வெட்டும். அச் சந்திப்பைக் கொண்டு தான் ஒரு குறிப்பிட்ட காலத்தில் எவ்வளவு வேலை வழங்கப்படும் என்பதை நிருணயம் செய்ய முடியும். இதுதான் கீன்ஸினுடைய வேலைக்கோட்பாட்டின் சாரமாகும்.

*படம் 1-ல் தொகுதேவையின் வளைகோடும் (AU) தொகுஅளிப்பின் வளைகோடும் (AS) E என்ற இடத்தில் சந்திக்கின்றன. அதற்குரிய வேலையின் அளவை X-அச்சில் 'M' குறிக்கும். E என்ற சந்திப்புதான் பயனுள்ள தேவையைக் குறிக்கும். அச் சந்திப்பில் முதலீடு செய்பவர்கள் எதிர்பார்க்கும் இலாபம் உச்ச நிலையிலிருக்கும். அச் சந்திப்புச் சுட்டிக்காட்டும் அளவைக்*

காட்டிலும் வேலையினளவு அதிகமாகவோ குறைவாகவோ இருந்தால் தொழில் முனைவர்களின் இலாபம் குறைந்துவிடும். எனவே, கீன்ஸிய வேலைக் கோட்பாட்டின்படி ஒரு குறிப்பிட்ட வேளையில் சிறப்பாக நிருணயிக்கப்பட்ட ஒரு குறிப்பிட்ட அளவு வேலையை மட்டும் வழங்குவது இலாபகரமாக இருக்கும் என்பது தொழில் முனைவர்களுக்குத் தெரியும் அந்த அளவு நிறைவேலையை ஒட்டியதாக இருக்கும் என்று எண்ண இயலாது. பொதுவாக, உழைப்பாளரின் அங்காடியில் உழைப்பை விற்போரின் கை ஓங்கி நிற்பதில்லை. அதன் காரணமாக, நிறைவேலை நிலையில் தொகுதேவையும் தொகுஅளிப்பும் சமநிலையில் இருக்குமென்பதற்கில்லை. சான்ருக, படம் 1-ல் உழைப்பை நல்குபவர்களின் அளவு 'OM' ஆக இருப்பின் 'MM' என்ற அளவில் வேலையின்மை தோன்றும் என்பது தெளிவு. இந் நிலையில் தொகுஅளிப்பு தொகுதேவையை மிஞ்சி நிற்பதைப் படம் ஒன்றில் காணலாம். இவ்வாறு வேலை தேடி வரும் அனைவருக்கும் வேலை வழங்கக்கூடிய வகையில் பயனுள்ள தேவை அமையாவிட்டால், ஒன்று தொகுஅளிப்பைக் குறைத்துத் தேவைக்குச் சமமாக ஆக்க வேண்டும். அல்லது தொகுதேவையை அதிகரித்து அளிப்புக்குச் சமமாகச் செய்ய வேண்டும். இத்தகைய மாறுதல்களைப் படம் 2-ன் வாயிலாகக் காணலாம்.




படம் 2: தொகுவன தேவையிலும் தொகுவன அளிப்பிலும் ஏற்படவேண்டிய மாறுதல்கள்

மேற்கண்ட படத்தில் AD, AS என்ற வளைகோடுகள் முறையே தொகு தேவையையும் தொகுஅளிப்பையும் குறிக்கும். அவை Q என்ற இடத்தில் சந்திக்கின்றன. அச் சந்திப்பின்படி OM என்ற அளவில் வேலை வழங்க முடியும் என்பது புலனுகும். ஆனுல் வேலையை நாடி வருபவர்கள் OM'

அளவாக உள்ளனர். எனவே 'OM' பேருக்கு வேலை வழங்க வேண்டுமாயின் ஒன்று தொகுதேவை 'AD' ஆக உயர வேண்டும். அப்படியானல் 'Q' என்ற இடத்தில் சமநிலை ஏற்படும். அல்லது தொகுஅளிப்பு 'AS' ஆகக் குறைய வேண்டும். அப்படியானல் "Q" என்ற இடத்தில் சமநிலை ஏற்படும். படம்-2ன் மூலமாக இந் நிலைகளைத் தெளிவுற அறியலாம்.

நாட்டுவருவாய்க்கும் துய்ப்புக்குமுள்ள இடைவெளியை நிரப்புவதற்குப் போதிய முதலீட்டுத் தேவை இருந்தால்தான், நிறைவேலை நிலவ முடியும். பொதுவாக, முதலீட்டை உருப்படுத்துவதற்குப் போதிய தேவை இருப்பதில்லை என்பது கீன்ஸின் கருத்து. எனவே, நிறைவேலைக்கும் குறைந்த நிலையிலேயே தொகுதேவைக்கோடும் தொகுஅளிப்புக்கோடும் ஒன்றையொன்று குறுக்கிடும். வெளித் தூண்டுதலின்றி இத் தேக்க நிலையிலிருந்து பொருளாதாரத்தைத் தூக்கிவிடுவது இயலாது. முதலீட்டுப் பொருள்களை இலாபகரமாக விற்கக் கூடிய வாய்ப்புகள் பேரளவில் பிறந்தாலன்றி வேலையை நாடி வருபவர்களனைவருக்கும் வேலை வழங்குவது என்பது கடினமான காரியம். இந் நிலையில் நிறைவேலை அபூர்வமானதோர் நிலையாகும். ஆனல் அந் நிலையைத் தாண்டிய பின்னர், பயனுள்ள தேவை எவ்வளவுதான் அதிகரித்தாலும் அதன் பயனாக உற்பத்தியோ வேலையோ அதிகரிக்கப் போவதில்லை.

அளிப்பு அதற்கேற்ற தேவையை உருவாக்கும் என்ற சேயின் விதியின்படி, வேலை அதிகரிக்கும்போது அவ்வளவு வேலையை வழங்கக் கூடிய வகையில் போதிய விற்றுவரவின்மூலம் தொழில் முனைவர்கள் தூண்டப்படுவார்கள் என்று பொருளாகும். இவ் விதி உண்மையானல், வேலை எந்த அளவிலிருந்தாலும், அதற்கேற்ப தொகுதேவையும் அளிப்பும் சமநிலையில் இருக்க வேண்டும். எதிர்பார்க்கப்படும் விற்று வரவு எப்போதும் அதிகமான வேலையைத் தூண்டக் கூடிய வகையில் அமையுமாதலால், தொழில் முனைவர்களிடையேயும் தொழிலாளரிடையேயும் உள்ள போட்டி காரணமாக வேலையை நாடி வரும் அனைவருக்கும் வேலை வழங்கப்படும் என்ருகும். ஆனல் முதலீட்டுக்கான தேவையைப் பொறுத்த அளவில் சேயின் அங்காடி விதி பலிப்பதில்லை. காரணமென்னவெனில் வேலை அதிகரிக்குந் தோறும் வருவாய் அதிகரித்த போதிலும் வருவாயில் துய்த்ததுபோக எஞ்சியதை முதலீடு செய்யலாம் என்று நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. அவ்வாறு வேலை அதிகரிப்பதற்கேற்ப முதலீடு அதிகரிக்காது போனல், துய்ப்பு, முதலீடு ஆகிய இரண்டு வகையிலும் ஏற்படும் தேவை தொகுஅளிப்பின் விலையைக் காட்டிலும் குறைந்துபடும். எனவே தொழில் முனைவர்கள் தொகுஅளிப்பு விலைக்கும் நுகர்வுக்குமான தேவைக்குமுள்ள வித்தியாசத்தை ஈடு செய்யக்கூடிய

வகையில் முதலீடு இருக்கும் வண்ணம் கவலையைக் குறைக்க முற்படுவர்.

தொகுஅளிப்பு அட்டவணை ஒன்றும் புதுமையானதன்று. ஆனால் கீன்ஸின் கோட்பாட்டு ஆய்விலே தொகுதேவை அட்டவணை முக்கிய இடம் வகிக்கின்றது. கீன்ஸின் கோட்பாட்டில் வேலையினளவு, பொருள்களுக்குள்ள தேவையைச் சார்ந்துள்ளது. ஆனால் மொத்த தேவையும், மொத்த வருவாயும் சமமாக இருந்தால் வேலைபற்றிய பொதுக்கோட்பாட்டைத் தொகுதேவைக் கோட்பாடு அல்லது தொகுவருவாய் (Aggregate income) கோட்பாடு என்றும் அழைக்கலாம். மேலும் மொத்த உற்பத்தியின் மதிப்பு மொத்த வருவாய்க்குச் சமமாக இருந்தால் கீன்ஸின் கோட்பாட்டைத் தொகு உற்பத்தி (வெளிப்பாட்டுக் கோட்பாடு) என்றும் சொல்லலாம்; வேலையின்காரணமாகப் பொருளுற்பத்தி உண்டாகிறது; அதே சமயத்தில் வருவாயும் உருவாகிறது. மொத்த உற்பத்தியின் மதிப்பு மொத்த வருவாய்க்குச் சமமாக இருக்கும். மொத்த உற்பத்தியின் நுகர்வுப் பொருள்களுமுண்டு; முதலீட்டுப் பொருள்களுமுண்டு (உற்பத்தியை நுகர்வுப் பொருள், தனியாரின் முதலீடு, அரசின் முதலீடு, அயல்நாட்டு முதலீடு என நான்கு வகையாகவும் பகுக்கலாம்). நுகர்வுப் பொருள் உற்பத்தியிலும், முதலீட்டுப் பொருள்களின் உற்பத்தியிலுமிருந்து வருவாய் அதிகரிக்கிறது. நிறைவேலைக்கும் குறைவானதொரு நிலையிலிருந்து ஆரம்பிக்கும் வருவாய் ஈட்டுவோர் எந்த விகிதத்தில் தங்கள் பெருகிய வருவாயை நுகர்வுக்காகவும் முதலீட்டுக்காகவும் செலவிடுவார்களோ அதேவிகிதத்தில் அதிக உழைப்பாளரை நுகர்வுப் பொருளுற்பத்தியிலும் முதலீட்டுப் பொருளுற்பத்தியிலும் ஈடுபடுத்த வேண்டும். அப்படிச்செய்தால்தான் நிறைவேலையை நோக்கிச் செல்ல முடியும்.

கீன்ஸ் வேலைக்கோட்பாட்டின்படி தொகுஅளிப்புத் தொடர்பு (Aggregate Supply Function) மாறாத தன்மையுடையது என்று கொண்டால், வேலையினளவு தொகுதேவையினால் நிருணயிக்கப்படும் என்பது புலனாகும். ஆனால் தொகுதேவை குறிப்பிட்ட வேலையிலுள்ள நுகர்வு நாட்டத்தையும் (Propensity to Consume) முதலீட்டினளவையும் பொறுத்தது. வேலைக்கும் வருவாய்க்கும் சிறப்பானதோர் தொடர்பு இருப்பதால் படம் 1-ல் வேலைக்குப்பதிலாக X- அச்சில் வருவாயைக் குறிக்கலாம். அதேபோல் மொத்தப் பொருளுற்பத்தியைச் செங்குத்தான அச்சில் குறிப்பிடலாம். மொத்த வருவாயும் மொத்த உற்பத்தியின் மதிப்பும் சமமாக இருப்பதால் அத் தொடர்பை விளக்கும் கோடு மூலத்திலிருந்து (O) இரு அச்சுகளுக்கும் நடுவே $45^{\circ}$ கோணத்தில் இடமிருந்து வலமாக மேல் நோக்கிச் செல்லும். இத் தொடர்புப் படம் 3-ல் விளக்கப்பட்டுள்ளது. அப் படத்தில் பயனுள்ள தேவையைக் குறிக்கும் E $45^{\circ}$ கோணத்தில் அமைந்த கோட்டில் இடம்பெறுவதைக் காணலாம். அப் புள்ளியில் (E) முதலீட்டினளவு,

45°ல் வரையப்பட்டுள்ள கோட்டிற்கும் நுகர்வுப் பட்டியலைப் பிரதிபலிக்கும் வளைகோட்டிற்குமிடையே (C) உள்ள இடைவெளியை ஈடு செய்வதாக இருக்கிறது.




படம் 3: நுகர்வு நாட்டத்தாலும் முதலீட்டின் அளவாலும் நிர்ணயிக்கப்படும் வருவாய்

நாட்டுவருவாயின் அளவுக்கும் தங்கள் வருவாயிலிருந்து நாட்டு மக்கள் நுகர்வுக்காகச் செலவிடும் பகுதிக்குமுள்ள நிலையான சம்பந்தத்தை விளக்கும் அட்டவணையை நுகர்வுஅட்டவணை அல்லது நுகர்வு நாட்டத்தை விளக்கும் அட்டவணை என்று குறிப்பிடலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வருவாய் | 100 | 125 | 150 | 175 | 200 |
| நுகர்வு | 100 | 120 | 137.5 | 150 | 160 |

மேற்கண்ட அட்டவணையிலிருந்து வருவாய் பெருகும்போது நுகர்வும் அதிகரிக்கும்; ஆனால் வருவாயின் வளர்ச்சிக்கேற்ப அதே விகிதத்தில் நுகர்வு அதிகரிப்பதில்லை என்பது விளங்கும். படம் 3-ல் கண்டபடி ஒரு குறிப்பிட்ட சமயத்தில் முதலீட்டினளவு 25 கோடி ரூபாயாக இருக்குமானால் தொழிற்துணிவு கொண்டவர்கள் இலாப கரமாக உற்பத்தி செய்யக்கூடிய பொருள்களின் மதிப்பு 175 கோடி ரூபாயாக இருக்கும். உற்பத்தியில் 150 கோடி மதிப்புள்ள நுகர்வுப் பொருளும் 25 கோடி மதிப்புள்ள முதலீட்டுப் பொருள்களும் இருக்கும். இந்நிலையில் முதலீடு 25 கோடிக்கும் குறைந்தால் மொத்த வருவாய் 175 கோடிக்கும் குறைவாக இருக்கும். முதலீடே இல்லை என்றால் வருவாய்

100 கோடி ரூபாயாகக் குறைந்துபடும். மாறாக, நிறைவேலை நிலையோடு தொடர்பு கொண்ட நாட்டுவருவாயானது, 200 கோடியை எட்டிப் பிடிக்க வேண்டுமாயின் முதலீடு 40 கோடியாக உயரவேண்டும் என்பது படத்திலிருந்து புலனாகும்.

வருவாயின் பெருக்கத்துக்கேற்ப நுகர்வுச் செலவுகள் அதிகரிக்காதாகையால், வருவாய்க்கும் நுகர்வுக்குமுள்ள இடைவெளியை நிரப்பக் கூடிய வகையில் முதலீடு அதிகரித்தால்தான் வேலைக்கான வாய்ப்புகள் பெருக முடியும் என்பது தெளிவு. அதிகரித்து வரும் வருவாய் அனைத்தையும் நுகர்வுக்கான வகையில் செலவிடுவதென்பது இயலாது. எனவே, நுகர்வுப் பொருளுற்பத்தியையும் அதற்கேற்ப ஒழுங்கு செய்வது அவசியம். இன்றேல் நுகர்வுப் பொருள்களின் தேவையும் அளிப்பும் சமநிலையில் இரா. முதலீட்டில் பொருள்களுக்குள்ள தேவை அதிகரிக்காவிட்டால் அத்தகைய துறைகளில் உழைப்பாளரை உட்படுத்துவதால் வெளிவரும் பொருள்களை இலாபகரமாக விற்க இயலாது. புதிதாக வேலையில் அமர்த்தப்படுபவர்கள் அனைவரையும் நுகர்வுப் பொருளுற்பத்தியில் ஈடுபடுத்தினாலும், அப் பொருள்களுக்குப் போதிய தேவை இல்லாத காரணத்தால் அவற்றை இலாபகரமாக விற்க இயலாது. புதிதாக வேலையில் அமர்ந்தவர்கள் தங்கள் வருவாய் முழுவதையும் நுகர்வுப் பொருள்களில் செலவிடாததே அதற்குக் காரணம். படம் 3-ல் தொழில் முனைவர்கள் மேலும் 25 கோடி மதிப்புள்ள நுகர்வுப் பொருள்களை உற்பத்தி செய்யக் கூடிய அளவு வேலையில்லாதோருக்கு வேலை வழங்க முன்வந்தால், மொத்தத்தில் நுகர்வுப் பொருளுற்பத்தி 175 கோடி ரூபாய் மதிப்புள்ளதாகவும் முதலீட்டுப் பொருளுற்பத்தி 25 கோடி மதிப்புள்ளதாகவும் ஆகும். அதையொட்டி மொத்த வருவாயும் 200 கோடி ரூபாய் ஆகும். இவ் வருவாயில் 160 கோடி மட்டுமே நுகர்வுப் பொருளில் செலவிடப்படும். எனவே 15 கோடி ரூபாய் மதிப்புள்ள நுகர்வுப் பொருள் விலையாகாமல் தேங்கிக் கிடக்கும். அதன் காரணமாகத் தொழிலுற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்று முடிவு செய்து நின்றவர்கள் நட்டமடைய நேரிடும். மாறாக, புதிதாக வேலையில் அமர்த்தப்பட்டவர்களில் ஒரு பொருத்தமான பகுதியினரை மட்டும் நுகர்வுப் பொருளுற்பத்தியில் ஈடுபடுத்தி, ஏனையோரை முதலீட்டுப் பொருளுற்பத்தியில் புகுத்தியிருந்தாலுங்கூட முதலீட்டுப் பொருள்களுக்கான தேவை அவற்றின் உற்பத்திக்கேற்ப அதிகரிக்காவிட்டால் மொத்தத்தில் விற்றுவரவு அளிப்பின் விலைக்கு ஈடாக இருக்காது. ஆதலின் தொழில் துணிவு கொண்டவர்கள் நட்டப்பட நேரிடும். எனவே உற்பத்தியும், வேலையும் சமநிலையில் இருக்க வேண்டுமாயின் வருவாய்க்கும் நுகர்வுக்குமுள்ள இடைவெளியை முதலீட்டைக் கொண்டு நிரப்ப வேண்டும். இதிலிருந்து முதலீடு பெருகாவிட்டால்

வேலைக்கான வாய்ப்புகள் வளரா என்பது எளிதில் விளங்கும். இதிலிருந்து நுகர்ச்சியின் நாட்டம் (Propensity to Consume) (அல்லது துய்ப்பின் தொடர்பு — Consumption function) மாறுந்தன்மை படைத்ததன்று என்ற அடிப்படையில் கட்டப்பட்டதாகும்.

நுகர்வு நாட்டம் (Propensity to Consume)

நுகர்வுப் பொருள்களுக்குள்ள தேவை, வருவாயையும் அதில் நுகர்வுக்காகச் செலவிடப்படும் பகுதியையும் பொறுத்தது. நாட்டு வருவாய் ஒரு குறிப்பிட்ட அளவினதாக இருக்கும்போது அதில் ஒரு நிலையான பகுதியை மக்கள் நுகர்வுப் பொருள்களில் செலவிடுவார்கள். நாட்டுவருவாய் 100 ரூபாயாக இருந்து அதில் 80 ரூபாயை நுகர்வுக்கான வகையில் செலவிட்டால் சராசரி நுகர்வு நாட்டம் 80 சதவீதம் என்று கணிக்கப்படும். மக்கள் தொகையில் ஒரு பகுதியினர் தங்கள் வருவாயில் 80 சதவீதத்துக்கும்மேல் நுகர்வில் செலவிடலாம். வேறு சிலர் மிகக் குறைவான பகுதியை நுகர்வுக்களுக்காகச் செலவிடலாம். ஆனால்பொருளாதாரம் முழுவதையும் சேர்த்துக் கணக்கிட்டால் சராசரி நுகர்வு நாட்டம் 80 சதவீதமாக இருக்கும். அப்படியே நாட்டுவருவாயின் ஒவ்வொரு அளவுக்கும் ஏற்றாற்போல நுகர்வு நாட்டம் மாறுபடும். பொதுவாக, நாட்டுவருவாய் அதிகரிக்கும் போது நுகர்வின் மொத்த அளவும் அதிகரிக்கும். மாறாக, வருவாய் சுருங்கும்போது நுகர்வும் சுருங்கும். இவ்வாறு வருவாயின் ஒவ்வொரு அளவிற்கும் ஏற்ப நுகர்வின் அளவு எவ்வாறு மாறுபடுகிறது என்பதை ஒரு பட்டியலாகத் தொகுத்தால் அதை நுகர்வு நாட்ட பட்டியல் (schedule of the Propensity to Consume) என்று அழைக்கலாம். சுருக்கமாகக் குறிக்க வேண்டுமாயின், அப் பட்டியலை நுகர்வு நாட்டம் என்று கூறலாம். வருவாய் வேறுபடும்போது நுகர்வு எவ்வாறு வேறுபடும் என்ற தொடர்பைக் காட்டுவதே அப் பட்டியலாகும்.

குறுகிய காலத்தில் நுகர்வு நாட்டம் மாறுவதில்லை என்பது கீன்ஸின் துணிபு. இந்த அடிப்படை அவரது கோட்பாட்டுக்கு இன்றியமையாதது. இத்தகையதோர் முற்கோள் (assumption) நடைமுறையில் உண்மையானால், ஒரு சமுதாயத்தின் நுகர்வு அதன் வருவாய்க்கேற்ப ஒரு குறிப்பிட்ட ஒழுங்குக்கு உட்பட்டு மாறுபடும் என்று கொள்ளலாம். ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில் நுகர்வு நாட்ட பட்டியல் எவ்வாறு அமையும் என்பது அச் சமுதாயத்தின் நிலையான பழக்க வழக்கங்கள், வருவாயின் பங்கீடு, வரிமுறை போன்ற அம்சங்களைச் சார்ந்து இருக்கும். நுகர்வு நாட்டம் அதிகமாக இருந்தால் அது வேலையின் அளவை அதிகரிப்பதற்குத் துணை புரியும். ஏனெனில் வருவாய்க்கும் நுகர்வுக்குமுள்ள இடைவெளி குறுகியதாக இருக்கும்.

அதை எளிதில் முதலீட்டைக் கொண்டு நிரப்பிவிடலாம். மாறாக, நுகர்வு நாட்டம் குறைவாக இருந்தால் வருவாய்க்கும் நுகர்வுக்குமுள்ள இடைவெளி அகன்றிருக்கும். பேரளவில் முதலீடு செய்யப்பட்டாலன்றி அவ் விடைவெளியை நிரப்புவது கடினமாதலால், வேலையின்மை அதிகரிப்பது அவ்வளவு எளிதன்று. நுகர்வு நாட்டம் நூற்றுக்குநூறாக இருந்தால் நிறைவேலையை நிலைநாட்டுவது ஒரு பொருட்டன்று. ஏனெனில், அந் நிலையில் முதலீட்டுக்கே அவசியம் இருக்காது. ஆனால், நடைமுறையில் நுகர்வுநாட்டம் நூற்றுக்கு நூறாக இருப்பதில்லை. வேலையினளவு அதிகமாக இருக்கும்போது நுகர்வு, வருவாயைக் காட்டிலும் குறைந்துபடும். எனவே வேலையினளவு கொஞ்சங்கொஞ்சமாகக் குறைந்து ஒரு குறைந்தபட்ச மட்டத்தை எட்டினால்தான் வருவாயும் நுகர்வும் சமம் என்ற நிலை ஏற்படும். பணக்காரச் சமுதாயத்தில் வேலையின் அளவு இவ்வாறு அடிமட்டத்தை அடைந்து நிற்குமானால், புரட்சி தலைதூக்கலாம். எனவே, புரட்சிக்கான சூழ்நிலையிலிருந்து சமுதாயத்தைப் பாதுகாக்க வேண்டுமானால் வேலைக்கான வாய்ப்புகளைப் போதிய அளவில் பெருக்கக் கூடிய முதலீடு இருந்தாக வேண்டும் என்பது கீன்ஸின் கருத்து.

### முதலீட்டுக்குத் தூண்டுதல்

முதலீட்டுக்கான பயனுள்ள தேவை, நுகர்வுக்கான பயனுள்ள தேவையைக் காட்டிலும் மிகவும் சிக்கலானது; நிலையற்ற தன்மையை உடையது. நல்ல இலாபம் கிடைக்கும் என்று எதிர்பார்த்தே தொழிலதிபர்கள் ஆலைகளிலும் தொழிற்சாலைகளிலும் முதலீடு செய்ய முனைகிறார்கள். இத்தகைய எதிர்பார்ப்புகள் எதிர்காலம் பற்றிய தெளிவற்ற தோராய மதிப்பீட்டினடியாக எழுவதால், முதலீட்டில் அதிகமான ஏற்ற இறக்கங்களைக் காணலாம். முதலீடு செய்வதற்கு வேண்டிய பணத்தைத் தொழிலதிபர்கள் வங்கிகளிடமிருந்து கடனாகப் பெறுவதுண்டு. அத் தொகையை முதலீடு செய்வதில் வட்டி போன்ற பல செலவுகள் ஏற்படும். அச் செலவுகளை ஈடுசெய்யக் கூடிய அளவிலாவது முதலீட்டின் விளைவு (return on capital) இருந்தால்தான் தொழிலதிபர்கள் முதலீடு செய்ய முனைவார்கள். முக்கியமாக முதலீட்டின் பயனாகப் பிறக்கும், இலாப வீதத்தையும் முதலீட்டுக்கென வாங்கும் வங்கிக் கடனுக்குக் கொடுக்க வேண்டிய வட்டி வீதத்தையும் ஒப்பிட்டுப் பார்த்துச் சாதகமெனத் தோன்றினாலே தொழில் முனைவர்கள் முதலீடு செய்ய முனைவர். எதிர்பார்க்கப்படும் இலாப வீதத்தை முதலீட்டு இறுதிநிலைத்திறன் எனக் கீன்ஸ் அழைக்கலானார்.

முதலீட்டு இறுதிநிலைத்திறன் (Marginal Efficiency of Capital)

ஏற்கனவே உள்ள முதலினச் சொத்துகளோடு (Capital assests) மேலும் ஒன்றைச் சேர்ப்பதால் ஏற்படும் செலவைக் கழித்தபின், எஞ்சி நிற்கும் வரவை முதலீட்டோடு சம்பந்தப்படுத்தி விதாச்சாரமாகக் கணக்கிட்டால் வரும் விளைவை, முதலீட்டு இறுதி நிலைத்திறன் எனக் கீன்ஸ் குறிப்பிட்டார். அதாவது, முதலீட்டின் மீது எதிர்பார்க்கப்படும் இலாப வீதமே முதலீட்டு இறுதிநிலைத் திறன் எனலாம். ஆயிரம் ரூபாய் முதலீடு செய்வதன் விளைவாகச் செலவு போக 50 ரூபாய் கிடைத்தால் இலாப வீதம் 5 சதவீத மாகும். ஆனால் அவன் வாங்கும் கடனுக்கு வங்கிகள் 4 சதவீம் வசூலித்தால் அம் முதலீட்டின் உண்மையான மதிப்பு 1250 ரூபாயாகும். இச் சான்றில் இலாபவீதம்வட்டி வீதத்தைக் காட்டிலும் அதிகமாக இருப்பது கண்கூடு. இந்த இலாப வீதம் முதலீட்டைச் செலுத்தக்கூடிய எல்லாத் திக்குகளிலுமிருந்து கிடைக் கக்கூடிய இலாபவீதங்களைக் காட்டிலும் உச்ச நிலையிலிருந்தால், முதலீட்டுஇறுதிநிலைத்திறன் 5 சதவீதம் என்று துணிந்து கூறலாம். முதலீட்டு இறுதிநிலைத்திறன் இவ்வாறு வட்டிவீதத்தைக் காட்டிலும் உயர்ந்திருக்கும் வரை முதலீடு தொடர்ந்து நடைபெறும் என்று கீன்ஸ் சுட்டிக் காட்டினார்.

எதிர்பார்க்கப்படும் இலாபவீதம் (expected rate of profit) அல்லது முதலின் இறுதிஆக்கத்திறன் (marginal productivity of Capital) என்ற பரம்பரைக் கலைச்சொற்களைப் பயன்படுத்தாமல் முதலீட்டுஇறுதிநிலைத்திறன் என்ற புதுச்சொற்றொடரைக் கொண்டதற்குக் காரணம் உண்டு. முதலீடு, நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் சேர்த்து இயக்க வல்லது. எதிர்காலத்தைப் பற்றி முதலாளிகளுக்குத் தெளிவான கண்ணோட்டம் இல்லாத தாலேயே முதலீட்டில் கணிசமான ஏற்றத்தாழ்வுகள் காணப்படு கின்றன. முதலீட்டின் விளைவுக்காகப் பல்லாண்டுகளாகக் காத்திருக்க வேண்டிய நிலையிருந்தால், முதலீடு செய்பவர்கள் மிகவும் ஜாக்கிரதையாகச் செயலிலிறங்குவர். காலத்தினளவு நீளநீள எதிர்பாராத விளைவுகள் குறுக்கிட்டு முதலீடு செய்பவர்களின் இலாப வேட்கையைப் பாழாக்கலாம். இவ்வாறு முதலாளிகள் தங்கள் முதலீட்டு முயற்சியினால் நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் இணைப்பது கீன்ஸீயக் கோட்பாட்டின் அடிப்படையான கருத்துகளுள் ஒன்றாகும்.

முதலீட்டின் இறுதியாக்கத்திறன் காலப்போக்கில் குறைந்துபடும் தன்மை படைத்தது என்றார் கீன்ஸ். குறுகிய காலத்திலும்

அதன் அளவு அலையசைவு போல ஏறி இறங்குவதுண்டு. முதலீட்டின் இறுதியாக்கத் திறன் இவ்வாறு நிலையற்று அலைவாய்ப்பட்டு அசைவது, வாணிகச்சுழலுக்கு அடிப்படையான காரணமாகும் என்பது கீன்ஸின் கருத்து. பொருளாதாரம் சுறுசுறுப்பாக இயங்கி வரும்பொழுது முதற்கருவிப் பொருள்களுக்குள்ள தேவை விறுவிறுப்பாக அதிகரிக்கும். அதன் பயனாகக் கிடைக்கும் அதிக இலாபத்தைக் கண்டு உற்சாகமடையும் முதலாளிகள் முதற்கருவி பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்களில் பேரளவில் முதலீடு செய்ய முனைவர். ஆனால், அதற்கிடையில் முதற்கருவிப் பொருள்கள் தேவைக்கு மிஞ்சி அளிக்கப்படுவதால் அவற்றின் விலைவாசிகள் சட்டென்று விழுந்து, எதிர்பார்க்கப்படும் இலாபவீதத்தை வட்டி வீதத்துக்கும் கீழே தள்ளிவிடும். அதன் விளைவாக முதலாக்க முயற்சிகள் அடியோடு கைவிடப்படுவதால் பொருளாதாரம் மந்தப் படுகுழியை நோக்கி விரையும். பங்குச் சந்தையில் நடக்கும் குழப்பங்களும் முதலீட்டின் இறுதியாக்கத்திறனை நிலைகுலையச் செய்வதுண்டு. ஆதலின், பங்குச் சந்தையில் ஏற்படும் தில்லுமுல்லுகள் முதலாளித்துவப் பொருளாதாரங்களில் ஏற்படும் சீர்குலைவிற்கான மூலகாரணங்களுள் ஒன்றாகும் என்றால் மிகையாகாது.

மூலதனம் பெருகப்பெருகக் காலப்போக்கில் அதன் இறுதி ஆக்கத்திறன் கொஞ்சங் கொஞ்சமாகக் குறையுமென்று எதிர்பார்க் கலாமா என்றார் கீன்ஸ். அதே சமயத்தில் மக்கள்தொகை பெருகி, நாட்டின் எல்லைகள் விரிந்து, புதிய பல இயற்கை வளங்களும் கனிப்பொருள்களும் கைவசமாகி, நுட்பத்தொழிலறிவில் புரட்சி கரமான மாறுதல் ஏற்பட்டு, உழைப்பை மிச்சப்படுத்தக்கூடிய எந்திரங்கள் பல உட்புகுந்து, முதலீட்டின் ஆக்கத்திறன் குன்றாமல் பாதுகாக்க முடியும். இருந்தாலும் இத்தகைய சாதகமான முன்னேற்றங்களை அன்றாட நிகழ்ச்சிகளாகக் கொள்ள முடியாது. அத்தகைய திடீர் மாற்றங்களால் ஏற்படும் விறுவிறுப்பு நாளடைவிலே மங்கி முதலீட்டின் இறுதியாக்கத் திறனைக் கீழே இழுத்துச் செல்ல முயலும். இந் நிலையில் முதலீடு குறைந்துபடுவதைத் தற்காலிக மாகவாவது தடுக்கவேண்டுமானால், வட்டிவீதத்தை ஏற்றவகையில் குறைத்தாகவேண்டும்.

**வட்டிவீதம்**

பணத்தினளவையும் (quantity of money) அதை ரொக்கமாக வைப்பதற்குள்ள விருப்பத்தையும் (liquidity preference) பொறுத்தே வட்டிவீதம் மாறுபடும். ரொக்க விருப்பம் பணத்தின் தேவையைக் குறிக்கும். பணத்துக்குள்ள தேவையையும் அளிப்பையும் பொறுத்தே

அதன் விலை (வட்டி வீதம்) நிருணயிக்கப்படும். மக்கள் தங்கள் சொத்துகளில் ஒரு பகுதியை ரொக்கமாக வைக்க விரும்பினால், அவ் விருப்பத்தையே ரொக்கவிருப்பம் என்பர். நாணயம், காகிதச் செலவாணி, வங்கிவைப்பு போன்ற பல வடிவில் பொதுமக்களின் கையில் புரளும் பணத்தின் தொகையையே அளிக்கப்படும் பணத்தின் அளவாகக் கொள்வர்.

மக்கள் ரொக்கப்பணத்தைக் கையிருப்பாக வைப்பதற்கு மூன்று காரணங்கள் உண்டு. முதலாவது, கச்சாப் பொருள்களையும் மூலப் பொருள்களையும் வாங்குவது, வாரங்கொடுப்பது, கூலியைப் பட்டு வாடாச் செய்வது, இலாபத்தை பங்கிட்டளிப்பது போன்ற அன்றாட நடவடிக்கைகளைச் சிக்கலின்றி மேற்கொள்ளும் பொருட்டு கையில் ரொக்கப்பணம் வைத்திருக்க விரும்புவர். இதை நடவடிக்கை நோக்கம் (transaction motive) என்பர். பொருளாதாரத்திலுள்ள வேலையினளவு, பொருளுற்பத்தி, விலைவாசிகள் ஆகியவற்றுக்கேற்ப, நடவடிக்கை நோக்கத்துக்காகக் தேவைப்படும் ரொக்கப்பணத்தின் அளவு அதிகரிக்கவோ குறையவோ செய்யலாம். ஆனால், இவ்வளவு தான் தேவைப்படும் என்பதை ஓரளவு நிச்சயமாகக் கணக்கிடலாம். அதேபோல், எதிர்பாராத நெருக்கடிகளைச் சமாளிக்கவும் அவ்வப்போது பணம் தேவைப்படும். இதை எச்சரிக்கை நோக்கத் துக்கான (precautionary motive) தேவை என்றழைப்பர். இது இரண்டாவது நோக்கமாகும். இதற்காகத் தேவைப்படும் பணத்தை அவ்வளவு திட்டவட்டமாக நிருணயிக்க முடியாதெனினும், அத் தேவையினளவில் கணிசமான ஏற்றத்தாழ்வு இருக்க அவசியமில்லை.

மூன்றாவது, ஊகவாணிக நோக்கத்துடனும் (speculative motive) பலர் கையிருப்பாக ரொக்கப்பணம் வைத்திருக்க விரும்புவர். உண்மையில் ஊகவாணிக நோக்கத்துக்கும் வட்டிவீதத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. எதிர்காலத்தில் அங்காடியில் ஏற்படும் சாதகமான அசைவுகளைக் கிடைக்கும் வரவைக் காட்டிலும் அதிகமாக இருக்கும் என்ற இலாபகாரமாகப் பயன்படுத்துவதே ஊக வாணிகத்தின் நோக்கம். இவ்வாறு கையிருப்பாகப் பதுக்கப்படும் பணம் மலட்டுத்தனம் வாய்ந்தது. ரொக்கமாக வைத்திருப்பதால் அதை வங்கியில் வைப்பாகப் போட்டுவைப்பதன் மூலமும் முதலீடு செய்வதன்மூலமும் பெறக்கூடிய வட்டித்தொகையை அல்லது இலாபத்தை இழக்க வேண்டியதிருக்கும். அதே சமயத்தில் ரொக்க மாகக் கையிலிருப்பதால் அதைக்கொண்டு எதிர்காலத்தில் கணிசமான இலாபம் தரக்கூடிய வாய்ப்புகளைப் பயன்படுத்த ஏதுவாகும். எனவே வட்டிவீதத்துக்கும் ஊகவாணிக நோக்கத்துக்காகப் பதுக்கப் படும் பணத்துக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. எதிர்காலத்தில்

வட்டிவீதம் எவ்வாறு இருக்குமென்ற ஊகத்தினடியாகவே இத்தகைய ரொக்கவிருப்பம் எழுகிறது. வட்டிவீதம் மிகக் குறைவாக இருக்கும்போது ஒரு குறிப்பிட்ட தொகையை வங்கியில் வைப்பாகவோ, முதலீடாகவோ ஈடுபடுத்துவதாக வைத்துக் கொள்வோம். இந் நிலையில் வட்டிவீதம் வருங்காலத்தில் கணிசமாக உயருமானால் அதன் காரணமாகச் சொத்துகளின் மதிப்புக் கணிசமாகக் குறைந்துபடலாம். முதலுக்கு ஏற்படும் இத்தகைய நட்டம், வட்டி, இலாபம் என்ற வகையில் ஊகம் வலுக்க இடமுண்டு. காலத்தினளவு நீளநீள எதிர்காலத்தின் நிலையற்ற தன்மை பல மடங்காக மிகுந்து காணப்படும். எனவே, தற்காலத்தில் வட்டிவீதம் அதிகமாக இருந்தால் மலடாகப் பணத்தைப் பதுக்குவதற்குப் பலர் தயங்குவார்கள். மாறாக, வட்டிவீதம் மிகவும் குறைவாக இருந்தால் ஊக வாணிக நோக்கத்தோடு பதுக்கப்படும் பணத்தினளவு அதிகமாக இருக்கும். இருப்பினும் ஊகவாணிக நோக்கத்தினடியாகப் பிறக்கும் ரொக்கவிருப்புத் தாறுமாறாக ஏறிஇறங்கும் தன்மை வாய்ந்தது. எதுவாயினும், ஊகவாணிக நோக்கத்துக்காகத் தேவைப்படும் பணத்தினளவு குறைவாக இருந்தால், வட்டிவீதம் தாழும். மாறாக பணத்தின் தேவை அதிகரித்தால் வட்டிவீதம் உயரும். எனவே, அடிப்படையில் ஊகவணிகரின் மனோபாவத்துக்கேற்ப வட்டிவீதம் மாறுபடும் என்பது புலனாகும். அதே சமயத்தில் அரசியல், பொருளாதார அரங்கில் எதிர்காலத்தில் ஏற்படவிருக்கும் மாற்றங்களை ஊகவணிகரின் மனோபாவத்தை ஊக்குவிக்க உதவும் என்று கூறலாம்.

மேலும் இலாபகரமான ஏனைய வாய்ப்புகளைப் பொறுத்துதான் பணத்தைப் பதுக்குவதா இல்லையா என்ற முடிவுக்கு வருவர். ரொக்க நிலையைக் (liquidity) கைவிட்டால், தக்க ஈடு கிடைக்குமென்ற நிலையிருந்தால்(அதாவது வட்டிவீதம் சற்று உயர்ந்திருந்தால்) மக்கள் ரொக்கநிலையைக் கைவிட முன்வரலாம். ஆயின் பணத்துக்குள்ள தேவையையும் அதனளிப்பையும் பொறுத்து வட்டிவீதம் மாறுபடும். பணத்தினளவு பெரும்பாலும் வங்கிமுறையின்மூலம் நிருணயிக்கப் படுகிறது. பணத்துக்குள்ள தேவை ரொக்கவிருப்பத்தைப் பொறுத்திருக்கிறது. வங்கிகள் அளிக்கும் பணத்தினளவு மாறாமலிருந்தால், வட்டிவீதம் பணத்துக்கான தேவையை மட்டும் சார்ந்திருக்கும். ரொக்கப்பணத்தினளவையும் தங்கள் சொத்தை ரொக்கப்பணமாக வைத்திருப்பவர்களின் விருப்பத்தையும் சமநிலையில் வைத்திருக்க உதவும் பணத்தின் விலைதான் வட்டிவீதமாகும். வட்டிவீதம் குறைவாக இருந்தால் ரொக்கப்பணத்துக்குள்ள தேவை, அளிப்பைவிட அதிகமாக இருக்கும். வட்டிவீதம் அதிகமாக இருந்தால் தேவைக்கு மிஞ்சிய பணம் ரொக்கமாக அளிக்கப்படும். பயன்படு-

தப்படும் பணத்துக்கு ஊதியமாக வழங்கப்படுவதுதான் வட்டி. அத்தகைய ஊதியம் மிதமிஞ்சியோ, மிகக் குறைவாகவோ இருப்பது கூடாது.

பணத்தினளவைக் கட்டுப்படுத்தும் சக்தி பொதுமக்களிடமில்லை; வங்கிகளிடமே உண்டு. ஆனால், எவ்வளவு பணத்தை ரொக்கமாகக் கையில் வைத்திருப்பது என்ற முடிவு பொதுமக்களையே சாரும். அவர்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்யப் போதுமான பணம் அளிக்கப்படவில்லை என்றால், அவர்கள் அதிக வட்டி கொடுக்கத் தயாராவார்கள். அதற்கேற்ப வங்கிகள் அதிகப்பணத்தை வழங்க முன்வரும். அவ்வாறு தேவைக்கேற்ற பணத்தைத் தாமதமின்றி வங்கிகள் வழங்கினால் வட்டிவீதம் உயர வேண்டிய அவசியமிருக்காது. எனவே, வங்கிகளும் செலாவணி நிருவாகிகளும் வகுக்கும் கொள்கை களின்மூலம் வட்டிவீதம் மாறுபடும். மாறிவரும் தேவைக்குத் தக்கதாகப் பணத்தைத் தயங்காது அளிக்க முன்வருவதன்மூலம், வட்டி வீதத்தைக் கட்டுப்படுத்த இயலும். மக்களின் ரொக்கவிருப்பமோ அவ் விருப்பத்துக்கு அடிப்படையாக உள்ள மனோபாவங்களோ வங்கி களின் செல்வாக்குக்குள் அடங்காமல் இருக்கலாம். ஆனால், ரொக்க விருப்பத்துக்கேற்ப பணத்தை அளிப்பது வங்கிகளுக்கு முடியும். எனவே, பொருளாதார மந்தத்தைப் போக்குவதற்கு வங்கிகள் வளப்பமான பணக் கொள்கையையும் குறைவான வட்டிவீதத்தையும் கையாள வேண்டுமென்று கீன்ஸ் கோரிவந்தார். இன்றேல், பண முடையினால் முதலீடு தடைபடும்; மந்தச் சேற்றில் பதிந்த பொருளா தாரங்களை மீட்பதற்கான முயற்சிகளும் வெற்றி பெறாது என்று அவர் அஞ்சினார்.

### முதலீட்டுக்கும் நுகர்வுக்குமுள்ள உறவு

நுகர்வுப் பொருளுற்பத்திக்கும் இலாபகரமாக உற்பத்தி செய்து விற்கக்கூடிய முதலீட்டுப் பொருள்களின் அளவுக்கும் திட்டவட்டமான சம்பந்தமுண்டு என்பது தொழில் முனைவர்களுக்குத் தெரியும். நுகர்வு நாட்டம் இவ்வளவுதான் என்று தெரிந்தால், நுகர்வுப் பொருள்களுக் குள்ள, தேவை வருவாயைச் சார்ந்திருக்கும். நாட்டுவருவாய் நுகர்வுப் பொருளுற்பத்தினடியாகவும் முதலீட்டுப் பொருளுற்பத்தியின் அடியா கவும் உருவாகும். முதலீட்டினளவு ஏற்கனவே விளக்கியபடி முதலீட் டுக்குள்ள தூண்டுதலைப் பொறுத்தது. ஆதலின், இலாபகரமாக விற்கக்கூடிய நுகர்வுப் பொருள்களின் அளவு ஓரளவு முதலீட்டுப் பொருள்களின் உற்பத்தியைச் சார்ந்திருக்கும் என்பது புலனாகும். உதாரணமாக, நாட்டுவருவாய் நூறுரூபாயாக இருக்கும்போது அதில் நுகர்வின் பங்கு 80 ரூபாயாகவும் முதலீட்டின் பங்கு 20 ரூபாயாகவும்

இருப்பதாகக் கொள்வோம். அப்படியானால், முதலீட்டுக்கும் நுகர்வுக்குமுள்ளவிகிதம் 1:4 ஆகும். அதன்படி, முதலீட்டுப் பொருளுற்பத்தியின் மதிப்பு 1 கோடி ரூபாயாக இருக்கும்போது நுகர்வுப் பொருளுற்பத்தியின் மதிப்பு 4 கோடி ரூபாயாக இருக்கும் என்பது விளங்கும். குறிப்பாக, முதலீட்டுப் பொருள்களுக்குள்ள தேவையைப் பொறுத்தே மொத்த பொருளுற்பத்தி இலாபகரமானதாக இருக்கும். முதலீட்டில் 1 கோடி ரூபாய் குறைந்தால் நுகர்வில் 4 கோடி ரூபாய் குறையும். அதன் விளைவாக நாட்டுவருவாயில் சற்றேறக் குறைய 5 கோடி ரூபாய் குறையும். இதைத்தான் பெருக்கி விளைவு (Multiplier effect) என்று அழைப்பர்.

ஆனால், தொன்மைப் பொருளாதாரத்தினடிப்படையில் முதலீட்டில் 1 கோடி ரூபாய் குறைந்தால் நுகர்வில் 1 கோடி ரூபாய் பெருகும் என்று நம்பி வந்தனர். அதாவது முதலீட்டுக்கும் நுகர்வுக்குமுள்ள விகிதம் மாறுபடும் என்று எண்ணினர். இந்த நம்பிக்கை அறிவின்பாற் பட்டதுமன்று; நடைமுறைக்கு ஒத்ததுமன்று; எனினும் வட்டிவீதத்தின் துணைகொண்டு சேமிப்பையும் முதலீட்டையும் சமநிலையில் வைக்கலாம் என்று அவர்கள் மனப்பால் குடித்தார்கள். இது கீன்ஸின் கருத்துக்குப் புறம்பானது.

**வேலைக்கோட்பாட்டின் சுருக்கம்**

1. மொத்த வருவாய் மொத்த வேலையைச் சார்ந்தது.

2. நுகர்வுநாட்டத்துக்கேற்ப நுகர்வுச்செலவு மொத்த வேலையையும் வருவாயையும் பொறுத்தது.

3. மொத்த வேலை மொத்த பயனுள்ள தேவையைப் பொறுத்தது. மொத்த பயனுள்ள தேவையை நுகர்வுச் செலவு, முதலீட்டுச் செலவு என்று இரு கூறுகப் பிரிக்கலாம்.

4. பொருளாதாரம் சமநிலையிலுள்ளபோது தொகுவன தேவையும் தொகுவன அளிப்பும் சமமாக இருக்கும். எனவே தொகுவான அளிப்புக்கும் நுகர்வுக்குமுள்ள பயன்படு தேவைக்குமுள்ள வித்தியாசம் முதலீட்டுக்குள்ள பயன்படு தேவைக்குச் சமமாக இருக்கும்.

5. பொருளாதாரம் சமநிலையிலுள்ளபோது தொகுவன அளிப்பும், தொகுவன தேவையும் சமமாக இருக்கும். தொகுவன தேவை, நுகர்வு நாட்டத்தையும், முதலீட்டின் அளவையும் சார்ந்தது. எனவே, வேலையினளவு, தொகுவன அளிப்பையும், நுகர்வு நாட்டத்தையும், முதலீட்டினளவையும் சார்ந்திருக்கும்.

6. பொதுவாக தொகுவனஅளிப்பும் நுகர்வு நாட்டமும் நிலையாக இருக்குமாதலால், முதலீட்டினளவைப் பொறுத்தே வேலையினளவில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்படும்.

7. முதலீட்டின் இறுதிநிலைத் திறனையும் வட்டிவீதத்தையும் சார்ந்து, முதலீட்டினளவு நிர்ணயிக்கப்படும்.

8. முதலீட்டின் இறுதிநிலைத் திறன் எதிர்பார்க்கப்படும் இலாபத்தையும், முதற்கருவிச் சொத்துக்களை ஈடு செய்வதற்கு ஆகும் செலவையும் (replacement Cost of Capital assets) பொறுத்தது.

9. வட்டிவீதம், அளிக்கப்படும் பணத்தின் அளவையும் ரொக்க விருப்பத்தையும் சார்ந்தது.

அவற்றிடையே உள்ள தொடர்புகள்

வேலையினளவு பயனுள்ள தேவையைப் பொறுத்தது. நுகர்வு நாட்டம் முதலீட்டுக்கான தூண்டல் ஆகியவற்றைக் கொண்டு பயனுள்ள தேவை நிருணயிக்கப்படும். நுகர்வு நாட்டம் மாறாத நிலையில், வேலையினளவு முதலீட்டினளவிற்கேற்ப மாறுபடும். வட்டி வீதம் குறைந்தால் அல்லது முதலீட்டினிறுதிநிலைத் திறன் மேம்பட்டால் முதலீடு அதிகரிக்கும். இரண்டுமே சாதகமாக இருந்தால் மிகவும் நல்லது. மாறாக, வட்டிவீதம் குறையும்போது அதை ஈடு செய்யக் கூடிய அளவில் முதலீட்டின் இறுதிநிலைத்திறனும் குறைந்துபட்டால் முதலீட்டில் முன்னேற்றம் காண்பதரிது. பொருளாதாரம் சுறுசுறுப்பாக வேலை செய்யும்பொழுது பொருளாதார நடவடிக்கைகள் சுமுகமாக நடைபெறுவதற்குப் போதிய பணமும், மதிப்பின் வைப்பிற்காக (store of value) வேண்டப்படும் பணமும், வட்டி வீதத்தைத் தூக்கிவிட முயலும் வங்கிகளும், பண நிருவாகிகளும் தேவைக்கேற்ப பணத்தை அளிக்க முன்வந்தாலன்றி வட்டிவீதம் மட்டுப்படாது. பணத்தினளவு அதிகரித்து வரும்போதும் பொது மக்களின் ரொக்க விருப்பம் அளவுக்குமேல் அதிகரித்தால் வட்டிவீதம் உயரலாகும். எதிர்காலத்தில் முதலினச் சொத்துகளிலிருந்து கிடைக்கும் இலாபம் அதிகரிக்கப் போகிறது என்ற எண்ணம் உந்தித் தள்ளுமானால் முதலீடும் வேலையினளவும் அதிகரிக்க வாய்ப்புண்டு. ஆனால், அதேசமயத்தில், முதலீட்டுப் பொருள்களின் அளிப்புவிலை (உற்பத்திச் செலவு) அதிகரிக்குமானால் முதலீட்டு இறுதிநிலைத் திறனில் காணப்படும் சாதகமான அறிகுறிகள் அவிந்து போகும். ஆதலின், முதலீட்டு முயற்சிகளில் ஊக்கம் பிறக்காது.

முதலீடு பெருகும்போது வேலைக்கான வாய்ப்புகள் பெருகும் என்றாலும், அதே சமயத்தில் நுகர்வுநாட்டம் குறைந்துபட்டால்

அத்தகைய வாய்ப்புகள் அடைபட்டுப்போகும். மாருக, முதலீடு குறையும்போது நுகர்வு நாட்டம் மிகுந்து வருமானல் வேலைக்கான வாய்ப்புகள் பெருக இடமுண்டு. பொதுவாக, குறுகிய காலத்தில் நுகர்வு நாட்டம் மாருது என்று கொள்ளலாம்.

முடிவாக, முதலீட்டின் விளைவாக வருவாய் பெருகும். பெருகி வரும் வருவாயின் பயனுக நுகர்வுக்கான தேவை அதிகரிக்கும். அதனடியாக வருவாய் மேலும் வளரும் வாய்ப்புகள் பிறக்கும். மாருக, முதலீடு குன்றுவதால் வருவாய் சுருங்கும். வருவாய் குன்றுவதால் நுகர்வுக்கான தேவை குறைந்துபடும். அதன் காரணமாக வருவாயின் வாயில்கள் மேலும் அடைபடும். வருவாய்க்கும் வேலைக்குமுள்ள இந்தத் தொடர்பு இயங்கத் தொடங்கினல் ஒன்றையொன்று பலப் படுத்தும் வகையில் திரண்டு வரும் என்று எண்ண இடமுண்டு. இவ் வாறு பற்றிப்படரும் தன்மை மிகுந்திருப்பதனுல் தான் வேலையினளவில் கணிசமான மேடுபள்ளங்கள் காணப்படுகின்றன. ஆயினும், அத்தகைய மேடு பள்ளங்களின் ஏற்றத்தாழ்வுகளை ஓரளவு அளவிட முடியும். குறிப்பாக, பொருளாதாரம் மந்தப்பட்டுக் கீழ்நோக்கிச் சரியும்போது அடிமட்டமான ஓர் அளவைக் கடந்து செல்வதில்லை. அந்த எல்லையில் மொத்த வருவாயும், நுகர்வும் சமமாக இருக்கும். மாருக, பொருளாதாரம் சுறுசுறுப்படைந்து மேல்நோக்கிச் செல்லும் போது நிறைவேலை என்ற நிலையை எட்டிப் பிடிக்குமானல் அதற்கு மேலும் உயரச் செல்லும் என்று எதிர்பார்க்க இயலாது. கோட்பாட்டினடியாக வாணிகச்சுழலுக்கு இவ்வாறு எல்லைகள் வகுத்தாலும், நடைமுறையில் பொருளாதாரம் நிறைவேலையை எய்துவதுமில்லை; வருவாயெல்லாம் நுகர்விலே செலவாகிறது என்ற நிலையை அடைவதுமில்லை. உண்மையில் ஒரு பொருளாதாரம் எந்த வரம்புக்குள் இயங்கிவரும் என்பது அப் பொருளாதாரத்தில் நுகர்வு நாட்டம் எத்துணை பலம் பெற்று விளங்குகிறது என்பதையும், முதலீடு எந்த அளவுக்குத் தூண்டப்படுகிறது என்பதையும் பொறுத்தது என்பது கீன்ஸியக் கருத்து.

### கருத்துகளின் நடைமுறைப் பொருள்

கீன்ஸிய வேலைக் கோட்பாட்டில் மூன்று சார்பற்ற மாறிகள் (Independent Variables) உண்டு. அவையாவன :— நுகர்வு நாட்டம் அல்லது நுகர்வு அட்டவணை; முதலீட்டு இறுதிநிலைத்திறன் அல்லது முதலீட்டுக்குள்ள தேவை அட்டவணை; வட்டி வீதம் அல்லது ரொக்க விருப்ப அட்டவணை; நடைமுறைக் கொள்கைகளை வகுப்பதற்கு இம் மூன்றும் பயன்படும். வேலையின்மையின் காரணங்களை

ஆராய்வதால் பொருளாதாரத்தின் எந்தெந்த அம்சங்களை மாற்றினால் அல்லது எவ்வெவ்வற்றைக் கட்டுப்படுத்தினால் நிறைவேலையை நிலை நாட்ட முடியும் என்பது புலனாகும். இக் குறிக்கோள்கள் கீன்ஸின் மனதில் எப்போதும் குடிகொண்டிருந்தன.

நுகர்வுச் செலவுகளை எப்போதும் உச்சநிலையில் வைத்திருக்க வேண்டும் என்று கீன்ஸ் வலியுறுத்தி வந்தார். அதிலிருந்து வருவாயிலும் சொத்துச் சுகங்களிலுமுள்ள ஏற்றத்தாழ்வுகளை மட்டுப்படுத்த வேண்டும்; வளர்வீத வரிகளைப் புகுத்த வேண்டும்; சமுதாய நலன்களுக்கான சேவைகளில் அரசாங்கம் அதிகப்படியாகச் செலவிட வேண்டும் என்பன போன்ற கொள்கைகளை வகுக்க முடியும். நுகர்வு நாட்டம் என்ற கருத்தை மேலும் வளர்த்து இறுதிநிலை நுகர்வு நாட்டத் (marginal propensity to consume) துக்கும் முதலீட்டுப் பெருக்கிக்கும் (Investment multiplier) உள்ள தொடர்பை விளக்க முயன்றார். அதன்படி தனியாரின் முதலீட்டு முயற்சிகள் தயங்கிப் பின்வாங்கும்போது அரசு பொதுப்பணிகளில் (public works) பேரளவில் முதலீடு செய்ய வேண்டும்; அப்படிச் செய்வதால் நாட்டுவருவாய் அதிகரித்து அரசின் செலவைக் காட்டிலும் பன்மடங்காகப் பெருகும் என்பதை எடுத்துரைத்தார். இவ்வாறு அரசின் செலவுகளின் அவசியத்தை அதிகமாக வலியுறுத்தியதால் அவரது கருத்துகளைச் செலவுக்கோட்பாடு (Spending Theory) என்றும் அழைக்கலாயினர்.

பணத்தினளவைக் கட்டுப்படுத்துவதன்மூலம் வட்டிவீதத்தைக் கட்டுப்படுத்தலாம் என்பது கீன்ஸின் கருத்து. ரொக்கவிருப்பம் என்ற நூதனமான கருத்தின்மூலம் ஊகவாணிக நோக்கத்துக்காக வேண்டப்படும் பணத்தின் தன்மையை விளக்கலானார். அதன்மூலம் பதுக்கப்படும் பணமே வட்டிவீதத்தைத் தூக்கிவிடுகிறது என்று சுட்டிக் காட்டினார். எனவே, தாராளமான பணக்கொள்கையைக் கையாண்டால் வட்டிவீதம் குறைந்து முதலீடு தூண்டப்பட்டு வேலைக்கான வாய்ப்புகள் பெருகும் என்பது அவரது துணிபு. அதே சமயத்தில் முதலீட்டு இறுதிநிலைத் திறன் ஏன் நிலையற்ற விதமாக ஏறி இறங்குகிறது என்பதை ஆராய்ந்து அது மங்கிவிட்டால் வட்டிவீதம் குறைந்தால்கூட தனியாரின் முதலீடு பெருகும் என்று எண்ண இயலாது என்று இயம்பினார். தனியாரின் முதலீட்டிலுள்ள இக் குறைபாட்டை அரசு முதலீட்டின்மூலம் ஈடு செய்ய வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தினார். குறைந்த வட்டி

வீதமும், நிறைந்த முதலீட்டினிறுதி நிலைத்திறனுமே முதலீட்டுக்கும் வேலையின்மையைப் போக்குவதற்கும் உறுதுணையாக அமையும் என்பதை அவர் நன்குணர்ந்தார். தலையிடாக் கொள்கையின்கீழ் வட்டிவீதம் ஓர் அளவுக்குமேல் மேம்பட முடியாமல் இருக்குமாதலால், அக் கொள்கையின் துணைகொண்டு நிறைவேலை நிலையை எய்துவது என்பது இயலாத காரியம் என்பது அவருக்குத் தெற்றெனத் தெரிந்தது. இவை இரண்டுமே எதிர்காலம் எப்படி இருக்கும் என்பது பற்றிய தெளிவற்ற தன்மையால் பாதிக்கப்படும் மனோபாவங்களைச் சார்ந்திருப்பதால் அவற்றினடியாகப் பிறக்கும் முதலீட்டின் அளவு (நுகர்வின் அளவோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது) எவ்வளவு தூரம் நிலையற்று இருக்கும் என்பது எளிதிற் புலனாகும். எனவேதான், வேலையினளவு முதலீட்டின்மூலம் நிருணயிக்கப்படும் என்று கீன்ஸ் கூறி வந்தார் போலும்.

## வளமும் வறுமையும்

வளர்ச்சியுற்ற முதலாளித்துவப் பொருளாதாரங்கள் மந்தப் பட்டுப் போனால் வளத்துக்கும் வறுமைக்குமுள்ள முரண்பாடு பளிச்சென்று தெரியும். ஏழை எளியவர்களை ஏராளமாகக் கொண்ட பின்தங்கிய சமுதாயத்தில் நுகர்வு நாட்டம் மிகுதியாக இருக்குமாதலால், முதலீடு சோம்பிக் கிடக்காமல் சுறுசுறுப்பாக இருக்கும். மாறாக, செல்வமிக்க நாடுகளிலே அன்றாட அவசியங்களுக்கான தேவை அவ்வளவு அதிகமாக இராது. வசதிகள், சல்லாபங்கள் எல்லாவற்றையும் சேர்த்துக் கணக்கெடுத்தாலும் மொத்தத்தில் வருவாய்க்கும் நுகர்வுக்குமுள்ள இடைவெளி அதிகமாக இருக்கும். அதை நிரப்பக் கூடிய அளவில் முதலீடு செய்வது இலாபகரமாக இருக்காதாகையால் இலட்சக்கணக்கானவர்கள் வேலையின்றி வாட நேரிடுகிறது.

அதாவது, முதிர்ச்சியுற்ற பொருளாதாரங்களில் முதல் திரட்சி பேரளவில் இருக்கும். எனவே புதிதாக ஆக்கப்படும் முதற்கருவிப் பொருள்கள் ஏற்கனவே ஆக்கமான வகையில் வேலை செய்துவரும் முதலினச் சொத்துகளோடு போட்டியிடநேரிடும். அதன் காரணமாக முதலீட்டுக்கான தேவை போதிய அளவில் இருக்காது. முதலீடு குன்றுவதால் வருவாய் குன்றி நுகர்வுப் பொருள்களுக்குள்ள தேவையும் கணிசமாகக் குறையும். புத்தம்புதிய ஆலைகளையும் தொழில்களையும் நிறுவ முடியாதது போலவே, ஏற்கனவே இயங்கி வருவனவற்றின் முழு வல்லமையையும் பயன்படுத்த முடியாது போகும். இவ்வாறு எச்சவல்லமை ஒருபுறமும் வேலையின்மை மற்றொரு

புறமும் காட்சி அளிக்கும். எனவே செல்வமிக்கதோர் பொருளா தாரத்தில் அதன் அடிப்படைக் குறைபாடுகள் கொடூரக் காட்சி அளிக்கும் என்று கீன்ஸ் குறிப்பிட்டார்.

முதலாளித்துவத்தின் இளமைப் பருவத்தில் மேற்கத்திய நாடுகள் பலவற்றில் நிறைவேலை நிலவியதாகக் கருதப்படுகிறது. ஆனால் முதலாம் உலகப்போருக்குப்பின் நிறைவேலை என்பது அத்திப்பூத்தாற்போல அபூர்வமாயிற்று. அரசின் தலையீடு வேண்டுமென்ற கீன்ஸின் கோரிக்கையின்பேரில் இன்று உலக முதலாளித்துவ நாடுகள் ,பலவற்றைப் போர், கெடுபிடிப்போர், போருக்கான தயாரிப்பு (பாதுகாப்பு) என்பன போன்ற ஆக்கமற்ற துறைகளில் கோடானுகோடி ரூபாய்களை வீண்விரயம் செய்யுமாறு தூண்டி வருகிறது. இன்று போரை உலகத்தின் பீடை என்று கூறி உலகமக்கள் கைவிட்டுவிட்டால், முதலாளித்துவப் பொருளாதாரங்கள் முதலீட்டுக்கான புத்தம்புது வாயில்கள் பல திறக்க முடியும். இல்லையேல் அவை திக்குமுக்காடி மறுபடியும் மந்தப் படுகுழியை நோக்கி விரையும் என்று அஞ்ச இடமுண்டு.

1. Dillard D., Op. Cit., Chapters 3 & 4.
2. Harris S. E. Op. Cit., Chapter XI.
3. Keynes J. M., Op. Cit., Chapter 3
4. Klein L. R., Op. Cit., Chapter 3.

# 4. நுகர்வுநாட்டத்தின் கூறுகள்

*[நுகர்வு நாட்டத்தின் முக்கியத்துவம் என்ன? — நுகர்வு நாட்டத்தின் பல்வேறு அம்சங்கள் — நிலையான நுகர்வு நாட்டம் — நுகர்வு நாட்டத்தைப் பாதிக்கும் பல்வேறு காரணிகள் — பங்கீட்டு முறையால் விளையும் பங்கம் — இறுதிநிலை நுகர்வு நாட்டமும் முதலீட்டுப் பெருக்கியும் — வேலைப் பெருக்கி — கீன்ஸியக் கருத்துகளின் குறைபாடுகள் — மனநிலை பற்றிய விதி பொருந்துமா? — நுகர்வு நாட்டத்தால் முதலீட்டு விருப்பம் பாதிக்கப்படுமா? — சேமிப்பை அவமதிக்க அவசியமா? — முரண்பாடு மிக்க உறவுகள் — கால அளவிலுள்ள கோளாறுகள் — குழப்பமிக்க கருத்துகள் — முதலீட்டுப் பெருக்கியிலுள்ள சிக்கல்கள்.*

## நுகர்வு நாட்டத்தின் முக்கியத்துவமென்ன ?

வேலையின் அளவை நிருணயிப்பது எப்படி என்பதிலேயே கீன்ஸ் கண்ணுங்கருத்துமாக இருந்து வந்தார் என்று கண்டோம். அக் கேள்விக்கு விடை காணும் வகையில் பயனுள்ள தேவை என்ற தத்துவத்தை வகுக்கலானார். அதன்படி நுகர்வு முதலீடு ஆகிய வகையில் செலவிடப்படும் கூட்டுத் தொகையைப் பொறுத்தே வேலைக்கான வாய்ப்புகள் பெருகும் என்று புலனாகியது. நுகர்வு சமுதாயத்தின் நிகர வருமானத்தையும் நுகர்வு நாட்டத்தையும் சார்ந்தது. முதலீடு, முதலீட்டுஇறுதிநிலைத்திறனையும் வட்டி வீதத்தையும் சார்ந்தது. எனவே, நுகர்வு நாட்டம் மிகுந்தால், வேலைக்கான வாய்ப்புகள் பெருக வழியுண்டு. அதாவது, நுகர்வு நாட்டம் அதிகரிக்குமானால் அதற்கேற்ப முதலீட்டினால் ஏற்படும் வருவாயும் பெருகும் என்பது கீன்ஸின் நம்பிக்கை. முதலீட்டுக்கும் வருவாய்க்குமுள்ள இந்தத் தொடர்பின் காரணமாகத்தான் தனியாரின் துறையிலுள்ள முதலீட்டில் சோர்வு தட்டும்போது, பொதுத்துறையின் முதலீட்டையும் செலவுகளையும் முடுக்கிவிட்டுப் பயனுள்ள தேவையைப் பெருக்குவது, வேலையின்மையைப் போக்குவதற்கு முக்கியமான மருந்துகளில் ஒன்றாகும் என்று கீன்ஸ் முடிவு காட்டினார். அம் மருந்தின் அடிப்படைதான் நுகர்வு நாட்டம்.

**நுகர்வு நாட்டத்தின் பல்வேறு அம்சங்கள் :**

நுகர்வுக்கும் வருவாய்க்குமுள்ள உறவைக் காட்டும் பட்டியலே நுகர்வு நாட்டப் பட்டியல் என்று அழைப்பர். நுகர்வு நாட்டம் என்றால் வெறும் விருப்பு அல்லது ஆசையை மட்டும் குறிப்பதன்று. மாறாக நுகர்வுக்காக இவ்வளவு செலவிடப்படுகிறது அல்லது செலவிடப்படும் என்ற நிச்சயத்தைக் குறிப்பதாகும். நுகர்வுத் தொடர்பு (Consumption function) கொண்டு தனிப்பட்டவரின் நுகர்வு நாட்டத்தையும் சித்திரிக்கலாம்; ஒரு சமுதாயத்தின் நுகர்வு நாட்டத்தையும் வெளிப்படுத்தலாம். ஆனால் வேலைக்கோட்பாட்டைப் பொறுத்த அளவில் ஒரு சமுதாயத்தின் வருவாய்க்கும் மொத்த நுகர்வுக்குமுள்ள சம்பந்தமே முக்கியத்துவம் வாய்ந்தது.







படம் 4: (a) நுகர்வு நாட்டம் (b) இறுதி நிலை நுகர்வு நாட்டம்

நுகர்வு நாட்டத்தை, சராசரி நுகர்வு நாட்டம், இறுதிநிலை நுகர்வு நாட்டம் என இரு விதமாகப் பிரிக்கலாம்.

படம் 4-ல் படுகிடை அச்சு (horizontal axis) வருவாயையும், செங்குத்து அச்சு (vertical axis) நுகர்வையும் குறிக்கும். இவ்விரு மாறிகளுக்கு (variables) முள்ள உறவை விளக்கும் பட்டியலைத்தான் CC என்ற நுகர்வு நாட்ட வளைகோடு பிரதிபலிக்கிறது. படம் 4a-ல் ஒரு குறிப்பிட்ட புள்ளியான A-ல் நுகர்வின் அளவு 800 ஆகவும் வருவாயினளவு 1000 ஆகவும் உள்ளது. எனவே சராசரி நுகர்வு நாட்டத்தை $\frac{\text{நுகர்வு (c)}}{\text{வருவாய் (y)}}$ அதாவது $\frac{800}{1000}$. அதாவது 8/10 என்று கணக்கிடலாம். சராசரி நுகர்வு நாட்டம், நுகர்வு நாட்ட வளைகோட்டின் ஒரு குறிப்பிட்ட புள்ளியிலிருந்து கணிக்கப்படுவது என்பது கவனிக்கத்தக்கது. மாறாக, நுகர்விலுள்ள ஒரு சிறிய மாற்றத்துக்கும் வருவாயிலுள்ள ஒரு சிறிய மாற்றத்துக்கும் உள்ள தொடர்பையே இறுதிநிலை நுகர்வு நாட்டம் என்பர். அத்தகைய உறவு ஓர் அடிப்படையான தத்துவத்தின்மீது எழுப்பப்படுவது. வருமானம் அதிகரிக்கும் வேகத்தில் நுகர்வு அதிகரிப்பதில்லை என்பதே அத் தத்துவம். அதாவது, நுகர்வு அதிகரிக்கும் விகிதம் வருமானம் அதிகரிக்கும்

விகிதத்தைக் காட்டிலும் குறைவாக இருக்கும் என்னலாம். அதன்படி இறுதிநிலை

$$\text{நுகர்வு நாட்டம்} = \frac{\text{நுகர்விலுள்ள சிறிய மாற்றம் } (\Delta c)}{\text{வருவாயிலுள்ள சிறிய மாற்றம் } (\Delta y)}$$

எப்போதும் ஒன்றுக்கும் குறைவாக இருக்கும் அல்லது $\Delta y$ எப்போதும் $\Delta c$ யைவிட அதிகமாக இருக்கும். படம் 4(b)-ல் காட்டியபடி இத் தொடர்பு 6/10 ஆகும். இது சராசரி நுகர்வு நாட்டத்தைக் காட்டிலும் குறைவாக இருப்பது கண்கூடு.

இறுதிநிலை நுகர்வு நாட்டத்துக்கு இருதன்மைகள் உண்டு. முதலாவது, இறுதிநிலை நுகர்வு நாட்டம் சராசரி நுகர்வு நாட்டத்தைக் காட்டிலும் எப்போதும் குறைவாக இருக்கும். இரண்டாவது, வருவாய் உயரஉயர இறுதிநிலை, நுகர்வு நாட்டம் குறைந்துபடும். ஏனெனில், வருவாய் வளரும் போது கூடிய (அவ்வாறு அதிகரிக்கும்) வருவாயின் ஒரு குறைந்த பகுதியே நுகர்வுக்காகச் செலவிடப்படும்.

மேலும் படம் 4-ல் கண்டபடி நுகர்வு நாட்ட வளைகோடு இடமிருந்து வலமாக கீழிருந்து மேல்நோக்கிச் சென்றாலும் மேலே போகப்போகக் கோட்டின் வளைவு தட்டையாவது புலனாகும். இது கீன்ஸியக் கோட்பாட்டின் முற்கோள்களுள் ஒன்றாகும். CC இத்தகையதோர் வளைகோடாக இல்லாமல் நேர்கோடாக இருக்குமானல் அக் கோட்டின் எப் புள்ளியில் எடுத்தாலும் $\frac{\Delta c}{\Delta y}$ ஒரே அளவினதாக இருக்கும். இது கீன்ஸியக் கருத்தோட்டத்துக்கு உகந்ததன்று.

நுகர்வு நாட்டத்துக்கு இலக்கணம் கூறும்போது கீன்ஸ் அதை $\frac{dc}{dy}$ என்ற விகிதத்தின்மூலம் குறிப்பிட்டார். அதாவது, நுகர்வு நாட்ட வளைகோட்டில் ஒரு புள்ளியை எடுத்துக்கொண்டால் அப் புள்ளியில் வளைகோட்டின் ஏற்றம் (Slope) எவ்வாறு அமைந்திருக்கிறது என்பதைக் காட்ட உதவும். நுகர்வுக்கும் (dc) வருவாய்க்கும் (dy) உள்ள இச் சம்பந்தத்தைக் கொண்டு $\frac{dc}{dy}$ என்று நுகர்வு நாட்டத்துக்கு இலக்கணம் கூறுகிறார்.







படம் 5: இறுதிநிலை நுகர்வு நாட்டம்

படம் 5-ல் காட்டியதுபோல் நுகர்வு நாட்ட வளைகோடு கீழிருந்து மேலே செல்லச்செல்ல அதன் ஏற்றம் தட்டையாவதைக் காணலாம். இப் படம்

கீன்ஸது இலக்கணத்துக்கு உகந்ததாக இருப்பது கண்கூடு. ஆனால், நடைமுறையில் கீன்ஸ் $\frac{\Delta c}{\Delta y}$ என்ற விகிதத்தைப் பயன்படுத்தலானார். உண்மையில் $\frac{\Delta c}{\Delta y}$ என்பது நுகர்வு வளைகோட்டின் ஒரு குறிப்பிட்ட சரகத்தில் (எல்லைக்குள் - range) உள்ளபல இறுதிநிலை நாட்டத்தின் சராசரியையே குறிக்கும். ஆயினும், இலக்கணத்திலுள்ள இச் சிக்கலைக் கீன்ஸ் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை.

## நிலையான நுகர்வு நாட்டம்

ஒரு சமுதாயத்தின் நுகர்வு நாட்டம் மாறாமல் நிலைபெற்றிருக்கும் தன்மை படைத்ததா என்பது பொதுப்படையானதோர் கேள்வி. அத்தகைய நுகர்வு நாட்டத்தைப் பாதிக்கக்கூடிய பல்வேறு காரணிகளைப் பற்றி ஆராய முற்பட்டாரென்றாலும் குறுகிய கால அளவில் ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தின் நுகர்வு நாட்டம் மாறும் தன்மை உடையதன்று என்று கொள்வதில் தவறொன்றுமில்லை என்பது கீன்ஸின் நம்பிக்கை. உண்மையில் கீன்ஸீயக் கோட்பாடுகள் பல நிலையான நுகர்வு நாட்டம் என்ற அடிப்படையில் கட்டப்பட்டவை.

ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில் ஒரு குறிப்பிட்ட வேளையில் எவ்வளவுதான் நுகர்வுக்காகச் செலவிடப்படும் என்பதை நிருணயிக்க வேண்டுமானால், அச் சமுதாயத்தின் வருவாய் என்ன? அதற்குள்ள நுகர்வு நாட்டத்தின் தன்மையென்ன? என்று தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம். வருவாய் வளரும்போது நுகர்வின் அளவும் அதிகரிக்கும்; தேயும்போது நுகர்வின் அளவும் குறையும். ஆனால் அவ் வருவாயில் எவ்வளவு பகுதி நுகர்வுக்காகச் செலவிடப்படும் என்பதை அச் சமுதாயத்தின் நுகர்வு நாட்டத்தைப் பொறுத்துதான் நிருணயிக்கமுடியும்.இவ்விரண்டுள் வருவாய் மாறுந்தன்மையுடையது. அதைப் போலவே வருவாயைச் சார்ந்த நுகர்வும் நிலையற்று விளங்கும் என்பது தெளிவு. ஏனெனில் முதலீட்டுக்கான தூண்டுதலில் ஏற்படும் மாற்றங்களுக்கேற்ப முதலீடு மாறுபடும். அத்தகைய மாற்றத்தால் அதனடியாகப் பிறக்கும் வருவாயும் மாறுபடும். வருவாய் மாறுபட்டால் அதையொட்டி நுகர்வும் மாறுபடும். மாறாக, நுகர்வு நாட்டம் மக்களின் விருப்பு வெறுப்புகளையும் பழக்க வழக்கங்களையும் மனோபாவங்களையும் சார்ந்திருப்பதால் குறுகிய கால அளவில் மாறும் என்று எண்ண அவசியமில்லை என்பது கீன்ஸின் கருத்து. இவ்வாறு நுகர்வு நாட்டம் நிலை பெற்றிருப்பதால் நுகர்வின் அளவை வருவாயைக் கொண்டே நிர்ணயிக்க முடியும் என்பது புலனாகும்.

நுகர்வின் அளவுக்கும் நுகர்வின் நாட்டத்துக்குமுள்ள வேறுபாட்டை நன்கு தெரிந்துகொள்வது அவசியம். நுகர்வு நாட்டத்தின் பலம் இவ்வளவுதான் என்பது தெரிந்தால், அதைக் கொண்டு வருவாயில் எந்த வீதம் நுகர்வுக்காகச் செலவிடப்படும் என்பதைக் கணக்கிடலாம். இத்தகைய கணிப்புக்கு நுகர்வு நாட்டம் துணை செய்கிறது. மாருக, ஒரு குறிப்பிட்ட வருவாயில் எவ்வளவு நுகர்வுக்காகச் செலவிடப்படும் என்றும் அறிய முயலலாம். இக் கணிப்பில் நுகர்வு நாட்டம் இடம் பெறுவதில்லை; அதற்குப் பதிலாக வருவாயின் அளவு முக்கிய இடம் பெறுகிறது. நுகர்வு ஓர் அளவைக் குறிக்கும்; நுகர்வு நாட்டம் நுகர்வுக்கும் வருவாய்க்குமுள்ள சம்பந்தத்தை வெளிப்படுத்தும்.




(a)




(b)

படம் 6 : நுகர்வில் ஏற்படக்கூடிய மாற்றங்கள்

நுகர்வின் அளவு இரண்டு காரணங்களால் மாறுபடலாம் என்று கண்டோம். வருவாயின் அளவு மாறினல் நுகர்வின் அளவும் மாறுபடலாம். வருவாய் மாருத நிலையில் நுகர்வு நாட்டத்தில் மட்டும் மாற்றம் ஏற்பட்டாலும் நுகர்வின் அளவு மாறுபடும். இவ் வேறுபாடுகளைப் படம் 6-ன் வாயிலாகக் காணலாம். படம் 6 (a) நுகர்வு நாட்டம் மாருத நிலையில் வருவாய் அதிகரிப்பதற்கேற்ப எப்படி நுகர்வின் அளவும் அதிகரிக்கிறது என்பதைக் காட்டுகிறது. குறிப்பாக வருவாய் 1000லிருந்து 1200 ஆக உயரும்போது நுகர்வின் அளவும் 800லிருந்து 950 ஆக அதிகரிக்கும் என்பது விளங்கும். படம் 6 (b) வருவாய் மாருத நிலையில் நுகர்வு நாட்டம் மட்டும் அதிக பலம் பெற்று விளங்கினல் அதற்கேற்ப நுகர்வின் அளவு எப்படி அதிகரிக்கும் என்பதை எடுத்துக் காட்டுகிறது. குறிப்பாக, நுகர்வு நாட்டத்தைப் பிரதிபலிக்கும் வளைகோடு CC யிலிருந்து C'C' ஆக மாறினல் வருவா

யினளவு 1000 ஆக இருக்கும்போதே நுகர்வினளவு 800 லிருந்து 950 ஆக உயரும் என்பது தெரியவரும். அதன்படி, சராசரி நுகர்வு நாட்டம் அதிகரிக்கும்போது முன்னைவிட குறைவான முதலீட்டைக் கொண்டு ஒரு குறிப்பிட்ட வருவாயை உருவாக்க முடியும் என்று பொருள்படும். அதே சமயத்தில் நுகர்வு நாட்டம் உயரும்போது முதலீடு குறையாமலிருந்தால் அல்லது அதிகரித்தால் மொத்த வருவாயும் வேலையும் அதிகரிக்கும் என்பதும் புலனாகும். ஆயினும், குறுகிய காலத்தில் நுகர்வு நாட்டம் உயரும் என்பதைக் கீன்ஸ் நம்பவில்லை. எனவே, கீன்ஸது முதற்கோளின்படி குறுகிய காலத்தில் 6 (a) தான் பெரும்பாலும் நடைமுறைக்கு உகந்ததாக இருக்கும் என்று கொள்ளலாம்.

## நுகர்வு நாட்டத்தைப் பாதிக்கும் பல்வேறு காரணிகள்

ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில் குறுகிய கால அளவில் நுகர்வு நாட்டம் மாறாது என்று ஏன் கீன்ஸ் கருதலானார் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியமாகும். சமுதாயங்கள் வேறுபட்டால் அவ்வவற்றின் மக்கள் வரலாறு, கலாச்சாரம், சம்பிர தாயங்கள், பழக்கவழக்கங்கள், சமூக அமைப்புகள், அரசியல், பொருளாதார அமைப்புகள், மதம், குணநலன்கள் ஆகியவற்றால் மிகவும் மாறுபட்டிருப்பார்கள் என்று எண்ண இடமுண்டு. எனவே, அவர்களது விருப்பு வெறுப்புகளும் அவற்றினடியாகப் பிறக்கும் நுகர்வு நாட்டமும் வேறுபட்டிருப்பது இயல்பு. அதைப் போலவே, ஒவ்வொரு சமுதாயத்திலும் காலப்போக்கில் (நெடுங்காலத்தில்) மக்களது நம்பிக்கைகளும், நடைமுறைகளும், அரசியல் பொருளாதார அமைப்புகளும் மாறிவரும் என்று எதிர்பார்க்கலாம். மக்களது விருப்பு வெறுப்புகளையும், வாழ்க்கைத் தரத்தையும், மனோபாவங்களையும் பாதிக்கக்கூடிய இத்தகைய மாற்றங்களுக்கேற்ப அச் சமுதாயத்தின் நுகர்வு நாட்டமும் மாறும் என்பதில் சந்தேகமில்லை.

குறுகிய காலத்திலும் சமுதாயப் புரட்சி, போர், அத்துமீறிய பணவீக்கம் போன்ற பல அபூர்வமான காரணங்களால் சமுதாயத்தின் அடிப்படை அடியோடு மாற்றியமைக்கப்படலாம். மக்களது பழக்கவழக்கங்களிலும் மனோபாவங்களிலும் புரட்சிகரமான மாறுதல்கள் ஏற்படலாம். அதன்பயனாகச், சமுதாயத்தின் நுகர்வு நாட்டம் பேரளவில் பாதிக்கப்படலாம். சமுதாயத்தின் அடிப் படையையே தகர்த்தெறியக்கூடிய இத்தகைய காரணிகள் அபூர்வ மாதலால், அவற்றை விதிவிலக்காகக் கொள்ளுவதே சாலும். ஆயினும், சுமுகமாக இயங்கிவரும் சமுதாயத்திலும் குறுகிய காலத்தில் அதன் நுகர்வையும் நுகர்வுநாட்டத்தையும் பாதிக்கக்

கூடிய பல சக்திகள் வேலை செய்வதைக் காணலாம். இவற்றுள் ஒரு சில, மனோபாவத்தை ஒட்டியவை. மக்களின் விருப்பு வெறுப்புகளுக்கு அப்பாற்பட்டவை வேறு பல.

குறிப்பாக, வருவாயைப் பாதிக்கக்கூடிய காரணிகளை மனோ பாவத்தைத் தழுவாத காரணிகள் என்று கூறலாம். முதலாவது, விலைவாசிகள் மாறுவதன்மூலமாகவோ பொருள்களின் ஆக்கசக்தி மாறுவதன் பயனாகவோ உண்மைக் கூலி அல்லது உண்மை வருவாய் பாதிக்கப்படலாம். அதன் விளைவாக நுகர்வினளவும் பாதிக்கப்படும். இரண்டாவது, வருவாய்க்கும், நிகர வருவாய்க்குமுள்ள வித்தியாசம் மாறுபடுமானால் அதிலிருந்து நுகர்வுக்காகச் செலவிடப்படும் அளவும் மாறுபடலாம். மூன்றாவது, சொத்துகளின் மதிப்பு உயருவதால் ஏற்படும் எதிர்பாராத மாற்றங்களும் நுகர்வைப் பாதிக்க முடியும். நான்காவது, எதிர்காலத்தில் எதிர்பார்க்கப்படும் வாழ்க்கைத் தரத்தில் மாற்றங்கள் காணப்பட்டால் அதன் பயனாகவும் நுகர்வு பாதிக்கப்படலாம். வரிக்கொள்கை, ஆக்க சக்தியில் ஏற்படவிருக்கும் மாற்றங்கள் ஆகியவற்றில் நுகர்வுக்காகச் செலவிடப்படும் அளவு மாறுபடும். ஐந்தாவது, வருவாயின் பங்கீட்டைப் பாதிக்கக்கூடிய அரசின் வரவு - செலவுக் கொள்கை (அரசிறைக்கைக்கோள்—fiscal policy) களாலும் நுகர்வினளவு பாதிக்கப்படலாம். ஆறாவது, நிகழ் காலத்திலும் வருங்காலத்திலுமுள்ள வருவாயினளவுகளுக்குள்ளே உள்ள உறவு எவ்வகையில் மாறும் என்ற ஊகத்தில் ஏற்படும் மாற்றத்தாலும் நுகர்வு மாறுபடுவதுண்டு. ஆனால் இஃது ஓரளவு எதிர்காலத்தைப் பற்றிய கண்ணோட்டம் அல்லது மனோபாவத்தை ஒட்டியது.

நுகர்வைத் தூண்டக்கூடிய மனோபாவம் எவ்வாறு பாதிக்கப் படுகிறது என்பதும் ஆராய்ச்சிக்குரியது. பொதுவாக, மக்கள் என்னென்ன காரணங்களுக்காகத் தங்கள் வருவாயில் ஒரு பகுதியைச் சேமிப்பாக ஒதுக்குகிறார்கள் என்பதைத் தெரிந்து கொண்டால் நுகர்வில் மக்கள் ஏன் நாட்டங்கொள்ளுகிறார்கள் என்பதும் இலைமறை காய்போலத் தெரிய வரும்.

எதிர்பாராத செலவுகளை மேற்கொள்வதற்காக வருவாயில் ஒரு பகுதியை ஒதுக்கி வைப்பவர்களுண்டு. குழந்தைகளின் படிப்பு, திருமணம், உற்றார், உறவினர், உடன்பிறந்தோரின் பாதுகாப்பு போன்ற எதிர்பார்க்கக்கூடிய செலவுகளை மேற் கொள்ளும் பொருட்டுச்சேமிப்பதுமுண்டு. பிள்ளை குட்டிகள் வசதியாக வாழ்வதற்குப் போதுமான செல்வத்தை வாரிசாக வைத்துச் செல்ல வேண்டும் என்ற ஆசையால் பணம் சேர்ப்பவர்களும் உண்டு.

சேர்த்து வைத்தால் வட்டி கிடைக்லாம், முதலின் மதிப்பும் உயரலாம் என்ற எண்ணங்களால் உந்தப்படுபவர்களுமுண்டு. தங்கள் வாழ்க்கைத்தரம் தொடர்ச்சியாகக் கொஞ்சங் கொஞ்சமாக முன்னேற வேண்டுமென விரும்புபவர்களுமுண்டு. நம்மை நம்பி ஏதாவது இருந்தால்தான் சுதந்திரமாக வாழலாம் என்று நினைப்பவர்களுமுண்டு. கஞ்சத்தனத்தால் மிச்சம் பிடிப்பவர்களுமுண்டு. சேமிக்கத் தூண்டும் இத்தகைய மனோபாவங்கள், எச்சரிக்கை, தீர்க்கதரிசனம், இலாபவேட்கை, முன்னேற்றம், சுதந்திரம், துணிவு, பெருமை, பேராசை போன்ற கண்ணோட்டங்களின் அடியாக உதிப்பவைகளாகும்.

சேமிக்க முயலும் மக்கள் நுகர்வைப் மட்டுப்படுத்த முயலுவர். சேமிப்பில் நாட்டம் மிகுந்தால் நுகர்வு நாட்டம் மட்டுப்படும். நுகர்வு நாட்டம் மிகுந்தால் சேமிப்பு நாட்டம் மட்டுப்படும். எனவே, சேமிப்பும், நுகர்வும் முரண்பட்ட செயல்கள் என்பது கண்கூடு. ஆதலின், நுகர்வு நாட்டத்தைத் தூண்டக்கூடிய கண்ணோட்டங்கள் சேமிப்பைத் தூண்டக்கூடியவற்றுக்கு எதிர்மாறாக இருக்கும் என்பது விளங்கும். அதன்படி, அனுபவம் (ரசனை), குறுகிய கண்ணோட்டம், தாராள மனப்பான்மை, தப்புக்கணக்குப் போடுதல், படாடோபம், ஆடம்பரம் ஆகிய கண்ணோட்டங்களை நுகர்வு நாட்டம் சுரக்கும் சுனைகள் என்று அழைக்கலாம். தனிப்பட்டவர்கள் தூண்டப்படுவது போலவே ஒரு சமுதாயம் முழுவதையும் எடுத்துக் கொண்டால், அன்றாடம் வயிறு கழுவினால் போதாதா? வருங் காலத்தைப் பற்றி என்ன கவலை? நம் தலைமுறை வாழ்ந்து சுகித்தால் போதாதா? பின் சந்ததிகள் எக்கேடு கெட்டாலென்ன? என்ற மனப்பான்மை மேலோங்கியிருக்குமானால் அச் சமுதாயத்தில் நுகர்விலுள்ள நாட்டம் மிகுந்து சேமிப்பிலுள்ள நாட்டம் குன்றுவது இயல்பு. இத்தகைய காரணங்களை கீன்ஸ் தெளிவாக உணர்ந்திருந்தார். எனினும் ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில், குறுகிய கால அளவில் நுகர்வு நாட்டம் நிலையாக இருக்கும் என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்டு தமது கோட்பாடுகளை வகுக்க முயன்றார் என்பது குறிப்பிடத்தக்கது.

### பங்கீட்டு முறையால் விளையும் பங்கம்

வருவாய் பங்கிடப்படுவதைப் பொறுத்து நுகர்வின் அளவு பெரிதும் பாதிக்கப்படும் என்று ஏற்கனவே குறித்தோம். அக் கருத்தைச் சுருக்கமாகக் கூற வேண்டுவது அவசியம். பொதுவாக, இன்றியமையாத அன்றாடத் தேவைகளுக்கு அதிகமான வருவாயைத்தான் தனிப்பட்டவர்கள் சேமிக்க முடியும். எனவே, அன்றாடம்

வயிறு கழுவுவதற்கே போதிய வருவாயின்மையால் அவதிப்படும் ஏழைகளால் சேமிக்க முடிவதில்லை. மாறாக, எவ்வளவுதான் ஆடம்பர வாழ்க்கை நடத்திச் சுகம் அனுபவித்தாலும் செல்வந்தர்களின் கையிலேயே சேமிப்பு மிகுவது கண்கூடு. ஆதலின், ஒரு குறிப்பிட்ட அளவான நாட்டுவருவாயைப் பரவலாகப் பங்கிட்டால், அதாவது செலவிட முடியாமல் சேமிப்பவர்களின் கையிலிருந்து செலவிடத் துடிப்பவர்களின் கைக்குப் பங்கீட்டை மாற்றியமைத்தால், சமுதாயத்தின் மொத்த சேமிப்பு முன்பைவிடக் குறைந்துபடும் என்பதை எளிதில் உணரமுடியும். எனவே, வருவாயிலுள்ள ஏற்றத் தாழ்வுகள் கணிசமாக உள்ள சமுதாயங்களில் நுகர்வு நாட்டம் குறைவாக இருக்கும். அத்தகைய சூழ்நிலையில் வருவாயையும் வேலைக்கான வாய்ப்புகளையும் உச்சநிலையில் வைத்திருக்க விரும்பினால் நுகர்வு நாட்டத்தில் காணப்படும் சோர்வை ஈடு செய்யக்கூடிய வகையில் முதலீட்டின் அளவை முடுக்கிவிட வேண்டியது அவசிய மாகும்.

இதிலிருந்து வருவாயைப் பங்கீடு செய்வதிலுள்ள ஏற்றத் தாழ்வுகள் வேலையின்மைக்கான அடிப்படைக் காரணங்களுள் ஒன்று என்பது வெளிப்படை. பங்கீட்டிலுள்ள இக் குறைபாட்டைப் போக்க வேண்டுமாயின், சமுதாய அடிப்படையைச் சீரமைத்துச் சொத்து களால் சுரக்கும் வருவாய் சிலரின் கையில் மட்டுமே சிக்காத வகையில் உடைமை முறையை அடியோடு மாற்றியமைக்க வேண்டும் என்பது புலனாகும். ஆயினும் கீன்ஸ் அத்தகைய மாற்றங்களில் மனதைச் செலுத்தவில்லை. அன்றுள்ள சமுதாய அடிப்படைக்கு உட்பட்டு முதலாளித்துவப் பொருளாதாரத்தை எப்படி வாழ வைக்கலாம் என்பதே அவரது கவலையாக இருந்து வந்தது. முதலாளித்துவப் பொருளாதாரத்தின் அடிப்படையை மாற்றியமைத்தாலன்றி வருவாயிலுள்ள ஏற்றத்தாழ்வுகளைப் போக்குவதன்மூலம் வேலை யின்மையை விரட்டியடிக்க முடியாது என்பதை உணர்ந்தவர் கீன்ஸ். தனியுடைமை முறையினாலும், அதனடியாக எழுகின்ற ஏற்றத் தாழ்வுகளினாலும் ஏற்படும் சிக்கல்களைத் தெளிவுற எடுத்துரைத்தா ரெனினும், முதலாளித்துவ முறையால் ஏற்படும் முரண்பாடுகளைப் போக்குவதற்கு மேற்போக்கான பரிகாரங்களையே காணமுற்பட்டார் என்பது குறிப்பிடத்தக்கது.

சொத்துரிமையின் அடிப்படையை மாற்றுவதற்குப் பதிலாக, முற்போக்கான வரி முறைகள், சமுதாயப் பொதுப்பணிகள் போன்ற கொள்கைகளே கீன்ஸின் மருந்துப் பெட்டியில் முக்கிய இடம் பெற்றிருந்தன. சோம்பிக் கிடக்கும் சேமிப்பை வளர்வீத வருமான வரி, மரணவரி போன்ற முற்போக்கு வரிகளின்மூலம், அரசு

கைப்பற்றிச் சமுதாயப் பொதுப்பணிகளில் செலவிடுவதன்மூலம் வேலையின்மையின் கோரவிளைவுகளை மட்டுப்படுத்தலாம் என்பது கீன்ஸின் கருத்து. இது, மண்டைக்குத்துத் தைலம் போன்று வலியை மட்டுப்படுத்த உதவலாமேயன்றி நோயின் அடிப்படையை வேரறுக்க வல்லதாக இல்லை. ஒரு சில வரிகள் முற்போக்குத் தன்மை வாய்ந்தவைகளாக இருந்துவிட்டால் போதுமா? ஒரு நாட்டிலுள்ள வரிமுறை முழுவதையும் ஒருங்கே எடுத்து அதை மிகவும் முற்போக்கான வகையில் மாற்றியமைத்தாலல்லவா கணிசமான பலன் கிடைக்கும் என்பது ஒரு சிலரின் வாதம். எடுத்துக்காட்டாக, அமெரிக்காவில் மத்திய அரசிலுள்ள வருமானவரி வளர்வீதத்தில் அமைந்திருந்த போதிலும் அது கையாண்டு வரும் சுங்கவரி போன்ற ஏனைய வரிகளும் அத்தகையது என்று சொல்ல இயலாது. மேலும், மாநில அரசுகளும், நகராட்சிகளும் பெரும்பாலும் சொத்துவரி, விற்பனைவரி, ஆயவரி போன்ற பிற்போக்கு வரிமுறைகளையே கையாண்டு வருவதால், மொத்தத்தில் பொருளாதாரம் முழுவதையும் பாதிக்கக்கூடிய வரி முறைகளை முற்போக்கு வாய்ந்தவை என்று எளிதில் கூற இயலாது.

தனியாரின் கையில் குவிந்து கிடக்கும் சேமிப்பில் ஒரு பகுதியை வளர்வீத வரிகளின்மூலம் சுரண்டி எடுக்கலாம் என்றாலும், உயிரீட்டுறுதி (Life Insurance), பொதுநலஈட்டுறுதி (Social Insurance) போன்ற வகையில் திரண்டு வரும் சேமிப்பை உருக்கிக் குறைப்பது அவ்வளவு எளிதன்று. அத்துடன், தொழிலமைப்புகள் பல தங்கள் நிறுவனங்கள் ஈட்டிவரும் இலாபத்தில் பெரும்பகுதியை இருப்பாக வைக்கும் வழக்கம் வெகுவாகப் பரவி வருகிறது. ஒரு சில நிறுவனங்கள் தங்கள் சொத்துகளின் தேய்மானக் கணக்கிலும் அளவுக்கு மிஞ்சி ஒதுக்கி வருகின்றன. எனவே, தனிப்பட்டவர்களின் சேமிப்பையும், நிதி நிலையங்கள், தொழில்துறைகள் ஆகியவற்றில் திரட்டப்படும் சேமிப்புகளையும் சேர்த்துக் கணக்கிட்டால் முற்போக்கு வரிகளின் வலிமை அவ்வளவு எடுப்பாகத் தோன்றுவதில்லை. வளர்வீத வரிகளால் தனிப்பட்டவர்களின் கையில் குவிகின்ற சேமிப்பைக் குறைக்க முடியும். ஆனால், தனியாரின் முயற்சியால் உருவாகும் முதலீட்டைத் தூண்ட இயலாது. உண்மையில் முதலாளித்துவப் பொருளாதாரங்களில் வளர்வீத வருமானவரி, மரணவரி போன்ற கருவிகளால் முதலீடு தூண்டப்படுவதற்குப் பதிலாகத் தடுக்கப்படும் (அல்லது மட்டுப்படுத்தப்படும்) என்றால் மிகையாகாது.

சமுதாயப் பொதுப்பணிகளைப் பெருக்குவதிலும் பல இடர்ப்பாடுகள் உண்டு. இலவசக்கல்வி, மருத்துவ வசதிகள் போன்ற பொதுப்பணிகளில் செலவிடப்படும் பணம் நேரடியாக ஏழைகளின் வாங்கும் சக்தியைப் பலப்படுத்துவதில்லை. அத்துடன், உதவிக் கொடையின் அடிப்படையில் ஏழைகளின் குடியிருப்புக்காகக் குறைந்த

விலையில் கட்டப்படும் வீட்டுவசதித் திட்டங்களைப் பேரளவில் வீடுகளைக் கட்டி வாடகைக்கு விட்டுக் கொள்ளை இலாபம் அடிக்கும் பெருஞ்சொத்துக்காரர் கடுமையாக எதிர்ப்பது வழக்கம். மானிய, கொடை (subsidy), ஓய்வூதியம் (pension), நிவாரணம் (relief) போன்ற செலவுகளே ஏழைகளின் வருவாயை நேரடியாகப் பலப் படுத்தும். ஆயின், ஒருபுறம் பணவீக்க முறைகளால் உழைப்பாளர் களின் உண்மை வருவாயை (உண்மைக்கூலியை) உறிஞ்சுவதும் மறுபுறம் ஏழைகளின் பணவருவாயைப் பலப்படுத்த முயலுவதுமான முரண்பட்ட கொள்கைகளால் பேரளவில் ஏழைகளின் வருவாயைப் பெருக்குவது இயலாது என்பது எளிதில் விளங்கும். எனினும், தனியாரின் துறையில் தேக்கமுறும் சேமிப்பைக் கைப்பற்றி அரசாங்கச் செலவுகளின்மூலம் பயனுள்ள தேவையைப் பலப்படுத்துவது, என்ற கொள்கை இன்றுவரை நிலவி வருவதற்கு நுகர்வு நாட்டத்தினடிப்படையில் கீன்ஸ் வகுத்த கோட்பாடுகளே காரணம் என்றால் மிகையாகாது.

அக் கொள்கையைச் சாக்காக வைத்து இன்று முதலாளித்துவ நாடுகளின் முன்னணியிலிருந்து வரும் அமெரிக்க அரசிடம் படைபலத்தைக் கட்டி எழுப்புவது, தளவாடங்களைச்செய்து குவிப்பது, அழிவுத்தன்மை வாய்ந்த ஆயுதங்களைக் கொண்டு பின்தங்கிய நாடுகளை மிரட்டி, அவற்றின் சுதந்திரத்தைத் தட்டிப் பறிப்பது, அண்டை அயல்நாடுகளில் மாபெரும் இராணுவ தளங்களையும் முகாம்களையும் ஏற்படுத்துவதுபோன்ற அழிவுத் துறைகளில் பணத்தை வீண் விரையம் செய்து பொதுச்செலவை அளவுக்குமீறி உயர்த்தித் தனியாரின் நுகர்வு நாட்டத்திலுள்ள சோர்வை ஈடுசெய்வதற்கு முயன்று வருகிறது. முதிர்ச்சியுற்ற முதலாளித்துவ நாடுகள் பலவும் அமெரிக்காவின் அடிச்சுவட்டையே பின்பற்றி வருகின்றன. இதற்குக் கீன்ஸின் கொள்கையைப் பயன்படுத்தி வருகின்றன.

## இறுதிநிலை நுகர்வு நாட்டமும் முதலீட்டுப் பெருக்கியும்

வேலையின் பல்வேறு அளவுகளில், வருவாய்க்கும் நுகர்வுக்குமுள்ள தெளிவான உறவை விளக்குவதே நுகர்வு நாட்டம் என்று கண்டோம். அதைப் போலவே முதலீட்டுக்கும் வருவாய்க்குமுள்ள உறவை நிர்ணயிப்பது அவசியம் என்பதைக் கீன்ஸ் நன்குணர்ந்தார். இறுதிநிலை நுகர்வு நாட்டம் இவ்வளவுதான் என்று தெரிந்தால் முதலீடு ஒரு குறிப்பிட்ட அளவாக அதிகரிக்கும்போது அதற்கேற்ப வருவாயும் வேலையும் எவ்வாறு அதிகரிக்கும் என்பதைக் கணக்கிட முடியும். நுகர்வு நாட்டம் மாறாத நிலையில் முதலீடு சற்றே அதிகரித்தால் அதற்கேற்ப வருவாயும் அதிகரிக்கும். முதலீடு, வருவாய் ஆகிய இரண்டின் இறுதிநிலையிலும் ஏற்படும் இத்தகைய

மாற்றங்களின் உறவையே முதலீட்டுப் பெருக்கி (investment multiplier) என்பர். இறுதிநிலை நுகர்வு நாட்டத்துக்கும் முதலீட்டுப் பெருக்கிக்குமுள்ள இவ்வுறவைப் பின்வருமாறு விளக்கலாம்:

வருவாய் 100 ரூபாய் அதிகரிப்பதாகக் கொள்வோம். அதில் 90 ரூபாய் நுகர்வின்வாயிலாகவும் 10 ரூபாய் முதலீட்டின்வாயிலாகவும் வருமாயின் $\Delta y = \Delta c + \Delta i$ என்றாகும். இதிலிருந்து இறுதிநிலை நுகர்வு நாட்டத்தை $\frac{\Delta c}{\Delta y} = \frac{90}{100}$ என்று கணிக்கலாம். முதலீட்டுப் பெருக்கியை $\frac{\Delta y}{\Delta i} = \frac{100}{10} = 10$ என்று கணக்கிடலாம். ஒன்றிலிருந்து இறுதிநிலை நுகர்வு நாட்டத்தைக் கழிப்பதன்மூலம் கிடைக்கும் மீதியைத் தலைகீழாக மாற்றினால் முதலீட்டுப் பெருக்கியின் மதிப்புக் கிடைக்கும் என்பது புலனாகும். மேற்கண்ட உதாரணத்தில் $1 - \frac{\Delta c}{\Delta y} = 1 - \frac{90}{100} = \frac{10}{100}$ ஆகும். இதைத் தலைகீழாக மாற்றினால் $\frac{100}{10}$; அதாவது 10 என்று ஆகும். இதுதான் முதலீட்டுப் பெருக்கியின் மதிப்பு என்பது தெளிவு. எனவே இறுதிநிலைச்சேமிப்பு நாட்டத்தின் (Marginal propensity to save) எதிரெதிர் மாற்றமே (reciprocal) முதலீட்டுப் பெருக்கியாகும். மேற்கண்ட உதாரணத்தில் இறுதிநிலை நுகர்வு நாட்டம் 9/10 ஆகும். எனவே இறுதிநிலைச் சேமிப்பு நாட்டம் $(1 - 9/10) = 1/10$ ஆகும். இம் மதிப்பின் எதிரெதிர் மாற்றமே 10 ஆகும். அதுதான் முதலீட்டுப் பெருக்கியின் மதிப்பாகும். இவ்வாறே நுகர்வு நாட்டத்தின் பல்வேறு மதிப்பிற்கும் ஏற்ப முதலீட்டுக்கும் வருவாய்க்கும் உள்ள உறவு மாறுபடுவதைப் பின்வரும் பட்டியலில் காணலாம்.

பட்டியல்—1

இறுதிநிலை நுகர்வு நாட்டமும் முதலீட்டுப் பெருக்கியும்

| இறுதிநிலை நுகர்வு நாட்டம் | இறுதிநிலைச் சேமிப்பு நாட்டம் | முதலீட்டுப் பெருக்கி |
|---|---|---|
| 9/10 | 1/10 | 10 |
| 4/5 | 1/5 | 5 |
| 3/4 | 1/4 | 4 |
| 2/3 | 1/3 | 3 |

முதலீட்டுப் பெருக்கியின் பல்வேறு அம்சங்களையும் காண்பது அவசியம். முதற்கண், முதலீட்டுப்பெருக்கியின் அளவுக்கும் இறுதிநிலை நுகர்வு நாட்டத்தின் அளவுக்கும் நேரடியான தொடர்பு உண்டு. இறுதிநிலை நுகர்வு நாட்டம் அதிகமாக இருக்கும்போது முதலீட்டுப் பெருக்கியும் பெரிதாக இருக்கும். மாறாக இறுதிநிலை நுகர்வு நாட்டம் குறைவாக இருக்கும்போது முதலீட்டுப் பெருக்கியும் சிறிதாக இருக்கும். கோட்பாட்டு ரீதியில் முதலீட்டுப் பெருக்கியின் மதிப்பு 1-க்கும் 2-க்குமிடையே சஞ்சாரம் செய்யமுடியும். ஆனால் நடைமுறையில் இந்த இரண்டு எல்லைகளும் இவ்வளவு அகன்று இருப்பதில்லை. அதே சமயத்தில் அதன் மதிப்பு எப்போதும் ஒன்றுக்கும் குறைவாகவே இருக்கும் $(<1)$. பொதுவாக, நடைமுறையில் இறுதிநிலை நுகர்வு நாட்டத்தின் மதிப்பு 1/3, 9/10 ஆகிய இரண்டிற்கும் இடையில் இருக்குமாதலால், முதலீட்டுப் பெருக்கியின் மதிப்பும் அதற்கேற்ப 1·5 க்கும் 10-க்குமிடையே விழுவதாக இருக்கும் என்பர். கீன்ஸ்ும் முதலீட்டுப் பெருக்கியின் மதிப்புச் சற்றேறக்குறைய 3 ஆக இருக்கலாம் என்றார். ஆனால், வாணிகச்சூழலின் மேடுபள்ளங்களில் அதன் மதிப்புக் கூடவோ, குறையவோ செய்யலாம் என்று கருதியதாகத் தெரிகிறது. பெருக்கியினளவு அவ்வளவு அதிகமாக இல்லாவிட்டாலும் முதலீட்டை அதிகரிப்பதன்மூலம் அதனளவுக்கு அதிகமான வருவாயைப் பெருக்க முடியும் என்பது பெருக்கிக் கோட்பாட்டிலிருந்து புலப்படும். ஆயினும் வேலையின்மை விசுவரூபம் எடுத்து வரும்போது, பேரளவு முதலீடு செய்தாலன்றிப் பொருளாதாரத்தை நிறைவேலை நிலைக்குத் தூக்கிவிடமுடியாது என்பது தெளிவு.

புதிதாக மேற்கொள்ளப்படும் முதலீடு எப்படிப் படிப்படியாக (அடுக்கடுக்காக) வருவாயை உருவாக்குகிறது என்று அறிவது பயன் தருவதாகும். பெருக்கி 5 ஆக இருக்குமானால் புதிதாக முதலீடு செய்யப்படும் ஒவ்வொரு ரூபாயும் 5 ரூபாய் வருவாய்க்கு வழி வகுக்கும் என்பது தெளிவு. முதலீட்டுப் பெருக்கியின் மதிப்பு 5 ஆக இருக்க வேண்டுமானால் இறுதிநிலை நுகர்வு நாட்டம் $\frac{4}{5}$ ஆகவும், இறுதிநிலைச் சேமிப்பு நாட்டம் $\frac{1}{5}$ ஆகவும் இருக்கவேண்டுமென்பதும் வெள்ளிடை மலையாகும். அதன்படி, புதிதாக முதலீடு செய்யப்படும் 1 மில்லியன் ரூபாய் எவ்வாறு படிப்படியாக வருவாயைப் பெருக்குகிறது என்பதைப் பின்வரும் பட்டியலிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

பட்டியல்—2

முதலீடு அதிகரிப்பதால் வருவாய், நுகர்வு, சேமிப்புப் பாதிக்கப்படும் விதம்

| முதலீடு ஆரம்பத்தில் அதிகரித்த அளவு △ I | முதலீட்டால் தூண்டப்படும் வருவாய்ப் பெருக்கம் △ Y | அதிக வருவாயில் நுகர்வு பங்கு $\frac{4}{5}$ th of △ Y | அதிக வருவாயில் சேமிப்பின் பங்கு $\frac{1}{5}$ th of △Y |
|---|---|---|---|
| 10,00,000 | 10,00,000 | 8,00,000 | 2,00,000 |
| | 8,00,000 | 6,40,000 | 1,60,000 |
| | 6,40,000 | 5,12,000 | 1,28,000 |
| | 5,12,000 | 4,09,000 | 1,02,400 |
| | 4,09,000 | 3,27,680 | 81,920 |
| | 3,27,680 | 2,62,144 | 65,536 |
| | 2,62,144 | 2,09,715 | 52,429 |
| | 2,09,715 | 1,67,772 | 41,943 |
| | 1,67,772 | 1,34,218 | 33,544 |
| | 1,34,218 | 1,07,375 | 26,843 |
| | ⋮ | ⋮ | ⋮ |
| | etc | etc | ete |
| 1,000,000 | 5,000,000 | 4,000,000 | 1,000,000 |

மேற்கண்ட பட்டியல் △y (வருவாயில் அதிகரிப்பு) = k (பெருக்கி x△i) (முதலீட்டின் அதிகரிப்பு) அதாவது △y=k×△I. வருவாய்ப் பெருக்கம் படிப்படியாக ஏற்படுவதால் முதலீடு செய்யப்படும் காலத்துக்கும் முதலீட்டின் முழுச்சக்தியும் (வருவாயைப் பெருக்கக்கூடிய) வருவாயாக வெளிப்படும் காலத்துக்கும் உள்ள இடைவெளி அதிகமாக இருந்தால், முதலீட்டின் பயனை உடனடியாக அடைவது கடினம். மேலும், ஒவ்வொரு கட்டத்திலும் உருவாகும் வருவாய் உடனடியாக நுகர்வில் செலவிடப்படும் என்றும் எதிர்பார்க்க இயலாது. இத்தகைய காலப்பின்னீட்டின் (time lag) தன்மையை கீன்ஸ் ஓரளவு உணர்ந்திருந்தாரெனினும் முதலீட்டுப்பெருக்கியின் முழுப்பயனும் ஒருமுகமாகத் தொடர்ந்து திரண்டு வருவாயாக வடிவெடுக்குமென்பது போன்றதோர் கருத்து அவரது கோட்பாட்டில் ஊடாடுகிறது. மேலும் முதலீட்டின் காரணமாகத்

தூண்டப்படும் வருவாய்ப் பெருக்கத்தின் ஒவ்வொரு கட்டத்திலும் நுகர்வு நாட்டத்தின் பலம் மாறுமல் இருக்கும் என்பதும் அவரது கருத்து. அதன்படியே ஒவ்வொரு படியிலும் நுகர்வுக்கும் சேமிப்புக்குமுள்ள விகிதம் 4 : 1 என்று இருப்பது தெரியவரும். நடைமுறையில் சுரந்துவரும் வருவாய் கசிந்து வடிந்து, வருவாய் ஓட்டத்தின் வேகத்தைக் குறைக்க முடியும் என்பது கவனிக்கற்பாலது.

முதலீட்டுப் பெருக்கி எப்படி வேலை செய்கிறது என்பதை அசலன (static) மாதிரி, இயக்கநிலை (சலன — dynamic) மாதிரி என இரு வகையான நிலைகளின் அடிப்படையில் விளக்கலாம். அசலன மாதிரி பின்வரும் எடுகோள்களைக் கொண்டது :—

(a) முதலீட்டுக்கும் அதனால் உருவாகும் வருவாய்க்கும் காலப் பின்னீடு (time lag) இருப்பதில்லை. அதாவது, முதலீட்டின் முழுப்பயனும் வருவாயை உடனடியாகப் பாதிக்கும்;
(b) தூண்டப்பட்ட முதலீடு என்பது கிடையாது;
(c) ஏற்படக்கூடிய முதலீடு தூண்டுதலால் அல்லாமல் (autonomous) தற்செயலாக (chance) நிகழக்கூடியது;
(d) இறுதிநிலை நுகர்வு நாட்டம் மாறுவதில்லை.




படம் 7 : அசலனப் பெருக்கி வேலை செய்யும் விதம்

மேற்கண்ட படம் அசலனப் பெருக்கி எப்படி உடனடியாக (காலதாமத மின்றி—instantaneously) வேலை செய்கிறது என்பதைக் காட்டுகிறது. இப் படத்தில் (c) என்பது நுகர்வையும், I என்பது முதலீட்டையும், (△I)

என்பது தூண்டப்படாத வகையில் முதலீடு அதிகரிக்கும் அளவையும், ($\triangle$y) என்பது முதலீட்டின் பயனாக வருவாய் அதிகரிக்கும் அளவையும் குறிக்கும். நுகர்வைப் பிரதிபலிக்கும் கோட்டின் சாய்வு (slope) 0.6 ஆகவும், சேமிப்பைப் பிரதிபலிக்கும் கோட்டின் சாய்வு 0.4 ஆகவும் கொள்ளப்பட்டுள்ளன. நுகர்வு, சேமிப்பு, முதலீடு ஆகியவை செங்குத்து அச்சின் வாயிலாகவும், வருவாய் படுகிடை அச்சின் வாயிலாகவும் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. இப் படத்திலிருந்து தூண்டப்படாத முதலீடு ($\triangle$I) அளவில் அதிகரித்தவுடன் வருவாய் $\triangle$y ஆக அதிகரிப்பது தெரியவரும். நுகர்வின் வளைகோடு 0.6 ஆகச் சாய்ந்திருப்பதால் வருவாய் 2.5 மடங்காக அதிகரிக்கும் என்பது விளங்கும். அதாவது,

$$\frac{1}{1.0-0.6}=\frac{10}{4}=2.5.$$

இயக்க நிலைப்பெருக்கி எப்படி வேலை செய்கிறது என்பதைப் பின்வரும் படத்தில் காணலாம்.




படம் 8 : இயக்க நிலைப்பெருக்கி வேலைசெய்யும் விதம்

மேற்கண்ட படத்தில் நுகர்வு (c), முதலீடு (I), சேமிப்பு (s) ஆகியவற்றைச் செங்குத்து அச்சு பிரதிபலிக்கிறது. வருவாயைப் படுகிடை அச்சு வெளிப்படுத்துகிறது. இப் படத்திலிருந்து முதலீடு அதிகரிப்பதால் வருவாயினளவு படிப்படியாக உயர்ந்து Yo விருந்து Yn ஐ எப்படி அடைகிறது என்று காட்டப்பட்டுள்ளது. மேலும், இறுதிநிலை நுகர்வு நாட்டம் 0.5 என்று கொள்ளப்பட்டிருப்பதால் முதலீடு எவ்வளவு அதிகரிக்கிறதோ ($\triangle$I) அதைப்போல் இருமடங்காக வருவாய் அதிகரிக்கும் என்பது படத்திலிருந்து புலனாகும்.

புத்தும்புது முதலீட்டினால் வருவாய் பெருகும் என்பது முதலீட்டுப் பெருக்கியின் சாரம். நடைமுறையில், முதலீட்டுப் பெருக்

கத்தால் வருவாய் பெருகுவதுபோல நுகர்வுப் பெருக்கத்தாலும் முதலீடு தூண்டப்படும் என்பது எளிதில் புரிந்து கொள்ள முடியும். சாதாரணமாக, நுகர்வுப் பொருள்களுக்கு இருக்கும் தேவைக்கேற்ப அவற்றை ஆக்கிப் படைக்கும் தொழில்கள் தங்கள் ஆலைகளுக்கு வேண்டிய எந்திரங்களையும் ஏனைய முதற்கருவிப் பொருள்களையும் தருவிக்கும். ஆண்டுதோறும் இவ்வாறு புதுப்பிக்கப்படும் எந்திரங் களின் மதிப்பு மொத்த முதலினச் சொத்துகளின் மதிப்பில் பத்து சதவீதம் என்று வைத்துக் கொள்வோம். இந் நிலையில் நுகர்வுப் பொருள்களுக்கு ஏற்படும் தேவை 10 சதவீதம் அதிகரிக்கிறது என்றும் கொள்ளுவோம். ஆலைகளில் எச்சவல்லமை இல்லாத நிலையில் தங்கள் சக்திக்கு மிஞ்சிய தேவையை ஈடுசெய்யத் தொழில்கள் ஆலைகளின் அளவைப் பெரிதாக்கியோ புதியனவற்றை நிறுவியோ உற்பத்தியைப் பெருக்க முற்படும். இம் முயற்சியால் முதற் கருவிப் பொருள்களுக்கு ஏற்படும் தேவை மேலும் 10 சதவீதம் அதிகரிக்குமானால், மொத்தத்தில் முதற்கருவிப் பொருள்களுக்கு ஏற்படும் தேவை இரட்டிக்கும் என்பது புலனாகும். அதாவது நுகர்வுப் பொருள்களுக்கு ஏற்படும் தேவை பத்து சதவீதம் உயர்ந்தால் அதன்வாயிலாக முதற்கருவிப் பொருள்களுக்கு ஏற்படும் தேவை நூறு சதவீதமாகப் பெருக வாய்ப்பு ஏற்படும். இதை உந்துவேகம் (acceleration) என்று அழைப்பர். கீன்ஸீயக் கோட்பாட்டில் உந்து வேகத்துக்கு உரிய இடம் அளிக்கப்படவில்லை.

**பட்டியல்—3**

**பல்வேறு அளவான வருவாயையும் வேலையையும் நிலைநிறுத்துவதற்குத் தேவையான முதலீட்டினளவு.**

| வேலை (மில்லியன் உழைப் பாளர்) | வருவாய் (கோடி ரூபாய் கள்) | நுகர்வு* (கோடி ரூபாய் கள்) | முதலீடு** (கோடி ரூபாய் கள்) | இறுதி நிலை நுகர்வு நாட்டம் | முதலீட்டுப் பெருக்கம் | சராசரி நுகர்வு நாட்டம் |
|---|---|---|---|---|---|---|
| N | Y | C | I | $\frac{\Delta c}{\Delta y}$ | K | c/y |
| 30 | 100 | 100 | 0 | — | — | 1·00 |
| 33 | 110 | 109 | 1 | ·90 | 10 | ·99 |
| 36 | 120 | 117 | 3 | ·80 | 5 | ·98 |
| 39 | 130 | 124·5 | 5·5 | ·75 | 4 | ·96 |
| 42 | 140 | 131·5 | 8·5 | ·70 | $3\frac{1}{3}$ | ·94 |
| 45 | 150 | 138 | 12 | ·65 | $2\frac{6}{7}$ | ·92 |
| 48 | 160 | 144 | 16 | ·60 | $2\frac{1}{2}$ | ·90 |
| 51 | 170 | 149.5 | 20·5 | ·55 | $2\frac{2}{9}$ | ·86 |
| 54 | 180 | 154.5 | 25.5 | ·50 | 2 | ·85 |
| 57 | 190 | 159 | 31 | ·45 | $1\frac{9}{11}$ | ·84 |
| .60 | 200 | 163 | 37 | ·40 | $1\frac{2}{3}$ | ·82 |

* வரியால் ஈடு செய்யப்படும் அரசாங்கச் செலவு உட்பட

** கடனால் ஈடு செய்யப்படும் அரசாங்கச் செலவு உட்பட

மேற்கண்ட பட்டியலில் நாட்டுவருவாய் 100 கோடியிலிருந்து படிப்படியாக உயர்ந்து 200 கோடியாகிறது. வருவாய் 100 கோடியாக இருக்கும்போது சராசரி நுகர்வு நாட்டம் 1 ஆக உள்ளது. எனவே அவ் வருவாயை நிலைநிறுத்துவதற்கு நிகர முதலீடு எதுவுமே அவசிய மில்லை. வருவாய் 100 கோடிக்கும் 200 கோடிக்கும் இடைப்பட்ட நிலையில் இருக்கும்போது முதலீட்டுப் பெருக்கி இறுதிநிலைநுகர்வு நாட்டம் ஆகிய கருத்துகள் முக்கியத்துவம் பெறுகின்றன. முதலீடு ஒரு கோடியாக இருக்கும்போது பத்தாக உள்ள முதலீட்டைப் பெருக்கி முதலீட்டினளவு அதிகரிக்க அதிகரிக்க கொஞ்சங்கொஞ்ச மாகக் குறைந்துபடுவதைக் காணலாம்.

பெருகி வரும் வருவாயை நுகர்வுக்கும் முதலீட்டுக்குமிடையே பகுப்பதற்கு இறுதிநிலை நுகர்வு நாட்டம் பெரிதும் துணை செய்கிறது. நுகர்வு நாட்டத்தின் சாயலே (பிரதிபிம்பமே) முதலீட்டுப் பெருக்கி யாகும் என்றால் மிகையாகாது. வருவாய், படிப்படியாகப் பெருகி வரும்போது இறுதிநிலைநுகர்வுநாட்டமும் சராசரி நுகர்வு நாட்டமும் கொஞ்சங்கொஞ்சமாகக் குறைந்து வரும் என்பதும், வருவாய் குறுகிவரும்போது சராசரி இறுதிநிலைநுகர்வுநாட்டங்கள் கொஞ்சங் கொஞ்சமாக அதிகரித்து வரும் என்பதும் மேற்கண்ட பட்டியலி லிருந்து விளங்கும். வளர்ந்துவரும் வருவாய்க்கேற்ப சராசரி நுகர்வுநாட்டம் குறைந்து வரும் என்பது பெரும்பாலும் நடை முறையில் நடந்தேறும் என்று எண்ண இடமுண்டு. அதே சமயத்தில் விதிவிலக்குகளும் காணப்படலாம். உதாரணமாக, பொருளாதார மந்தம் அடிமட்டத்தை உராய்ந்து கொண்டிருக்கும்போது நுகர்வு சில வேளை வருவாயைக் காட்டிலும் மிகுதியாக இருக்கலாம். சேமிப்பைக் குறைப்பது, இருப்பைச் சுருக்குவது போன்ற முறை களால் வருவாய்க்கு மிஞ்சி துய்க்க முடியும். மாறாக, வருவாயும் நுகர்வும் சமம் என்ற நிலையைக் கடந்த பின்னர் சராசரி நுகர்வு நாட்டம் குறைந்து வருவது கண்கூடு.

பொருளாதாரத்தின் போக்கு அத்துமீறி அலசடிபடாதபடி பாதுகாக்கப்படுவதற்கு நுகர்வு நாட்டத்தின் தன்மை ஒரு முக்கி யமான காரணமாகும் என்பதைக் கீன்ஸ் சுட்டிக் காட்டினார். வருவாயின் வளர்ச்சி வேகத்திற்கேற்ப நுகர்வு அதிகரிக்காததும் வருவாயின் தேய்வு வேகத்திற்கேற்ப நுகர்வு குறையாததுமே அதன் காரணமாகும். எனவே வாணிகச் சுழலில் சிக்கிய பொருளா தாரத்திலுள்ள வேலையினளவு எவருக்குமே வேலை கிடைக்காது, அல்லது அனைவருக்குமே வேலை கிடைக்கும் என்ற நிலைகளை ஒரு போதும் அடைவதில்லை. பொருளாதாரத்தின் போக்கைத் தடுத்து நிறுத்தக்கூடிய எல்லைகளுக்குட்பட்டே சுழற்சியின் வேகமும்

வலிமையும் வெளிப்படும். பொருளாதாரம் சுறுசுறுப்பாகி சுபிட்ச பாதையில் மேல்நோக்கி இயங்கும்போது வருவாய்க்கும் நுகர்வுக்கு மிடையே உள்ள இடைவெளி அகன்று விரியும். அதை ஈடு செய்வதற்குப் போதிய முதலீட்டைப் பேரளவில் ஈடுபடுத்துவது எளிதன்று. இதற்குமேல் முதலீடு செய்தால் கட்டிவராது என்ற நிலை ஏற்படும்போது மேற்கொண்டு சுபிட்சப் பாதையில் முன்னேற இயலாது. மாறாக, வருவாய் தேய்ந்துவரும்போது நுகர்வும் அதற் கேற்ப குறையாதாகையால் உழைப்பாளரனைவரும் வேலையிழக்க வேண்டும் என்ற நிலை ஒருபோதும் ஏற்படுவதில்லை. வேலையினளவு ஒரு குறிப்பிட்ட எல்லையை அடைந்ததும் அதைச் சார்ந்த வருவாயும் நுகர்வும் சமம் என்றாகிவிடும். இந் நிலையில் நிகர முதலீடே அவசிய மில்லாமல் போகும்.

பணக்காரச் சமுதாயங்களைக் காட்டிலும் ஏழைச் சமுதாயங் களில் முதலீட்டுப் பெருக்கி அதிகமாக இருக்கும் என்பது தெளிவு. எனவே, அப் பொருளாதாரங்கள் பெரும் புயல்களில் சிக்கி அவதிப் படும் என்று எதிர்பார்க்கலாம். இறுதிநிலை நுகர்வுநாட்டம் அதிகமாக இருப்பதால் அத்தகைய ஏழைச் சமுதாயங்களில் முதலீட்டுப் பெருக்கி அதிகமாக இருக்கும். எனவே, முதலீட்டினடியாகப் பெருகும் வருவாயில் மிகவும் வேகம் காணப்படும்.




படம் 9 : பின்தங்கிய பொருளாதாரங்களில் முதலீட்டுப் பெருக்கி




படம் 10: முதிர்ச்சியுற்ற பொருளாதாரங்களில் முதலீட்டுப் பெருக்கி

முதலீட்டுப் பெருக்கியின் இத்தகைய வேறுபாடுகளைப் படம், 9, படம் 10-ன் வாயிலாகக் காணலாம். படம் 9, பின்தங்கிய பொருளாதாரத்தைப் பிரதிபலிப்பது. அதில் வருவாயில் நுகர்வின் பங்கு அதிகமாக இருப்பது விளங்கும். அந்நிலையில் குறைந்தபட்ச முதலீடு (R) செய்தாலே வருவாய் Y யிலிருந்து Yn ஆகப் பெருகும் மாறாக, முதிர்ச்சியுற்ற பொருளாதாரத்தைப் பிரதிபலிக்கும் படம் 10-ல் வருவாயில் நுகர்வின் பங்கு கொஞ்சமாக இருப்பதால் வருவாயை அதே அளவில் பெருக்குவதற்கு (Y லிருந்து Yn வரை) அதிகமான முதலீடு தேவைப் படுவது புலனாகும். R' R'-ஐக்காட்டிலும் மிகுந்திருப்பது கண்கூடு.

அதே சமயத்தில் பின்தங்கிய பொருளாதாரங்களின் சராசரி நுகர்வு நாட்டமும் அதிகமாக இருப்பதால் அப் பொருளாதாரத்தில் திரளக்கூடிய முதலீட்டினளவு சிறுத்திருக்கமாதலால் அதனால் ஏற்படக்கூடிய சுழற்சிகளும் கடுமையாக இருக்காது என்று எண்ண இடமுண்டு. மாறாக, பணக்காரச் சமுதாயங்களில் இறுதி நிலை நுகர்வு நாட்டமும் சராசரி நுகர்வு நாட்டமும் குறைவாக இருந்த போதிலும், வேலையினளவை உச்சநிலையில் வைத்திருக்க வேண்டிய முதலீட்டினளவு மிகவும் பெரியதாக இருப்பதால், அதனால் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகள் கடுமையானதாக இருக்கும். அதே சமயத்தில் இறுதிநிலை நுகர்வு நாட்டத்தால் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகள் அவ்வளவு அதிகமாக இரா. எனினும், மொத்தமாகப் பார்க்கும் போது பணக்கார நாடுகளை வாணிகச் சுழல் கோரமாகத் தாக்குவதைக் காணலாம். சுருக்கமாகக் கூறவேண்டுமானால், பணக் காரச் சமுதாயங்களை வாழவைப்பதற்குப் பேரளவில் முதலீடு அவசியமாகிறது. ஆனால், முதலீட்டைத் தூண்டக்கூடிய சக்திகள்

சோர்வுற்று இருப்பதால் அப் பொருளாதாரங்கள் அவ்வப்போது மந்தச் சேற்றில் ஆழமாகப் பதிந்து திக்குமுக்காடி வருவது கண்கூடு.

## வேலைப் பெருக்கி

*மூன்ருவது பட்டியலில் வருவாய் வளரும் விகிதத்துக்கேற்ப வேலையும் வளருவதால், வேலைப் பெருக்கியும் (K') முதலீட்டுப் பெருக்கியும் (K) சமமாக இருக்குமென்று கூறலாம். இது நடைமுறையில் அவ்வளவு சாத்தியமானதன்று. வேலைக்கான வாய்ப்புகளைப் பெருக்குவதெப்படி என்பதிலேயே கீன்ஸ் மிகவும் கண்ணுங்கருத்துமாக இருந்து வந்தார். ஆரம்பத்தில் அதிகரிக்கும் வேலையின ளவுக்கும் ($N_2$) மொத்தத்தில் அதிகரிக்கும் வேலையினளவுக்குமுள்ள (N) தொடர்பைக் காட்டுவதே வேலைப் பெருக்கியாகும். அதை $\triangle N = K' N_2$ என்று குறிக்கலாம். அதன்படி மொத்தத்தில் உருவாகும் வேலைக்கான வாய்ப்புகள் ஆரம்பத்திலுள்ள தன் ஒரு பெருக்குத் தொகையாகும் என்பது விளங்கும். இக் குறியீடு $\triangle y = K . \triangle I$ என்று குறிக்கப்படும் முதலீட்டுப் பெருக்கியை ஒத்திருக் கிறது. இவை இரண்டும் வேறுபட்டிருந்தாலும் மேற்கண்ட உதாரணத்தில் கண்டதுபோலச் சமமாகப் பாதிக்கப்பட்டாலும் கோட்பாட்டு ரீதியில் பங்கமெதுவும் ஏற்படாது என்பது கீன்ஸின் கருத்து.*

வேலைப் பெருக்கியை விளக்கிய பெருமை ஆர். எப். கானைச் (R. F. Khan) சேரும். கீன்ஸின் கருத்துகள் பொதுக்கோட்பாக வடிவெடுப்பதற்கு ஒரு சில ஆண்டுகளுக்கு முன்னரே கான் "உள் நாட்டு முதலீட்டுக்கும் வேலையின்மைக்குமுள்ள தொடர்பு" என்ற கட்டுரையின் வாயிலாக 1931-ல் பொருளாதாரப்பத்திரிகை(Economic Journal) யில் வெளியிட்டார். கான், வேலைப் பெருக்கி எப்படி வேலை செய்கிறது என்பதற்குக் கொடுத்த விளக்கம் கீன்ஸியக் கருத்துகளைத் தெளிவுப்படுத்த உதவியது என்ருல் மிகையாகாது. கீன்ஸ், முதலீட்டுப் பெருக்கிக்கே முதலிடம் கொடுத்தாரெனினும் அதற்கும் வேலைப் பெருக்கிக்கும் அவ்வளவு வேறுபாடு இல்லை என்பது போன்ற கருத்தைக் கொண்டிருந்தார். ஆயினும், பெருக்கி (Multiplier) வேலைக்கான வாய்ப்புகளைப் பெருக்குவதற்குக் கீன்ஸ் வகுத்த கொள்கைகளின் அச்சாணியாக அமைந்தது என்ருல் மிகையாகாது.

முதலீட்டு இறுதிநிலைத் திறனின் தூண்டுதலால் உந்தப் படுவதால் தனியாரின் முதலீட்டு முயற்சிகள் ஒரே சீராக இல்லாமல் கூடுவதும் குறைவதுமாக இருக்கும். தனியாரின் முதலீட்டிலுள்ள இத்தகைய மேடு பள்ளங்களை நிரப்புவதன் அவசியத்தை எளிதில் உணர முடியும். அத்துடன் வருவாய்க்கும் நுகர்வுக்குமிடையே உள்ள இடைவெளி அகன்று விரிந்து வரும்போது அதை நிரப்புவதற்குப் போதிய அளவில் பொதுத்துறை முதலீட்டைப் (Public Investment) பெருக்குவதும் இன்றியமையாதது. எனவேதான், நிறைவேலையில் நாட்டங்கொள்ளும் ஒவ்வொரு அரசாங்கமும் பேரளவில் பொதுத் துறை முதலீட்டை மேற்கொள்ள வேண்டியது அவசியம் என்பதைக் கீன்ஸ் வலியுறுத்தி வந்தார்.

மேற்கொள்ளப்படும் முதலீடு முழுவதும் கட்டாயம் ஆக்க மானதாக (Productive) அமைய வேண்டும் என்ற அவசியமில்லை. ஏனெனில், ஆக்ககரமான முதற்கருவிப் பொருள்களுக்குள்ள தேவை அவை ஆக்கிப் படைக்கும் பொருள்களுக்குள்ள தேவையைப் பொறுத் திருக்கும். மாறாக, ஆக்கமற்ற முதலீட்டால் வருவாய் பெருகுமே ஒழிய நேரடியாக நுகர்வுப் பொருள்களின் உற்பத்தி பெருகாது. எனவே, ஆக்கிய பண்டங்களை விற்க முடியவில்லையே என்ற கவலை குறையும். எனவேதான், பண்டைக் காலத்தில் எகிப்திலும் ஏனைய நாடுகளிலும் கட்டப்பட்ட பிரமிட், கோவில்கள், கோட்டைக் கொத்தளங்கள் போன்ற கலைச்செல்வங்கள் கீன்ஸின் கருத்தைக் கவர்ந்தன.

இத்தகைய படைப்புகளாகப் பலகோடி மக்களது உழைப்பே பண்டைக்காலத்தின் அதிசயங்களாக வடிவெடுத்தன என்பதை அவர் நன்குணர்ந்திருந்தார். அரசாங்கத் தலையீட்டின்மூலம் முதலீட்டை ஆக்கமற்ற இராணுவத் துறைகளுக்குத் திருப்பிவிடுவதால், பொருளாதாரம் மந்தப்படாமல் பாதுகாக்கலாம் என்ற கொள் கையும் மேற்கண்ட கருத்தையொட்டி எழுவதுதான். அவ்வாறு ஆக்கப்படும் அழிவுச் சாதனங்களை நிராயுதபாணிகளான வியத்நாம் மக்களின் தலையில் சொரிந்து அவர்களைச் சர்வநாசம் செய்தாலும் பரவாயில்லை; அத்தகைய அழிவுத் தன்மை வாய்ந்த முதலீடுகளால் அமெரிக்க மக்களுக்கு வேலைக்கான வாய்ப்புகளும் அமெரிக்க ஏகபோக முதலாளிகளுக்குக் கொள்ளை இலாபமும் கிடைத்தால் போதும் என்ற மனப்பான்மையும் கீன்ஸீயக் கோட்பாட்டை மேற்கோள் செய்ய வல்லதாக எதிர்பாராமல் அமைந்துள்ளது.

### கீன்ஸீயக் கருத்துகளின் குறைபாடுகள்

நுகர்வு நாட்டம் பற்றிக் கீன்ஸ் கொண்டிருந்த முற்கோள்களையும் நடைமுறையில் அவற்றைக் கையாளுவதிலுள்ள ஒரு சில சிக்கல் களையும் ஏற்கனவே குறிப்பாகக் காட்டியுள்ளோம். அதைப்போலவே முதலீட்டுப் பெருக்கியிலுள்ள குறைபாடுகளையும் முதலாளித்துவப் பொருளாதாரங்களிலுள்ள அடிப்படைக் கோளாறுகளையும் முரண் பாடுகளையும் ஒருவாறு எடுத்துரைத்தோம். ஆயினும், நுகர்வு நாட்டம் பற்றிய கீன்ஸீயக் கருத்துகளை மேலும் அலசி ஆராய்வது பயன் தருவதாகும்.

### நுகர்வு நாட்டம் பற்றிய மனோதத்துவ விதி நடைமுறைக்குப் பொருந்துமா?

வருவாய்க்கும் நுகர்வுக்குமுள்ள உறவை விளக்கும் நுகர்வு நாட்டம் ஒழுங்குபட அமைந்ததோர் மனோதத்துவ விதியினடியாக

எழுந்த கருத்து என்பதைக் கீன்ஸ் எவ்வாறு விளக்க முற்பட்டார் என்று ஏற்கனவே கண்டோம். அக் கருத்தைக் கோட்பாட்டு ரீதியில் நிலைநாட்டுவதோடு, நடைமுறையில் பரீட்சார்த்த ரீதியிலும் (சோதனைகளின் மூலமாகவும்) உண்மையென நிரூபிக்க முடியுமென கீன்ஸ் வலியுறுத்தி வந்தார். ஆனால் புள்ளி விவரங்காட்டித் தமது கருத்தை நிலைநாட்ட அவர் முயலவில்லை. மாறாக, நுகர்வு நாட்டக் கோட்பாடு நடைமுறைக்கு உகந்ததாக இல்லை என்பதைப் புகழ் பெற்ற பொருளாதார அறிஞர் பலர் புள்ளி விவரங்களுடன் எடுத்துக் காட்டியுள்ளனர்.

வருவாய் அதிகரித்து வரும்போது இறுதிநிலை நுகர்வு நாட்டம் குறைந்துவிடும் என்பது கீன்ஸ் வகுத்த விதியாகும். அதன்படி வருவாயில் சேமிப்பின் வீதாச்சாரம் கூடிக்கொண்டே போகும் என்றாகும். ஆனால், நடைமுறையில் அசாதாரணமான பல காரணங்களால் வருவாயில் நுகர்வின் பங்கு குன்றாமல் இருப்பது மட்டுமன்று, கூடவும் செய்யலாம். உதாரணமாக, 1925—30 வரையுள்ள காலத்தில் சல்லாபப் பொருள்களின் நுகர்வு கணிசமான அளவில் அதிகரித்ததன் பயனாகக் கூடிவந்த வருவாயில் சேமிப்பின் வீதாச்சாரம் குறைந்துபட்டது என்று காணக்கிடக்கிறது. அதே போல், இரண்டாம் உலகப்போர் முடிவடைந்ததும் (1944-47) அடங்கிக்கிடந்த தேவை பொங்கி எழுந்ததன் பயனாக வருவாயில் சேமிப்பின் பங்கு குன்றி வந்தது என்பதற்கு ஆதாரமுண்டு. இத்தகைய புள்ளி விவரங்களின் துணைகொண்டு வருவாய் அதிகரிக்கும்போது நுகர்வின் வீதாச்சாரமும் அதிகரிக்கலாம் என்று ஜே. எஸ். டூசன்பரி (J. S. Duesenberry) சுட்டிக் காட்டியுள்ளார். ஆனால் டூசன்பரி எடுத்தாண்டுள்ள உதாரணங்கள் அசாதாரண மானவை என்பது தெளிவு. 1920-ன் அண்மையிலுள்ள காலத்தில் தொழில்கள் அடைந்துவந்த அமித இலாபமே 1925-க்குப்பின் சல்லாபப் பொருள்களுக்கான நுகர்வைப் பேரளவில் தூண்டுவதற்குக் காரணமாக இருந்தது. அதேபோல் போர்க்காலத்தில் புகலிட மின்றிப் பதுங்கிக் கிடந்த தேவை, போர் முடிந்ததும் குபீரென்று பாய்ந்து எழுந்து நுகர்வு நாட்டத்தைத் தூக்கிவிட்டது என்னலாம். இத்தகைய அசாதாரணமான காரணங்களால் நுகர்வின் வீதாச்சாரம் உயர்ந்தும் குன்றியும்வரும்; இறுதிநிலை நுகர்வு நாட்ட விதிக்கு விலக்காக விளங்கலாம் என்பதைக் கீன்ஸ் நன்குணர்ந்திருந்தார். எனவே, இங்ஙனம் விதிவிலக்காக அமையக்கூடிய அசாதாரணமான புள்ளிவிவரங்களின் அடிப்படையாக டூசன்பரி வெளியிட்ட துணிபுகளைக் கொண்டு கீன்ஸது கோட்பாட்டைப் பொய்யென நிரூபிக்க முடியாது என்பது ஏ. எச். ஹான்ஸனது (A. H. Hansen) கருத்து.

நுகர்வின் நெடுங்காலப் போக்கைக் கொண்டும் கீன்ஸின் கோட்பாட்டைப் பற்றிச் சிலர் குறை கூறியுள்ளனர். சான்றாக, நாட்டுவருவாயின் பன்னெடுங்காலப் போக்கை உற்று நோக்கிய சைமன் குஸ்னட்ஸ், (Simon Kuznets), நாட்டுவருவாயில் நுகர்வின் பங்கு நெடுங்காலப் போக்கில் உயர்ந்து வந்திருப்பதாகக் குறிப்பிட்டுள்ளார். இது மறுக்க முடியாத உண்மைதான். அத்துடன், இரண்டாவது உலகப்போர் ஆரம்பமான பிறகுள்ள காலத்தில் பொருளாதாரத்தின் போக்கும் கீன்ஸீயக் கருத்துகளுக்கு ஆதரவளிப்பதாக இல்லை. 1944-1955 வரையுள்ள புள்ளிவிவரங்களை ஆராய்ந்த ஹாஸ்லிட் (Hazlit) போர்க்காலத்தை நீக்கிக் கணக்கிட்டால் இரண்டாவது உலகப்போருக்கு முன்னர் இருந்து வந்தது போலவே, அதற்குப் பின்னரும் நாட்டுவருவாயில் சேமிப்பின் விகிதம் பெரும்பாலும் ஒரே சீராக இருந்து வந்துள்ளது என்பதை விளக்கியுள்ளார். ஆனால் நுகர்வு நாட்டத்தின் போக்கைப் பற்றிக் கீன்ஸ் ஆராய்ந்தபோது நெடுங்காலப் போக்கை மனதிற்கொண்டு தமது கோட்பாட்டை வகுத்ததாகச் சொல்ல முடியாது. மாறாக, வாணிகச்சுழலின் ஒரு பருவத்திலிருந்து மற்றொரு பருவத்துக்குச் செல்லும்போது, வருவாய்க்கும் நுகர்வுக்குமுள்ள சம்பந்தம் எப்படி இருக்கும் என்பதே அவரது கருத்தைக் கவருவதாக இருந்தது. எனவே, கீன்ஸின் நெடுங்காலப் போக்கைப் பற்றியது அன்று; வாணிகச்சுழலின் பல்வேறு பருவங்களைப் (குறுகியகாலப் போக்கைப்) பற்றியது என்னலாம். உண்மையில், நெடுங்காலப் போக்கில் நுகர்வைப் பாதிக்கக்கூடிய காரணங்கள் மாறி வருமாதலால், வருவாயில் நுகர்வின் பங்கும் மாறுபடலாம் (அதிகரிக்கலாம்) என்பதைக் கீன்ஸ் ஒப்புக் கொண்டிருக்கிறார் என்பது குறிப்பிடத் தக்கது. ஆனால், நுகர்வின் நெடுங்காலப் போக்குக்கும் வாணிகச்சுழலின் பல்வேறு பருவங்களிலும் காணப்படும் போக்குக்கும் உள்ள வேறுபாடுகள் என்ன என்பதைத் தெளிவுற விளக்காதது கீன்ஸின் கோட்பாட்டிலுள்ள குறைபாடுகளுள் ஒன்றாகும்.

கீன்ஸ், ஒருவேளை, சேமிப்பின் விகிதத்தைப் பற்றிக் குறிப்பிடாமல் சேமிப்பின் அளவை மட்டும் மனதிற்கொண்டு வருவாய் வளரும் போது சேமிப்பினளவும் அதிகரிக்கும் எனப் பொருள்படும்படி தமது நுகர்வு நாட்டக் கோட்பாட்டை வகுத்திருக்கலாம் என்பர், அவரது சீடர்களுள் ஒருவர். கீன்ஸின் விளக்கம் இத்தகைய அனுமானத்துக்கு இடந்தருவதாக இல்லை. வருவாய் பெருகும்போது வருவாய்க்கும் நுகர்வுக்குமுள்ள இடைவெளி அகன்று விரியும்; எனவே, அதை ஈடு செய்வதற்குப் பேரளவில் முதலீடு செய்தாக வேண்டுமென்று கீன்ஸ் வலியுறுத்தி வந்தாரென்பது தெரியும். இதிலிருந்து அவர் வருவாய்

வளரும்போது அதில் சேமிப்பின் பங்கு விகிதம் கூடும் என்று கொண்டார் என்பது புலனுகும். மாருக, சேமிப்பின் விகிதம் மாருது என்று கொண்டிருந்தால், வருவாய்க்கும் நுகர்வுக்குமிடையிலுள்ள வித்தியாசம் அவ்வளவு பெரிதாக அகன்று விரியும் என்று எதிர்பார்த் திருப்பாரா என்பது சந்தேகம். உண்மையிலேயே கீன்ஸ் சேமிப்பின் அளவைத்தான் குறிப்பிட்டாரென்ருல், நுகர்வு நாட்டம் குறைந்தால் தான் சேமிப்பின் அளவு பெருகும் என்ற கட்டாயமில்லை. மாருக, நுகர்வு நாட்டம் அதிகரிக்கும்போதே சேமிப்பின் அளவும் அதிகரிக்க முடியும். உதாரணமாக, வருவாய் 1000-லிருந்து 2000-மாக உயரும்போது சேமிப்பினளவையும் 500-லிருந்து 800-ஆக அதிகரிக்க முடியும். இதிலிருந்து நுகர்வு நாட்டம் 50 சதவீதத்தி லிருந்து 60 சதவீதமாக உயரும்போதே சேமிப்பினளவையும் 500-லிருந்து 800 ஆக அதிகரிக்க முடியும் என்பது தெளிவாகும்.

சீமோர் ஹாரிஸூம் (Seymore Harris) கீன்ஸுக்கு ஆதரவு காட்டும் வகையில், கீன்ஸ் தாம் பயன்படுத்திய மாறிகளை விலை, ஆக்க சக்தி ஆகியவற்றில் ஏற்படும் மாற்றங்களை அனுசரித்தே சீரமைத்துச் செப்பனிட்டிருக்கலாம் என்ற கருத்தை வெளியிட் டுள்ளார். ஹாரிஸின் கருத்து உண்மையென்று கொண்டால் கூட, அதைக்கொண்டு சேமிப்பின் நெடுங்காலப் போக்கைக் கீன்ஸின் கருத்துக்கிணங்க விளக்குவது இயலாது என்பது அதற்குரிய புள்ளிவிவரங்களைக் கையாண்டவர்களுக்கு நன்கு தெரியும்.

**நுகர்வு நாட்டத்தால் முதலீட்டு விருப்பம் பலப்படுமா ?**

நுகர்வு நாட்டம் மிகுதியாக இருந்தால் வேலைக்கான வாய்ப்புகள் பெருகும் என்பது கீன்ஸின் துணிபு. ஆனுல், நுகர்வு நாட்டம் அதிகரிப்பதால், முதலீடு எவ்வகையில் தூண்டப்படும் என்பதை அவர் தெளிவுபடுத்தியதாகக் காணும். பொதுவாக நிகர முதலாக்கம் (net capital formation) இன்றி வருவாயோ, வேலைக்கான வாய்ப்புகளோ வளர முடியாது. மெய் வருவாய் மாருத நிலையில், நிகழ்கால நுகர்வு குறைந்தாலன்றி அத்தகைய நிகர முதலாக்கம் நிகழுமா என்பது சந்தேகம். நுகர்வுப் பொருளுற்பத்தியில் ஈடுபடுத்தப்படும் உற்பத்திச் சாதனங்களை முதற்கருவிப் பொருள்களின் உற்பத்திக்காகத் திருப்பிவிடலாம். நுகர்வுப் பொருளுற்பத்தியை முன்போலவே வைத்திருக்க விரும்பினுல், புத்தம்புதுக் கண்டுபிடிப்புகளின் பேரில் முதலாக்கத்துக்கென மேலும் பல சாதனங்களைப் புகுத்தவேண்டும். சோம்பிக் கிடக்கும் உற்பத்திச் சாதனங்களைச் செயல்படுத்துவதன்மூலமாகவும் முதலாக்கத்தை அதிகரிக்க முடியும். எதுவாயினும், நிகழ்காலத்தில் நுகர்வு நாட்டம்

பலப்படுவதற்குப் பதிலாக முதலாக்க விருப்பம் பலப்பட்டால்தான் வேலைக்கான வாய்ப்புகள் அதிகரிக்கும்; வருவாயும் பெருகும். எனவே, இவ்வாறு நுகர்வு நாட்டத்துக்கு முக்கியத்துவம் கொடுப்பதன்மூலம் முதலீட்டு விருப்பத்தைப் புறக்கணித்ததாகச் சொல்ல இடமுண்டு.

**சேமிப்பை அவமதிக்கலாமா ?**

தொன்மைப் பொருளாதாரிகள் சிக்கனத்தைப் போற்றிப் பாராட்டியது மட்டுமன்றி அதன்பயனாகப் பிறக்கும் சேமிப்பைப் பொருளாதார வளர்ச்சியின் அச்சாணியாக மதித்து வந்தனர். மாறாக, கீன்ஸ் சேமிப்பினால் எவ்விதச் சிறப்புமில்லை என்று அதை உதாசீனம் செய்தார் என்பது அறிந்ததே. நிகழ்காலத்தில் நுகர்வு நாட்டம் உன்னிப்பாக இருப்பதால் வருங்காலத்தில் உற்பத்தி செய்யப்படவிருக்கும் பொருள்களுக்கோ அவற்றைப் படைக்க உதவும் முதற்கருவிச் சாதனங்களுக்கோ ஏற்படும் தேவை தானாகத் தோன்றும் என்று சொல்வதற்கில்லை. எதிர்காலத்தில் நுகர்வோரும் சேமிப்போரும் என்னென்ன விருப்பு வெறுப்புகளால் தூண்டப்படுவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறதோ அதன்பேரில் தான் குறுகிய காலத்தில் உற்பத்திச் சாதனங்கள் எவ்வாறு பயன் படுத்தப்படும் அல்லது நெடுங்காலத்தில் அவை என்னென்ன வடிவில் பரிணமிக்கும் என்று நிருணயிக்க முடியும். எனவே சேமிப்புக்கு எப்போதும் அவசியம் (தேவை) உண்டு. எப்போதும் முதலீட்டுக்கான வாய்ப்புகளும் வாயில்களும் திறப்பதுண்டு. உற்பத்திச் சாதனங்களைக் கொண்டு எதை வேண்டுமானாலும் படைக்கலாம் என்ற நிலை இருந்தால் அல்லது பயன்படத்தக்க எச்சவல்லமை காணப்பட்டால் அல்லது புத்தம்புது உற்பத்திச் சாதனங்கள் உருவாக்கப்பட்டால், சேமிப்பைக்கொண்டு அவற்றைப் புகுத்தக்கூடிய வாயில்களைத் திறக்க முடியும். இக் கண்ணோட்டத்தில் நோக்கும்போது சேமிப்புப் பொருளுற்பத்தியைக் குறுக்குவதற்குப் பதிலாகப் பெருக்குவதற்குப் பயன்படும் என்பது புலனாகும்.

மேற்கண்ட வாதத்துக்குக் கீன்ஸின் கருத்தைத் தழுவியவர்கள் சிலர் மறுப்புக்கூற முன்வந்துள்ளனர். சேமிப்பவர்கள் தங்கள் சேமிப்பை முதலீடு செய்பவர்களுக்குக் கடனாக வழங்க முன் வந்தாலும், இலாபகரமாக அதை முதலீடு செய்யக்கூடிய வாய்ப்பு களிருந்தாலன்றி எப்படி அவர்கள் கடன் வாங்கி முதலீடு செய்ய முன்வருவார்கள் என்பது அவர்கள் கேள்வி. ஆயினும், முக்கியமான தொன்றைக் கீன்ஸீயப் பரம்பரையினர் மறந்துவிட்டதாகத் தெரிகிறது. அதாவது, சேமிப்பு அதிகரிப்பதால் வட்டிவீதம் குறைய இடமுண்டு. அதன் பயனாகக் கடன்பத்திரங்கள் போன்ற நிதியடியான சொத்துகளின் (financial assets) மதிப்பு உயரும்.

எனவே, தொழில் துணிவு கொண்டவர்கள் பொருளடியான சாதனங்களுக்குள்ள தேவையை அதிகரிக்க இயலாமல் இருக்கலாம். இத்தகைய செயல்முறையைப் பதுக்கல் என்றும் அழைக்கலாம். எதிர்காலத்தில் இலாபகரமாகத் தங்கள் சேமிப்பை ஈடுபடுத்தலாம் என்ற நம்பிக்கை இருந்தால்தான், நிகழ்காலத்தில் அதைப் பதுக்கி வைக்கும் மனோபாவம் தலைதூக்கும். அவ்வாறின்றி, வருங்காலத்தில் எதிர்பார்ப்பதைவிட நிகழ்காலத்தில் இலாபகரமான வாய்ப்புகள் இருப்பதாகத் தோன்றினால் நிகரமுதலாக்கம் தடையின்றி நடைபெறும் என்பதை அவர்கள் எண்ணிப் பார்ப்பதாகக் காணோம். சுருங்கக் கூறின், ஆக்ககரமான சாதனங்களைத் திரட்டுவதன்மூலம் பொருள்களுக்குள்ள வாங்கும் சக்தியை உருவாக்க முடியும் என்பதைக் கீன்ஸ் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்று எண்ண இடமுண்டு. அத்துடன் இறுதிநிலை நுகர்வு நாட்டம் அதிகரிக்காத நிலையில் வட்டிவீதம் முதலீட்டின் இறுதிநிலையைக் காட்டிலும் தொனிப்பாக இருக்கும் என்று நினைக்கலாகாது என்பதும் அவருக்குப் படவில்லை. ஆதலின், சிக்கன மனப்பான்மையைப் பிரதிபலிக்கும் குறைந்த நுகர்வு நாட்டத்தால் வட்டிவீதம் குறைந்து முதலீட்டின் மூலம் வளர்ச்சி தூண்டப்படுமே தவிர, மட்டுப்படுத்தப்படாது என்பது கீன்ஸீயக் கோட்பாட்டை திறனாய்வு செய்யும் ஒரு சிலரின் கருத்தாகும். இக் கருத்துத் தொன்மைப் பொருளாதாரக் கோட்பாட்டை ஒத்திருப்பது குறிப்பிடத்தக்கது.

### முரண்பட்ட உறவுகள்

நுகர்வு நாட்டத்தை வலியுறுத்திய கீன்ஸ், வருவாயில் எப் பகுதி நுகர்வுக்காகச் செலவிடப்படுகிறது என்பதில் முழுக்கமுழுக்க மனதைப் பறிகொடுத்தாரேயல்லாமல், வருவாயில் எப் பகுதி செலவிடப்படுகிறது என்று எண்ணிப் பார்க்கவில்லை. துய்ப்பில் (நுகர்வில்) செலவிடப்படாத வருவாய், செலவிடப்படாததாகவே அவருக்குப்பட்டது போலும். அதாவது நுகர்வில் செலவிடப்படாவிட்டால் முதலீட்டில் செலவிடப்படக்கூடாதா என்ற எண்ணம் அவருக்கு உதிக்கவில்லை. முதலாக்கத்தில் ஈடுபடுத்தப்படும் வருவாயும் செலவுதானே என்று எண்ணியிருந்தால் அதன் பயனாகவும் வருவாயைப் பெருக்க முடியும் என்று தோன்றியிருக்கும். சேமிப்பவர்கள் நுகர்விலோ, முதலீட்டிலோ அதைச் செலவிடமாட்டார்கள் எனக் கருதியது, கீன்ஸீயக் கோட்பாட்டின் முக்கியமானதோர் குறைபாடுதான் என்பது எளிதில் விளங்கும். அப்படி இரண்டு வகையிலும் செலவிடப்படுவதை மொத்தமாகச் சேர்த்துக் கணக்கிட்டால் வருவாய் மொத்த செலவைக் காட்டிலும் மிகுந்துபடுவதனால்தான் வேலையின்மை தலைதூக்குகிறது என்று கீன்ஸீயக்

கோட்பாட்டை மாற்றியமைத்திருக்கலாம். அதன்படி முதலீடு செய்யப்படாத சேமிப்பே பொருளாதார மந்தத்துக்கு அடிகோலும் என்று ஆகியிருக்கும். இவ்விஷயத்தில் கீன்ஸே முன்னுக்குப்பின் முரணான கருத்துகளைக் கொண்டிருந்ததாகத் தெரிகிறது. ஒருபுறம் சேமிப்பும் முதலீடும் ஒரே செயலின் (பொருளின்) இரண்டு அம்சங்கள் என்று பறை சாற்றுகிறார். மறுபுறம் சேமிப்பு, வருவாயைக் குறுக்கும்; முதலீடு வருவாயைப் பெருக்கும்; எனவே சேமிப்பு விரும்பத் தக்க தன்று என்று முழங்குகிறார். இரண்டும் ஒரே செயலின் இருகூறு களானால் ஒன்றைமட்டும் விரும்பி மற்றதை வெறுப்பானேன்?

சேமிப்பும் முதலீடும் சமம் என்று சொல்லிவிட்டு முதலீட்டுக்கு மட்டும் முக்கியத்துவம் கொடுத்தது அவ்வளவு பொருத்தமாக இல்லை. சேமிப்பும் நுகர்வும் சேர்ந்தே மொத்த வருவாய் என்றிருக்கும்போது, சேமிப்பும் முதலீடும் சமம் என்று கொண்டால் நுகர்விலாகிலும் முதலீட்டிலாகிலும் வருவாயைச் செலவிட்டால் அதனால் வேலைக் கான வாய்ப்புகள் பெருகும் என்றாகும். மொத்த செலவுக்கும் நுகர்வுக்குமான செலவுக்குமுள்ள வித்தியாசத்தை முதலீட்டுச் செலவினால் ஈடுசெய்தால் நிறைவேலை நிலையை எய்தமுடியும் என்பதே சரியான கருத்தாகும். சேமிப்பு இல்லாமல் முதலீடு எங்கிருந்து முளைக்கும் ? அப்படியிருக்க சேமிப்பைப் பழிக்க அவசியமென்ன? என்பது சிலரது கேள்வி.

### காலஅளவிலுள்ள கோளாறுகள்

கீன்ஸீயக் கருத்துகள் பல, காலக்கோளாறினால் பாதிக்கப் பட்டிருப்பதைக் காணலாம். சான்றாக, கீன்ஸ் நடப்பு வருவாயையும் நடப்பு நுகர்வுக்குமுள்ள தொடர்பையுமே எளியதோர் கோட்பாடாக வகுக்க முயன்றார். ஆனால் அவருக்குப்பின் ஆராய்ச்சியிலிறங்கிய வர்கள் கடந்தகாலச் சேமிப்பு, முதலின் மதிப்பு உயருவதால் காணும் ஆதாயம் (capital gains) என்றனர். எளிதில் ரொக்கமாகக் கூடிய சொத்துகள் (liquid assets) வருங்காலத்தில் கிடைக்கும் என்று எதிர் பார்க்கப்படும் வருவாய் அனைத்தையும் அவர்கள் வருவாய்க் கணக்கில் சேர்க்க முயன்றுள்ளனர். அதைப் போலவே நுகர்வுக்கும் சேமிப்புக்கு முள்ள சம்பந்தத்தையும் புறக்கணிப்பது சரியன்று. வட்டிவீதம் குறைந்தால், சேமிப்பும் குறையும்; சேமிப்புக் குறைந்தால் நுகர்வு அதிகரிக்கும். இப்படியே ஆராயப் புகுந்தால் நுகர்வு நாட்டக் கருத்தினால் குழப்பம் ஏற்படுவது இயல்பு.

மேலும் வேலையினளவில் ஏற்படும் உடனடியான விளைவுகளை மனத்திற்கொண்டு நோக்கினால், நிகழ்காலத்தில் நடப்பு வருவாயி லிருந்து நுகர்வுக்காகச் செலவிடப்படுவது எவ்வளவு என்ற பாகுபாடு

மிகமிக முக்கியமானது என்பது உண்மைதான். குறிப்பாக, முதலீட்டில் ஈடுபடுவோர் எத்தனைபேர், நுகர்வுப் பொருளுற்பத்தியில் ஈடுபடுவோர் எத்தனைபேர் என்று தெரிந்து கொள்வதற்கு இத்தகைய பாகுபாடு பெரிதும் துணை செய்கிறது. ஆனால், அதே சமயத்தில், பல்வேறுபட்ட நுகர்வுப் பொருளுற்பத்தியில் ஈடுபடுபவர்களின் எண்ணிக்கையும் அந்தந்தப் பொருள்களில் நுகர்வுக்காக எவ்வளவு செலவிடப்படுகிறது என்பதைப் பொறுத்து மாறுபடும். எனவே, நுகர்வு, முதலீடு என்று பகுத்தால் மட்டும் போதாது. வேலைக்கான வாய்ப்புகளைக் கணக்கிடுவதுதான் குறிக்கோளானால், பலதரப்பட்ட நுகர்வுப்பொருள்களில் செலவிடப்படும் நுகர்வினளவும் எத்துணை முக்கியத்துவம் வாய்ந்தது என்பது இலைமறைகாய்போல் விளங்குவதாகும். ஆதலின், கீன்ஸின் நுகர்வு நாட்டக் கோட்பாட்டைக் கொண்டு எதிர்காலத்தில் வேலைக்கான வாய்ப்புகள் இந்த அளவில்தான் பெருகும் என்று அறுதியிட்டுக் கூறுவதற்குத் துணைபுரிவதில்லை என்பது ஒரு சாராரின் கருத்து.

குழப்பமிக்க கருத்துகள்

வேலைபற்றிய பொதுக்கோட்பாட்டில் ஆங்காங்கே ஒரு சில குழப்பமிக்க கருத்துகள் இருப்பதைக் காணலாம். நுகர்வுநாட்டம் பற்றிய உறவை விளக்கும்போது கீன்ஸ் அதை நிகர வருவாயுடன் தொடர்பு கொண்டிருப்பதாகவும் ஆனால் வேலையினளவு மொத்த வருவாயைப் பொறுத்திருப்பதாகவும் கூறியுள்ளார். ஆனால், வேறோர் இடத்தில் நுகர்வும் வேலையினளவும் மொத்த வருவாயைச் சார்ந்திருப்பதாகக் கூறியுள்ளார். இப்படி ஓர் இடத்தில் நிகர வருவாயோடும் மற்றொரு இடத்தில் மொத்த வருவாயோடும் நுகர்வைச் சம்பந்தப்படுத்தியிருப்பது குழப்பம் விளைவிப்பதாக உள்ளது.

செல்வத்தால் நுகர்வு எவ்வாறு பாதிக்கப்படும் என்ற கேள்விக்கு விடைகாணும் வகையில், கீன்ஸ் தமது சிந்தனையைச் செலுத்தியதாகக் காணோம் என்று சிலர் குறைபட்டுள்ளார்கள். நிலையான சொத்துகளின் மெய்மதிப்பு அதிகரிப்பதால் நுகர்வு பாதிக்கப்படும் என்பதைக் கீன்ஸ் நன்கு உணர்ந்திருந்தார். முதலினச் சொத்துகளின் மதிப்பு எதிர்பாராதவிதமாக ஏறுவதால் நுகர்வு நாட்டம் பெரிதும் பாதிக்கப்படும் என்பதை அவர் அறிந்திருந்தார். அத்துடன், பங்கு மாற்றுச் சந்தையில் அக்கறைகாட்டி பங்குகளில் முதலீடு செய்பவர்கள் தங்கள் முதலினச் சொத்துகளில் அனுமத்தாக ஏற்படும் மதிப்பேற்றத்தினால் வரும் ஆதாயத்தைத் துய்ப்பில் செலவிடத் தயங்குவதில்லை. உண்மையில் சாதாரணமாகத் தங்களுக்குக் கிடைக்கும் நடப்பு வருவாய்க்கும் நுகர்வுக்குமுள்ள தொடர்பைக் காட்டிலும் பங்குமாற்றுச் சந்தையிலிருந்து கிடைக்கும் ஆதாயத்

துக்கும் நுகர்வுக்குமுள்ள தொடர்பு நெருங்கியதாகவும் உன்னிப்பான தாகவும் இருக்கும் என்பதும் அவருக்குத் தெரிந்ததே. ஆயினும், முதலீட்டின் இறுதிநிலைத் திறன் நிலையாக இருக்கும் என்று அவர் நம்பியதால், குறுகிய காலத்தில் முதலினச் சொத்துகளின் மதிப்பில் கணிசமான மாறுதல்கள் ஏற்படும் என்று அவர் எதிர்பார்க்கவில்லை. வட்டிவீதத்தின் செல்வாக்கும் அவ்வளவு அதிகமாக இருக்குமென்று அவர் நினைக்கவில்லை. ஆனால், அடுத்த அத்தியாயத்தில் காட்டியபடி முதலீட்டின் இறுதிநிலைத் திறன் எவ்வாறு மாறுந்தன்மை உடையது என்பது தெரிந்தால் நுகர்வு நாட்டம் பற்றிக் கீன்ஸ் வெளியிட்டுள்ள கருத்துகள் ஏன் குறைபாடுடையவை என்பது தெற்றென விளங்கும்.

## முதலீட்டுப் பெருக்கியிலுள்ள சிக்கல்கள்

முதலீட்டுப் பெருக்கிக்கும் இறுதிநிலை நாட்டத்துக்குமுள்ள உறவைக் கீன்ஸ் விளக்கியுள்ளார். எனினும், பெருக்கிகளைப் பண வருவாய்ப் பெருக்கி, உண்மை வருவாய்ப் பெருக்கி, வேலைப்பெருக்கி என மூன்றுவிதமாகப் பாகுபாடு செய்யலாம். அதன்படி நிறை வேலை நிலை ஏற்படும்வரை பணவருவாய்ப் பெருக்கியினால் உண்மை வருவாய்ப் பெருக்கியும் தூண்டப்படும். ஆனால், நிறைவேலை நிலையை எய்திய பின்னர் உண்மை வருவாய்ப் பெருக்கியும் வேலைப் பெருக்கியும் வேலை செய்ய மறுத்துவிடும்; எனவே, அந் நிலைக்கு அப்பால் பணவருவாய்ப் பெருக்கி பணவீக்கத்துக்குத்தான் வழி வகுக்கும் என்பது கீன்ஸின் கருத்து. அதன்படி நிறைவேலை நிலையை எய்தும்வரை பணவருவாய்ப் பெருக்கிக்கு இசைந்து உண்மை வருவாய்ப் பெருக்கியும் வேலைப் பெருக்கியும் சிக்கலின்றி வேலை செய்யும் என்று அவர் நம்பினார். நிறைவேலை நிலையை அடையும்வரை உற்பத்திச் சாதனங்கள் பரிபூரணமாக நெகிழ்ந்து கொடுக்கும் (perfectly elastic) என்ற முதற்கோள்தான் அந் நம்பிக்கையின் அடிப்படையாகும். ஆனால், உற்பத்திச் சாதனங்களின் நெகிழ்ச்சி பற்றிய அவரது முதற்கோள், நடைமுறைக்கு ஒவ்வாதது என்பது தெளிவு. எனவே, நிறைவேலை நிலையை அடைவதற்கு முன்னரே முட்டுக்கட்டைகள் பல தோன்றுமாதலால் பணவருவாய்ப் பெருக்கியால் உண்மை வருவாய்ப் பெருக்கியும் வேலைப் பெருக்கியும் தூண்டப்படாமல் பணவீக்கத்தில் கொண்டுபோய் விடும். முட்டுக் கட்டைகளைப் பற்றியும் மந்த மனோபாவம் பற்றியும் கீன்ஸ் தமது பொதுக்கோட்பாட்டில் குறிப்பிட்டிருந்தாரெனினும், அவற்றால் விளையும் சிக்கல்களுக்குப் பரிகாரம் தேடுவதற்கு அவர் விழையவில்லை. உறுதியாக உண்மை வருவாய் பெருக வேண்டுமாயின், எச்சவல்ல மையைப் பயன்படுத்த வேண்டும்; அல்லது உற்பத்திச் சாதனங்களை பெருக்கக்கூடிய வகையில் முதலீடு செய்ய வேண்டும். இதை அவர்

நன்குணர்ந்திருந்தால், இவ்வளவு தூரம் அவர் நுகர்வு நாட்டத்துக்கு முக்கியத்துவம் கொடுத்திருக்கமாட்டார்.

புதிதாகப் படைக்கப்படும் பணத்தைக் கொண்டு வருவாயைப் பெருக்கும்போது இறுதிநிலை நுகர்வு நாட்டத்தின் பலத்தைப் பொறுத்து வரப்போகும் ஒவ்வொரு படியிலும் வருவாயைப் பெருக்கலாம் என்பது கீன்ஸின் கருத்து. ஆனால் அத்தகைய வருவாய்ப் பெருக்கத்துக்கு ஏன் நுகர்வு நாட்டத்தை மட்டும் நம்பியிருக்க வேண்டும்? பதுங்கிச் செல்லாமல், முதலீட்டினடியாகப் பிறக்கும் வருவாய்ப் பெருக்கத்தை ஏன் கணக்கில் எடுக்கக்கூடாது? என்பது எளிதில் மறுக்க முடியாத கேள்விகளாம். மேலும், முதலீட்டுப் பெருக்கியைப் பற்றி விளக்கும்போது, அரசு முதலீட்டினால் தூண்டப்படும் வருவாய்ப் பெருக்கத்தை மட்டுமே அவர் மனதில் கொண்டுள்ளதாகத் தெரிகிறது. தனியாரின் முயற்சியால் ஏற்படும் முதலீட்டால் வருவாய் பெருகாது என்பது அவரது நினைப்பா என்று சிலர் வினவுகிறார்கள்.

பெருக்கியின் அளவை நிருணயிக்கும்போது கீன்ஸ் இறுதிநிலை நுகர்வு நாட்ட விதியை மறந்துவிட்டதுபோல் தெரிகிறது. அவ் விதியின்படி வருவாய் வளரும்போது இறுதிநிலை நுகர்வு நாட்டம் படிப்படியாகக் குறைந்துபடும் என்றாகும். அஃது உண்மையானால் அதற்கேற்ப பெருக்கியும் குறைந்துபடும் என்பதுதான் பொருள். ஆனால், பெருக்கியைக் கவனிக்கும்போது கீன்ஸ் இவ்வுண்மையை மனதிலிறுத்திக் கொள்ளவில்லை என்று தெரிகிறது.

உண்மையில், சேமிப்புக்கும் முதலீட்டுக்குமுள்ள உறவு அவ்வளவு முக்கியமானதன்று. எனவே, அந்த உறவின் பேரில் பெருக்கிக் காட்ட வேண்டிய அவசியமுமில்லை. ஏனெனில், சேமிப்புப் பெருகாத நிலையிலும் அல்லது நுகர்வு குன்றாத நிலையிலும் முதலீடு பெருக முடியும். வங்கிக் கடன் ஒரே சீராக இருந்தால்தான் சில வேளைகளில் சேமிப்பும் முதலீடும் சமமாக இருக்க முடியும். வங்கிக்கடன் மிகுந்துள்ள சமயங்களில் முதலீடு சேமிப்பைவிட மிஞ்சியிருப்பது சாதாரணமான நிகழ்ச்சியாகும். அதைப்போலவே, மந்தப்பட்ட வேளையில் சேமிப்பு, முதலீட்டை மிஞ்சி நிற்கும் என்பதை விளக்கத் தேவையில்லை. எனவே, பொருளாதாரம் சுறுசுறுப்பாக வேலை செய்யும்போது சிறிய அளவில் செய்யப்படும் முதலீடும் பெரிய அளவில் வருவாயைப் பெருக்க இயலும். மாறாக, மந்தப்பட்ட காலங்களில் பேரளவில் முதலீடு செய்தாலும், வருவாயை வெகுவாகப் பெருக்க இயலாது. இந்த உண்மையை நன்குணர்ந்த கீன்ஸ் கடனின் அளவும் வைப்பினளவும் ஒன்றையொன்று ஈடு செய்வதால் அதன் பயனாகச் சேமிப்புக்கும் முதலீட்டுக்குமுள்ள சமன்பாடு கெடவேண்டிய அவசியமில்லை என்று கூறியுள்ளார்.

அடுத்தவரிடம் அல்லது பொதுமக்களிடமிருந்து பெறப்படும் கடனைப் பணமாகக் கொள்ளலாகாது. ஏனையோர் தங்கள் வருவாயிலிருந்து மீதம் பிடிக்கும் தொகையிலிருந்தே இத்தகைய கடனைப் பெறமுடியும் மாருக, வங்கிக் கடன் பணமாகும். எனவே, அவை இரண்டும் சமமாளுல் ஒன்றையொன்று ஈடு செய்யும் என்று கொள்ளுவது தவறு. அந்த அடிப்படையில் சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் சமன்பாட்டை நிலைநாட்ட முயலுவதும் தவறு என்பது தெளிவு. எனவே, வளம் பெருகி வரும் காலங்களில் செலவைச் சிறிய அளவில் அதிகரித்தாலும் அது பன்மடங்காகப் பெருக ஏதுவாகும். மாருக, மந்தச் சூழ்நிலையில் எவ்வளவுதான் முதலீடு செய்தாலும் வருவாய்ப் பெருக்கத்தில் சுறுசுறுப்புத் தோன்ருது. முன்கூட்டியே பெருக்கியினளவை நிருணயம் செய்ய முற்படுவதால் என்ன பயன் என்று சிலர் கேட்பதிலும் பொருளுண்டு.

மொத்தத்தில் நுகர்வு நாட்டத்தை நூதனமான கருத்து என்று கொள்ள இயலாது. சேமிப்பு, வருவாயைச் சார்ந்தது என்பது பழைய கருத்துகளுள் ஒன்ருகும். ஆளுல் வருவாயின் செல்வாக்கை ஒழுங்குபட அலசி ஆராய்ந்த பெருமை கீன்ஸையே சாரும். அவருக்குப் பின்னரும் எண்ணிறந்த ஆராய்ச்சிகள் கீன்ஸீயக் கருத்தினடிப்படையில் மேற்கொள்ளப்பட்டுள்ளன. அதைப்போலவே பெருக்கிக் கருத்தும் பொருளாதார ஆய்வுக்குப் பெரிதும் பயன்படும் கருவி என்பதில் சந்தேகமில்லை. எவ்வளவுதான் குறைபாடுகளிருப் பினும் நுகர்வு நாட்ட கருத்தைக் கொண்டே வாணிகச்சுழலின் எல்லைகளை வரையறுக்க முடியும் என்று சொன்ளுல் மிகையாகாது.

1. Dillard D., Op. Cit., Chapters IV & V.
2. Hansen A. H., *A Guide to Keynes*, International Students Edition 1953, Chapters 3 & 4.
3. Hariss S.E., *The New Economics*, Dobson. London, 1947, Fourth Impression, 1960, Chapters XXXVI & XLIV.
4. Hazlitt H., *The Critics of Keynesian Economics*, Princeton Nostard, 1960, Chapters V, VI, IX, XIII & XIV.
5. Hazlitt H., *The Failure of New Economics*, Nostard, Princeton 1959, Chapters VIII, IX, X & XI.
6. Hutt. W.H., *Keynesianism Retrospect & Prospect*, Chicago, 1963, Chapters XI, XII & XIII.
7. Keynes J. M. Op. Cit, Chapters VIII, IX & X.
8. Kurihara K. K., *Introduction to Keynesian Dynamics*, Allen and Unwin, London, First Edition, 1956, Fourth Impression 1961, Chapters II, V & VI.
9. Murad, *What Keynes Means*, Twayne, U.S.A., 1962, Chapters IX, X, XI & XIII.

# அனுபந்தம் சேமிப்பு — முதலீட்டுச் சமன்பாடு பற்றிய குறிப்பு

சேமிப்பு, முதலீடு, வருவாய் ஆகிய கருத்துகளைத் தனிப்பட்டவர்களின் பொருளாதார நடவடிக்கைகளை ஆராய்வதற்குப் பயன்படுத்தலாமென்றாலும், ஒரு நாட்டின் பொருளாதாரம் முழுவதையும் குறிக்கும் வகையிலேயே கீன்ஸ் பயன்படுத்தியிருப்பது குறிப்பிடத் தக்கது. இப்படி மொத்தமாகப் பார்க்கும்போது நாட்டு வருவாய், சேமிப்பு, முதலீடு ஆகியவற்றினிடையே நெருங்கிய தொடர்பு இருப்பதைக் காணலாம். வருவாய்க்கும் சேமிப்பிலுள்ள விருப்பத்துக்கும் முதலீட்டிலுள்ள விருப்பத்துக்குமுள்ள உறவைப் பொறுத்தே, பொருளாதாரத்தைச் சமநிலையில் வைத்திருக்கக்கூடிய வருவாயின் அளவு என்ன என்பதை நிருணயிக்க முடியும் என்பது கீன்ஸின் கருத்து.

முதலீடு என்றாலென்ன ?

ஏற்கனவே உள்ள முதலினச் சொத்துகளின் மொத்த அளவோடு புதிதாகச் சேர்க்கப்படும் முதலினச் சொத்துகளே முதலீடு எனப்படும். இத்தகைய முதலீடுகள் புத்தம்புதிய தொழிற்சாலைகள், பணிமனைகள், செயலகங்கள், போக்குவரத்துகள் போன்ற வடிவங்களை எடுக்கலாம். இருப்பாக வைக்கப்படும் பொருள்களின் மொத்த அளவு அதிகரித்து வரும்போது, இருப்புத்தொகையின் கூடிய மதிப்பையும் முதலீடாகக் கணக்கிடுவது வழக்கம். ஆனால் பங்குச் சந்தையில் பழைய பங்குகளை வாங்குவது, பத்திரச் சந்தையில் பழைய பத்திரங்களை வாங்குவது போன்ற வெறும் நிதி (முதலீட்டு) நடவடிக்கைகளை முதலீடாகக் கணக்கெடுப்பதில்லை. இத்தகைய நிதி முதலீடுகளில் ஒரு சாரார் பங்குகளிலும் பத்திரங்களிலும் தங்கள்

சேமிப்புகளை ஈடுபடுத்திய போதிலும், அச் சொத்துகளை விற்பவர்கள் ஏற்கனவே தாங்கள் ஈடுபடுத்திய தொகையை (முதலீட்டை) அதே அளவில் திரும்பப் பெற்று ரொக்கமாக மாற்றுவார்கள். ஆதலால், இருசாராரையும் சேர்த்துக் கணக்கிடும்போது நிகர முதலீடு எதுவும் நிகழவில்லை என்பது தெரியவரும். இத்தகைய நிதி நடவடிக்கைகள் ஒன்றையொன்று அடித்துவிடுமாதலால், அவற்றைக் கீன்ஸ் முதலீடாகக் கொள்ளவில்லை. தனிப்பட்டவர்களைப் பொறுத்த அளவில் இந் நடவடிக்கைகள் முதலீடாகக் காட்சியளித்த போதிலும் பொருளாதாரம் முழுவதையும் நோக்கும்போது அவை முதலீடுகள் அல்ல என்பது அவரது கருத்து.

ஆயின், பழைய தொழிற்சாலைகளைப் புதுப்பிக்கும் பொருட்டோ, விரிவாக்கும் நோக்குடனோ புத்தம்புதிய பங்குகளோ பத்திரங்களோ வெளியிட வேண்டுமானால் அவற்றில் ஈடுபடுத்தப் படும் பணத்தை முதலீடு எனத் தயங்காமல் கூறலாம். ஏனெனில் அத்தகைய நடவடிக்கைகளால் புத்தம்புதிய முதலினச் சொத்துகள் உருவாக்கப்படுகின்றன. ஆனால் உறுதியான நுகர்வுப் பொருள்களை (Consumer durables) நுகர்வா முதலீடா என்று வகைப்படுத்துவது அவ்வளவு எளிதன்று. சிலர், குடியிருக்கும் வீட்டை முதலீடு என்பர்; ஆனால், போக்குவரத்துக்குப் பயன்படுத்தப்படும் மோட்டார் வண்டியை நுகர்வு என்பர். இத்தகைய பாகுபாடுகளைப் பற்றிக் கருத்து வேறுபாடுகள் எழுவது இயல்பு.

புதிதாக இருப்புக் கட்டப்படும் பொருள்களையும் முதலீடாகவே கருதவேண்டும் என்று குறிப்பிட்டோம். இத்தகைய இருப்புத் திட்டமிட்டதாகவும் இருக்கலாம்; திட்டமிடப்படாததாகவும் இருக்கலாம். விற்பனையின் அளவு, விலைவாசிகள் ஆகியவற்றைப் பற்றிய உத்தேசங்களைப் பொறுத்து, அதற்கேற்ப அதிகமான சரக்குகளை இருப்புக்கட்டத் திட்டமிடலாம். அல்லது, எதிர்பாராவிதமாக ஆக்கிய பண்டங்கள் விற்கப்படாமல் தேக்கமுற்று இருப்பாக மாறலாம். இத்தகைய வேறுபாடுகள் தொழில் நிருவாகத்துக்கு மிகவும் முக்கியமானவைதானென்றாலும் கீன்ஸீயக் கோட்பாட்டில் அவற்றுக்கு முக்கியத்துவமளிக்கப்படவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

**சேமிப்பு என்றால் என்ன ?**

பொதுவாக வருவாயில் நுகர்ந்தது போக எஞ்சியதையே சேமிப்பு என்பர். இது தனி நபருக்கும் பொருளாதார முழுமைக்கும்

ஒருங்கே பொருந்துவதாகும். இவ்விருதரப்பட்ட சேமிப்புக்கும் ஓரேவிதமான இலக்கணம் கூறலாம் என்பது உண்மை. தனிப்பட்டவர்கள் ஒவ்வொருவரும் தனித்தனியாகச் சேமிப்பதன் விளைவாகவே சமுதாயச் சேமிப்புத் திரட்சியுறுகிறது என்றும் சொல்லலாம். ஆனால் தனியாரின் சேமிப்பால் சமுதாயத்தின் சேமிப்பு அதிகரிக்கவேண்டுமென்ற கட்டாயமில்லை. அதற்குரிய முக்கியமான காரணத்தைத் தெளிவாகத் தெரிந்து கொள்வது அவசியம். தனிப்பட்ட ஒருவன் தனது வருவாயை நுகர்வில் செலவிடாமலிருந்தால், அவன் எஞ்சியதைச் சேமிப்பதாகக் கொள்ளலாம். ஆனால் அப்படி ஒருவன் செலவைச் சுருக்குவதால் மற்றவர்களது வருவாய் தடைப்பட்டுச் சுருங்கலாம். அவ்வாறு பிறரது வருவாய் குன்றுமானால் அதிலிருந்து ஒதுக்கப்படும் சேமிப்பினளவும் குறையும் என்று எதிர்பார்க்கலாம். எனவே, தனியொருவன் தனது சேமிப்பை அதிகரிப்பதால் சமுதாயத்தின் சேமிப்பு அதிகரிப்பதற்குப் பதிலாக குறையலாம் என்று எண்ண இடமுண்டு. கீன்ஸ் இக் கருத்தை அடிப்படையாகக் கொண்டே தமது கோட்பாட்டை வகுக்கலானார் என்பது குறிப்பிடத் தக்கது.

### நாட்டு வருவாய் கணக்கில் சேமிப்பு — முதலீட்டின் சமன்பாடு (Accounting Equality of Saving and Investment)

*ஓர் ஆண்டு முழுவதும் சேமிப்பு, முதலீடு என்ற வகையில் மேற்கொள்ளப்படும் நடவடிக்கைளைக் கணக்கிட்டால், சேமிப்பும் முதலீடும் எப்போதும் சமமாக இருப்பது விளங்கும். இலக்கணவாயிலாகவே இச் சமன்பாட்டை நிலைநிறுத்தி விடலாம். அதன்படி நடப்பு (current) வருவாய்க்கும் (Y) நடப்பு (current) நுகர்வுக்குமுள்ள (C) வித்தியாசத்தையே சேமிப்பு என்பர். அதேபோல் நடப்பு முதலீட்டையும் (I), நடப்பு வருவாய்க்கும் (Y) நடப்பு நுகர்வுக்குமுள்ள (C) வித்தியாசம் எனலாம்.*

$$S = Y - C \;\ldots\ldots\ldots(i)$$

$$I = Y - C \;\ldots\ldots\ldots(ii)$$

$$\therefore \quad = I \;\ldots\ldots\ldots(iii)$$

இத்தகைய சமன்பாடு இலக்கணத்தின்பால் அமைவது, சுலபமானதுங்கூட. பொருளாதாரம் சமநிலையிலிருந்தாலும், நிலைதவறி நின்றாலும், வளர்ச்சியுற்றாலும், தேக்கமுற்றாலும், தேய்ந்து வந்தாலும் இச் சமன்பாட்டின் நடைமுறை உண்மை ஆண்டாண்டு தோறும் வகுக்கப்படும் கணக்கின்வாயிலாக நிலைநாட்டப்படும். ஆயின், இத்தகைய சமன்பாடு, பொருளாதாரத்தின் சமநிலையைக்

குறிக்கும் சமன்பாடு அன்று. அத்தகைய சமன்பாட்டை நிலைநாட்டு வதற்குச் சேமிப்பும், முதலீடும் நடைமுறை உண்மையில் சமமாக இருந்தால் மட்டும் போதாது. சமநிலைக்கு ஏற்றவகையில் திட்டமிட்ட சேமிப்பும் (intended saving) திட்டமிட்ட முதலீடும் (intended investment) நடைமுறை உண்மையாக மாறவேண்டும்.

சார்பானச் சேமிப்பு — முதலீட்டுச் சமன்பாடு
(Functional Equality of Saving and Investment)

அப்படி மாறாவிடில் பொருளாதாரம் நிலைதவறி அலை மோதும். சேமிப்பு, முதலீட்டை மிஞ்சி நின்றால் பொருளாதாரம் மந்தப்படும்; முதலீடு,சேமிப்பை மிஞ்சி நின்றால் பணவீக்கம் ஏற்பட வழி பிறக்கும். பொருளாதாரத்தில் சேமிப்பவர்களே முதலீட்டிலும் ஈடுபட்டிருந்தால், அவ்விரண்டு செயல்களுக்குமிடையே சமத்துவத்தை நிலைநாட்டுவது அவ்வளவு கடினமன்று. ஆனால் நடைமுறையில் சேமிப்பவர்களும் முதலீடு செய்பவர்களும் ஒரே சாராரல்லர். அந்த நடவடிக்கைகளில் ஈடுபடுபவர்களின் நோக்கங்களும் வெவ்வேறாகும். அச் செயல்களுக்குத் தூண்டும் சக்திகளும் ஒரே விதமானவை அல்ல. அச் சக்திகளின் தூண்டுதலுக்கிசைந்து அவர்கள் செயல்படும் விதத்திலும் ஒருமைப்பாடுகாண முடியாது. இந் நிலையில் சமநிலைக்கு ஏற்றவகையில் திட்டமிடப்படும் சேமிப்பையும் முதலீட்டையும் நடைமுறை உண்மையாக மாற்றுவது எளிதன்று.

சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் சார்பு கொண்ட சமன்பாட்டை ஏற்படுத்துவதற்குப் பொருளாதார முழுவதும் எப்படி இயங்குகிறது என்று கூர்ந்து கவனிப்பது அவசியம். அவ்வாறின்றி, அத்தகைய இயக்கத்தின் விளைவாகக் கிடைக்கும் புள்ளிவிவரங்களைக் கணக்கெடுப்பதில் பயனில்லை. வருவாயில் ஏற்பட்டுவரும் மாற்றங்களுக்கேற்ப சேமிப்பவர்களும் முதலீடு செய்பவர்களும் தத்தம் விருப்பு வெறுப்புகளையும் செயல்முறைகளையும் மாற்றிக் கொள்ளுவது இயல்பு. இவ்வாறு வருவாயிலுள்ள மாற்றங்களுக் கேற்ப சேமிப்போர்,முதலீடுசெய்வோர் ஆகியோரது விருப்பு வெறுப்புகளும் செயல்முறைகளும் இணக்கமுற்று மாறிவருவதால் முடிவில் ஏற்படும் ஒத்த உறவே சேமிப்புக்கும் முதலீட்டுக்குமிடையே சார்பு கொண்ட சமநிலையை நிலைநாட்ட உதவுகிறது. அத்தகைய ஒத்த உறவும் இணக்கமும் ஏற்படாத வரையில் பொருளாதாரம் சமநிலையில் இல்லாமல் அலைமோதும். அதாவது, வருவாய் அலைமோதுவதன் மூலமாகவே சேமிப்பும் முதலீடும் சமமாக்கப்படும்.

திட்டமிட்ட சேமிப்புக்கும் திட்டமிட்ட முதலீட்டுக்குமுள்ள வித்தியாசத்தைப் பொறுத்தே வருவாய் எந்த வேகத்தில் மாறும் என்று கணிக்கலாம். திட்டமிட்ட சேமிப்பு, திட்டமிட்ட முதலீட்டைக் காட்டிலும் அதிகமாக இருந்தால், எதிர்பார்க்கப்படும் விற்றுமுதல் எதிர்பார்க்கப்படும் உற்பத்திச்செலவைக் காட்டிலும் குறைவாக இருக்கும். எனவே, பொருளாதாரம் சுணக்கமுற்று சேமிப்பைக் கொஞ்சங்கொஞ்சமாகக் குறைத்து முதலீட்டின் அளவுக்குச் சமமாகச் செய்யும். மாறாக, திட்டமிட்ட சேமிப்பு, திட்டமிட்ட முதலீட்டைவிடக் குறைவாக இருக்குமானால் எதிர் பார்க்கப்படும் விற்றுமுதல் எதிர்பார்க்கப்படும் உற்பத்திச் செலவைக் காட்டிலும் அதிகமாக இருக்கும். அதன்காரணமாகப், பொருளா தாரம் விறுவிறுப்படைந்து, இலாபம் பெருக்கெடுத்து, சேமிப்பினளவு கொஞ்சஞ்கொஞ்சமாக மிகுந்து முதலீட்டுக்கு இணையாக உயரும். இதிலிருந்து திட்டமிட்ட சேமிப்பும் முதலீடும் வேறுபடுவதால் வருவாயில் ஏற்ற இறக்கம் காணப்படும்; வருவாயில் காணப்படும் மாற்றங்களுக்கேற்ப சேமிப்பும்முதலீடும் இணக்கமுற்று சமன்பாட்டை எய்தும் என்பது புலனுகும். வருவாயிலுள்ள இத்தகைய ஏற்ற இறக் கத்தைப்பெருக்கியின் (multiplier) துணைகொண்டு கீன்ஸ் விளக்கி யிருப்பது குறிப்பிடத்தக்கது.

# 5. முதலீட்டுக்கான தூண்டுதல்

*[முதலீட்டு இறுதிநிலைத்திறன் என்றால் என்ன? முதலீட்டு இறுதிநிலைத்திறனை நிருணயம் செய்வதெப்படி? நீண்டகால எதிர் பார்ப்புகளின் முக்கியத்துவம்— முதலீட்டுஇறுதிநிலைத்திறனின் நெடுங் காலப் போக்கு — வட்டிவீதமென்றால் என்ன? வட்டிவீதம் பற்றிய கோட்பாடுகள் — ஊகவாணிக நோக்கத்தின் முக்கியத்துவம் — பணத் தின் அளிப்பு — பண அளிப்பில் வங்கிகள் வகிக்கும் இடம் — முதலீட்டு இறுதிநிலைத்திறனுக்கும் வட்டிவீதத்துக்குமுள்ள தொடர்பு— கொள்கை வகுப்புக்கான அடிப்படை பாடங்கள் — கீன்ஸியக் கோட்பாடுகளைப் பற்றிய திறனாய்வுகள்—முதலீட்டுக்கு இவ்வளவு முக்கியத்தும் கொடுப் பானேன்? பணத்தின் தேவை, அளிப்பு பற்றிய தெளிவற்ற கருத்துகள் — முதலீட்டு இறுதிநிலைத்திறன் பற்றிய குழப்பங்கள்.]*

வேலையினளவை எவ்வாறு நிருணயிப்பது என்பதே கீன்ஸின் தலையாய கவலையாக இருந்து வந்தது என்பதைக் கண்டோம். வேலையின் அளவுக்கும் முதலீட்டுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டென்பதை அவர் தெளிவுறக் காட்டுகிறார். முதலீட்டி னளவை நிருணயம் பண்ணினால் மறைமுகமாக வேலையினளவையும் நிருணயம் பண்ணலாம் என்று அவர் நம்பினார். எனவேதான், நுகர்வு நாட்டம் மாறாத நிலையில், முதலீட்டின் இறுதிநிலைத்திறன் (marginal efficiency of capital), வட்டிவீதம் (rate of interest) இரண்டையும் பொறுத்தே முதலீட்டின் அளவை நிருணயிக்கலாம்; முதலீட்டைப் பொறுத்து வேலையினளவும் மாறுபடும் என்ற கருத் துக்கு மிகவும் முக்கியத்துவம் கொடுக்கலானார்.

### முதலீட்டு இறுதிநிலைத் திறன் என்றால் என்ன?

பொதுவாகப் புரிந்து கொள்ளக்கூடிய பாணியில் கூறவேண்டு மாயின், முதலீட்டு இறுதிநிலைத் திறனை (marginal efficiency of capital) எதிர்பார்க்கப்படும் இலாபவீதம் (expected rate of profit) என்னலாம். இதில் 'திறன்' (efficiency) என்ற சொல் ஒரு குறிப்பிட்ட முதலினச் சொத்து (capital asset) எத்துணை இலாபகரமானது என்பதைக் குறிக்கும். அதாவது, முதலீட்டினால் ஏற்படும் செலவை

ஈடு செய்த பின்னர் எஞ்சி நிற்கும் விளைவு வீதத்தையே (rate of return over cost) திறன் என்பர். ஒரு குறிப்பிட்ட வகையான முதலினச் சொத்துகளின் மொத்த எண்ணிக்கையோடு இறுதியாக ஒன்றைக் கூட்டுவதால் ஏற்படும் செலவை மிஞ்சிய உச்சவிளைவு வீதத்தையே, முதலீட்டு இறுதிநிலைத் திறன் என்று அழைப்பர். அதைப்போலவே பொருளாதாரம் முழுவதிலுமே மிகவும் இலாப கரமான முதலினச் சொத்துகளின் மொத்த எண்ணிக்கையோடு ஒன்றைக் கூட்டுவதால் ஏற்படும் செலவை மிஞ்சிய உச்சவிளைவு வீதத்தையே முதலீட்டு இறுதிநிலைத் திறன் என்று குறிப்பிடலாம்.

ஒரு பொருளாதாரத்தில் பயன்படுத்தப்படாத முதலீட்டுக்கான வாய்ப்புகள் பல இருக்குமானால், முதலீட்டு இறுதிநிலைத் திறன் வட்டி வீதத்தை மிஞ்சி நிற்கும் வரையில் புதிய முதலீடுகள் பல மேற்கொள்ளப்படும். உண்மையில் முதலீட்டு இறுதிநிலைத் திறனும் வட்டிவீதமும் சமமாக இருக்கும். எல்லை வரையிலும் முதலீடுநடை பெறும் என்பது அச்சாணியுள்ளதோர் தத்துவமாகும். ஏனெனில், நுகர்வை மிஞ்சிய வருவாய் உடையவர்கள் வருவாயை மிஞ்சிய முதலீடு செய்யலாம்; அல்லது உடனடியாக எவ்வகையிலும் பயன்படுத்தாமல் ரொக்கப் பணமாகப் பதுக்கி வைக்கலாம். இவற்றின் பலாபலன்களை எடைபோட்டுப் பார்த்து எது மிகவும் இலாபகரமானது என்று தோன்றுகிறதோ அதன்படியே முடிவு செய்வர். உச்சகரமான இலாப வேட்கையே இத்தகைய முடிவின் குறிக்கோள் என்றாலும், இவ்வாறான பொதுப்படையான அடிப்படையில் முதலீட்டு இறுதிநிலைத்திறன் என்ற கருத்தைப் பயன்படுத்துவதில்லை. மாறாக, புத்தம்புது முதலினச் சொத்துகளைப் படைப்பதா இல்லையா என்ற முடிவுக்குத் துணை செய்யும் வகையிலே முதலீட்டு இறுதிநிலைத் திறனைப் பயன் படுத்துவர்.

முதலீட்டு இறுதிநிலைத்திறன் ஒரு வீதம். அஃது இருகூறுகளால் ஆகியது. ஒன்று வருவாயை உருவாக்கக்கூடிய முதலினச் சொத்திலிருந்து எதிர்பார்க்கப் படும் விளைவு (Expected Yield); மற்றது அத்தகைய விளைவுக்குக் காரணமாக இருக்கும் முதலினச் சொத்தை ஆக்கிப் படைப்பதால் அல்லது புதியவற்றைக் கொண்டு பழையனவற்றை மாற்றுவதால் ஏற்படும் செலவு. அதுதான் முதலினச் சொத்தின் அளிப்பு விலையாகும் (Supply price). முதலீடு செய்வதால் முதலினச் சொத்து உருவாகும்; அதைக்கொண்டு பொருளுற்பத்தி செய்யலாம்; அப் பொருள் களின் விற்றுவரவிலிருந்து செலவைக் கழித்தால் இலாபம் கிடைக்கும் என்று எதிர்பார்த்தே முதலாளிகள் முதலீடு செய்வர். அத்தகைய இலாபகரமான விளைவுகள் முதலினச் சொத்துகளின் ஆயுள்காலம் முடியும்வரை ஆண்டாண்டு தோறும் கிடைக்கும் என எதிர்பார்க்கலாம். அவ்வாறு ஆண்டுதோறும் கிடைக்கும் விளைவை $Q_1$, $Q_2$, $Q_3$,............$Q_n$ என்று குறிக்கலாம். இவற்றில் 1, 2, 3..........n என்பன ஆண்டுகளின் எண்ணிக்கையைக் குறிக்கும் விளைவுகள். இவை ஒவ்வோர் ஆண்டிலும் சமமாக இருக்க வேண்டுமென்ற கட்டாயம்இல்லை.

விளைவுகளின் மொத்த மதிப்பும், அவ் விளைவுகளுக்குக் காரணமான முதலீட்டின் அளிப்புச் செலவும் தெரியுமானால், எதிர்பார்க்கப்படும் விளைவின் அளவை அளிப்புச் செலவின் விதமாகக் கூறலாம். அவ் விதமே முதலீட்டு இறுதி நிலைத் திறனாகும். ஆனால், அத்தகைய விதத்தைக் கணிப்பதற்குமுன் ஆண்டு தோறும் எதிர்பார்க்கப்படும் விளைவுகளைக் கழித்துக் (Discount) கணக்கிட்டால் அவற்றின் இன்றைய மதிப்பு (Present worth) தெரியவரும். இம் மதிப்பு, அளிப்பு விலைக்குச் சமமாக இருக்கும். இவ்வாறு எதிர்பார்க்கப்படும் விளைவுகளையும் முதலினச் சொத்தின் அளிப்பு விலையையும் சமப்படுத்த உதவும் கழிவுவீதத்தையே (Rate of discount) முதலீட்டு இறுதிநிலைத்திறன் என்று கீன்ஸ் குறிப்பிட்டார்.

குறியீட்டின் துணைகொண்டு கூற முற்பட்டால் முதலினச் சொத்தின் அளிப்பு விலை $= \frac{Q_1}{1+r_m} + \frac{Q_2}{(1+r_m)^2} + \frac{Q_3}{(1+r_m)^3} \ldots\ldots \frac{Q_n}{(1+r_m)^n}$ என்று ஆகும். இதில் $Q_1, Q_2, Q_3, Q_n$ ஆண்டாண்டுதோறும் எதிர்பார்க்கப்படும் விளைவுகளைக் குறிக்கும். 1,2,3.....n ஆண்டுகளின் எண்ணிக்கையைக் குறிக்கும். $r_m$ என்பது முதலீட்டு இறுதிநிலைத்திறன் அல்லது கழிவுவீதத்தைக் (Rate of discount) குறிக்கும். $r_m$-ன் ஒரு குறிப்பிட்ட மதிப்புச் சமன்பாட்டின் இருமருங்கிலுமுள்ள அளவுகளைச் சமநிலைக்கு கொண்டுவரும் என்பது எளிதில் விளங்கும். உதாரணமாக, $\frac{Q_1}{1+r_m}$ முதலாண்டில் கிடைக்குமென எதிர்பார்க்கப்படும் விளைவை $(Q_1)$ $r_m$ என்ற (அதாவது $1+r_m$) என்ற விதத்தைக் கொண்டு கழித்தால், (Discount) அவ் விளைவின் இன்றைய மதிப்புக் கிடைக்கும். உதாரணமாகக் கழிவுவீதம் 10 சதவீதம் என்று கொண்டால் ஓராண்டுக் கழித்து ஒரு ரூபாய் கிடைக்குமென்று எதிர்பார்த்தால் அதன் இன்றைய மதிப்பு $\frac{1.00}{1.10} = 90.91$ பைசாவாகும்.* அதாவது இன்று 90.91 பைசாவை முதலீடு செய்தால் அஃது ஓராண்டில் ஒரு ரூபாயாக வளருமென்று எதிர்பார்க்கலாம். அதைப்போலவே, இரண்டு ஆண்டுகள் கழித்து ஒரு ரூபாய் கிடைக்குமென்று எதிர்பார்த்தால் அதன் இன்றைய மதிப்பு $\frac{100}{121} = 82.65$ என்று ஆகும்.** அதாவது இன்று 82.65 பைசாவை முதலீடு செய்தால் அஃது இரண்டு ஆண்டுகளில் ஒரு ரூபாயாக வளரும் என்று எதிர்பார்க்கலாம். இவ்வாறே, ஒவ்வோர் ஆண்டிலும் எதிர்பார்க்கப்படும் விளைவின் இன்றைய மதிப்பைக் கணக்கிட்டு முதலினச் சொத்தின் ஆயுள்காலம் முழுவதும் எதிர்பார்க்கப்படும் மொத்த விளைவின் இன்றைய மதிப்பைக் கண்டுபிடித்தால், அத் தொகை அம் முதலினச்

---

* 1 ரூபாய் = 100 பைசா. எனவே $\frac{Q_1}{1+r_m} = \frac{100}{1+\frac{10}{100}} = \frac{110}{100} = 100 \times \frac{100}{110}$

$= \frac{1000}{11} = 90.91$ பைசா.

** $\frac{100}{(1+r_m)^2} = \frac{100}{\left(\frac{110}{100}\right)^2} = 100 \times \frac{100}{110} \times \frac{100}{110} = \frac{10,000}{121} = 82.65$ பைசா.

சொத்தின் அளிப்புவிலைக்கோ பழையசொத்தை மாற்றுவதால் ஏற்படும் செலவுக்கோ சமமாக இருக்கும்.

முதலினச்சொத்து ஒன்றை உருவாக்குவதற்கு முதலீட்டுவகையில் 3000 ரூபாய் செலவாகும் என்று வைத்துக் கொள்வோம். அச் சொத்தின் ஆயுள்காலம் 2 ஆண்டுகள் என்றும் கொள்வோம். அதன் பயனாக எதிர்பார்க்கப்படும் விளைவு முதலாண்டில் 1100 ரூபாயாகவும் இரண்டாவது ஆண்டில் 2420 ரூபாயாகவும் இருக்கும் என்றும் வைத்துக் கொள்வோம். அப்படியானால் ஒவ்வொரு ஆண்டிலும் எதிர்பார்க்கப்படும் விளைவை 10 வீதத்தைக்கொண்டு கழித்தால் அவ்வாறு கழிக்கப்பட்ட மொத்த விளைவும் முதலீட்டுச்செலவும் சமமாக இருக்கும் என்பது புலனாகும். மேற்கண்ட உதாரணத்தைச் சாம்யமாகக் கூறவேண்டுமானால், $3000 = \frac{1100}{1.10} + \frac{2420}{(1.10)^2}$ என்றாகும். இச் சாம்யத்தைச் சுருக்கினால், $3000 = 1000 + 2000$ என்று தெரியவரும். எனவே மேற்கண்ட உதாரணத்தில் முதலீட்டின்மூலம் எதிர்பார்க்கப்படும் விளைவைக் கழிக்கும் வீதம் 10 சதவீதம் என்பது விளங்கும். எதிர்பார்க்கப்படும் விளைவுகள் உதாரணத்தில் கண்ட அளவுக்கும் குறைவாக இருந்தால் சமன்பாட்டின் இரண்டு பக்கங்களையும் சமநிலையில் வைத்திருக்க உதவும் கழிவு வீதம் குறைவாக இருக்கும். அதேபோல் முதலீட்டு அளிப்புச் செலவு 3000-க்கும் அதிகமாக இருந்தாலும் கழிவுவீதம் குறைவாக இருக்கும். வேறுவிமாகக் கூறவேண்டுமாயின், முதலினச் சொத்தின் அளிப்புவிலை அதிகமானால் அல்லது முதலீட்டின் விளைவுகள் குறைந்துபட்டால் அதற்கேற்ப கழிவுவீதம் குறையும். உதாரணத்தில் கண்ட கழிவுவீதம் புதிதாக (இறுதியாக) உருவாக்கக் கூடிய முதலினச் சொத்துகளிலிருந்து எதிர்பார்க்கப்படும் உச்ச விளைவாக இருக்குமானால் அதையே முதலீட்டு இறுதிநிலைத்திறன் என்று அழைப்பர்.

பொதுவாக, வட்டியை ஓராண்டுக்கு எவ்வளவு சதவீதம் என்று குறிப்பிடுவது வழக்கம். முதலீட்டு இறுதிநிலைத்திறனும் அத்தகையதோர் சதவீதமாகவே குறிப்பிடப்படுவதால் அதற்கும் வட்டிவீதத்துக்குமுள்ள சம்பந்தத்தை ஒப்பிட்டுப் பார்க்கமுடியும். மேற்கண்ட உதாரணத்தில் வட்டி 10 சதவீதத்துக்கும் குறைவாக இருந்தால் புதிதாக ஒரு முதலினச் சொத்தை உருவாக்குவது இலாபகரமாக இருக்கும். எனவே, முதலீடு செய்யக்கூடிய பணவசதி படைத்தவர்கள் முதலீட்டுமுயற்சிகளில் முனைவார்கள் என்று எதிர்பார்க்கலாம். கைவசமாகப் பணம் வைத்திருக்காதவர்கள் கூட குறைந்த வட்டியில் கடன் வாங்கக்கூடிய வாய்ப்புகள் இருந்தால் அவற்றைப் பயன்படுத்தி முதலீட்டில் ஈடுபடுத்த முயலுவார்கள். மேற்கண்ட உதாரணத்தில் வட்டி 5 சதவீதம் என்று வைத்துக் கொள்வோம். அந்த வட்டிவீதத்தைக் கொண்டு கழித்தால் முதலாண்டில் எதிர்பார்க்கப்படும் விளைவான 1100 ரூபாயின் மதிப்பும், இரண்டாவது ஆண்டில் எதிர்பார்க்கப்படும் விளைவான 2420 ரூபாயின்மதிப்பும் சேர்ந்து 3000 ரூபாய்க்கு அதிகமாக இருக்கும். அதாவது எதிர்பார்க்கப்படும் விளைவை 5 சதவீதத்தைக் கொண்டு கழித்தால் $\frac{1100}{1.\ 5} + \frac{2420}{(1.05)^2} = 1047.62 + 2195.01 = 3242.63$ ஆகும். இத் தொகை 3000 ரூபாய்க்கும் அதிகமாக இருப்பது கண்கூடு. இத் தொகையைத்தான் முதலினச் சொத்துகுரிய தேவைவிலை (Demand price) என்று அழைப்பர். மேற்கண்ட விளக்கத்தில் முதலினச் சொத்தின் அளிப்புவிலைக்கும் தேவைவிலைக்குமுள்ள வேறுபாட்டைத் தெளிவுறத் தெரிந்து கொள்வது அவசியம். எதிர்பார்க்கப்படும் விளைவுகளை

வட்டிவீதத்தைக் கொண்டு கழிப்பதால் கிடைக்கும் தொகையே முதலினச் சொத்தின் தேவை விலையாகும். மாறாக, எதிர்பார்க்கப்படும் விளைவுகளை முதலீட்டின் இறுதிநிலைத்திறனைக் கொண்டு கழித்தால் அதை முதலினச் சொத்தின் அளிப்புவிலை என்பர். வட்டிவீதமும், முதலீட்டு இறுதிநிலைத் திறனும் வேறுபட்டிருந்தால் அளிப்பு விலையும் தேவைவிலையும் மாறுபடுவது இயல்பு.

வட்டி வீதம் முதலீட்டு இறுதிநிலைத் திறனைக் காட்டிலும் குறைவாக இருக்கும் வரை முதலினச் சொத்துகளுக்குள்ள தேவை விலை, அளிப்பின் விலையைக் காட்டிலும் அதிகமாக இருக்கும். அதன் பயனாக முதலீடு தூண்டப்பட்டுப் புத்தம்புது வாய்ப்புகளை நாடிச் செல்லும்.

முதலீட்டின்மூலம் வருவாயை நாடுபவர்கள் ஏற்கனவே இலாப கரமாக இயங்கிவரும் முதலினச் சொத்துகளை வாங்கலாம். அல்லது புத்தம்புது முதலினச் சொத்துகளை ஆக்கிப் படைக்கலாம். இவ்விரண்டு செயல்களில் எது இலாபகரமானதோ அதையே மேற்கொள்ள விழைவர். இலாப வேட்கையை அடிப்படையாகக் கொண்ட முதலாளித்துவ அமைப்பில் இலாபத்தை உச்சப்படுத்தும் நோக்கத்துடனேயே முதலீட்டுக்கான முடிவுகளை எடுக்கத் தொழில் முனைவர்கள் முன்வருவார்கள் என்பது கண்கூடு.

முதலீட்டு இறுதிநிலைத் திறனுக்கும் வட்டிவீதத்துக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பது உண்மை. கீன்ஸீயக் கோட்பாட்டின்படி முதலீட்டினளவு முதலீட்டு இறுதிநிலைத் திறனையும் வட்டி வீதத்தையும் சார்ந்தது. ஆனால் அதிலிருந்து வட்டி வீதத்தின் துணைகொண்டு முதலீட்டு இறுதிநிலைத் திறனையோ முதலீட்டு இறுதிநிலைத் திறனிலிருந்து வட்டிவீதத்தையோ நிருணயிக்க இயலாது. ஏற்கனவே கண்டபடி முதலீட்டு இறுதிநிலைத் திறனுக்கும் முதலினச் சொத்தின் அளிப்பு விலைக்கும் அதன்மூலம் எதிர்பார்க்கப்படும் விளைவுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. அதைப் போலவே ரொக்க விருப்ப அட்டவணை, பணத்தினளவு ஆகியவற்றைக் கொண்டு வட்டிவீதத்தை நிருணயிக்கலாம். முதலீட்டு இறுதிநிலைத் திறனும் வட்டிவீதமும் சமமாகும்வரையில் முதலீடு தூண்டப்படும் என்றாலும் அவையிரண்டும் ஒன்றையொன்று தழுவியது என்றோ இரண்டும் மற்றொரு பொதுவானதோர் காரணியைச் சார்ந்தவை என்றோ கொள்ளலாகாது. இரண்டும் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமல் தாமாக மாறக் கூடியவை. ஆயினும் இரண்டும் சேர்ந்து முதலீட்டினளவை நிருணயிக்க உதவும். முதலீட்டினளவால் வேலையினளவும் நிருணயிக்கப்படும். ஆனால், முதலினச் சொத்துகளின் அளவு அதிகரிக்கஅதிகரிக்க முதலீட்டின்

இறுதிநிலைத் திறன் குறைந்து வருமாதலால், அதன் வீதம் கொஞ்சங் கொஞ்சமாக வட்டிவீதத்தை நெருங்கி வந்து சமம் என்ற நிலையை எய்தலாம். அத்தகைய சமநிலையை அடையும்வரை முதலீடு பெருகிய வண்ணமாக இருக்கும் என்பது எளிதில் புலனாகும்.

எல்லாவிதமான முதலினச் சொத்துகளின் இறுதிநிலைத் திறன் களையும் ஒரு பட்டியலாகத் தயாரித்தால் அதை முதலீட்டு இறுதி நிலைத் திறனின் பட்டியல் (Schedule of marginal efficiency of capital) அல்லது முதலீட்டுக்கான தேவையைக் காட்டும் பட்டியல் (Investment demand schedules) என்று அழைக்கலாம். இத்தகையதோர் பட்டியலை ஒரு வளைகோடாகக் காட்டினால் இடமிருந்து வலமாகக் கீழ்நோக்கிச் செல்லும். ஒரு குறிப்பிட்ட கால அளவில் முதலீட்டின் அளவு அதிகரித்தால் அதன் இறுதிநிலைத்திறன் குறைத்து வரும் என்பதை அவ் வளைகோட்டின் போக்கிலிருந்து அறிந்து கொள்ளலாம்.




(a) கூடியமட்டும் நெகிழ்ச்சியுள்ள முதலீட்டு இறுதிநிலைத்திறனைக் குறிக்கும் பட்டியல்




(b) கூடிய மட்டும் நெகிழ்ச்சி இல்லாத முதலீட்டு இறுதிநிலைத் திறனைக் குறிக்கும் பட்டியல்

படம் 11: முதலீட்டு இறுதி நிலைத்திறன்

மேற்கண்ட வளைகோட்டின் நிலையையும் அமைப்பையும் துணையாகக் கொண்டு வட்டிவீதம் குறைந்தால், முதலீட்டில் எத்துணைத் துடிப்பைக் காணலாம் என்று கண்டு கொள்ளலாம். வளைகோடு நெகிழ்ச்சியுள்ளதாக இருந்தால் வட்டிவீதம் ஒரு குறிப்பிட்ட அளவில் குறைந்தாலும் முதலீடு கணிசமான அளவில் அதிகரிக்கும். படம் 11 (A)-ல் வட்டிவீதம் 6 சதவீதத்திலிருந்து 5 சதவீதமாகக் குறையும்போது முதலீட்டினளவு கணிசமாக அதிகரிப்பதைக் காணலாம். மாறாக, படம் (B)-ல் வளைகோட்டில் நெகிழ்ச்சி இல்லாத

காரணத்தால் வட்டிவீதத்தில் ஏற்படும் வீழ்ச்சிக்கேற்ப முதலீடு அதிகரிக்கவில்லை என்பது தெரியவரும்.

நடைமுறையில் வளைகோட்டின் நிலையும் அமைப்பும் எவ்விதமாக இருக்கும் என்று அறுதியிட்டுக் கூற முடியாது. தொழில் முனைவர்கள் ஒவ்வொருவரின் கண்ணோட்டமும் வித்தியாசமாக இருக்குமாதலால் எதிர்கால விளைவுகளைப் பற்றிய அவர்களது எதிர்பார்ப்புகளுக்குச் சராசரி கண்டுபிடித்து, அஃதோர் குறிப்பிட்ட தொழிலின் அல்லது பொருளாதார முழுவதையும் பற்றிய முதலீட்டு இறுதி நிலைத்திறனைக் பிரதிபலிப்பதாகக் கொள்ள இயலாது. மேலும், அனுபவ வாயிலாகப் பார்க்கும்போது முதலீட்டு இறுதிநிலைத் திறனின் பட்டியலில் அவ்வளவு நெகிழ்ச்சி காணப்படுவதாகச் சொல்ல வழியில்லை. உண்மையில் மக்கள்பெருக்கம், தொழில் நுணுக்க அறிவில் புரட்சி கரமான முன்னேற்றம், புத்தம்புதிய கண்டுபிடிப்புகள் போன்ற அசாதாரணமான காரணங்களாலன்றி, முதலீட்டுஇறுதிநிலைத் திறனின் பட்டியலைக் காட்டும் வளைகோட்டில் நெகிழ்ச்சியைக் காண்பதரிது.

### நீண்டகால எதிர்பார்ப்புகளின் முக்கியத்துவம்

முதலீட்டைத் தூண்டுவதற்கு வட்டிவீதமும் முதலீட்டு இறுதி நிலைத் திறனும் துணை செய்யும் என்று கண்டோம். இவற்றில் வட்டி வீதம் எளிதில் வளைந்து கொடுப்பதில்லை. எனவே, முதலீட்டு இறுதி நிலைத் திறனைப் பொறுத்தே முதலீடு தூண்டப்படும் என்பது புலனாகும். ஆயின், முதலீட்டு இறுதிநிலைத்திறன் அதன் அளிப்பு விதியையும் அதன் பயனாக எதிர்பார்க்கப்படும் விளைவுகளையும் பொறுத்து மாறுபடும் என்றும் குறிப்பிட்டோம். முக்கியமாக, எதிர் பார்க்கப்படும் விளைவுகளைச் சார்ந்திருப்பதால் முதலீட்டு இறுதி நிலைத் திறன் நிலையற்ற விதமாக அலசடிப்படும் என்பது அதன் சிறப்பான அம்சங்களுள் ஒன்றாகும். பொதுவாகக் கூறுமிடத்து, முதலீட்டின்மூலமாக எதிர்பார்க்கப்படும் விளைவுகளின் நிலையற்ற தன்மையே முதலாளித்துவத்தை அவ்வப்போது உலுக்கி வைக்கும் வாணிகச் சுழல்களின் மூலகாரணமாகும் என்றால் அது மிகையாகாது. ஆதலின், எதிர்பார்க்கப்படும் விளைவுகளைப் பாதிக்கக்கூடிய சக்தி களின் தன்மை என்ன என்று ஆராயவேண்டியது அவசியம்.

முதலீடு செய்யப்படும் தருவாயில் அதன் விளைவுகள் எப்படி இருக்கும் என்பது பற்றிய எதிர்பார்ப்புகள் மட்டுமே உண்டு. எதிர்பார்க்கப்படும் விளைவுகள் பல பலிக்காமல் போகலாம். எதிர்பாராத ஏமாற்றங்களும் திருப்பங்களும் காத்திருக்கின்றன என்பது அவர்களுக்குத் தெரியும். எனவே, விளைவுகளைப் பற்றிய

எதிர்பார்ப்புகளை நம்பியே முதலீடு செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. என்ன விளைவு ஏற்படும் என்ற தெளிவோ நிச்சயமோ முதலீடு செய்பவர்களுக்கு இருப்பதில்லை. முதலீடு செய்து முதலினச் சொத்துகளைப் படைத்து, அவற்றைக் கொண்டு பொருளுற்பத்தி செய்து, வரவு செலவுகளைப் பற்றிய விவரங்களைப் பற்றித் தெரிந்த பின்னர்தான் அம் முதலீட்டின் விளைவுகளைப் பற்றித் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடியும். இக் கண்ணோட்டத்தில் பார்த்தால்தான் எப்படி முதலீட்டின்மூலமாக நிகழ்காலத்தையும் வருங்காலத்தையும் இணைக்க முடிகிறது என்பதும் புலனாகும்.

எதிர்பார்க்கப்படும் விளைவுகள் இருவகைப்பட்டவை. சில குறுகிய காலத்தில் எதிர்பார்க்கப்படுபவை. வேறுசில நீண்ட காலத்தில் எதிர்பார்க்கப்படுபவை. குறுகிய காலத்தில் புத்தம்புது ஆலைகளை அமைத்து அவற்றில் புதிய பல முதற்கருவிப் பொருள்களையும் இயந்திரங்களையும் நிறுவ இயலாது. எனவே, ஏற்கனவே நிறுவப்பட்ட ஆக்கவல்லமையைப் (productive capacity) பயன்படுத்துவதால் செலவு என்னவாகும், ஆக்கிய பண்டங்களை விற்பதால் கிடைக்கும் விற்றுமுதல் எவ்வளவு இருக்கும், செலவுகளை ஈடுசெய்தபின் நிகரவிளைவு எந்த வீதத்திலிருக்கும் என்பன போன்ற எதிர்பார்ப்புகளையே குறுகிய கால எதிர்பார்ப்புகள் என்பர். இத்தகைய எதிர்பார்ப்புகள் கூடியமட்டும் நிலையாக இருக்கும் என்று எண்ண இடமுண்டு. காலத்தின் அளவு குறுகியதால் கடந்த ஆண்டின் விளைவுகளின் அடிப்படையில் அடுத்த ஆண்டின் விளைவுகள் இப்படித்தானிருக்கும் என்று ஓரளவு நிச்சயமாக எதிர்பார்க்கலாம்.

மாறாக, நீண்ட காலத்தில் ஏற்கனவே நிறுவப்பட்ட ஆக்க வல்லமையின் அளவை விரிக்கலாம். புத்தம்புது ஆலைகளை நிறுவுவதன் மூலமாக ஆக்கவல்லமையைப் பெருக்கலாம். அவ்வாறு புதிதாக உருவாக்கப்பட்ட ஆக்கவல்லமையைப் பயன்படுத்திப் பொருள்களை ஆக்கிப் படைத்து விற்றுமுதலாக்கினால் செலவுபோக என்ன இலாபகரமான விளைவு கைகூடும் என்று எதிர்பார்ப்பது மிகவும் கடினமானது; நிச்சயமற்றது; சிக்கல் நிறைந்தது. காலத்தினளவு நீண்டிருப்பதால் கடந்த ஆண்டின் விளைவுகள் பெரும்பாலும் வருங்காலத்திலும் கைகூடும் என்று எதிர்பார்க்க இயலாது. அத்துடன், நிறுவப்பட்டுள்ள ஆலைகளின் விளைவுகளைக் கொண்டு புதிதாக நிறுவப்படவிருக்கும் விளைவுகளை எதிர்பார்ப்பது எவ்வளவு பொருத்தமற்றது என்பதை எடுத்து விளக்க அவசியமில்லை. எனவே புதிதாக மேற்கொள்ளப் போகும் முதலீட்டின் நீண்டகால

விளைவுகளின் நிச்சயமற்ற தன்மையே மொத்த முதலீட்டின் நிலையற்ற தன்மையை ஏற்றவகையில் விளக்கவல்லது என்பது தெளிவு.

பொதுவாக, முதலாளித்துவப் பொருளாதாரங்களில் பொருளாதாரம் முழுவதையும் ஒருங்கே இணைத்து அவற்றின் எதிர்காலப் போக்கை நிருணயிக்கக்கூடிய திட்டங்கள் கிடையா. திட்டங்களுக்குட்பட்டு தெளிவான குறிக்கோள்களை முன்வைத்து இயங்காமல் சந்தையின் சலசலப்புக்கேற்ப தனிப்பட்டவர்கள் மேற்கொள்ளும் முடிவுகளின் அடியாகவே முதலீடு நடைபெறும். ஆனால், ஒருவர் செய்யும் முடிவு மற்றவருக்குத் தெரிவதற்கில்லை. எல்லாருமே ஒரே விதமான முடிவை எடுப்பார்கள் என்றும் எண்ண இயலாது. ஒருவருக்கொருவர் சம்பந்தமில்லாத வகையில் முரண்பட்ட முடிவுகளைக்கூட எடுக்கலாம். நீரோட்டத்தால் நிலை பெயரும் ஆற்றுமணலைப்போல மாறுந்தன்மையது தனிப்பட்டோரின் மனோபாவம். வருங்காலத்தில் உற்பத்திச் செலவுகள் எவ்வாறிருக்கும்? முதலினச் சொத்துகளைச் சரியாகப் பேணிப் பாதுகாப்பதற்கு எவ்வளவு செலவாகும்? முதலினங்களின் ஆயுள் எவ்வளவு காலம் நீடிக்கும்? எவ்வளவு விரைவில் அவை வழக்கிறந்து (obsolete) போகும்? எக் கோணத்திலிருந்து புதிய போட்டிகள் முளைக்கும்? விலைவாசிகளின் போக்கு எவ்வாறிருக்கும்? அயல்நாட்டு உறவுகளில் எத்தகைய மாற்றங்கள் ஏற்படும்? உழைப்பு அங்காடியில் தொழிற் சங்கங்களின் கை எவ்வளவு தூரம் ஓங்கி நிற்கும்? அரசியல் வானில் எத்தகைய மாற்றங்கள் காணப்படும்? என்பன போன்ற கேள்விகளுக்கு விடைகாணப்புகும் ஒவ்வொருவரும் அவரவரின் மனோபாவத்துக்கேற்ப வெவ்வேறு விடைகளைக் கண்டார்களென்றால் அதில் வியப்பொன்றுமில்லை. காலத்தினளவு நீளநீள மனோபாவத்தினால் விளையும் வேறுபாடுகள் மலைக்கும் மடுவுக்கும் உள்ளதுபோல் மாறுபடலாம். சிலவேளைகளில் தனிப்பட்டவர்களின் எதிர்பார்ப்புகள் மிகவும் முரண்பட்டிருக்கும். வேறு சில சமயங்களில் பெரும்பாலோர் எதிர்காலம் நமக்குச் சாதகமாக இருக்கும் என்ற நம்பிக்கையால் உந்தப்பட்டு முதலீட்டில் முனைவார்கள். பெரும்பாலும் தெளிவற்ற எதிர்காலத்தினால் தனிப்பட்டவர்களின் மனத்தில் அவநம்பிக்கைதான் குடிகொள்ளும். இவ்வாறு நம்பிக்கையும் அவநம்பிக்கையும் மாறி மாறிப் பீடிப்பதால் முதலாளித்துவப் பொருளாதாரங்கள் சுமுகமாக இயங்க இயலாமல் மாறிவரும் மனோபாவம் என்ற அலைவாய்ப்பட்டு அல்லற்படுவது கண்கூடு. பொதுவாக, முதலினச் சொத்துகளின் அளவு அதிகரிக்க, அதிகரிக்க மேன்மேலும் முதலீடு செய்வதால் ஏற்படும் விளைவுகள் கவர்ச்சிகரமாக இருக்குமா என்ற சந்தேகம் வலுப்பது இயல்பு. அதன் காரணமாக, முதலீட்டுஇறுதிநிலைத் திறன் விளக்கமுறாமல் குறைந்துபடும் என்று எதிர்பார்க்கலாம்.

இலாபகரமான வாய்ப்புகள் காணப்படும்போதும் எத் துறையில் முதலீட்டைச் செலுத்துவது என்ற தயக்கமும் முதலீட்டின் இறுதி நிலைத் திறனையும் முதலீட்டின் அளவையும் பாதிக்கலாம்.

முதிர்ச்சியுற்ற முதலாளித்துவப் பொருளாதாரங்களில் முதலீட்டின் நீண்டகால விளைவுகளைப்பற்றி நிகழ்காலத்தில் நிலவி வரும் கருத்துகளைப் பங்குச்சந்தை (Stock Market) பிரதிபலிக்கும் விளைவுகள் சாதகமாக இருக்கும் என்று எதிர்பார்த்தால் பங்குகளின் விலை ஏறும். மாறாக, பாதகமான விளைவுகள் எதிர்பார்க்கப்படுமானால் பங்குகளின் விலை படுக்கும். பங்குப்பத்திரங்களை வாங்குவதால் மெய்யாகவே முதலீடு செய்யப்படுகிறது என்று சொல்ல இயலாது. பத்திரங்களை வாங்குவது வெறும் நிதிநடவடிக்கை (Financial Transaction) ஆகும். பங்குப்பத்திரங்கள் ஏற்கனவே உருவாக்கப் பட்டுள்ள முதலினச் சொத்துகளின் பிரதிபிம்பங்களாகும். அவை கைமாறுவதால் புதிதாக முதலினச்சொத்துகள் எதுவும் படைக்கப் படுவதுமில்லை; மொத்தத்தில் ஆக்கவல்லமை அதிகரிக்கப் போவது மில்லை. வேலைக்கான வாய்ப்புகளைப் பெருக்க வேண்டுமானால் பங்குப்பத்திரங்கள் கைமாறினால் போதா. புத்தம்புது ஆலைகளையும் ஏனைய முதலினச்சொத்துகளையும் நிருமாணித்து, அவற்றை நிலையுறுத்துவதற்கான சாதனங்களைத் திரட்டிப் பயன்படுத்திக் கட்டி உருவாக்கி இயக்குவதன்மூலமாகத்தான் புதிதாகப் பலருக்கு வேலை வழங்க முடியும். அப்படிக் கட்டி எழுப்பப்பட்ட முதலினச் சொத்துகளைப் பிரதிபலிக்கும் பங்குப்பத்திரங்களைப் பின்னால் பங்குச் சந்தையில் விற்கவோ வாங்கவோ செய்யலாம்.

எனினும் பழைய பங்குகளின் விலைவாசிகள் முதலீட்டுச் சந்தையில் புதிதாகப் புகுந்துள்ள பங்குகளின் விலையைப் பாதிக்கும். பங்குப்பத்திரங்களின் விலை உயரும்போது முதலீட்டு இறுதிநிலைத் திறன் வட்டிவீதத்தைக் காட்டிலும் மேலோங்கி நிற்குமாதலால் முதலீடு தூண்டப்படும். முதலீட்டில் நாட்டங்கொண்டவர்களிடையே ஏற்கனவே நிறுவப்பட்ட முதலினச் சொத்துகளின் உரிமைப் பத்திரங்களை பங்குச்சந்தையில் வாங்குவதைவிட புதிய பல முதலினச் சொத்துகளைப் படைப்பதே இலாபகரமானது என்ற மனோபாவம் தொனிப்பாக இருக்கும். மாறாக, பங்குப்பத்திரங்கள் மலிந்தால் புதிதாக ஆக்கிப்படைக்கவிருக்கும் முதலினச் சொத்தின் அளிப்புவிலை (கட்டுமானச் செலவுகள்) தேவை விலையைக் (ஏற்கனவே நிறுவப்பட்டதோர் சொத்தை, வட்டிவீதத்தைக் கொண்டு கழிப்பதால் கிடைக்கும் நிகழ்கால மதிப்பைக்) காட்டிலும் அதிகமாக இருக்கும். சுருங்கக்கூறின், முதலீட்டின் இறுதிநிலைத்திறன் வட்டி வீதத்தைக் காட்டிலும் குறைவாக இருக்கும். அதன்காரணமாக

முதலீடு தூண்டப்படாது. எனவே, புதிய பல முதலீடுகளைப் பிரதி பலிக்கும் பங்குப்பத்திரங்களின் விலையேற்றத்தால் மேலும் பல முதலினச் சொத்துகளை உருவாக்கும் வகையில் முதலீடு தூண்டுப் படும் என்றால் மிகையாகாது.

நன்றாக அமைக்கப்பட்டதோர் பங்குச்சந்தையில் அன்றாடம், ஏன், மணிக்குமணி ஏற்கனவே நிறுவப்பட்ட முதலினச் சொத்து களின் தற்போதைய மதிப்பு வெளிப்படும். முதலீட்டின் எதிர்கால விளைவுகள் எந்தெந்தச்சக்திகளால் எவ்வெவ்வகைகளில் பாதிக்கப்படும் என்பது பற்றிய தற்கால எதிர்பார்ப்புகளில் ஏற்படும் மாற்றங்களே பங்குப்பத்திரங்களின் மதிப்புகளில் காணப்படும் ஏற்ற இறக்கங் களுக்கும் காரணமாகும். இதனால் பங்குச்சந்தை நிகழ்காலத்துக்கும் வருங்காலத்துக்குமிடையே ஒரு பாலம்போல் அமைந்துள்ளது எனலாம். எதிர்கால விளைவுகளைப்பற்றிய எதிர்பார்ப்புகள் தற்காலத்தில் பங்குச்சந்தையில் பிரதிபலிக்கப்படுகின்றன. தற்காலத்தில் நடக்கும் பங்குமாற்று நிகழ்ச்சிகள் எதிர்காலத்தைப் பற்றிய எதிர்பார்ப்புகளைப் பாதிக்கும். எனவே, பங்குச்சந்தையை இன்றையும் நாளையும் இணைக்கும் பாலம் என்கிறோம்.

பங்குமாற்றுச்சந்தையில் நடைபெறும் ஊகவாணிகம் முதலீட்டு இறுதிநிலைத்திறனை நிலைக்கெடச் செய்கிறது. ஊகவாணிகத் துக்கும் தொழிற்றுணிவுக்கும் மிகுந்தவேறுபாடு உண்டு. அங்காடியில் (சந்தையில்) எதிர்காலத்தில் எத்தகைய மனோபாவம் நிலவும் என்று முன்னறிந்து செயல்படுவதே ஊகவணிகரின் தொழில். மாறாக, முதலீட்டின் பயனாக அதன் ஆயுள்காலம் முழுவதும் கிடைக்கக்கூடிய விளைவுகள் என்ன என்று முன்னறிந்து செயல்படுவதேதொழில் முனை வர்களின் சிறப்பு இயல்பாகும். இத்தகைய வேறுபாட்டினடியாகப் பங்குச்சந்தையில் காணப்படும் நீண்டகால எதிர்பார்ப்புகளை அலசி ஆராய்ந்தால், பங்குமாற்று மதிப்புகளை நிருணயம் செய்வதில் ஊகவாணிகமே தொழிற்றுணிவைக் காட்டிலும் தொனிப்பாக நிற்பது புலனாகும் என்பது கீன்ஸின் துணிபு. எதிர்காலத்தைப்பற்றிய அறிவு குறுகியிருப்பதால் முதலீட்டில் ஈடுபடக்கூடியவர்களின் மனோபாவமும் அவர்களுக்குத் துணைசெய்யக்கூடிய நிறுவனங்களும் ஊகவாணிகத்துக்கே தூபம்போடுவதாக அமைகின்றன. எதிர்காலம் மங்கித் தெரிவதால் தங்களைக் காட்டிலும் தெளிவான நோக்குடைய வர்களின் உதவியை நாடுவது தனிப்பட்ட முதலாளிகளின் இயல்பு. அத்தகைய கூரிய நோக்குடையவர்களின் எதிர்காலத்தைப்பற்றிக் கணிக்கும் தோராய மதிப்புகள் மிகவும் நம்பத்தகுந்தவை என்பது பங்குமாற்றுச் சந்தையில் நிலவிவரும் மரபுகளுள் ஒன்றாகும். அதன்

பயனுகத்தான் பங்குச் சந்தையில் ஒருவாறு அமைதியை எதிர் பார்க்க முடிகிறது.

ஊகவாணிகத்தில் கைதேர்ந்த ஒரு சிலரின் நிதானிப்பில் நம்பிக்கை கொண்டே பங்குச்சந்தை இயங்கிவருகிறது என்பது குறிப்பிடத்தக்கது. முதலாளித்துவத்தின் குழந்தைப்பருவத்தில் பெரும்பாலும் முதலீடு செய்பவர்களே தத்தம் முதலினச் சொத்துகளை மேலாண்மை (Manage) செய்துவந்தார்கள். ஆனுல் நாளடைவில் பங்கு முதலீட்டுக் கம்பெனிகளும் (Joint - Stock Company), கூட்டு நிறுவனங்களும் (Corporation) தோன்றி வளர்ந்த காரணத்தால், முதலினச் சொத்துக்களுக்கு உரியவர்கள் ஒரு சாராராகவும் அவற்றின்மீது மேலாண்மை செலுத்துபவர்கள் மற்ருெரு சாராராகவும் ஆனுர்கள். அதனுல் முதலீடு செய்ய விரும்புபவர்கள் பங்குச்சந்தையின் சலசலப்புகளை நன்கு அறிந்த கைதேர்ந்த ஊகவாணிகரின் நிதானிப்புகளைச் சார்ந்து செயல்பட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. பங்குச்சந்தையில் பங்கு கொள்பவர்களுள் பெரும்பாலோர் கொண்டுள்ள கருத்துகளை ஒட்டியே பங்குகளின் விலைவாசிகள் நிருணயம் செய்யப்படும் என்பது தெளிவு. எனவே, வருங்காலத்தில் (இரண்டு அல்லது மூன்று மாதங் களுக்குப்பின்) பெரும்பாலோரது கருத்து எப்படி இருக்கும் என்பதை ஊகிக்கத் தெரிந்தவர்களே பங்குச்சந்தையில் வெற்றிபெற முடியும். ஆக, முதலீடு, பங்குச்சந்தையில் கலந்து கொள்பவர்களின் மனுேபாவம் எப்படி இருக்கும் என்பது பற்றிய ஊகத்தையே மிகவும் சார்ந்திருக்கிறது என்பது தெளிவு.

ஊகத்தினடிப்படையிலல்லாமல் அறிவியல் அடிப்படையில் எதிர் காலத்தைப் பற்றித் தோராயமாக மதிப்பீடு செய்வதில் பல முட்டுக் கட்டைகள் உண்டு. முதலாவதாக, எதிர்காலத்தில் புதைந்துள்ள இரகசியங்களை அறிவது என்பது எளிதான காரியமன்று. காலத் தினளவு நீளநீள அத்தகைய நுட்பங்கள் பரமரகசியங்களாக மாறுவது இயல்பு. உதாரணமாக, கி. பி. 2000-ல் எத்தகைய போக்குவரத்து வசதிகள் பயன்படுத்தப்படும் என்று எதிர்பார்ப்பதில் பல சிக்கல்க ளுண்டு. கடல் போக்குவரத்துப் பெரும்பாலும் கைவிடப்படலாம். விமான, தரைப் போக்குவரத்துகளில் புரட்சிகரமான மாறுதல்கள் ஏற்படலாம். அம் மாறுதல்கள் எப்படி இருக்கும் என்று மதிப்பிடுவது பெரும்பாலும் குருடன் விலாங்குமீனைப் பிடிப்பது போன்ற முயற்சியாகத்தான் இருக்கும். இரண்டாவதாக, குறுகிய காலத்தில் பங்குப்பத்திரங்களின் மதிப்பு என்னவாக இருக்கும் என்பதிலேயே கவனம் செலுத்தும் பங்குச்சந்தை, நீண்டகால விளைவு களில் அதிகமான அக்கறை காட்டுவதில்லை. உதாரணமாக, தற்போது

100 ரூபாயாக விற்கும் பத்திரத்தின் மதிப்புப் பத்தாண்டுகள் கழித்து 50 ரூபாயாகக் குறையுமென்று எதிர்பார்க்கலாம். ஆனால், அடுத்த மாதத்தில் அதன்விலை 120 ஆக உயரும் என்றிருந்தால் நீண்ட விளைவுகளைப் புறக்கணித்து உடனடியாக எதிர்பார்க்கப்படும் விளைவுகளின்டியாகவே செயல்படுவர். மேலும், முதலீடு செய்பவர் களின் மனோபாவத்தைப்பற்றிய ஊகமே ஒரு மனோபாவமாகும்! மனோபாவம் வழுவழுப்பானது; அறிவின் அடிப்படையாக மட்டும் அமைவதன்று. மனோநிலை, அறியாமை, விருப்புவெறுப்புகள், குருட்டு நம்பிக்கைகள், கண்மூடித்தனங்கள் இன்னபல உணர்ச்சியின்பால் அமைந்த முரண்பட்ட கருத்துகளைத்துருவி ஆய்ந்து நிதானமானதோர் மனோபாவத்தை நிலைநாட்டுவதே கைதேர்ந்த ஊகவணிகரின் பணியாகும். எனினும், முதலீடு தொழிற்றுணிவின் காரணமாக இல்லாமல், பங்குச்சந்தையில் திளைத்துவரும் ஊகத்தினடியாக நடைபெறுவது குறிப்பிடத்தக்கது.

இத்தகைய ஊகம் எவ்வளவு நிலையற்றது என்பது சொல்லாமலே விளங்கும். பங்குச்சந்தையின் நடைமுறைகளை நன்குணர்ந்த ஒருசில ஊகவணிகரின் நிதானிப்புகளிலே நம்பிக்கைகொண்டு முதலீட்டில் ஈடு படுபவர்கள் செயல்படுவார்களேயானால், பங்குச்சந்தையின் நடவடிக் கைகளில் அதிகக் குழப்பமிருக்காது. அவ்வாறின்றி, ஊகவணிகரின் நிதானிப்புகளின்மீது அவநம்பிக்கை என்ற அலை மோதுமானல், பங்குச்சந்தையின் நடவடிக்கைகள் தலைகால் தெரியாமல் குழப்ப முற்று நங்கூரமில்லாத மரக்கலம்போல அல்லோலகல்லோலப்படும் என்று எதிர்பார்க்கலாம். தொழில் துணிவினடியாக நடைபெறும் முதலீட்டை ஒரு நீரோட்டத்துக்கு ஒப்பிட்டால், பங்குச்சந்தையில் காணப்படும் ஊகவாணிகத்தை நீர்க்குமிழிகளுக்கு ஒப்பிடலாம். அவ்வாறின்றி ஊகவாணிகம் பயங்கரமான நீர்ச்சுழியாகச் சுழன்று பொங்கி வரும்போது தொழிற்றுணிவு அச் சுழலின்மீது தோன்றும் நீர்க்குமிழிகளை ஒத்திருந்தால் முதலீடு பாழாகும் என்பது உணரற் பாலது.

பங்குச்சந்தையால் சில பயன்களும் உண்டு; பலகேடுகளுமுண்டு. பங்குச்சந்தைகள் தோன்றுவதற்கு முன்னால் முதலீட்டில் பணத்தை முடக்கியவர்கள் அதிலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ளுவ தென்பது எளிதான காரியம் அன்று. அத்தகைய முதலினச் சொத்துகளை விரும்பி வாங்கக்கூடிய வேறுமுதலாளிகளிருந்தாலன்றி அவற்றைக் கைமாற்றுவது இயலாது. அவ்வாறின்றி முதலினச் சொத்துகளைப் பிரதிபலிக்கும் பங்குப்பத்திரங்களைப் பங்குச் சந்தையில் பதிவு செய்வதால், ஒரு துறையிலிருந்து விடுபட விரும்பும் முதலாளிகள் நினைத்த மாத்திரத்தில் தங்கள் பங்கை விற்பனை

செய்து பணமாக்கி ரொக்கமாக வைத்திருக்கவோ வேறு துறைகளில் முதலீடு செய்யவோ முடியும். இத்தகைய நடவடிக்கைகளால் நிலையுறு முதலை நினைத்த மாத்திரத்தில் ரொக்கப்பணமாக மாற்ற முடிவது பங்குச்சந்தையால் கிடைக்கும் நற்பயன்களுள் ஒன்றாகும். பழைய முதலீடுகளில் ஏற்கெனவே ஈடுபடுத்தப்பட்டுள்ள பணத்தை ரொக்கமாகத் திரட்டிப் புத்தம்புது முதலீடுகளில் புகுத்தமுடிகிறது. இதுவும் பொருளாதார வளர்ச்சிக்கு மிகவும் துணைபுரியும் என்பது தெளிவு.

அதேசமயத்தில், எதிர்கால விளைவுகளைப்பற்றிய ஊகங்கள் மிகவும் நிலையற்றிருப்பதால், பங்குச்சந்தையில் நிலவிவரும் கருத்துகளைப்பற்றிய சந்தேகங்கள் வலுக்குமானால், பொருளாதாரம் கடும்புயலால் தாக்குண்ட மரக்கலம்போல் பெருங்கொந்தளிப்பில் சிக்கிச் சீரழிய நேரிடும். குறிப்பாக, எதிர்காலத்தைப் பற்றிய நன்னம்பிக்கை பழுதுபட்டால் கிலி அடித்தாற்போல் அனைவரும் தங்கள் பங்குப்பத்திரங்களை விற்றுப் பணமாக்க விரைவர். அதனால், வருங்காலம்பற்றிய எதிர்பார்ப்புகள் தவிடுபொடியாகி முதலீட்டுக்கான தூண்டுதலை அடியோடு கருக்கிவிடும். இவ்வாறு பீதி மனப்பான்மைக்கு இலக்காகும் ஊகவாணிகத்தால் முதலீட்டுச் சுரப்பிகள் அடைபட்டுப் போகவே பொருளாதாரம் மந்தப்படுகுழி நோக்கி விரைவதைத் தவிர்க்க முடியாது. ஏனெனில், தனிப்பட்ட ஒருவன் தனது பங்குகளை விற்பதன்மூலம் தனக்கு விருப்பமில்லாத முதலினச்சொத்துகளைக் கைகழுவலாம். இப்படியே முதலீடு செய்த பலர் தங்கள் முதலீட்டிலிருந்து விடுபடலாம். ஆனால் சமுதாயம் முழுவதையும் எடுத்துக் கொண்டால், விரும்பப்படாத சொத்துகளை விற்பனை செய்வதென்பது இயலாத காரியம். பங்குச் சந்தையில் பீதி மனப்பான்மை படர்ந்துவரும் வேளையில் சொந்த நாட்டவரோ அயல்நாட்டவரோ விரும்பப்படாத முதலினச் சொத்துகளை விலைகொடுத்துவாங்க முன்வரமாட்டார்கள். எனவே பங்கு விலைகள் தலைகுப்புறச் சரியும். முதலீட்டு இறுதிநிலைத்திறன் படுக்கும்; முதலீட்டுக்கான தூண்டுதல் பலவீனப்படும்; வேலையில்லாத் திண்டாட்டம் பெருகும். பொதுவாகக் கூறவேண்டுமானால், ஊகவணிகரின் மனோபாவத்தில் உதிக்கும் அவநம்பிக்கை என்ற பேரலைகளால் மோதப்பட்டு அலசடிப்படும் முதலீட்டு இறுதிநிலைத் திறனாலேயே வாணிகச்சுழல் முதலாளித்துவப் பொருளாதாரங்களை ஆட்டிவைக்கிறது என்பது கீன்ஸின் கருத்து. குறிப்பாக, எதிர்காலத்தைப்பற்றிய அவநம்பிக்கை தலைதூக்குமானால், அதன் காரணமாகச் சுழன்று எழும் சூறாவளி பொருளாதாரத்தை நிலைகுலையச் செய்து மந்தப்படுகுழியில் தூக்கி எறியும். அதனால் முதலாளித்துவப் பொருளாதாரத்தின் அடிப்படையே ஆட்டங்கொடுக்கும்

என்பது அனுபவ வாயிலாகப் பல்வேறு நாடுகளும் கண்ட உண்மை யாகும்.

## முதலீட்டு இறுதிநிலைத்திறனின் பன்னெடுங்காலப்போக்கு

முதலீட்டு இறுதிநிலைத்திறனின் சிறப்பான சில அம்சங்களைப் பற்றி ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். முதலீட்டுக்கான முக்கிய மான தூண்டுகோல் முதலீட்டு இறுதிநிலைத்திறனாகும். ஆனால், கணத்துக்குக்கணம் மாறிவரும் ஊகமனப்பான்மையைச் சார்ந்திருப்பதால் அத் தூண்டுதலின் சக்தி ஒரே சீராக இல்லாமல் அலைவாய்ப்பட்ட மரக்கலம்போல அலசடிப்படுவதுண்டு. அத்துடன் பொருளாதாரம் முதிர்ச்சியுறும் பருவத்தில் காலப்போக்கில் முதலீட்டு இறுதிநிலைத்திறன் கொஞ்சங்கொஞ்சமாகக் குறைந்து வரும் என்பது கீன்ஸின் கருத்து. இத்தகைய கணிப்பு முதலாளித்துவத்துக்குப் புதியதன்று. முதலாளித்துவப்பொருளாதார முறையை நன்குணர்ந்த பொருளாதார வல்லுநர்கள் பலர் ஆதியிலிருந்தே இக் கருத்தை வலியுறுத்தி வந்துள்ளனர். நெடுங் காலப்போக்கில் இலாபவீதம் குறைந்துபடும் என்பதே அவர்களது அனுமானம். முதலாளித்துவத்தின் போக்கையும் செயல்முறை களையும் துருவி ஆராய்ந்த ஆதம்ஸ்மித், டேவிட் ரிக்கார்டோ, ஜான் ஸ்டுவர்ட் மில், கார்ல் மார்க்ஸ் ஆகியோர் இலாபதவீதத்தின் நெங்காலப்போக்கைப்பற்றி ஒருமித்த கருத்துக் கொண்டிருந் தனர். ஆனால், அப் போக்கின் அடிப்படைக்காரணம் என்ன என்பது பற்றிப் பலதரப்பட்ட கருத்துகள் நிலவிவந்தன.

உதாரணமாக, முதலினச்சொத்துகளின் அளவு அதிகரிப்ப தால்தான் அதன் இலாபவீதம் குறைந்து வருகிறது என்பது ஆதம்ஸ்மித்தின் துணிபு. நிலமும் அதைச் சார்ந்த ஏனைய இயற்கைப் பொருள்களும் சுரக்கும் வளப்பங்கள் குன்றிவருவ தாலேயே இலாபவீதம் குறைந்துபடுகிறது என்பது ரிக்கார்டோவின் வாதம். முதலினச்சொத்துகளின் தன்மையும் அமைப்புமே இலாபவீதம் குறைவதற்கான மூலகாரணங்களாகும் என்பது கார்ல்மார்கஸ் வலியுறுத்திய கருத்து. கீன்ஸின் கருத்தும் ஆதம்ஸ்மித், கார்ல்மார்க்ஸ் ஆகியோரின் கருத்துகளை ஏறக்குறைய ஒத்துள்ளது.

கீன்ஸ், இலாபவீதம் என்பதற்குப் பதிலாக முதலீட்டு இறுதி நிலைத்திறன் என்ற கருத்தைப் பயன்படுத்தினர். இவ்விரண்டும் ஒன்றையொன்று பெரிதும் ஒத்திருந்த போதிலும், அவற்றிடையே ஒரு சில வேறுபாடுகள் உண்டு என்பதையும் அவ் வேறுபாடுகள் எத்தகையன என்பதையும் ஏற்கனவே எடுத்துக்காட்டியுள்ளோம். எப்படியாயினும், முதலீட்டு இறுதிநிலைத்திறன் காலப்போக்கில்

குறையும் தன்மையது என்பதில் அவருக்குக் கருத்து வேறுபாடு எதுவும் கிடையாது. ஆனல், ஏன் அவ்வாறு குறைந்து வருகிறது என்ற கேள்விக்குக் கீன்ஸ் கண்ட விடை பெரும்பாலும் ஆதம் ஸ்மித்தும் கார்ல்மார்க்ஸும் கூறியவற்றிற்கு ஒத்திருந்தது.

கீன்ஸீயக் கருத்துப்படி முதலீட்டு இறுதிநிலைத்திறன் இரண்டு காரணங்களால் பாதிக்கப்படலாம். முதலாவதாக, புதிதாக உருவாக்கப்படும் முதலினச்சொத்துகளின் அளிப்புவிலை அதிகரிக்குமானல், முதலீட்டு இறுதிநிலைத்திறன் குறைந்துபடலாம். இரண்டாவதாக, முதலீட்டின்மூலம் எதிர்பார்க்கப்படும் விளைவுகள் குறைந்துபட்டால், அதன் பயனுக முதலீட்டின் இறுதிநிலைத்திறன் குன்றலாம். குறுகிய கால அளவில் அளிப்புவிலை அதிகரிப்பு அதிக முக்கியத்துவம் பெறும். காலத்தினளவு நீளநீள அளிப்பு விலையின் முக்கியத்துவம் குன்றும். எதிர்கால விளைவின் முக்கியத்துவம் அதிகரிக்கும். எனவே, எதிர்காலத்தில் எதிர்பார்க்கப்படும் விளைவுகள் குன்றுவதாலேயே, நெடுங்காலப்போக்கில் முதலீட்டு இறுதிநிலைத்திறன் குறைந்துபடும் என்பது தெளிவு.

முதலினச்சொத்துகளின் அளவு அதிகரிப்பதே அவற்றின்மூலம் எதிர்பார்க்கப்படும் விளைவுகள் குன்றுவதற்கான அடிப்படைக் காரணமாகும். முதலினச்சொத்துகள் அரிதாக இருந்தால் அவற்றின் ஆயுள்காலத்தில் செலவுபோகக் கிடைக்கும் விளைவுகள் மிகுதியாக இருக்கும். ஆனல் புதிய பல முதலினச் சொத்துகள் கிடைக்கும்போது, அவற்றின்மூலமாக ஆக்கப்படும் பண்டங்கள் ஏற்கனவே உற்பத்தி செய்யப்படும் பொருள்களுடன் போட்டியிடத் தொடங்கும். உற்பத்தி இவ்வாறு பலுகிப் பெருகுவதால் பொருள்களின் விலை சரியும். எனவே எதிர்பார்க்கப்படும் விளைவுகளும் குறையத் தொடங்குகின்றன. முதலீட்டு இறுதிநிலைத்திறன், வட்டி வீதத்தைக் காட்டிலும் அதிகமாக இருக்கும்வரை முதலினச் சொத்துகளும் அவற்றின்மூலம் ஆக்கப்படும் பண்டங்களும் பலுகிப் பெருகும். ஆனல், குன்றிவரும் முதலீட்டு இறுதிநிலைத்திறன், வட்டி வீதத்தைப் பெருங்கிவந்து அதற்குச் சமம் என்ற நிலை ஏற்பட்டால் மேற்கொண்டு முதலீடு நடைபெறுது என்பது குறிப்பிடத்தக்கது. தங்குதடையின்றி உற்பத்திப் பெருகி வருமானல் ஓரிரண்டு தலைமுறைகளில் முதலினச் சொத்துகள் கணிசமாகப் பெருகிவருமாதலால், அவற்றின் இறுதிநிலைத்திறன் குன்றிவருமென எதிர்பார்க்கலாம் என்பது கீன்ஸின் கருத்து.

எனினும் நெடுங்காலத்தில் முதிர்ச்சியுறும் முதலாளித்துவப் பொருளாதாரங்களின் முதலீட்டு இறுதிநிலைத்திறன் கட்டாயமாகத்

குன்றியே தீரும் என்று கீன்ஸ் வாதாடியதில்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டில் மேற்கத்திய நாடுகள் பலவற்றின் அனுபவத்தில் கண்டதுபோல் தொழிற்புரட்சி, மக்கள்பெருக்கம், அகன்றுவிரியும் நாட்டு எல்லைகள், பிறநாடுகளின்மீது ஆதிக்கம் செலுத்தி அவற்றின் செல்வங்களைச் சுரண்டி கொள்ளை அடிப்பதற்குக் கிடைத்த வாய்ப்புகள், பூமாதேவியின் வயிற்றிலிருந்து சுரந்த கனிச்செல்வங்கள் போன்ற பல ஒப்பற்ற சூழ்நிலைகளால் ஒரு சில தலைமுறைகளாக முதலீட்டு இறுதிநிலைத்திறன் சோர்வுறாமல் பலமுற்று விளங்கியது அவருக்குத் தெரியும். எனினும், அத்தகைய சூழ்நிலை மேன்மேலும் உருவாகும் என்று எதிர்பார்க்க இயலாது என்பதையும் அவர் நன்கு உணர்ந்திருந்தார்.* அதனால்தான் நெடுங்காலப் போக்கில் முதலீட்டு இறுதிநிலைத்திறன் சோர்வுறும் என்று கீன்ஸ் கூறலானார் என்று தெரிகிறது.

வட்டிவீதமென்றாலென்ன?

முதலீட்டினளவை நிருணயம் செய்வதில் வட்டிவீதத்துக்கும் பங்கு உண்டாதலால், அதைப்பற்றி விளக்கமாகத் தெரிந்து கொள்வது அவசியம். பணத்தின் பயனுக்கு ஈடாகக் கொடுக்கப்படும் ஊதியமே வட்டியாகும் என்பது கீன்ஸின் கருத்து. அதனால் தொன்மைப் பொருளாதாரிகள் அதைச் சிக்கனத்தினடியாகப் பிறக்கும் சேமிப்புக்குக்கிடைக்கும் சன்மானம், உடனடியாக உண்டு களிக்க வேண்டுமென்ற ஆசையைக் கட்டுப்படுத்தி வருங்கால நலனை எதிர் பார்த்துக் காத்திருப்பதற்குக் கிடைக்கும் பரிசு......எனப் பலவாறாக வருணித்தனர். கீன்ஸுக்கும் தொன்மைப் பொருளாதாரிகளுக்கு முள்ள இந்தக் கருத்து வேறுபாட்டுக்கு ஒரு முக்கிய காரணம் இருக் கிறது. அதாவது, தொன்மைப் பொருளாதாரிகளைப்போல் கீன்ஸ் நிறைவேலை என்ற அடிப்படையில் தமது கோட்பாட்டை வகுக்க வில்லை. வேலை நாடிவரும் ஒவ்வொருவருக்கும் வேலை வழங்குவதன் மூலம் மேற்கொண்டு புதியதோர் துறையில் முதலீடு செய்ய வேண்டு மானால் உற்பத்திச் சாதனங்களை ஏற்கனவே ஈடுபடுத்தப்பட்டுள்ள துறைகளிலிருந்து விடுவித்துப் புதிய துறைகளில் புகுத்த வேண்டும். இத்தகைய மாற்றத்தை முழுவதுமாகக் கொண்டு செலுத்துவதற்குச் சற்றுக் காலதாமதம் ஆகும். இக் கால அளவில் முதலுக்கு உடைய வர்கள் (சேமிப்பாளர்) உற்பத்திச் சாதனங்களுக்குச் செலுத்த வேண்டிய ஊதியங்களைக் கொடுத்துத் தங்கள் முதலுக்குக் கிடைக்க

*கீன்ஸின் மரபைப் பின்பற்றிய ஏ.எச். ஹான்சன் (A. H. Hansen) என்பார் முதலாளித்துவப் பொருளாதாரம் ஏன் நெடுங்காலத் தேக்கத்திலிருந்து (Secular stagnation) தப்ப இயலாது என்பதைத் தெளிவுற விளக்கியுள்ளார்.

வேண்டியபங்கை (இலாபத்தை) எதிர்பார்த்துக் காத்திருப்பார்கள். இவ்வாறு நுகர்வை ஒறுத்துச் சேமிக்கத் தூண்டும் சாதனமே வட்டி என்பது தொன்மைப் பொருளாதாரிகளின் கருத்து. ஆனால், கீன்ஸீயக் கோட்பாட்டில் நிறைவேலை என்ற முற்கோள் கிடையாது. குறை வேலையே பொதுவான நிலை என்று எண்ணிய அவர் நிறைவேலையைக் குதிரைக்கொம்பெனக் கருதிவந்தார். அவ்வாறு வேலைக்கான வாய்ப்புகளுக்காகக் காத்திருக்கும் உழைப்பாளர்களோ, பயன் படுத்தப்படாமல் சோம்பிக் கிடக்கும் உற்பத்திச் சாதனங்களோ, எச்சவல்லமைகளோ இருக்கும்வரை ஒரு துறையிலிருந்து உற்பத்திச் சாதனங்களை விடுவித்தால்தான் வேறெந்தத் துறைகளிலும் ஈடுபடுத்த இயலும் என்ற நியதி இல்லை. சோம்பிக் கிடக்கும் உற்பத்திச் சாதனங்களைப் பயன்படுத்துவதன்மூலம் காலதாமதம் அதிகமின்றிப் பொருளுற்பத்தியைப் பெருக்க முடியும் என்று கீன்ஸ் நம்பினார். சில வேளைகளில் நுகர்வுப்பொருள்களுள் நாட்டமும் தேவையும் குறையலாம். அதன் காரணமாக முதற்கருவிப் பொருள்களுக்குள்ள தேவையும் குறையலாம். ஆதலின், சேமிப்பு (உற்பத்திச் சாதனங்கள்) பயன்படுத்தப்படாமல் தேக்கமுறலாம். இவ்வாறு தேக்கமுறும் சேமிப்பையும் காத்திருத்தல் என்று கூற இயலாது என்பது கண்கூடு.

ஏற்கனவே குறிப்பிட்டதுபோல் பணத்தின் பயனுக்காகக் கிடைக்கும் ஊதியமே வட்டி என்பது கீன்ஸின் கருத்து. இக் கருத்துப் பொருளாதார அமைப்பில் பணத்துக்கு எவ்வளவு முக்கியத்துவம் உண்டு என்பதை எடுத்துக் காட்டுவதாக அமைகிறது. ஒரு காலத்தில் வாணிகக் கொள்கையைக் (Mercantalist Policy) கடைப் பிடித்தவர்கள் பணமே, செல்வம் என்ற கருத்தை வலியுறுத்தி வந்தனர். ஆதம்ஸ்மித்தின் பரம்பரையில் வந்த தொன்மைப் பொருளாதாரிகள் பணத்துக்கு அவ்வளவு முக்கியத்துவம் கொடுக்க வில்லை. ஆனால் கீன்ஸ் பணக்கோட்பாட்டையும் ஏனைய பொரு ளாதாரக் கோட்பாடுகளையும் ஒருங்கே இணைக்க வேண்டியதன் அவசியத்தை நன்குணர்ந்தார். அதைப்போலவே பணக்கொள்கைக் கும், பொருளாதாரக் கொள்கைக்குமுள்ள தொடர்பை அவர் வலியுறுத்தலானார். குறிப்பாக முதலீட்டுக் கோட்பாட்டில் வட்டி வீதத்துக்குள்ள முக்கியத்துவத்தை அவர் வலியுறுத்தி விளக்க முற்பட்டார். வட்டிவீதத்தைக் கட்டுப்படுத்துவதன்மூலம் முதலீட் டையும் வேலையையும் பெருக்கலாம் என அவர் நம்பினார்.

**வட்டிக்கோட்பாடு—தொன்மைப் பொருளாதாரிகளுக்கும் கீன்ஸுக்குமுள்ள கருத்து வேறுபாடு :**

நிறைவேலை நிலையை முற்கோளாகக் கொண்டு எழுப்பப்பட்டது தொன்மைப் பொருளாதாரிகளின் வட்டிக்கோட்பாடு. எனவே, வட்டி

வீதத்தின் துணைகொண்டு சேமிப்பையும் (முதலீட்டுக்குத் தேவையான பணத்தின் அளிப்பையும்) முதலீட்டையும் (அதாவது முதலீடுசெய்வதற்கு வேண்டிய பணத்துக்குள்ள தேவையையும்) சமநிலையில் வைத்திருக்கலாம் என்று அவர்கள் நம்பினார்கள். பின்வரும் படத்தில் $1D_1$-ம் $1D_2$-ம் முதலீட்டுக்கான




படம் 12 : தொன்மைப் பொருளாதாரிகளின் வட்டிக்கோட்பாடு

தேவையைக் குறிக்கும் பட்டியலைப் பிரதிபலிக்கும் வளைகோடுகள். $SY_1$ அளிக்கப்படும் சேமிப்பின் அட்டவணையைப் பிரதிபலிக்கும் வளைகோடாகும். தேவையும் அளிப்பும் சந்திக்குமிடத்தில் வட்டிவீதம் நிருணயிக்கப்படுவது கண்கூடு. படத்தில் $1D_1$-ம் $SY_1$-ம் சந்திக்குமிடத்தில் $R_1$ (வட்டிவீதம்) நிருணயிக்கப்படுவதையும் $1D_2$-ம் $SY_1$-ம் சந்திக்குமிடத்தைக் கொண்டு $R_2$ நிருணயிக்கப்படுவதையும் காணலாம்.

சேமிப்பும் முதலீடும் சமமாக இருக்கும் என்பதை ஏற்றுக்கொள்வதில் கீன்ஸுக்கு எவ்விதமான தயக்கமுமில்லை. ஆனால், அச் சமத்துவம் வட்டி வீதத்தின்மூலம்நிலைநாட்டப்படுவதில்லை என்பதை அவர் ஆணித்தரமாகக் கூறினார். முதலீட்டினளவு பெரும்பாலும் முதலீட்டின் இறுதிநிலைத் திறனைப் பொறுத்தது. முதலீட்டின் தூண்டும் சக்தி குன்றினால் முதலீடு குறையும். எனவே, வருவாய் குன்றும். குறைந்த வருவாயிலிருந்து கொஞ்சமாகத்தான் சேமிக்க முடியும். இவ்வாறு குறைந்த முதலீட்டுக்கேற்ப சேமிப்பும் குறைந்து சமமாகும் என்று எண்ண இடமுண்டு. ஆனால் இச் சமநிலைக்குக் கொண்டுவர உதவுவது வட்டிவீதமன்று; வருவாய் என்பது கீன்ஸின் வாதம்.

தொன்மைப் பொருளாதாரிகள் நிறைவேலையை முற்கோளாகக் கொண்டிருந்தார்கள் என்று கண்டோம். எனவே, நிறைவேலைக்கேற்ப வருவாயும் நுகர்வுநாட்டத்துக்கேற்ப (சேமிப்பு நாட்டத்துக்கேற்ப) அவ் வருவாயிலிருந்து சேமிக்கப்படும் அளவும் மாறாதிருக்கும் என்பது அவர்களது கருத்து. அதனால்தான் மேற்கண்ட படத்தில் $SY_1$ மாறாமல் இருப்பதாகக் காட்டப்பட்டுள்ளது. ஆனால், கீன்ஸியக் கோட்பாட்டில் நிறைவேலை என்பது அரிது. எனவே, வேலையினளவு ஏறிஇறங்கி வருவதற்கேற்ப வருவாயும் அதிலிருந்து சேமிக்கப்படும் பகுதியும் மாறிவரும் என்பது கீன்ஸின் கருத்து. அதாவது படம் காட்டியுள்ளதுபோல் SY ஒரே வளைகோடாக மட்டுமில்லாமல் மாறிவரும் வருவாயினளவுக்கேற்ப பல வடிவங்களை எடுக்கும். இந் நிலையைப் பின்வரும் படத்தில் காணலாம்.




[படம் 13 : சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் சமநிலை ஏற்படும் விதம்

இவ்வாறு, முதலீட்டுக்கான தேவையும் சேமிப்பினளிப்பும் மாறிமாறி வருமானால் அவற்றைப் பிரதிபலிக்கும் வளைகோடுகள் ஒரு குறிப்பிட்ட இடத்தில் சந்திப்பதன்மூலம் நிலையானதொரு சமன்பாட்டை ஏற்படுத்தும் என்று எண்ணுவது தவறு என்ற கீன்ஸின் வாதத்தை மேற்கண்ட படம் 13 விளக்குகிறது.

### கீன்ஸின் வட்டிக்கோட்பாடு

பணத்துக்குள்ள தேவையையும் அளிப்பையும் பொறுத்தே வட்டி வீதம் நிருணயிக்கப்படும். பணத்தைப்போல் ரொக்கத்தன்மைவாய்ந்த

சொத்துகள் வேறில்லை எனலாம். எனவே, ரொக்கமாகப் பணத்தைக் கையிருப்பாக வைத்திருக்க வேண்டும் என்ற நோக்கத்தினடியாகவே பணத்துக்கான தேவை உருவாகிறது. பணத்தை ரொக்கமாகப் பதுக்கி வைக்காமல் புழக்கத்திற்கு விடுவதற்கான கைம்மாறே வட்டி என்றும் கூறலாம். எனவே, ரொக்க விருப்பம் பணத்துக்குள்ள தேவையை வெளிப்படுத்துகிறது என்பது கீன்ஸின் கருத்து. பணத்தை நிருவாகம் செய்யும் நிறுவனங்களால் பணம் அளிக்கப் படுகிறது. இவ்விரண்டு சக்திகளின் பலத்தைப் பொறுத்தே வட்டி வீதம் நிருணயிக்கப்படுகிறது. ரொக்க விருப்பம் அதிகமானால் வட்டி வீதமும் அதிகரிக்கும்; குறைந்தால் வட்டிவீதமும் குறையும். மாறாக, பணத்தினளவு அதிகரித்தால் வட்டிவீதம் குறையும்; குறைந்தால் வட்டிவீதம் அதிகரிக்கும். பணத்துக்கான தேவையும் அளிப்பும் சமமாக இருக்கும்போதுதான் வட்டிவீதம் நிலைபெற்றிருக்கும். ஒரு குறிப்பிட்ட வேளையில் ரொக்க விருப்பம் அதிகரிக்கிறது என்று வைத்துக்கொள்ளுவோம். அந் நிலையில் வட்டிவீதம் உயராமலிருக்க வேண்டுமாயின் தேவைக்கேற்ப பணத்தினளவை அதிகரிக்கவேண்டும். அவ்வாறின்றிப் பணத்தினளவை மாற்ற விரும்பாவிட்டால் பணத்துக் குள்ள தேவையையும்அளிப்பையும் சமநிலையில் வைத்திருக்கக்கூடிய வகையில் வட்டிவீதத்தை உயர்த்தியாகவேண்டும். பணத்தை விரும்பும் பொதுமக்களால் அதனளவையும் பெருக்க முடியாது (கள்ள நோட்டு அடித்தாலன்றி!). எனவே உயர்ந்துவரும் ரொக்க விருப்பத்துக்கேற்ப அவர்கள் அதிகவட்டிவீதம் கொடுக்கத் தயாராக இருப்பார்கள். மற்றொரு சாரார் உயர்ந்த வட்டிவீதத்தால் உந்தப் பட்டுத் தங்கள் ரொக்க விருப்பத்தை விட்டுக்கொடுத்துப் பிறரது ரொக்கவிருப்பத்தை நிறைவேற்றும் வகையில் பணத்தைக் கைமாற்றுவார்கள். இவ்வாறு உயர்ந்துவரும் ரொக்க விருப்பத்துக் கேற்ப வட்டிவீதம் அதிகரிக்காவிட்டால் பணத்துக்குள்ள தேவை அளிப்பைவிட மிஞ்சி நிற்கும் என்பது தெளிவு. அதேபோல் ரொக்க விருப்பம் குறையும்போது அதற்கேற்ப வட்டிவீதமும் தாழ்ந்து கொடுக்காவிட்டால் பணத்துக்கான தேவையைக் காட்டிலும் அளிப்பு அதிகமாக இருக்கும் என்பதும் தெளிவு. இதிலிருந்து வட்டிவீதம் தான் பணத்துக்கான தேவையையும் அளிப்பையும் சமநிலையில் வைத்திருக்க உதவுகிறது என்பது எளிதில் விளங்கும் என்று கீன்ஸ் எடுத்துரைத்தார்.

வங்கிகளையும் பணத்தையும் கையாளும் ஏனைய நிறுவனங்களின் நிருவாகிகளும் அளிக்கப்படும் பணத்தினளவை நிருணயிக்க முடியும். அவர்களே மக்களின் ரொக்க விருப்பத்துக்கேற்ப பணத்தினளவைக் கூட்டவோ, குறைக்கவோ செய்யலாம். முதலீட்டு இறுதிநிலைத் திறனைப் போல் அவ்வளவு சக்திவாய்ந்ததில்லையென்றாலும் முதலீட்டி

ளளவையும் அதன்மூலம் வேலையினளவையும் நிருணயம் செய்வதில் பணக்கொள்கைக்கு முக்கியமான பங்கு உண்டு என்பதை எவரும் மறுக்க முடியாது.

ரொக்கவிருப்பம், வட்டிவீதம் ஆகியவற்றுக்குள்ள சம்பந்தத்தைப் பின்வரும் படத்தின்மூலம் அறியலாம். படம் 14-ல் LL என்பது ரொக்கவிருப்ப வளைகோட்டைக் குறிக்கும்.




படம் 14 : ரொக்க விருப்ப வளைகோடு

ரொக்க விருப்பம் ஒரு குறிப்பிட்ட அளவினதாக இருக்கும் போது பணத்தினளவு அதிகரித்தால் வட்டிவீதம் குறையும் என்று சொல்லத் தேவையில்லை. தன்னிடமுள்ள ரொக்கப் பணத்தைக் கடனுகக் கொடுக்க முன்வருபவர்களுக்குக் கிடைக்கும் ஊதியமே வட்டிவீதம் என்று கண்டோம். அவை கடன்பத்திரம் (Bond), முறி (Note), அடமானம் (Mortgage) போன்ற பலவகைப்படலாம். ஒவ்வொரு வகைக்கும் வெவ்வேறு வட்டிவீதம் இருப்பது இயல்பு. வாணிக வங்கிகள் மிகவும் குறுகியகாலக் கடன்களின்மீது வசூலிக்கும் வட்டிவீதத்துக்கும் நெடுங்காலக் கடன்களின்மீது வசூலிக்கும் வட்டிவீதத்துக்கும் அதிக வித்தியாசம் இருக்க இடமுண்டு. இவ்விரண்டுக்கும் இடைப்பட்ட பல வட்டிவீதங்கள் வழக்கிலுண்டு. இவற்றுள் கீன்ஸ், நீண்டகால வட்டிவீதத்துக்கே மிகவும் முக்கியத்

துவம் கொடுத்தார் என்பது குறிப்பிடத்தக்கது. இத்தகைய கடன்களைக் கொண்டுதான் முதலீடு செய்வர் பலர். எனவே, நெடுங்கால வட்டிவீதத்தில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகள் முதலீட்டுக்கு முட்டுக்கட்டை போடவோ, தூண்டவோ துணைபுரியலாம் என்பதை எளிதில் புரிந்து கொள்ளலாம்.

நெடுங்கால வட்டிவீதத்திலுள்ள ஏற்றத்தாழ்வுகள் பத்திரச் சந்தையில் (Securities Market) நிலவிவரும் விலைவாசிகளில் பிரதிபலிப்பதைப்பார்க்கலாம். ஒருவர், பத்திரங்களில் முதலீடு செய்வதன் மூலம் ஆண்டொன்றுக்கு 50 ரூபாய் வருவாயை எதிர்பார்க்கிறார் என்று கொள்ளுவோம். அப்படியானால் பத்திரத்தின் விலை 1000 ரூபாயாக இருக்கும்போது வட்டி 5 சதவீதம் என்று ஆகும். அவ்வாறின்றிப் பத்திரத்தின் விலை 1250 ரூபாயானால் வட்டிவீதம் 4 சதவீதமாகக் குறையும். எனவே ரொக்கவிருப்பம் மாறாத நிலையில் பணத்தினளவு மாறினால் அதன்மூலம் பத்திரங்களின் விலைவாசிகள் பாதிக்கப்படுவதன்மூலம் வட்டிவீதமும் மாறும் என்பது கவனிக்கற்பாலது. ரொக்க விருப்பம் குறையுமானால் பத்திரங்களின் விலை அதிகரிக்கும்; அதன் பயனாக வட்டிவீதம் படுக்கும். மாறாக, ரொக்கவிருப்பம் அதிகரித்தால் பத்திரங்களின் விலை படுக்கும்; அதன் பயனாக வட்டிவீதம் உயரும். அதைப்போலவே பத்திரங்களைக் கணிசமான அளவில் பத்திரச்சந்தையில் விற்பனை செய்தால் அவற்றின் விலைமதிப்புக் குறையும். அதன் பயனாக வட்டிவீதம் உயரும். மாறாக, பத்திரங்களைப் பேரளவில் வாங்கினால் அவற்றின் விலை உயரும்; அதன் பயனாக வட்டிவீதம் குறையும். பணத்தைக்கட்டுப்படுத்தக்கூடிய அதிகாரம்பெற்ற பணநிறுவனங்கள் இவ்வாறு பத்திரங்களை வாங்குவதும் விற்பதுமான வெளிச்சந்தை நடவடிக்கைகளில் (Open Market Operation) இறங்குமானால் அவற்றின்வாயிலாகப் பொதுமக்களிடையே புரளும் பணத்தினளவையும் அதன்மூலம் பாதிக்கப்படும் வட்டிவீதத்தையும் பெரும்பாலும் கட்டுப்படுத்தலாம் என்பது கீன்ஸின் நம்பிக்கை.

## ரொக்க விருப்பம்

நடவடிக்கை (Transactions), எச்சரிக்கை (Precaution), ஊகவாணிகம் (Speculation) ஆகிய மூன்று காரணங்களுக்காக மக்கள் பணத்தை ரொக்கமாக வைத்திருக்க விரும்புவர் என்று மூன்றாம் அத்தியாயத்தில் கண்டோம். ஏற்கனவே அந்நோக்கங்களின் தன்மைகளைப் பற்றிச் சுருக்கமாக விவரித்துள்ளோம். இனி, ரொக்க விருப்பத்தால் வட்டிவீதம் எவ்வாறு பாதிக்கப்படுகிறது என்பதை ஆராய வேண்டியது அவசியம்.

ரொக்க விருப்பத்துக்கு மூன்று காரணங்களிருந்த போதிலும், ஊகவாணிக நோக்கமே வட்டிவீதத்தை மிகவும் பாதிக்கக்கூடிய பலம் பெற்று விளங்குகிறது என்பது கீன்ஸின் கருத்து. நோக்கங்கள் மூன்ருக இருப்பினும் அவற்றுக்கெனத் தனித்தனியே ரொக்கப் பணத்தை யாரும் ஒதுக்கி வைப்பதில்லை. ரொக்கமாகக் கையிருப்பாக வைத்திருக்கும் பணத்தையெல்லாம் மொத்தமாகச் சேர்த்து வைப்பதே வழக்கம். ஒரு குறிப்பிட்ட நோக்கத்துக்காக ஒதுக்கப் பட்ட பணத்தைக் கொண்டு மற்ருெரு நோக்கத்தை நிறைவேற்று வதில் எவ்விதமான தடையுமில்லை. ஆனுல், மொத்தத்தில் ரொக்கத் துக்கான தேவை அதிகரிக்குமாஞல் அதன் காரணமாக வட்டிவீதம் உயரும் என்பது குறிப்பிடத்தக்கது.

பொருளாதாரம் எவ்வளவு சுறுசுறுப்பாக இயங்கி வருமோ அதற்கேற்ப நடவடிக்கை காரணமான ரொக்க அவசியமும் அதிகரிக்கும். அன்ருடச் செலவுகளை மேற்கொண்டு வரவுக்காகக் காத்திருப்பதால் ஏற்படும் இடைவெளியை நிரப்புவதற்குப் போதிய பணம் வேண்டும். தனிப்பட்ட நபர்களைப் பொறுத்த அளவில் வருவாயின் அளவு என்ன? அஃது எவ்வளவு விரைவாகக் கிடைக்கிறது? (அதாவது சம்பளம் மாதமொருமுறையா? இருமுறையா? வாரமொரு முறையா? நாள் சம்பளமா?) செலவினளவு என்ன? எத்துணை வேகமாகச் செலவை மேற்கொள்ள வேண்டிய அவசியமேற்படுகிறது? என்பனவற்றைப் பொறுத்துக் கையிருப்பாக வைத்திருக்கவேண்டிய ரொக்கப் பணத்தினளவு மாறுபடும். அதேபோல், வியாபாரிகளும் தங்கள் கொள்முதல், விற்பனை ஆகியவற்றின் தன்மையைப் பொறுத்து அன்ருட நடவடிக்கைகளைச் சுமுகமாகக் கொண்டு செலுத்தும் வகையில் கையில் ரொக்கப் பணம் வைத்திருப்பார்கள். தொழில் நிறுவனங்களிலும் பொருளுற்பத்தியின் அளவுக்கும் சுழற்சி வேகத்துக்கும் ஏற்ப ரொக்கப் பணத்தின் தேவை மாறுபடும். கச்சாப் பொருள்களை வாங்குவதிலிருந்து ஆக்கப்பட்ட பொருள்களை விற்போரின் கையில் ஒப்படைக்கும் வரையுள்ள ஒவ்வொரு கட்டத் திலும் உற்பத்தி தேக்கமுருமல் ஒவ்வொரு கட்டமும் ஒன்ருேடொன்று சுமுகமாக இணைக்கப்பட்டிருக்குமாஞல் குறைந்த அளவு ரொக்கப் பணத்தைக் கொண்டு பொருளுற்பத்தி சம்பந்தமான நடவடிக்கை களைச் சிக்கலின்றி மேற்கொள்ளலாம். எனினும், பொருளாதாரம் அமைந்துள்ள முறையிலும் அதில் அங்கம் வகிக்கும் பல்வேறு நிறுவனங்களும் தனிப்பட்டவர்களும் கடைபிடித்து வரும் செயல் முறைகளிலும் அன்ருடம் புரட்சிகரமான மாற்றங்களைக் காண இயலாதாகையால் நடவடிக்கை காரணமாகத் தேவைப்படும் ரொக்கப்பணத்தினளவு பெரும்பாலும் ஒரே சீராக இருக்குமென்று எதிபார்க்கலாம்.

அதைப்போலவே எச்சரிக்கை நோக்கத்திலும் கணிசமான மாறுதல்கள் ஏற்படும் என்று எண்ண இடமில்லை. வகுக்கப்படும் திட்டங்களில் எதிர்பாராத சிக்கல்கள் ஏற்படாமல் அவற்றைச் சமாளிக்கும் பொருட்டே இவ் வகையில் ரொக்கப்பணம் வைத்திருக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. பொதுவாக, தங்கள் எதிர்காலத் திட்டங்கள் வெற்றிபெறும் என்ற திடமான நம்பிக்கை இல்லாத பழமை மனப்பான்மை கொண்டவர்களே எச்சரிக்கை நோக்கத்துக்காக அதிகப் பணத்தை ரொக்கமாக வைத்திருக்க விரும்புவர். மாறுக, கடன் வசதிகொண்டவர்களும், இலகுவில் பணத்தை பெறக்கூடிய வாய்ப்புக்களை உடையவர்களும் மிகுதியான பணத்தை ரொக்கமாகப் பூட்டி வைக்க விரும்புவதில்லை. எதுவாயினும், இத்தகைய மனோபாவங்கள் அடியோடு மாறுவதில்லையாதலால், அவற்றினடியாக விரும்பப்படும் ரொக்கப்பணத்தின் அளவிலும் அதிகமான மாற்றங்கள் இருக்காது என்று தாராளமாகச் சொல்லலாம்.

ஆனால், ஊகவாணிக நோக்கத்தின் அடிப்படையாகத் தேவைப்படும் ரொக்கப்பணத்தினளவில் அதிகமான ஏற்றஇறக்கங்கள் காணப்படுவதுண்டு. ஆதலின், அந் நோக்கத்துக்காகத் தேவைப்படும் ரொக்கப் பணத்தையும் அத் தேவையைப் பூர்த்தி செய்வதற்காக அளிக்கப்படும் பணத்தினளவையும் பொறுத்து வட்டிவீதத்தில் கணிசமான மாறுதல்களை எதிர்பார்க்கலாம். ஊகவாணிக நோக்கத்தினடியாக எழும் ரொக்க விருப்பத்துக்கேற்ப அளிக்கப்படும் பணத்தினளவு அதிகரிக்காவிட்டால், வட்டிவீதம் சட்டென்று உயரும். மாறுக, ஊகவாணிக நோக்கம் சோர்வுறும்போது பணத்தினளவு குறைக்கப்படாமலிருந்தால் வட்டிவீதம் மட்டுப்படும் என்று எதிர்பார்க்கலாம்.

பொருளாதாரம் முழுவதிலும் தேவைப்படும் ரொக்கப்பணத்தின் மொத்த அளவு M என்று வைத்துக் கொண்டால் நடவடிக்கை, எச்சரிக்கை ஆகு நோக்கங்களுக்காக ஒதுக்கி வைக்கப்படும் ரொக்கப் பணத்தினளவை $M_1$ என்றும் ஊகவாணிக நோக்கத்துக்காக ஒதுக்கப்படும் ரொக்கப்பணத்தினளவை $M_2$ என்றும் கொள்ளலாம். அதாவது $M=M_1+M_2$. இதில், நடவடிக்கை எச்சரிக்கை காரணமாக வைக்கப்படும் ரொக்கப் பணத்தினளவு ($M_1$) பொருளாதாரத்தினளவையும் அஃது எவ்வளவு சுறுசுறுப்பாக இயங்கி வருகிறது என்பதையும் பொறுத்தது. பொருளாதாரத்தின் இத்தகைய அம்சங்கள் வருவாயினளவில் (Y) பிரதிபலிக்கப்படுமாதலால் இக் காரணங்களால் உண்டாகும் ரொக்க விருப்பத்துக்கும் ($L_1$), வருவாய்க்கும் (Y) ரொக்கப்பணத்துக்குமுள்ள தேவையையும் $M_1=L_1$ (Y) என்று குறிப்பிடலாம். அதைப்போலவே ஊகவாணிக நோக்கத்துக்காக ஒதுக்கப்படும் ரொக்கப்பணத்தினளவுக்கும் ($M_2$) விருப்பத்துக்கும் ($L_2$), வட்டிவீதத்துக்குமுள்ள (r) உறவை $M_2=L_2$ (r) என்று குறிக்கலாம். $M=M_1+M_2$ என்றிருப்பதால் $M=L_1(y)+L_2(y)$ என்றும் குறிக்கலாம்.

ஊகவாணிக நோக்கத்தின் முக்கியத்துவம்

பணத்தை இலாபகரமான துறைகளில் ஈடுபடுத்தினுல் அதன் விளைவு ஆக்ககரமாக இருக்கும்; பத்திரங்களில் முதலீடு செய்தால் அல்லது வங்கிகளில் வைப்பாகப் போட்டு வைத்தால் வட்டியாவது கிட்டும்; அவ்வாறின்றி, ஊகவாணிக நோக்கத்துடன் மலட்டுத்தன மாகப் பணத்தைப் பதுக்கி வைப்பதன் மர்மம் என்ன என்பதைத் தெரிந்து கொள்வது அவசியம். வருங்காலத்தில் வட்டிவீதம் அல்லது பலதரப்பட்ட வட்டிவீதங்கள் எவ்வாறிருக்கும் என்று தெளிவாகத் தெரிந்து கொள்ள முடியாமலிருப்பதனுலேயே, ஊகவாணிகர் நிகழ் காலத்தில் பணத்தை ரொக்க வடிவாகப் பதுக்கி வைக்க முற்படு கின்றனர் என்பது கீன்ஸின் துணிபு. ஆண்டொன்றுக்கு 30 ரூபாய் வட்டி கட்டக் கூடிய ஒரு பத்திரத்தில் 1000 ரூபாய் முதலீடு செய்தால் அவ் வட்டி 3 சதவீதம் என்று கணக்கிடும் ஒருவன் வருங்காலத்தில் வட்டிவீதம் 4 சதவீதமாக உயரும் என்று எதிர்பார்ப்பானேயானுல் அவன் 3 சதவீதம் வட்டி நல்கக்கூடிய பத்திரத்தில் பணத்தை முடக்கி வைக்காமல் எதிர்காலத்தில் வரவிருக்கும் இலாபகரமான வாய்ப்பைப் பயன்படுத்தும் பொருட்டு ரொக்கமாகப் பதுக்கி வைப்பதில் வியப்பொன்றுமில்லை. மேற்கண்ட எடுத்துக்காட்டில் நிகழ்காலத்தில் 3 சதவீதம் நல்கக்கூடிய பத்திரத்தில் ஈடுபடுத்தப் படும் 1000 ரூபாயின் மதிப்பு வட்டிவீதம் 4 சதவீதமாக உயரும் போது 750 ரூபாயாகக் குறையும். அதாவது 1000 ரூபாய்க்கு 3 சத வீதத்தில் கிடைக்கும் வட்டித் தொகையும், 750 ரூபாய்க்கு 4 சத வீதத்தில் கிடைக்கக்கூடிய வட்டித்தொகையும் 30 ரூபாய்க்குச் சமமாக இருக்கும். எனவே, வட்டிவீதம் 3 சதவீதத்திலிருந்து 4 சதவீதமாக உயருவதால் பத்திரத்தின் மதிப்பில் 250 ரூபாய் குறைந்துபடும். இத்தகையதோர் இழப்பு ஏற்படாமல் தவிர்ப்பதற் காகத்தான் பணத்தை ரொக்கமாகக் கையில் வைத்திருக்க விரும்புவர்.

நிகழ்காலத்தில் பத்திரச்சந்தையில் பலதரப்பட்ட கடன் பத்திரங்களும் நல்கக்கூடிய வட்டிவீதங்கள் எவ்வளவாக இருக்கின்றன என்பது நிச்சயமாகத் தெரியும். ஆனுல், எதிர்காலத்தின் வட்டி வீதங்களில் எவ்விதமான மாற்றங்கள் ஏற்படும் என்று எவரும் அறுதியிட்டுச் சொல்ல இயலாது. ஆயினும், எதிர்காலத்தில் வட்டி வீதங்களின் போக்கைப்பற்றிப் பொதுவாக மக்கள் என்ன நினைக்கிருர்கள் என்பதை நிகழ்கால வட்டிவீதங்கள் ஓரளவு பிரதி பலிக்கும் என்று எதிர்பார்க்கலாம். எனினும், எதிர்காலத்தைப் பற்றிய இத்தகைய ஊகங்கள் செல்வாக்கு வாய்ந்த ஒரு சிலரின் அல்லது பெரும்பாலோரின் கருத்துகளாகவே — அனைவரின்

ஒருமுகமான கருத்தாக அன்று — கருதவேண்டும். நிலவிவரும் அபிப்பிராயம்தான் உண்மையில் நிறைவேறும் என்ற நிச்சயம் கிடையாது. நிலவிவரும் கருத்துக்கு மாறான கருத்துச் சிறுபான்மையான கருத்தாக இருந்தால்கூட — உண்மைக்கு உகந்ததாக இருக்குமானால் அதன் விளைவாகப் பயன் அடையமுடியும். அவ்வாறு எதிர்காலத்தின் தெளிவற்ற தன்மையைச் சாதகமாகப் பயன்படுத்தலாம் என்ற நம்பிக்கை கொண்டவர்கள்தாம் ஊகவாணிக நோக்கத்துடன் பணத்தை மலடாகப் பதுக்கி வைக்க முற்படுவார்கள். எதிர்காலமும் நிகழ்காலத்தைப்போன்று தெளிவாகத் தெரியுமானால் ஊகவாணிகத்தின் அடிப்படையே தகர்ந்து போகும். எனவே, அந் நோக்கத்துக்காகக் கொஞ்சங்கூட ரொக்கப்பணம் தேவைப்படாது. அதாவது $M_2=0$ என்றாகும். முதலாளித்துவப் பொருளாதாரங்களில் தெளிவான எதிர்காலம் என்பது பகற்கனவாகவே இருக்கும். எனவே பங்குமாற்றுச் சந்தைகளிலும் பத்திரச்சந்தைகளிலும் ஊகவாணிகம் தலைவிரித்தாடுகிறது.

எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய விளைவுகளைப்பற்றிச் சந்தையில் நிலவிவரும் அபிப்பிராயத்தைக் காட்டிலும் சிறந்ததோர் அறிவைக் கொண்டு இலாபமடையலாம் என்ற நோக்குடன் எடுக்கப்படும் முயற்சிகளே ஊகவாணிக நோக்கம் எனப்படுவது. வட்டிவீதம் வருங்காலத்தில் உயரும் என்று எதிர்பார்த்தால் நிகழ்காலத்தில் கடன்பத்திரங்கள் வாங்குவதை ஒத்திப்போடுவர். அவ்வாறே வட்டிவீதம் உயருமானால் பத்திரங்களின் விலைமதிப்புப் படுக்கும். அதன்காரணமாக, இத்தகைய போக்கைத் துல்லியமாக (சரியாக) எதிர்பார்த்தவர்கள் பெரிதும் இலாபமடைவார்கள். அங்காடியில் பயன்படுத்தப்படும் பெயர்களின்படி வருங்காலத்தில் பத்திரங்களின் விலைமதிப்புப் படுக்கும். (வட்டிவீதம் உயரும்) என்ற ஊகத்தின் பேரில் கையில் ரொக்கப் பணம் வைத்திருக்க விரும்புபவர்களைக் 'கரடி'களென்றும் வருங்காலத்தில் பத்திரங்களின் விலைவாசிகள் ஏறும் (வட்டிவீதம் குறையும்) என்ற ஊகத்தின் அடிப்படையில் நிகழ்காலத்தில் பத்திரங்களை வாங்க முற்படுபவர்களைக் 'காளை'களென்றும் அழைப்பர். பத்திரச்சந்தையில் கரடிகள் திமிறி நிற்குமானால் நிகழ்காலத்தில் ரொக்கப்பணத்துக்குள்ள தேவை அதிகரிக்கும். மாறாக, காளைகள் கட்டுத்தறித்து நிற்குமானால் நிகழ்காலத்தில் ரொக்கப் பணத்துக்குள்ள தேவை சுருங்கும். இவ்வாறு கரடிகளும் காளைகளும் ஒருங்கே நிலைத்து விளையாடுமே

யானல் பொருளாதாரம் கூடிய மட்டும் நிலைபெற்று ஒரே சீராக இயங்க ஏதுவாகும். ஊகவாணிக நோக்கத்துக்காகத் தேவைப்படும் ரொக்கப்பணத்தினளவும் மட்டுப்படும். இருக்கிற ரொக்கப்பணத்தை இருசாராரும் தத்தம் தேவைகளுக்கேற்ப மறுபங்கீடு செய்து கொள்ளுவார்கள் என்றும் எதிர்பார்க்கலாம். இந் நிலையில் வங்கிகள் பத்திரச்சந்தையில் புகுந்து பத்திரங்களை வாங்க முற்படுமானல் காளைகள் பல கரடிகளாக மாற்றுவடிம் எடுப்பதைக் காணலாம். மாருக, வங்கிகள் பத்திரங்களை விற்க முற்படுமானல் கரடிகள் பல காளைகளாவதையும் காணலாம். பங்குச் சந்தையில் பெரும்பாலோர் கரடிகளாக மாறினல் ரொக்கத்துக்கான தேவை கணிசமாக அதிகரிக்கும். மாருக, காளைகள் மிகவும் பலம்பெற்று விளங்கினல் ரொக்கப் பணத்துக்கான தேவை மிகவும் குறைந்துபடும். பணத்தினளவைக் கட்டுப்படுத்தும் பொறுப்பையும் அதிகாரத்தையும் படைத்த பண நிலையங்கள் இத்தகைய ஊகவணிகரிடையே மேலோங்கிவரும் மனேபாவத்துக்கேற்ப தங்கள் பணக்கொள்கையை மாற்றியமைத்துக் கொள்ள வேண்டியது அவசியம் என்பதுவும் மேற்கண்ட விளக்கத்தின் வாயிலாக வலியுறுத்தப்படுவதாம்.

ஊகவாணிக நோக்கத்தின் தன்மையின் காரணமாகப் பணத்தை வெற்றிகரமாக நிருவாகம் செய்வதில் பல சிக்கல்களுண்டு. பொதுவாக, ஏனைய மாற்றங்கள் எதுவும் ஏற்படாத நிலையில், பணத்தினளவு அதிகரித்தால் வட்டிவீதம் குறையும் என்று துணிந்து கூறலாம். அவ்வாறின்றிப், பணப்பெருக்கத்துக்கு மேலாக ரொக்கப் விருப்பம் அதிகரிக்குமானல் வட்டிவீதம் குறைவதற்குப் பதிலாகக் கூடலாம். ஊகவாணிக நோக்கமே ரொக்க விருப்பம் கணிசமான அளவில் மாறுபடுவதற்கு முக்கியமான காரணமாக இருப்பதால், அதில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளைப் பணக்கொள்கையின்மூலம் மட்டுப் படுத்துவது அவ்வளவு எளிதன்று.

ஊகவாணிக நோக்கமாக உருவாகும் ரொக்க விருப்பத்தின் தன்மைகளை மேலும் ஆராய்வது பயன்தருவதாகும். ஊகவாணிக நோக்கத்துக்காக ஒதுக்கப்படும் ரொக்கப்பணத்தினளவு வட்டிவீதத்தையே பெரிதும் சார்ந்திருக்கிறது என்பதை ஏற்கனவே குறிப்பிட்டோம். அதாவது $M_2 = L_2 (r)$ என்பதன் பொருளை ஏற்கனவே ஒருவாறு விளக்கியுள்ளோம். இனி ரொக்க விருப்பம் மாருத நிலையில் பணத்தினளவு மட்டும் மாறினல் வட்டிவீதம் எவ்வாறு பாதிக்கப்படும்? ரொக்க விருப்பம் மாறினல் அதன்பயனுக ரொக்கப் பணத்தினளவும் வட்டிவீதமும் எவ்வாறு பாதிக்கப்படும்? என்பதைத்தெரிந்து கொள்ளுவது அவசியம்.




(a) ஒரே ரொக்க விருப்ப வளைகோட்டில் இருபுள்ளிகள்




(b) ரொக்க விருப்பம் மாறுபடுவதா விளையும் பயன்

படம் 15: ஊகவாணிக நோக்கத்துக்கான ரொக்கப் பணத்தினளவும் வட்டிவீதமும்

படம் 15 : (a)-ல் பணத்தினளவு 600-லிருந்து 800 ஆக அதிகரித்ததன் காரணமாக வட்டிவீதம் 5 சதவீதத்திலிருந்து 4 சதவீதமாகக் குறைந்துள்ளது என்பதைக் காணலாம். பத்திரங்களை வங்கிகள் வாங்குவதன்மூலமாக அதிகரிக்கப்பட்ட பணத்தைப் புழக்கத்துக்குக் கொண்டு வரலாம். அதன்பயனாகப் பத்திரங்களின் விலை உயரும்; வட்டிவீதம் தாழும்.

படம் 15 : (b)-ல் $L_2'$ $L_2'$ என்ற வளைகோடு ரொக்க விருப்பம் அதிகரித்திருப்பதை வெளிப்படுத்துகிறது. அதையொட்டி அளிக்கப்படும் பணத்தினளவு ஓரளவு அதிகரித்த போதிலும் ரொக்க விருப்பத்தில் ஏற்பட்ட ஏற்றம் முழுவதையும் ஈடுசெய்வதாக இல்லாததால் வட்டிவீதமும் 5 சதவீதத்திலிருந்து 6 சதவீதமாக உயருவதைக் காணலாம். ஊகவாணிக நோக்கத்தினடியாக உதிக்கும் ரொக்க விருப்பம் பத்திரச் சந்தையில் நிலவும் மனோபாவங்களுக்கேற்ப அதிகரிக்கவும் செய்யலாம்; குறைந்தும் படலாம். ஆயின், ரொக்க விருப்பம் ($L_2$) வங்கிக்கொள்கையைச் சார்ந்து இல்லாமல் தானாகவே மாறும் தன்மையுடையது என்பது குறிப்பிடத்தக்கது. அதே சமயத்தில், ஏற்கெனவே கண்டபடி, ரொக்க விருப்பத்தில் ஏற்படும் மாற்றங்களால் பணத்தினளவு வட்டிவீதமும் பாதிக்கப் படலாம். ஊகவாணிகரிடையே கரடி மனப்பான்மையும் காளை மனப்பான்மையும் ஒன்றையொன்று மிஞ்ச இயலாமல் சமபலம் பெற்று விளங்கலாம்; அல்லது, கரடி மனப்பான்மையோ காளை மனப்பான்மையோ கணிசமான அளவில் மேலோங்கி நிற்கலாம்.

இவ்வாறு கரடியோ காளையோ பத்திரச்சந்தையில் ஆதிக்கஞ் செலுத்துமானல் வட்டிவீதம் அதிகமாகப் பாதிக்கப்படும் என்பதும் தெளிவு,

வருவாய்க்கும் (Y) வட்டிவீதத்துக்கும் (r), நடவடிக்கை, எச்சரிக்கை ஆகிய நோக்கங்களுக்காக ஒதுக்கப்படும் ரொக்கப் பணத்தினளவுக்கும் ($M_1$) உள்ள சம்பந்தத்தையும் தெரிந்துகொள்வது அவசியம் $M_1=L_1(Y)$ என்றும், $M_2=L_2(Y)$ என்றும் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். ஆனல் வருவாயினளவு ஓரளவு வட்டிவீதத்தினல் பாதிக்கப்படும். எனவே, வட்டிவீதமோ நடவடிக்கை, எச்சரிக்கை ஆகிய நோக்கங்களுக்காக ஒதுக்கப்படும் ரொக்க பணத்தினளவோ மாறுமானல் அம் மாற்றம் ஒன்றையொன்று பாதிக்கும் என்று எதிர்பார்க்கலாம். இச் சம்பந்தம் பொருளாதாரம் சுறுசுறுப்பாக இயங்கிவரும்போது கடைப்பிடிக்கவேண்டிய பணக்கொள்கைக்குச் சற்று உதவியாக இருக்கும். பொருளாதாரம் சுறுசுறுப்படைந்து வரும்போது அளிக்கப்படும் மொத்தப் பணத்தினளவு (M) மாருதிருந்தால், நடவடிக்கை, எச்சரிக்கை, ஆகிய நோக்கங்களுக்கான ரொக்கப் பணத்தேவை ($M_1$) அதிகரிக்கும்போது ஊகவாணிக நோக்கத்துக்காக ஒதுக்கப்பட்ட ரொக்கப் பணத்திலிருந்து ஒரு பகுதியை மாற்றுவார்கள் என்று எதிர்பார்க்கலாம். அப்படி மாற்றியபின் மிஞ்சும் பணம் ஊகவாணிக நோக்கத்துக்கான தேவையைப் பூர்த்தி செய்வதற்குப் போதாதாகையால் அப் பற்ருக்குறையை நிவர்த்திச் செய்வதற்குப் போதிய ரொக்கப் பணத்தின் அளிப்பை அதிகரிக்கத் தூண்டும் வகையில் அதிக வட்டிவீதம் கொடுக்கத் தயாராக இருப்பார்கள். எனவே, வட்டிவீதம் உயரும்; அதனல், முதலீடு பாதிக்கப்படும்; வருவாய் குன்றும். அவ்வாறின்றிப் பணத்தை நிருவகிக்கும் அதிகாரம் பெற்றவர்கள் $M_1$-ன் தேவை அதிகரிப்பதற்கேற்ப பணத்தினளவு அதிகரித்து அதைப் பூர்த்தி செய்தால் இப்படி $M_2$-விலிருந்து $M_1$-க்குப் பணத்தை மாற்ற வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்காது. அதன் காரணமாக வட்டிவீதம் உயர்ந்து முதலீடு தடைப்படவோ வருவாய் குன்றவோ அவசியம் ஏற்பட்டிருக்காது.

## பணத்தினளிப்பு

ரொக்க விருப்பத்தையும் பணத்தினளிப்பையும் பொறுத்தே வட்டிவீதம் நிருணயிக்கப்படும் என்று கண்டோம். அப்படியானல், ரொக்க விருப்பம் மாருத நிலையில், பணத்தினளவு அதிகரித்தால் வட்டிவீதம் குறையும்; பணத்தினளவு குறைந்தால் வட்டிவீதம் அதிகரிக்கும் என்பது தெளிவு. ஆனல் முதலாளித்துவப் பொருளாதாரங்களில் பணத்தினளவு எவ்வாறு மாறுகிறது என்று காண்பது அவசியம்.

பணம் பலவிதப்படும். செம்பு, அலுமினியம், வெள்ளி, தங்கம் ஆகிய பல உலோகக் கலப்புகளாலான நாணயங்கள் ஒருவகை. காகிதச் செலாவணிகள் இன்னெரு வகை. வங்கிகளில் வைப்பாக வைக்கப்படும் பணம் மற்றொரு வகை. முதிர்ச்சியுற்ற முதலாளித்துவப் பொருளாதாரங்களில் வங்கிகளில் வைப்பாக வைக்கப்படும் பணமே அளவில் மிகுதியாக இருக்கும். வங்கிகளில் போடப்படும் வைப்பு

களில் சிலவற்றை வேண்டியபோது திருப்பிப் பெறலாம். இதைச் செக்கு அல்லது காசோலைப் பணம் என்றும் கூறலாம். சிலவற்றை ஒரு குறிப்பிட்ட காலத்துக்காகப் போட்டுவைப்பதால் அவற்றைக் கழிவு செய்து திருப்பிப் பெறுவதில் சற்றுக் காலதாமதம் ஏற்படும். இருப்பினும், இவ்விருவகை வைப்புகளையும் பணமாகவே கீன்ஸ் கணக்கெடுத்துள்ளார். வைக்கப்பட்ட பணத்தை வைப்பாளரிடம் திருப்பிக் கொடுக்கும் பொறுப்பு வங்கிகளுக்கு உண்டு.

பணம் என்ன வடிவாக இருக்கிறது என்பது அவ்வளவு முக்கியமன்று. அதன் மொத்த அளவு எவ்வாறு மாறுபடுகிறது என்பதே மிகவும் முக்கியமானது. வங்கிமுறையின் கொடுக்கல் வாங்கல் கொள்கையின்மூலமாகவே பணத்தினளவு மாறுபடும். செக்குப் பணமே அவற்றுள் முதலிடம் பெறுவதாகும். வங்கிக் கடன்களைப் (Bank Credit) பெருக்குவதன்மூலமாகவே பாங்குகள் தாங்கள் அளிக்கும் பணத்தினளவைப் பெரும்பாலும் அதிகரிக்கின்றன. அத்தகைய கடன்வசதிகளைப் பெறுகின்ற பொதுமக்கள் பாங்குகளிடமிருந்து ரொக்கப் பணத்தைப் பெறும் உரிமைகளைப் பெறுகிறார்கள். பாங்குகளும் அத்தகைய உரிமைகளைப் பேணும் பொறுப்பை மேற்கொள்வதன்மூலம் ரொக்கப் பணத்தை அளித்து உதவுகின்றன. இவ்வாறு கடன் வழங்குதல் அல்லது பத்திரங்களைப் பொதுமக்களிடமிருந்து வாங்குதல் ஆகிய நடவடிக்கைகளின் மூலமாகவே வங்கிகள் பொதுமக்கள் கையிலுள்ள ரொக்கப் பணத்தை அதிகரிக்கமுடியும். பொதுவாக, வங்கிகளின் முதலீட்டு நடவடிக்கைகளின் காரணமாகத் தனிப்பட்டவர்கள், நிறுவனங்கள், அரசு ஆகியவற்றின் வைப்புகள் அதிகரிக்கலாம். இவ்வாறு வங்கிகளின் முதலீட்டின் வழியாகப் பிறக்கும் வைப்புகளை வழிவந்த வைப்புகள் (Derivative Deposits) என்பர். பாங்குகளைப் பயன்படுத்தும் பொதுமக்கள் தாங்களாகவே தங்கள் கைவசமுள்ள ரொக்கப் பணத்தை அல்லது அதைப்போலொத்த பணங்களை வங்கிகளில் போட்டு வைக்க முன்வருவார்களானால் அதன் முதன்மையான வைப்புகள் (Primary Deposits) என்று அழைப்பர்.

இவ்விரண்டினுள் வழிவந்த வைப்புகளின்மூலமாகவே பணத்தினளவை அதிகரிக்க முடியும் என்பது குறிப்பிடத்தக்கது. மாறாக, ஒருவன் தன்னிடமுள்ள உலோகங்களாலான நாணயங்களையோ காகிதச்செலாவணி நோட்டுகளையோ வங்கியில் போட்டு வைப்பானானால் அவனிடமுள்ள (பொதுமக்களிடமுள்ள) பணத்தின் வடிவம் மாறுகிறது. அதாவது நாணயங்களுக்கும் நோட்டுகளுக்கும் பதிலாக வங்கிப் பணம் அவன் கைக்கு மாறுகிறது. இம் மாற்றத்தால் பொதுமக்களிடமுள்ள மொத்தப் பணத்தினளவு மாறுவதில்லை.

அப் பணத்தின் வடிவங்கள் மட்டுமே (வகைகளே) மாறுகின்றன. அதேபோல், ஒருவன் தனது சம்பளச் செக்கை வங்கியில் போடுகிறான் என்று வைத்துக் கொள்வோம். அதனால் செக்கைப் போட்டு வைத்தவனுக்கு வங்கி, கடன்படுகிறது. அதே சமயத்தில் அச் செக்கை எழுதியவருக்கு வங்கி கொடுக்க வேண்டிய கடன் குறைகிறது. எனவே, மொத்தத்தில் வங்கியின் கடன் பொறுப்பில் மாற்றமெதுவு மில்லை. ஆதலின், முதன்மையான வைப்புகளின்மூலம் பணப் பெருக்கம் ஏற்பட இயலாது. வங்கிகள் மனம் வைத்தால் மட்டுமே பொதுமக்களின் ரொக்க விருப்பத்தை நிறைவேற்றக்கூடிய வகையில் வழிவந்த பணத்தினளவைப் பெருக்கமுடியும்.

ஒரு சில கொள்கைளுக்கு உட்பட்டே வங்கிகளின் வழிவந்த பணத்தைப் பெருக்கமுடியும். அவற்றுள் சில சட்ட வரம்புகளி னடியாக ஏற்பட்டவை. பலவங்கிகளோடு தொடர்பு கொண்டு பொருளாதார நடவடிக்கைகளில் ஈடுபடுபவர்கள் கடைப்பிடிக்கும் பழக்கவழக்கங்களையும் மரபுகளையும் ஒட்டியவை. உதாரணமாக, மையப்பாங்கு வாணிகப் பாங்குகளின் அன்றாட நடவடிக்கைகளைப் பல வகைகளிலும் கட்டுப்படுத்த முடியும். பாங்குகள் கொடுத்துவரும் கடனுக்குக் காப்பாக ஒரு குறிப்பிட்ட வீதத்தை ரொக்கமாகவோ தங்கமாகவோ வைத்திருக்கவேண்டும் என்ற வரையறை உண்டு. மையப்பாங்கு அத்தகைய காப்புநிதியின் வீதத்தைக் குறைக்குமானால் அதன் பயனாக வாணிகப் பாங்குகள் தாங்கள் வழங்கக்கூடிய கடன் வசதிகளைப் பெருக்க ஏதுவாகும்; பெருக்கவும் முற்படும். ஏனெனில், பணத்தை மலடாக வைத்திருப்பதை எந்த வங்கியும் விரும்புவதில்லை. கடன் கொடுப்பதன்மூலம் தங்கள் இலாபத்தைப் பெருக்குவதே அவர்களது குறிக்கோள். எனவே, காப்புவீதம் குறைக்கப்படும் போது கடன் பெருக்கம் அதிகமாகும் என்று எதிர்பார்க்கலாம். கடன் பெருகுவதால் வட்டிவீதம் குறையும். அதன் காரணமாக, முதலீட்டு இறுதிநிலைத்திறன் வட்டிவீதத்தைக் காட்டிலும் அதிகமாக இருந்தால் முதலீடு தூண்டப்படும். பொதுவாகப் பொருளாதாரம் மந்தப்பட்டுச் சோம்பிக் கிடக்கும்போது முதலீட்டு இறுதிநிலைத்திறன் மிகவும் குறைந்துபடுமாதலால், வட்டிவீதத்தைச் சற்றே குறைப் பதன்மூலம் முதலீட்டைத் தூண்ட முடியும் என்று நம்ப இடம்இல்லை. எனவே, மந்தப்பட்ட சூழ்நிலையில் முதலீட்டுக்கான தூண்டுதலை வங்கிக் கொள்கையால் மட்டும் பலப்படுத்தலாம் என்று மனப்பால் குடிப்பது தவறு.

மையப்பாங்கின் கையிலுள்ள மற்றொரு கருவி மறுகழிவு வீதத்தை (Re-discount Rate) மாற்றுவதாகும். வாணிகப் பாங்குகள் தங்கள் கைவசமுள்ள முதிர்ச்சியுற்ற மாற்றுண்டிகளை (Bills of

Exchange) சமர்ப்பித்து ரொக்கப் பணமாக்க முயலும்போது மையப் பாங்கு வசூலிக்கும் வட்டிவீதமே மறுகழிவு வீதம் எனப்படுவது. மையப்பாங்கு மறுகழிவு வீதத்தைக் குறைத்தால் வாணிகப்பாங்குகள் தங்களிடமுள்ள மாற்றுண்டிகளை மலிவாக மாற்றித் தங்கள் வசமுள்ள ரொக்கப் பணத்தைப் பெருக்கமுடியும். அத் தொகை காப்புவீதத்துக்கு மேலாக இருந்தால் தாங்கள் வசூலிக்கும் வட்டி வீதத்தைக் கொஞ்சம் குறைத்துக் கடனைப் பெருக்கமுடியும். சுருங்கக் கூறின், மையப்பாங்கு மறுகழிவு வீதத்தைக் குறைத்தால் அதற்கேற்ப வாணிகப் பாங்குகளும் தாங்கள் வசூலிக்கும் வட்டிவீதத்தையும் குறைப்பதன்மூலமாக அதிகமான கடனை வழங்கமுடியும். மாறாக, மறுகழிவுவீதம் அதிகரிக்கப்பட்டால் அதற்கேற்ப வாணிகப் பாங்குகள் வசூலிக்கும் வட்டிவீதமும் உயர்ந்து அவை வழங்கும் கடன் தொகை சுருங்கும் என்று எதிர்பார்க்கலாம். இருப்பினும், மறுகழிவு வீதத்தை மனம்போன போக்கில் அளவுக்கு மிஞ்சி குறைப்பது நடைமுறையில் சாத்தியமில்லையாதலால் இம் முறையினால் வாணிகப் பாங்குகள் வசூலிக்கும் வட்டிவீதத்தைக் கணிசமாகக் குறைக்க இயலாது. ஆகவே, காப்புவீதத்தைப் போலவே மறுகழிவுவீதமும் அவ்வளவு சக்தி வாய்ந்த கருவியாகக் கருதமுடியாது.

பணத்தை நிருவகிக்கும் அதிகாரம் படைத்த பண நிலையங்களிடமுள்ள பலமிக்க ஆயுதம் வெளிச்சந்தை நடவடிக்கைகளாகும் (Open Market Operations). இந்த ஆயுதத்தின் துணைகொண்டு பண நிருவாகிகள் தாங்களாகவே வங்கிமுறை வழங்கக்கூடிய கடன்வசதிகளின் அளவை மாற்ற முடியும். வெளிச்சந்தை நடவடிக்கைகள் வங்கிகளை மட்டும் பற்றியவை அல்ல; கடன்பத்திரச்சந்தையும் இந் நடவடிக்கைகளால் இணைக்கப்படுவதைக் காணலாம். தனிப்பட்ட ஒருவன் தன்னிடமுள்ள கடன்பத்திரங்களை மற்றொருவனிடம் விற்பானேயானால், பணமும் பத்திரமும் கைமாறுமே ஒழிய வேறொரு பயனும் விளையாது. மாறாக, மையப்பாங்கோ வாணிகப் பாங்குகளோ கடன்பத்திரங்களை வாங்கவோ விற்கவோ செய்தால் அதன் விளைவாகப் பொதுமக்களிடமுள்ள மொத்தப் பணத்தினளவு கூடவோ குறையவோ செய்யும். மையப்பாங்கு வெளிச்சந்தை நடவடிக்கைகளில் ஈடுபடும்போது அதன் செல்வாக்குக்குட்பட்ட வாணிகப் பாங்குகளின் காப்புநிதி பாதிக்கப்படும். அதன் காரணமாகக் காப்பின் வீதம் அளவுக்கு அதிகமானால் வாணிகப் பாங்குகள் வட்டிவீதத்தைக் குறைத்துக் கடன் வசதிகளைப் பெருக்குவதற்குத் தூண்டப்படலாம்.

பொருளாதாரம் சுறுசுறுப்பாக இயங்கிவரும்போது வாணிகப் பாங்குகளிடம் குறைந்தபட்ச அளவுக்கு அதிகமான காப்புநிதி

இருக்குமானால் மறுகழிவுவீதத்தை உயர்த்துவதால் மட்டும் பணப் பெருக்கத்தை மட்டுப்படுத்த இயலாது. முதலாவது, கடன் பத்திரங்களை விற்பதன்மூலமாக வாணிகப் பாங்குகளிடம் எஞ்சி நிற்கும் காப்புநிதியை மையப்பாங்கு உறிஞ்ச வேண்டும். அவ்வாறு மிஞ்சி நிற்கும் நிதியை வடிகட்டிய பின்னர் மறுகழிவுவீதத்தை உயர்த்தினால் விரும்பிய பலன் கிட்டும் என்று எதிர்பார்க்கலாம்.

வெளிச்சந்தை நடவடிக்கைகளால் குறுகியகால வட்டிவீதம் மட்டுமன்றி நீண்டகால வீதமும் பாதிக்கப்படும் என்பது குறிப்பிடத் தக்கது. குறுகிய காலப் பத்திரங்களை வாங்கவோ விற்கவோ செய்தால் அதன்மூலம் நீண்டகால வட்டிவீதமும் மறைமுகமாகப் பாதிக்கப்படும். அதைக்காட்டிலும், நேரடியாகவே நீண்டகாலப் பத்திரங்களை வாங்கவோ விற்கவோ முற்பட்டால் நீண்டகால வட்டி வீதத்தை நேரடியாகவே மாற்ற முடியும். எனவே, மையப்பாங்கு நீண்டகால அரசாங்கக்கடன்பத்திரங்களை அவற்றின் முதிர்ச்சிக்கேற்ப வகைப்படுத்தி வெளிச்சந்தை நடவடிக்கைகளின்மூலம் பொருத்த மான விலைகொடுத்து வாங்கவோ ஏற்றதோர் விலையில் விற்கவோ செய்தால், அந் நடவடிக்கைகளின்மூலம் நீண்டகால வட்டி வீதங்களின்மீது நேரடியாகச் செல்வாக்கைச் செலுத்தலாம் என்பது கீன்ஸின் கருத்து.

### முதலீட்டு இறுதிநிலைத்திறனுக்கும் வட்டிவீதத்துக்குமுள்ள உறவு

முதலீட்டு இறுதிநிலைத்திறனும் வட்டிவீதமுமே முதலீட்டைத் தூண்டுவனவாகும் என்பதைக் கண்டோம். இவ்விரண்டின் தன்மை களையும் தனித்தனியே ஆராய்ந்தோம். குறிப்பாக, அவை ஒன்றை யொன்று தழுவியிராமல் தனித்தன்மை வாய்ந்தவை என்பதைக் குறிப்பிட்டோம். இனி, அவை இரண்டுக்குமுள்ள சம்பந்தத்தைப் பற்றி ஆராய வேண்டியது அவசியமாகும்.

தொன்மைப் பொருளாதார மரபின்படி முதலீட்டு இறுதிநிலைத் திறனுக்கும் வட்டிவீதத்துக்கும் அடிப்படையான வேறுபாடு இருப்பதாக யாரும் நினைக்கவில்லை. முதலீட்டின் இறுதிநிலைத்திறன் என்ற கருத்தையே அவர்கள் கையாளவில்லை. மாறாக, வட்டிக்கே முக்கியத்துவம் கொடுக்கலாயினர். முதலினச்சொத்துகளைப் பயன்படுத்துவதற்குக் கிடைக்கும் பரிசே வட்டி என்பது அவர்களின் கருத்து. அதையொட்டியே வட்டிவீதத்தை முதலினச்சொத்துகளின் இறுதியாக்கத்தின் (Marginal Productivity of Capital assets) அளவு என அவர்கள் கருதி வந்தனர். பணவட்டிவீதத்துக்கும் (Money Rate of Interest), உண்மை வட்டி வீதத்துக்கும் (Real Rate of Interest) வித்தியாசம் காட்ட முற்பட்டார்களென்றாலும், நிறைவேலை என்ற

முற்கோளை மேற்கொண்டிருந்ததால் பணவட்டிவீதத்துக்கும் உண்மை வட்டிவீதத்துக்கும் ஏற்படக்கூடிய தற்காலிகமான வேறுபாடுகளைச் சந்தையில் தானாக இயங்கிவரும் சக்திகள் ஒருமைப்படுத்தும் என்று தொன்மைப் பொருளாதாரிகள் நம்பி வந்தார்கள். இக் கருத்தைத் தழுவியே நட்விக்சல் (Knut Wicksell) வான் ஹாயக் (Van Hayek) போன்ற புதுச்சம்பிரதாயக் கருத்தோர் (Neo-Classicals) இயற்கைவீதம் என்றும் (Natural rate), சந்தையில் நிலவும் பணவீதம் என்றும் (Money rate) பகுக்கலாயினர். பொதுக்கோட்பாட்டை வகுக்குமுன்னர், கீன்ஸூம் இம் மரபையே பின்பற்றி வந்தார் என்பது குறிப்பிடத்தக்கது. அப் பரம்பரையின்படி நிறைவேலையை இயல்பானதோர் நிலையாகக் கருதி வந்தனர். எனவே, நிறைவேலை நிலவும்போது இயற்கைவீதமும் பணவீதமும் ஒன்றாக இருக்கும் என அவர்கள் நம்பினார்கள். கீன்ஸூம் பணம் பற்றிய சித்தாந்தம் (Treatise on Money) என்ற தமது நூலில் இதே கருத்தை வெளியிட்டார். அதன்படி பணவீதத்துக்கும் உண்மை வீதத்துக்குமுள்ள வேறுபாடு தற்காலிகமானது; நிறைவேலை நிலையில் இவ் வேறுபாடு மறையும் என்று அவர்கள் நம்பியதில் வியப்பொன்றுமில்லை.

ஆனால், கீன்ஸ் தமது பொதுக்கோட்பாட்டில் தொன்மைப் பொருளாதாரக் கருத்துகளை அடியோடு கைவிடலானார். முதலாவது முதலாளித்துவப் பொருளாதாரங்களில் நிறைவேலையை இயல்பானதோர் நிலையாக அவர் கருதவில்லை. எனவே, பொருளாதாரச் சூழ்நிலைக்கேற்ப வேலையினளவு மாறுபடும் என்று எதிர்பார்க்கலாம். அவ்வாறு மாறுபட்ட ஒவ்வொரு வேலையினளவுக்கும் உரியதோர் இயற்கை வீதம் (Natural Rate) உண்டு என்று அவர் எண்ணத் தொடங்கினார். அவ் வீதத்தைத்தான் முதலீட்டு இறுதிநிலைத் திறன் என்று அழைக்கலானார். இரண்டாவது, புதுச்சம்பிரதாயக் கருத்துப்படி சந்தையில் தற்காலிகமாக நிலவும் பணவீதம் நிறைவேலை நிலைக்குரிய இயற்கைவீதத்தை அணுகிவந்து நிறைவேலையின்போது அத்துடன் இரண்டறக்கலக்கும் என்று நம்பினர். கீன்ஸ் நிறைவேலை நிலையை அரிதாகக் கருதியவர். எனினும், முதலீட்டு இறுதிநிலைத்திறன் பணவீதத்தை அணுகிவந்து அதற்குச் சமமாகும் வரையில் முதலீட்டைத் தூண்டிவரும் என்று வலியுறுத்தினார். இரண்டும் சமம் என்ற நிலை ஏற்படும்போது பொருளாதாரம் சமநிலைபெற்று விளங்கும் என்பது அவரது கருத்து.

எவ்வாறு இத்தகைய சமநிலை ஏற்படும் என்பதையும் விளக்குவது அவசியம். பணம் படைத்தவர்கள் அதை ரொக்கமாகக் கையில் பதுக்கி வைக்கலாம்; கடன் பத்திரங்கள் அல்லது பங்குப்பத்திரங்

களில் ஈடுபடுத்தலாம்; அல்லது புத்தம்புது முதலினச் சொத்துக்களை உருவாக்கிப் படைக்கும் வகையில் முதலீடு செய்யலாம். முதலினச் சொத்துகளின் தேவை விலையைக் காட்டிலும் அளிப்புவிலை குறைவாக இருக்குமானல் பணம் படைத்தவர்கள் புத்தம்புது முதலினச் சொத்துகளில் முதலீடு செய்யுமாறு தூண்டப்படுவார்கள். முதலீட்டு இறுதிநிலைத்திறன் வட்டிவீதத்தைவிட அதிகமாக இருக்கும்வரை இத்தகைய முதலீடு தொடர்ந்து நடைபெறும் என்று எதிர்பார்க்கலாம். முதலினச் சொத்துகளின் அளவு பெருகப்பெருக முதலீட்டு இறுதிநிலைத்திறன் கொஞ்சங்கொஞ்சமாக குறைந்துவரும். அவ்வாறு குறைந்துவரும் முதலீட்டு இறுதிநிலைத்திறன் வட்டிவீதத்துக்குச் சமமானல் அத்தோடு முதலீட்டுக்கான தூண்டுதல் முற்றுப்பெறும். எனவே, முதலீட்டு இறுதிநிலைத்திறனும் வட்டிவீதமும் சமநிலையில் இருக்கும் இடத்தில் முதலீட்டின் அளவு நிருணயிக்கப்படும் என்று கீன்ஸ் வலியுறுத்தினர். தொன்மைப் பொருளாதாரிகளைப்போலவே நிறைவேலை என்ற கனவுலகில் சஞ்சரித்து வந்த கீன்ஸ் தமது கனவைக் கலைத்து உண்மைநிலைக்கு உகந்த வகையில் தமது கோட்பாடுகளை மாற்றியமைக்கும் முயற்சியில் முனையலானர் என்பது குறிப்பிடத்தக்கது. செம்மையானதோர் வட்டிக்கோட்பாட்டை வகுக்கத்தவறியது தொன்மைப்பொருளாதாரம் என்பது அவரது கருத்து. குறிப்பாக, வட்டிவீதத்தை நிருணயிப்பதில் ரொக்க விருப்பத்துக்கு—அதிலும் ஊகவாணிக நோக்கத்தினடியாகப் பிறக்கும் ரொக்க விருப்பத்துக்கு—கீன்ஸ் கொடுத்த முக்கியத்துவமே அவரது வட்டிக்கோட்பாட்டுக்குச் சிறப்பளித்தது என்ருல் மிகையாகாது.

பொதுவாக, முதலீட்டு இறுதிநிலைத்திறன், வட்டிவீதத்தைக் காட்டிலும் நெகிழ்ச்சியுடையது என்பது கீன்ஸின் கருத்து. இவ்விரண்டுக்கும் சமநிலை ஏற்பட்டபின்னர் மேற்கொண்டு முதலீடு நடைபெருதாகையால், வட்டிவீதத்தின் நெகிழ்ச்சியுற்ற தன்மை முதலீட்டுக்கு முட்டுக்கட்டையாக அமைவது தெளிவு. பணத்தின் விபரீதமான தன்மைகளே வட்டிவீதம் இலகுவில் வளைந்து கொடுக்காமல் இருப்பதன் மூலகாரணங்களாகும். முதலாவது, பணஉற்பத்தியில் நெகிழ்ச்சி இருப்பதில்லை. தனியாரின் முயற்சியால் பணத்தைப் பெருக்க முடியாது. அதற்கு ஒரு காரணம் நாணயங்களைச் செய்வதற்கு உதவக்கூடிய தங்கம், வெள்ளி, செம்பு ஆகிய உலோகங்களைத் தோண்டி எடுத்து உருக்கக் கூடிய சுரங்கங்களையும் ஆலைகளையும் படைத்த ஒரு சில நாடுகள் உலோகத்தாலான நாணயங்களினளவை ஓரளவு பெருக்க முடியும். அத்தகைய பெருக்கமும் அரசின் ஆணைக்குட்பட்டே நடைபெற இயலும். எனவே, பண உற்பத்தியில் நெகிழ்ச்சி காண்பதரிது. அத்துடன் பணத்தினளவு பெருகினுல்

கூட வட்டிவீதம் அதற்கேற்ப நெகிழ்ந்து கொடுப்பதில்லை. இரண்டாவது, பணத்துக்குப் பதிலாக வேறு பொருள்களைப் பயன்படுத்துவது கடினம். குறிப்பாக, வேறெந்தப் பொருளும் பணத்தைப் போன்று திறமையான பரிவர்த்தனைச் சாதனமாகப் பயன்படும் என்று சொல்லுவதற்கில்லை. மூன்றாவது, மூட்டைகட்டி ரொக்கமாகப் பதுக்கி வைக்கப்படும் பணத்துக்கான தேவையில் கணிசமான நெகிழ்ச்சியைக் காணலாம். அத்தகைய தேவையைத்திருப்திப்படுத்துவதும் எளிதன்று. இத்தகைய காரணங்களால் பணத்தினளவைப் பெருக்கினாலும்கூட வட்டிவீதம் இரண்டு சதவீதத்துக்கும் கீழே இறங்கும் என்று எளிதில் எதிர்பார்க்க இயலாது. மாறாக, முதலினச் சொத்துகளின் அளவு அதிகரிப்பதற்கேற்ப முதலீட்டு இறுதிநிலைத்திறன் நெகிழ்ச்சியுற்றுக் கொஞ்சங் கொஞ்சமாகக் குறைந்து வரும். ஒரு குறிப்பிட்ட எல்லைக்குக் கீழே இறங்காது என்ற நியதி அதற்கு இருப்பதில்லை. எனவேதான், பண அளிப்பிலுள்ள சிக்கல்களே வேலையில்லாமைக்குக் காரணமாம் என்று கீன்ஸ் கருதலானார். தயக்கமின்றிப் பணப்பெருக்கம் செய்யக் கூடிய வசதிகள் ஏற்பட்டு, வட்டிவீதமும் ஏற்றவகையில் நெகிழ்ந்து கொடுத்தாலன்றி முதலீட்டைப் போதிய அளவில் தூண்டி நிறைவேலை என்ற நிலையை ஏற்படுத்துவது இயலாது என்பதை வலியுறுத்தும் வகையில்தான் தமது நூலுக்கு 'வேலை, வட்டி, பணம், ஆகியவை பற்றிய பொதுகோட்பாடு' (The General Theory of Employment, Interest and Money) என்ற பெயரைச் சூட்டினார் போலும். பணப் பெருக்கத்தால் வட்டிவீதம் பூஜ்யத்தை எட்டிப்பிடிக்குமானால், நிறைவேலை என்பது வெறுங்கனவாக மட்டுமன்றி நனவாகவும் ஆகும் என்பது அவரது துணிபு.

நிறைவேலையை நிலைநாட்டக்கூடிய அத்தகைய சமநிலை ஏற்படும் போது கையில் ரொக்கப்பணமாக வைத்திருப்பது, கடன்பத்திரங்களை உடைமையாகக் கொள்ளுவது, முதலினச் சொத்துகளுக்கான பங்குப் பத்திரங்களை வாங்குவது, புத்தம்புதிய முதலினச் சொத்துகளைப் படைப்பது ஆகியவற்றின் பலாபலன்கள் சமமாக இருக்கும் என்பது புலனாகும். எனவே, புதிதாக முதலீடு செய்ய முன்வருபவர்கள் எத் துறையில் தங்கள் பணத்தை ஈடுபடுத்தினாலும் சரிதான் என்ற சமநோக்குள்ள மனோபாவத்தைப் பெறுவார்கள் என்றும் எதிர் பார்க்கலாம். ஆனால், பொருளாதாரம் முழுவதையும் பொறுத்த அளவில் மொத்தத்தில் ரொக்கவிருப்பம் அதிகரிப்பதன் பயனாக — அதுவும் ஊகவாணிக நோக்கத்தின் காரணமாக- அதிகமான ரொக்கப் பணத்தைப் பதுக்கிவைப்பார்களேயானால், பொருளாதார மந்தம் ஏற்பட்டு வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரிக்கும் என்பது தெளிவு. இத்தகைய சீரழிவைக் கண்டு ஏனோதானோவென்று

வாளாவிருந்தால் சமுதாயப் புரட்சிதான் ஏற்படும் என்று கீன்ஸ் எச்சரிக்கை விடுத்தார்.

### கொள்கைக்கான சில பாடங்கள்

முதலீட்டுக்கான தூண்டுதலைப்பற்றிக் கீன்ஸீயக் கோட்பாடு புகட்டும் பாடங்கள் பல உண்டு. நிறைவேலையை அமைப்பதற்கு அவை பெரிதும் பயன்படும். எனவே, அத்தகைய படங்களைச் சுருக்கி வரைவது அவசியம். முதலாவது, மணல்மேல் எழுப்பப்படும் கட்டடத்தைப்போன்று முதலீட்டு இறுதிநிலைத்திறன் நிலையற்று விளங்குகிறது என்று கண்டோம். பங்குச்சந்தையில் தனிப்பட்டவர்களின் எதிர் காலத்தைப் பற்றிக் கொள்ளும் இருண்ட மனப்பான்மையை நம்பிச் சமுதாயத்தின் எதிர்கால நலன்களுக்கு இன்றியமையாத முதலினச் சொத்துகளைப் பெருக்க இயலாதாகையால், அத்தகைய முதலீட்டு முயற்சிகளைத் தனியாரின் கையில் விட்டுவைப்பது அபாயகரமானது என்பது கீன்ஸ் கண்ட முடிவுகளுள் முக்கியமானதொன்றாகும். அதனடியாகத்தான் "முதலீட்டைச் சமுதாயப் பொது முயற்சியாக்க வேண்டும்" என்று கீன்ஸ் கோரினார் போலும். ஆயினும் முதலீட்டைத் தனியாரின் கையிலிருந்து எடுத்துப் பொது முயற்சியாக மாற்றுவதெப்படி என்பது பற்றி அவர் தெளிவான கருத்து எதையும் வெளியிட்டதாகத் தெரியவில்லை.

இரண்டாவது, முதலீட்டுக்கான தூண்டுதலுக்கு முட்டுக்கட்டையாக உள்ள வட்டிவீதத்தைக் கட்டுப்படுத்த வேண்டுமானால், தாராளமான பணக்கொள்கையைக் கடைபிடிக்க வேண்டுமென்று கீன்ஸ் வலியுறுத்தினார். ஊகவாணிக நோக்கத்துக்காக வேண்டப் படும் ரொக்கப் பணத்தினளவு மனக்குரங்கின் ஆட்டங்களுக்கேற்ப கூடுவதும் குறைவதுமாக நிலையற்று விளங்குவதால், அதன் சேஷ்டைகளைக் களையக்கூடிய வகையில் பணக்கொள்கை அமைய வேண்டுமென்பது கீன்ஸின் அவா. அத்தகைய கொள்கைக்கு அடிப்படையான கருத்துகள் உண்டு. வட்டிவீதத்திற்கும் ஊகவாணிக நோக்கத்துக்குமான ரொக்க விருப்பத்துக்குமுள்ள சம்பந்தமென்ன? வட்டி வீதத்தின் ஏற்றத்தாழ்வுகளால் முதலீடு எவ்வளவு தூரம் தூண்டப் படும்? முதலீட்டுப்பெருக்கியின் அளவு என்ன? என்ற கேள்விகளுக்குக் கிடைக்கும் விடைகளைப் பொறுத்தே பணக்கொள்கையை வகுக்க இயலும்.

மூன்றாவது, பணப்பெருக்கத்தைக் காட்டிலும் ரொக்க விருப்பம் வேகமாக அதிகரிக்குமானால் வட்டிவீதம் குறையும் என்று எண்ணுவதற்கில்லை. இத்தகைய சிக்கல்களால் வட்டிவீதத்தைக் காட்டிலும் முதலீட்டு இறுதிநிலைத்திறன் வேகமாகக் குறைந்து வரும். எனவே,

முதலீட்டிலோ வேலையினளவிலோ விரும்பத்தகுந்த விறுவிறுப்புத தென்படாது. குறிப்பாக, பொருளாதாரம் மந்தச்சேற்றில் பதிந்திருக்கும்போது ரொக்க விருப்பம் எக்கச்சக்கமாக அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கலாம். எனவே, பணக்கொள்கையில் என்னதான் தாராள மனப்பான்மை காட்டினாலும் வட்டிவீதம் ஒரு குறைந்தபட்ச அளவிற்குக் (கிட்டத்தட்ட 2 சதவீதத்துக்கும் கீழே) குறையாது. அதனால்தான் ரொக்க விருப்ப வளைகோடு இடமிருந்து வலமாகப் போகும்போது வட்டிவீதம் குறையக்குறைய கோடு தட்டையாகி ஓர் அளவை எட்டிய பின்னர் கிட்டத்தட்ட படுக்கைக் கோட்டின் வடிவத்தைப் பெறுவதைக் காணலாம் (படம் 14-ஐப் பார்க்க). இக் கட்டத்தை அடைந்த பின்னர் மேன்மேலும் பணத்தைப் பெருக்குவ வதால் மட்டும் வட்டிவீதத்தைக் குறைக்க இயலாது என்பதைக் கீன்ஸ் வலியுறுத்தினார்.

நான்காவது, பணத்தை ரொக்கமாகப் பதுக்குவதே வட்டி வீதத்தில் ஏற்படும் சிக்கல்களுக்கு (வேலையின்மைக்கு) முக்கிய காரணமாதலால் பதுக்கலைப் பாதிக்கக்கூடிய வரிக்கொள்கையின் மூலம் (வட்டிவீதத்தைக் குறைத்து) முதலீட்டைத்தூண்டி வேலைக் கான வாய்ப்புகளைப் பெருக்கலாம் என்பது கீன்ஸது கருத்து. இக் கோணத்தில் கீன்ஸது பரிகாரம் சில்வியோ கெஸல் (Silvio Gesell) என்பவரது கருத்தை ஒத்திருப்பது குறிப்பிடத்தக்கது.

### கீன் ஸியக் கோட்பாடுகளைப் பற்றிய திறனாய்வு

தொன்மைப் பொருளாதாரிகளின் கோட்பாடுகளைக்கடுமையாகத் தாக்கியவர் கீன்ஸ். நிறைவேலை என்ற நடைமுறைக்கு ஒவ்வாத முற்கோள்களைக் களைத்தெறிந்தார். அந்த அடிப்படையில் எழுப்பப்பட்ட பொருளாதாரக் கோட்பாடுகள் பலவற்றைத் தூக்கி எறிந்து, வேலை, வட்டி, பணம் ஆகியவை பற்றிய கோட்பாடுகளை அடியோடு மாற்றியமைத்தார். அக் கோட்பாடுகளில் முதலீட்டுத் தூண்டுதலுக்கு முக்கிய இடமளிக்கப்பட்டது. முதலீட்டைப் பெருக்கினால் வருவாயையும் வேலையையும் பெருக்கலாம் என்பது அவரது கருத்துக்களுள் முக்கியமானதொன்று. முதலீட்டினளவை நிருணயிப்பதில் முதலீட்டு இறுதிநிலைத்திறனுக்கும் வட்டிவீதத்துக்கும் பங்கு உண்டு. இவற்றுள் வட்டிவீதம் சிக்கல்கள் நிறைந்தது. எனவே, முதலீட்டு இறுதிநிலைத்திறனின் சிறப்பை வலியுறுத்தினார். அதேசமயத்தில், ரொக்க விருப்பமே வட்டிவீதத்திலுள்ள சிக்கல் களுக்கு மூலகாரணமாதலால் பணத்தை அளிக்கும் உரிமைபெற்ற பணநிலையங்கள் பணத்தினளவைக் கட்டுப்படுத்த வேண்டியதன் அவசியத்தை எடுத்துரைத்தார். முதலீட்டுத் தூண்டுதலை ஒட்டிய

இத்தகைய கருத்துகள் உலகெங்கணுமுள்ள முதலாளித்துவப் பொருளாதாரங்களில் கருத்துப் புரட்சிக்கும் கொள்கைப் புரட்சிக்கும் வழிகோலியது என்பதில் ஐயமில்லை. ஆயின், அவற்றை ஊன்றிப் படித்த பல பொருளாதார மேதைகள் அவரது கருத்துகளையும் கோட்பாடுகளையும் பலவாறாகத் திறனாய்வு செய்துள்ளனர். முதலீட்டுக்கான தூண்டுதலைப்பற்றிய இத்தகைய திறனாய்வுகளை மூன்றுவகையாகப் பிரிக்கலாம். ஒரு சாரார் முதலீட்டுக்கு அவர் இவ்வளவு முக்கியத்துவம் கொடுத்திருக்க வேண்டிய அவசியமில்லை என்று கருதலாயினர். பணத்தின் அளிப்பையும் தேவையையும்—குறிப்பாக ரொக்க விருப்பத்தையும்—பற்றிய அவரது கருத்துகள் குழப்பம் விளைவிப்பதாக உள்ளது என்பது மற்றொரு சாராரின் கருத்து. முதலீட்டு இறுதிநிலைத்திறன் என்ற கருத்தைக் கீன்ஸ் அவ்வளவு தெளிவாக விளக்கவில்லை என்று திறனாய்வு செய்பவர்கள் வேறொரு சாரார். இத்தகைய திறனாய்வுகளைக் சுருக்கி வரைவது மிகவும் பயன் தருவதாகும்.

## முதலீட்டுக்கு இவ்வளவு முக்கியத்துவம் கொடுப்பானேன்?

நிறைவேலை நிலையை நிலைநாட்டுவதில் நனிநாட்டங் கொண்ட கீன்ஸ் முதலீட்டுக்கு மட்டும் இவ்வளவு முத்கியத்துவம் கொடுப்பானேன்; வளைந்து கொடுக்காத கூலி வீதமும் தேக்கமுற்ற பணத்தினளவு வேலையின்மைக்கு வழிநடத்தும் என்பதை ஏன் அவ்வளவு ஆணித்தரமாக வலியுறுத்தவில்லை என்று சிலர் கேட்கின்றனர். முதலீடு இலாபகரமாக இல்லாத வேளையில் பணப் பெருக்கத்துடன் கூலியும் குறைந்துபட்டால் முதலீட்டுக்கான நாட்டம் உயிரோட்டம் பெறும் என்பது அவர்களது வாதம்.

பொருளாதாரத்தின் நெடுங்காலப் போக்கைப்பற்றிய கீன்ஸீயக் கருத்துகள் தலைகீழாக மாறிவந்திருப்பது கண்கூடு. தொன்மைப் பொருளாதாரப் பரம்பரையை ஒட்டிய புதுச்சம்பிரதாயக் கருத்தோரின் ஒருவராகக் கருதப்பட்டவர் கீன்ஸ். சமாளிக்க இயலாத சிக்கல்கள் எதுவுமின்றி முதலாம் உலகப்போர் வரையில் சுமுகமாக இயங்கிவந்த பொருளாதாரத்தின் நடைமுறைகளில் ஊறியவர் அவர். உலகப்போர்களுக்கு இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்ட நூல்களில்கூட முயற்சியுள்ள பொருளாதாரங்களின் நெடுங்காலப்போக்கு மந்தம் பிடித்ததாக இருக்கும் என்ற கருத்துக்கு இடங்கொடுக்கவில்லை. முதலாளித்துவப் பொருளாதாரத்தின் செயல் முறைகள் அத்துணைச் சக்தி வாய்ந்தவை என்று எண்ணி வந்த அவர் பெரும் பொருளாதார மந்தத்தின் கொடுமையைக் கண்டு மருண்டு முதிர்ச்சியுள்ள பொருளாதாரங்கள் மந்தப்போக்கிலிருந்து தப்ப

இயலாது என்ற அவநம்பிக்கையால் பீடிக்கப்பட்டார். பிரிட்டிஷ்மக்களின் எண்ணிக்கையோ பெருகுவதாக இல்லை; சிக்கனமாக வாழத்தெரிந்தவர்களாதலால் சேமிப்புக்குக் குறைவே இல்லை; தேக்கமுறும் மக்கள்தொகையைக் கொண்டு சேமிப்பை அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்தாலன்றி பிரிட்டிஷ் பொருளாதாரம் சிறப்பாக முன்னேறாது என்று கவலைப்படலானார்.

முதுமைதட்டிய பொருளாதாரங்கள் தனியாரின் முதலீட்டு முயற்சியால் மட்டும் தானாக இயங்கிவளரும் தகைமை கொண்டது என்ற நம்பிக்கையை அவர் இழந்தாரெனினும், முதலாளித்துவப் பொருளாதாரங்கள் முன்னேறவே வழியில்லை என்று அங்கலாய்த்தார் என்று சொல்ல இயலாது. மாறாக, சோர்ந்து வரும் முதலாளித்துவப் பொருளாதாரங்களுக்கு தெம்பூட்டி ஊக்குவிக்க முடியும் என்ற நம்பிக்கையின் பேரில்தான் அவர் தமது கோட்பாடுகளையும் கொள்கைகளையும் வகுக்கலானார் என்றால் மிகையாகாது. எனினும், மக்கள் தொகை வளர்ச்சியுறாமல் தேக்கமுறுவதால் முதலீட்டுக்கான வாய்ப்புகள் சுருங்க நேரிடும் என்ற கருத்து அவ்வளவு பொருத்தமானதன்று என்பது சிலரது அபிப்பிராயம். வேலையின்மை பெருகி வரும் வேளையில் வேலை தேடிவரும் மக்கள்தொகை குறையுமானால், வேலையில்லாமல் திண்டாடுபவர்களின் எண்ணிக்கையும் குறையுமல்லவா என்று ஒருபுறம் கேட்கின்றனர். அத்தோடு மக்களது எண்ணிக்கையைக் காட்டிலும் அவர்களது வருவாயின் அளவு என்ன? வாழ்க்கைத்தரம் எத்தகையது? என்பவற்றைப் பொறுத்தல்லவா உற்பத்தியைப் பெருக்க முடியும் என்றும் சிலர் வாதாடுகின்றனர். எப்படியாயினும் மந்தப்பட்டிருக்கும் பொருளாதாரத்துக்கு மக்கள் பெருக்கத்தால் விமோசனம் கிடைக்கும் என்று எதிர்பார்ப்பது சற்று விசித்திரமானதல்லவா என்று கேட்பதில் பொருளுண்டு.

சேமிப்பை எவ்வாறு கீன்ஸ் புறக்கணித்தார் என்பதைப்பற்றி முந்திய அத்தியாயத்திலேயே குறிப்பிட்டோம். எதிர்பார்க்கப்படும் விளைவுகளையும் வட்டிவீதத்தையும் பொறுத்தே முதலீடு தூண்டப்படும் என்பது அவரது கருத்து. அப்படியானால் சேமிப்பு இல்லாமலேயே முதலீடு நடைபெற இயலும் என்று கொள்வதா? முதலீட்டுக்கு வேண்டிய நிதியைச் சேமித்து அளிப்பாரின்றி முதலீடு செய்வதெப்படி? என்ற கேள்விகள் எழுவது இயல்பு. சேமிப்பு தானாகவே உருமாறி முதலினச் சொத்துக்களாக வடிவெடுப்பதில்லை என்பது கீன்ஸது வாதம். ஒரு சமுதாயத்தில் ஒருவர் சேமிப்பதும் மற்றொருவர் சேமிப்பைக் கரைப்பதுமாக இருந்தால், ஒருவேளை சமுதாயத்தின் மொத்த சேமிப்பு அதிகரிக்காமல் இருக்கலாம்.

அல்லது சேமிப்பு அதிகரிப்பதற்கேற்ப பணத்தினளவு அதிகரிக்காமல் அல்லது குறைந்துபட்டால் ஒருவேளை சேமிப்பைப் பயன்படுத்த முடியாமல் போகலாம். அவ்வாறின்றி, சேமிப்புப் பெருகிவரும்போது அதற்கேற்ப பணத்தினளவும், விலைவாசிகளும் மாறிவருமாஞல் பெருகிவரும் சேமிப்பை உறிஞ்சக்கூடிய வகையில் முதலீடும் அதிகரிக்குமென எதிர்பார்க்கலாம் என்பது சிலரது கருத்து. குறிப்பாக, சேமிப்பு அதிகரித்து வரும்போது விலைவாசிகள் படுக்குமாஞல் அதஞல் பொருள்களுக்குள்ள தேவை தூண்டப்படும்; அதன் காரணமாக, முதலீடும் வேலையினளவும் அதிகரிக்கும் என்பது அவர்களுடைய கருத்து. தேவை மாருத நிலையில்கூட விலைவாசிகள் இறங்கிஞல், ஏற்கனவே உள்ள பணத்தினளவைக் கொண்டு அதிகமான பொருள்களை வாங்க முடியுமாதலால் வேலையினளவு குறையும் என்று எண்ண இடம் கிடையாது. எனவே, வளைந்து கொடுக்காத விலைவாசிகளும் குறைந்துவரும் பணஅளிப்புமே வேலை யின்மைக்கான முக்கியமான காரணங்களாகும்; சேமிப்பு அன்று என்பது அவர்களது துணிபு.

பணத்தின் தேவை—அளிப்பு பற்றிய தெளிவற்ற கருத்துகள்

வட்டிவீதம்தான் சேமிப்பையும் முதலீட்டையும் சமநிலைப் படுத்தும் என்பது தொன்மைப் பொருளாதாரிகளின் கருத்து. மாருக வட்டிவீதம் அதிகரித்தால் முதலீடும் வருவாயும் சுருங்கி அதன் பயஞகச் சேமிப்பும் குறையும் என்பது கீன்ஸின் கருத்து. அதே சமயத்தில், முதலீட்டுக்கான தேவை அதிகரிக்குமாஞல் சேமிப்புச் சுருங்க அவசியமில்லை என்றும் லாவகமாகச் சொல்லி வைத்திருக் கிருர். அதன்படி, முதலீட்டுக்கான தேவை அதிகரித்தால் அதிக சேமிப்புத் தேவைப்படும்; எனவே வட்டிவீதம் உயரும்; வட்டி வீதத்தால் தூண்டப்படும் சேமிப்பு உடனடியாக முதலீட்டில் உறிஞ்சப்படும். இக்கண்ணேட்டத்தில் கீன்ஸின் கருத்து முன்னுக் குப்பின் முரணுக இருப்பது தெரியவரும்.

வட்டிவீதம் செலவைச் சிக்கனப்படுத்திச் சேமிப்பவர்களுக்கு வழங்கப்படும் பரிசு என்ற தொன்மைப் பொருளாதாரக் கருத்தை கீன்ஸ் எப்படிக் கடுமையாக எதிர்த்துத் தாக்கிஞர் என்பதை ஏற்கெனவே கண்டோம். மாருக, வட்டிவீதம் ரொக்க விருப்பத்தை விட்டுக்கொடுப்பதற்கு வழங்கப்படும் பரிசு என்பது கீன்ஸது கருத்து. சேமிப்பை உவந்தளிப்பவர்கள் இல்லாவிட்டால் கையிருப்பாக வைக்கக்கூடிய ரொக்கப்பணம் எங்கிருந்துவரும் என்பது சிலரது கேள்வி.

சேமிப்பவர்களுக்குச் சன்மானம் வழங்கும் வகையில் வட்டி கொடுக்கப்படவில்லை. முதலீட்டின்மூலம் இலாபமடையும் நோக்கத்துடனேயே கடனாகப் பெறும் முதலுக்கு வட்டி கொடுக்க முன்வருகிறார்கள். இக் கருத்தைக் கீன்ஸ் புறக்கணிப்பதாகத் தெரிகிறது. ரொக்க விருப்பமும் பணத்தினளவும் மாறினாலன்றி வட்டிவீதம் மாறுபடாது என்பது கீன்ஸது கருத்து. அதன்படி முதலீட்டுக்கான தேவை மாறினால்கூட, வட்டிவீதம் மாறாது என்று ஆகிறது. இது எவ்வளவு பொருத்தமானது என்பது ஒரு கேள்வி. நடவடிக்கை, எச்சரிக்கை ஆகிய நோக்கங்களுக்காக வேண்டப்படும் ரொக்கப்பணம் பதுக்கி வைப்பதற்காக அன்று; செலவிடுவதற்காக என்பது டி. எச். ராபர்ட்சன் (D. H. Robertson) என்பவரின் கருத்து. அதன்படி, முதலீடும் வருவாயும் நுகர்வும் பெருக்கும்போது நடவடிக்கை, எச்சரிக்கை ஆகிய நோக்கங்களுக்காக வேண்டப்படும் ரொக்கப் பணமும் அதிகரிக்கும் என்பது புலனாகும். தொழிற்றுணிவு கொண்டவர்கள் இத்தகைய ரொக்க விருப்பங்கொள்ளுவார்களேயானால், அது முதலுக்குள்ள தேவையைத்தான் பிரதிபலிக்கும். அத்தகைய தேவையால் வட்டிவீதம் பாதிக்கப்படும் என்பது அவரது வாதம்.

பொருளாதாரம் மந்தப் படுகுழியின் அடிமட்டத்தை எட்டுகின்ற வேளையில் மக்கள், பணத்தை ரொக்கமாகக் கையில் வைத்திருக்க விரும்புவதைக் காணலாம். கீன்ஸீயக் கோட்பாட்டின்படி அத்தகைய ரொக்க விருப்பத்தால் வட்டிவீதம் உயரவேண்டும். ஆனால், நடைமுறையில் மந்தத்தின்போது குறுகியகால வட்டிவீதமும் அடிமட்டத்தில் உராய்ந்து கொண்டிருப்பதைப் பார்க்கலாம். நடைமுறையில் காணக்கூடிய இத்தகைய அனுபவங்கள் கீன்ஸீயக் கோட்பாட்டுக்கு முரணானவை என்பது தெளிவு. பொருளாதாரம் மந்தப்படும்போது பலர் கடன்பத்திரங்களைக் குறைந்த விலைக்கு விற்க முன்வருவது உண்டு. அதன் பயனாக, அப் பத்திரங்களின் வட்டிவீதம் உயருவதாகக் கொள்ளலாம். ஆனால், இத்தகைய உயர்வு மக்களது ரொக்க விருப்பம் அதிகரிப்பதால் ஏற்படுவதன்று. எதிர்காலத்தில் கடன்பத்திரங்கள் ஈட்டக்கூடிய வட்டிவீதம் மேலும் குறைந்துபடுமோ என்ற அச்சமே வட்டிவீதம் உயருவதற்கான உண்மையான காரணமாகும். எனினும், பத்திரவிலை படுப்பதால் வட்டிவீதத்தில் ஏற்படக்கூடிய பெயரளவான ஏற்றத்தைக் கொண்டு உண்மையாகவே குறுகியகாலக் கடன்களுக்கு வழங்கப்படும் வட்டிவீதம் உயர்வதாகக் கொள்ளலாகாது.

ரொக்க விருப்பமே முதலீட்டுக்கு முட்டுக்கட்டையாக உள்ளது என்பது கீன்ஸின் கருத்து. ஆனால் ரொக்கப் பணம் என்றால் என்ன என்பது அடிப்படையானதோர் கேள்வி. முதலினச் சொத்துகளை

ரொக்கப்பணமாக கருதமுடியுமா? என்ற கேள்விக்குக் கீன்ஸ் தெளிவான விளக்கம் கொடுப்பதாகக் காணோம். குறிப்பாக, வங்கி வைப்புகளைக் கீன்ஸ் பணமாக்கக் கருதினர் என்று கண்டோம். அதிலும் பணத்திலே செக்குப் பணம்தான் அதிக முக்கியத்துவம் வாய்ந்தது என்பதையும் அவர் வலியுறுத்தினர். ஆனல் வங்கி வைப்புகள், நடப்பு வைப்புகள் (Demand deposits), காலக்குறி தவணை வைப்புகள், (Time deposits) என இருவகைப்படும். இவற்றுள் நடப்புவைப்பை நினைத்தமாத்திரத்தில் ரொக்கமாக மாற்றலாம் என்பது உண்மை, ஆனல், காலக்குறிதவணைவைப்பை எளிதில் ரொக்கமாக மாற்ற இயலாது. எனினும் கீன்ஸ் அத்தகைய வைப்பு களைப் பணம் என கருதத் தயங்கவில்லை. அப்படியானல் முதலுக்கு நஷ்டமில்லாமல் ரொக்கமாக மாற்றக்கூடிய வேறுவிதமான முதலினச் சொத்துகளைமட்டும் ஏன் பணமாகக் கருதக்கூடாது என்பது நியாயமான கேள்வி. குறுகியகாலப் பத்திரங்களையும் அதைப் போன்ற முதலினச் சொத்துகளையும் முதலுக்கு மோசமில்லாமல் எளிதில் ரொக்கமாக மாற்றமுடியும். மேலும், நெருக்கடி நேரும்போது பரிவுடன் உதவக்கூடிய பாங்குகளோ ஏனைய நிதிநிறுவன்ங்களோ இருக்குமானல் அவற்றையும் பணத்துக்கு ஈடாகவே கருதவேண்டும். இப்படிப் பணத்துக்கு ஒரு பரந்த இலக்கணம் கொடுக்க முற்பட்டால் ரொக்கவிருப்பம் என்றல் என்ன என்பதே தெளிவில்லாமற் போய்விடும். மேலும், வங்கிகளின் நிருவாகிகள் தங்கள் கைவசமுள்ள ரொக்கப்பணம் குறைந்தபட்ச காப்புநிதிக்கும் அதிகமாக இருந்தபோதிலும் தங்கள் முதலீடுகளை அதிகரிக்காமலிருந்தால் அதன் காரணமாக முதலீடு தடைபடலாம். ஆனல், முதலீட்டுக்கு ஏற்படும் இத்தகைய இடையூறு ரொக்க விருப்பத்தால் ஏற்படுவதன்று; வங்கிக் கொள்கையால் உண்டாவது என்பது குறிப்பிடத்தக்கது.

வட்டிவீதம் ரொக்க விருப்பத்தைக் கைவிடுபவர்களுக்குக் கிடைக்கும் ஊதியமன்று என்பதைச் சிலர் வேறுவிதமாகவும் வலியுறுத்தியுள்ளனர். ரொக்க விருப்பத்தை விட்டுக்கொடுப்பவர் களுக்கே வட்டி கொடுக்கப்படுமானல், ரொக்கநிலை பாதிக்கப்படாத நிலையிலும் வட்டி வழங்கப்படுமானல், அதை ரொக்க விருப்பத்துக்கு ஈடாகக் கருத இயலாது. சான்ருக, காலக்குறிதவணைவைப்பு, கருவூல உண்டியல் (Treasury Bill), மாற்று உண்டியல் (Bill of Exchange) போன்ற முதலீடுகளால் ரொக்கநிலை பாதிக்கப்படாத நிலையிலேயே வட்டியும் கிட்டும் என்பது தெளிவு. இது கீன்ஸியக் கோட்பாட்டுக்கு ஒவ்வாததாகும்.

ரொக்க விருப்பம் பற்றிய கருத்துகளையும் கீன்ஸ் ஒரே சீராக வெளியிட்டார் என்று சொல்ல இயலாது. சில இடத்தில் ரொக்க விருப்பத்தைப் பண மதிப்பில் கணக்கிட்டு அதை வட்டி வீதத்தோடு சம்பந்தப்படுத்திக்காட்ட விழைகிருர்; வேறு சில இடங்களில் பணத்துக்கான தேவையின் உண்மை மதிப்பை வட்டிவீதத்தோடு இணைத்துக் காட்ட விரும்புகிருர். இப்படி ரொக்க விருப்பத்தைப் பணமதிப்பைக் கொண்டும் உண்மை மதிப்பைக் கொண்டும் வெளியிட முயலுவது மிகவும் குழப்பம் விளைவிப்பதாகும்.

வட்டிவீதம் எப்படி மாறுகிறது என்பதை விளக்கும்போது கீன்ஸ் பணத்தின் அளவை மாருததாகக்கொண்டு ரொக்க விருப்பத்துக்கும் வட்டிவீதத்துக்குமுள்ள உறவைச் சம்பந்தப்படுத்திக் காட்டுகிருர். ஆனல், உண்மையில் பணத்தினளவு ஒரேநிலையில் இருப்பதில்லை. பணத்துக்கான தேவை அதிகரிக்கும்போது வங்கிகள் அதற்கேற்ப கடன்வசதிகளை பெருக்கும். அவசியமானல் மையப்பாங்கிடம் கடன்பட்டாவது கடனுக்கான தேவையைப் பூர்த்தி செய்ய வங்கிகள் முயற்சி செய்யும். எனவே, ரொக்கத்தேவை அதிகரிப்பதற்கேற்ப பணத்தினளவு மாருது என்று நினைப்பது தவறு.

பணத்தை ஏன் ரொக்கமாக மக்கள் பதுக்கி வைக்க விரும்புகிருர்கள் என்பது பற்றியக் கீன்ஸீயக் கருத்துகளிலும் ஒரு சில குறைபாடுகளைச் சுட்டிக் காட்டியுள்ளனர். கீன்ஸ் நினைத்ததுபோல் தொன்மைப் பொருளாதாரிகள் பதுக்கலை அடியோடு மறந்து விட்டார்கள் என்று சொல்ல முடியாது. ஆனல், அப்படிப் பாதுகாக்கப்படும் பணத்தினளவில் கணிசமான ஏற்றத்தாழ்வு காணப்படலாம் என்று அவர்கள் கருதவில்லை. வட்டி வீதம் ஒரு சில சதவீதங்கள் இறங்கினல்கூட பதுக்கப்படும் பணத்தினளவில் குறிப்பிடத்தக்க மாற்றம் இருக்கும் என்று அவர்கள் நினைக்கவில்லை. மாருக, விலைவாசிகளின் எதிர்காலப்போக்கு எப்படி இருக்கும் என்பதைப் பற்றிய கணிப்புகளும், பொதுப்படையான சந்தேகங்களும், உற்சாகமற்ற தன்மையும், முதலீட்டுக்கான வாயில்கள் தற்காலிகமாக அடைபட்டுப் போவதுமே ரொக்கப்பணம் பதுக்கப்படுவதற்கு முக்கிய காரணமாக அவர்கள் கருதி வந்தார்கள். ஒருவகையில் பதுக்கலைப்பற்றி தொன்மைப் பொருளாதாரிகள் கொண்டிருந்த கருத்து கீன்ஸீய ரொக்க விருப்பக் கோட்பாட்டைக் காட்டிலும் சிறந்ததாகச் சிலர் எண்ணுகின்றனர்.

அவரது ரொக்க விருப்பக்கோட்பாட்டை அடிப்படையில் ஏற்றுக் கொள்ளுபவர்கள்கூட அதை விவரித்துப் பரந்ததோர் அடிப்படையில் மாற்றி அமைத்திருக்கவேண்டும் என்ற கருத்தைக்கொண்டுள்ளனர். உதாரணமாக, ரொக்கத்தன்மை வாய்ந்த பலதரப்பட்ட

சொத்துகள் இருப்பது அனைவரும் அறிந்ததே. அச் சொத்துகளின் தன்மையையும் அவற்றுக்கு உரிய ரொக்க விருப்பங்களை அலசி ஆராய்ந்து அதனடிப்படையில் கீன்ஸ் தமது பணக்கோட்பாட்டை வகுத்திருந்தால் மிகவும் பயனுள்ளதாக இருந்திருக்கும் என்பது அவர்களது கருத்து. வெவ்வேறு வகையான சொத்துகளைப்பற்றிய விவரமான கருத்தோட்டங்கள் பல, பணத்தைப்பற்றி கீன்ஸ் ஏற்கனவே எழுதிய நூல்களில் சிதறிக்கிடப்பதைக் காணலாம். அவற்றை ஒருங்கே சேகரித்துப் பொதுக்கோட்பாட்டில் பணத்தைப் பற்றி எழுதப்பட்ட பகுதியில் பொருத்தியிருந்தால் பணக்கோட்டின் பயன் மிகுதியாக இருந்திருக்கும் என்பது அவர்களது கருத்து.

## முதலீட்டு இறுதிநிலைத்திறன் பற்றிய குழப்பங்கள்

கீன்ஸ், முதலீட்டு இறுதிநிலைத்திறன் பற்றிய தமது கருத்தைப் பல பொருள்படும்படி பயன்படுத்தியுள்ளார். பெரும்பாலும் இக் கருத்தை எதிர்பார்க்கப்படும் விளைவுகள் அல்லது முதலினச் சொத்துகளின் அளிப்புவிலை என்ற பொருளில் பயன்படுத்தி வந்தார். குறிப்பாக, புத்தம்புது முதலினச் சொத்துகளை உருவாக்கிப்படைப்பதால் எதிர்பார்க்கப்படும் விளைவுகளையே அது குறிப்பதாகும். ஆனால், கீன்ஸ் அத்தோடு நிற்காமல் அடுத்து முதலீட்டு இறுதிநிலைத்திறனின் பட்டியல் என்ற கருத்தைக்கொண்டு வருகிறார். இதை முதலீட்டுத் தேவையைக் காட்டும் பட்டியல் என்றும் கூறலாம். அப் பட்டியலி லிருந்து முதலீட்டை எவ்வளவு தூரம் கொண்டு செலுத்தலாம் என்பதைக் கண்டு கொள்ளலாம். அதாவது, முதலீட்டு இறுதிநிலைத் திறனும் வட்டிவீதமும் சமநிலைக்கு வரும்வரை முதலீட்டை அதிகரிக்கலாம் என்பது பொருள். இக் கருத்து ஒரு குறிப்பிட்ட துறையில் முதலீடு செய்வதற்கான முடிவுகளை எடுப்பதற்குத் துணைபுரிவதாகும். ஆனால், அதே கருத்தை அவர் பொருளாதாரம் முழுவதையும் பற்றிய இலாப எதிர்பார்ப்புகளைக் காட்டும் கண்ணாடி யாகப் பயன்படுத்தும்போது எதிர்காலத்தைப்பற்றிய அச்சமும் சந்தேகமும் அவற்றினடியாகப் பிறக்கும் ஊகவாணிக நோக்கமும் முதலீட்டுக் கோட்பாட்டில் முக்கிய இடம் பெறுவதாயிற்று. இந்தக் கோணத்தில் நோக்கினால் முதலீட்டு இறுதிநிலைத்திறன் என்ற கருத்து ஊகவாணிகத்தின் வாயிலாக எதிர்பார்க்கப்படும் பண இலாபம் என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டிருப்பது தெரியவரும்.

மேலும், எதிர்பார்க்கப்படும் விளைவுகளால் பாதிக்கப்படுவது முதலீட்டு இறுதிநிலைத்திறன் மட்டும்தான்; வட்டி வீதமன்று என்ற கீன்ஸீயக் கருத்து அனுபவத்தின்பாற்பட்டதன்று என்பது ஒரு சிலரின் அபிப்பிராயம். வருங்காலத்தில் விலைவாசிகள் விறுவிறுப்பாக இருக்குமென்று எதிர்பார்க்கப்பட்டால் அதன்பயனாக முதலீட்டு

இறுதிநிலைத்திறன் விளக்கமுற்று முதலீட்டுக்கு வழிநடத்தும் என்பது உண்மை. ஆனால், அதே எதிர்பார்ப்புகளால் வட்டிவீதம் உயராது என்று எப்படிச் சொல்ல முடியும் என்பது அவர்களது கேள்வி. விலைவாசிகள் ஏறும் என்று எதிர்பார்த்தால் லேவாதேவி செய்பவர்கள் வட்டிவீதத்தையும் அதற்கேற்ப கூட்டமுயலுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், கீன்ஸ் இத்தகைய கருத்தில் கவனம் செலுத்தியதாகக் காணோம். வருங்காலம் பற்றி எதிர்பார்ப்புகளால் வட்டிவீதமும் பாதிக்கப்படலாம் என்ற கருத்துக்கு இடங்கொடுத்தால், கீன்ஸின் முதலீட்டுக் கோட்பாடு ஈடேறாது என்று எண்ண இடமுண்டு. அதனால்தான் முதலீட்டு இறுதிநிலைத் திறனை எதிர்காலத்தோடு இணைக்கப்பட்ட இயக்கநிலைக் கருத்தாகவும் வட்டிவீதத்தை நிகழ்காலத்தோடு பிணைக்கப்பட்ட தேக்கநிலைக் கருத்தாகவும் சித்திரித்தார் போலும்.

முதலீட்டுத்திறனால் வட்டிவீதத்தின் எல்லைகள் நிருணயிக்கப் படுகின்றனவா அல்லது வட்டிவீதத்தால் முதலீட்டு இறுதிநிலைத் திறனின் எல்லைகள் வகுக்கப்படுகின்றனவா என்ற கேள்விக்கும் முன்னுக்குப்பின் முரணான கருத்துகளை வெளியிட்டிருப்பதாகத் தெரிகிறது. முதலீட்டு இறுதிநிலைத்திறனுக்குமேல் வட்டிவீதம் உயரமுடியாது என்பது பொதுக்கோட்பாட்டில் காணும் கருத்து. அதன்பின்னல் 'குவார்ட்டலி ஜர்னல் ஆப் எக்கனாமிக்ஸ்' என்ற பொருளாதாரப் பத்திரிகையில் (Quarterly Journal of Economics) வட்டிவீதம்தான் முதலீட்டு இறுதிநிலைத்திறனின் வரம்பை வகுப்பதாகக் குறிப்பிட்டுள்ளார். ஒருவேளை முந்திய எல்லை உச்ச வரம்பையும் பிந்தியது குறைந்தபட்ச வரம்பையும் குறிப்பதாக இருக்கலாம். அல்லது சந்தையைச் சார்ந்து சுயமாக இயங்கிவரும் பொருளாதாரத்தில் முன்னையதும் அரசாங்கத் தலையீட்டுக்கு உட்பட்டு பணத்தைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் பெற்ற பணநிலையங்களைக்கொண்ட பொருளாதாரத்தில் பின்னையதும் பொருந்துவதாக இருக்கலாம். இதைக் கீன்ஸே தெளிபடுத்தியிருந்தால் நன்றாக இருந்திருக்கும்.

முதலீட்டு இறுதிநிலைத்திறனும் வட்டிவீதமும் ஒன்றையொன்று சாராத மாறிகளாகக் கீன்ஸ் கருதிவந்தார். அவற்றை நிருணயிக்கும் காரணிகளும் வெவ்வேறாக இருப்பதாகவே விவரித்துள்ளார். எனினும், அவர் ஒன்றுக்கொன்று தொடர்பு இல்லாதவையாக எண்ணியவை ஒன்றையொன்று சார்ந்திருப்பதைக் காணலாம். உதாரணமாக, எதிர்பார்க்கப்படும் விளைவுகளே முதலீட்டு இறுதி நிலைத்திறனையும் அதனடிப்படையில் தயாரிக்கப்படும் முதலீட்டுத் தேவை அட்டவணையையும் நிருணயிக்க உதவும் என்பது கீன்ஸியக்

கருத்து. அதேசமயத்தில், நுகர்வுநாட்டத்தில் ஏற்படும் நிரந்தரமான மாற்றங்களும் முதலீட்டுக்கான தேவையைப் பாதிக்கும் என்று எதிர்பார்க்கலாம். இவ்வாறு முதலீட்டு இறுதிநிலைத்திறனும் இறுதிநிலை நுகர்வுநாட்டமும் ஒன்றையொன்று சார்ந்திருக்குமானல் வட்டிவீதத்துக்கும் முதலீட்டு இறுதிநிலைத்திறனுக்கும் தொடர்பு இருப்பதைக் காணலாம். வட்டிவீதத்தால் ரொக்கவிருப்பம் பாதிக்கப்படும்; அதனுல் சேமிப்பும் இறுதிநிலைச் சேமிப்பு நாட்டமும் பாதிக்கப்படும்; அதன் காரணமாக இறுதிநிலை நுகர்வுநாட்டம் பாதிக்கப்படும். அதன் விளைவாக முதலீட்டு இறுதிநிலைத்திறன் பாதிக்கப்படும். எனவே, முதலீட்டு இறுதிநிலைத்திறன் வட்டிவீதத்தாலும் இறுதிநிலை நுகர்வுநாட்டத்தாலும் பாதிக்கப்படும் என்பது தெளிவு. இதிலிருந்து பொதுக்கோட்பாட்டில் பொதிந்துள்ள கருத்துகளில் எவை எவை ஒன்றையொன்று சார்ந்தவை,எவை எவை சார்பற்றவை என்று தெளிவாகச் சொல்ல முடிவதில்லை.

இத்தனை குறைபாடுகளிலிருந்தபோதிலும் கோட்பாட்டு ரீதியிலும், கொள்கை வடிவிலும் முதலீடு பற்றிக் கீன்ஸ் வெளியிட்டுள்ள 'புரட்சிகரமான' கருத்துகள் முதலாளித்துவப் பொருளாதாரங்களுக்குப் புத்துயிரளித்து அதைப் பிடித்து வாட்டி வந்த பொருளாதார மந்தத்தைக் கலைத்து அதனுல் ஏற்பட்டுவந்த வேலையின்மையின் கொடுமைகளை மட்டுப்படுத்தி அவற்றின் ஆயுள் காலத்தை நீடிக்க உதவின என்றுல் மிகையாகாது.


1. Dillard D., Op. Cit., Chapters 5, part I.
2. Hansen A. H., Op. Cit., , Chapters 5, 6 & 7.
3. Hariss S.E., Op. Cit., Chapters XXXI, XXXII, XLIII, XLIV, XLV & XLVI.
4. Hazlitt H., *Critics of Keynesian Economics*, Op. Cit., Chapters V part B, Chapter VI & IX.
5. Hazlitt H., *The Failure of New Economics*, Op. Cit , Chapters VI, X, XII, XIII, XIV & XVII.
6. Keynes J.M., Op. Cit., Chapters 11, 12, 13 & 15.
7. Klein L.R. Op. Cit, Chapter 5 Part I.
8. Kurihara K.K., Op. Cit., Chapters 3 & 4.
9. Leizonhurud A., *On Keynesian Economics and Economics of Keynes*, Oxford, London, 1968, Chapters III. 2, III. 3, IV. 1 & V. 3.
10 Macracken H.L., *Keynesian Economics in the Stream of Economic Thought*, Luisiana, U.S.A., 1961 Chapter 8.
11. Murad, Op. Cit., Chapter XVI.

## அனுபந்தம்
## வட்டிபற்றிய புதிய கோட்பாடு

கடனுக்குள்ள தேவையையும் அளிப்பையும் பொறுத்து வட்டி வீதம் நிருணயிக்கப்படும் என்பது தொன்மைப் பொருளாதாரிகளின் கருத்து என்பதை ஏற்கனவே கண்டோம். அவ்வாறின்றிச் சேமிப்பையும் முதலீட்டையும் சமநிலையில் வைத்திருக்க உதவுவதே வட்டிவீதம் என்றனர் புதுச்சம்பிரதாயக் கருத்தோர். மாறாக, ரொக்கப் பணத்துக்குள்ள தேவையையும் அளிப்பையும் பொறுத்து வட்டிவீதம் மாறுபடும் என்று கீன்ஸ் கருதலானார்.

சேமிப்பவர்கள்மட்டுமே கடன் வழங்க முடியும் என்றும் அத்தகைய சேமிப்பு முழுவதையும் அவர்கள் கடனாக அளிக்க முன்வருவார்கள் என்றும் கொண்டால், கடனாக அளிக்கப்படும் தொகையும் சேமிப்பும் சமமாக இருக்கும் என்பது விளங்கும். அதேபோல் முதலீடு செய்பவர்கள் மட்டுமே கடன் வாங்க முற்படுவார்கள் என்றும் அவ்வாறு வாங்கிய கடனைப் பணவடிவில் பதுக்கி வைக்காமல் முதலீட்டில் ஈடுபடுத்துவார்களானால் கடன் கொண்ட தொகையும் முதலீடும் சமமாக இருக்கும் என்பது தெளிவு. இந் நிலையில் வட்டிவீதம் கடனுக்காகத் தேவையையும் அளிப்பையும் சமநிலையில் வைத்திருப்பதுடன் சேமிப்புக்கும் முதலீட்டுக்குமிடையே சமன்பாட்டை ஏற்படுத்தவும் உதவும் என்னலாம். பணத்தில் ஒரு பகுதி பதுக்கப்பட்டபோதிலுங்கூட நிகர பதுக்கலுக்கு (Net Hoarding) இணையாக முதலீடு செய்பவர்களின் கையில் பதுங்கியிருந்த பணம் வெளிப்படுமானால் (Net Dishoarding) அப்போதும் தொன்மைப் பொருளாதாரிகளின் கோட்பாட்டில் கோட்டம் எதுவும் இருப்பதாகக் கொள்ள இயலாது. இந் நிலையில் சேமிப்பும் கடன் தொகையும் சமமாக இரா என்பது உண்மை. அதேபோல் முதலீடும் கடனாக வாங்கப்படும் தொகையும் சமமாக இரா. ஆனால், சேமிப்பும் முதலீடும் சமமாக இருக்கும்; கடனாக வழங்கப்படும் தொகையும் கடனாகப் பெறப்படும் தொகையும் சமமாக இருக்கும்.

இவ்வாறு, ஒரு சிலரின் கையில் ஒதுங்கும் பணத்துக்கு இணையான பணம் வேறுசிலரின் பதுக்கலிலிருந்து வெளிப்படுமானால் பொருளாதாரத்தில் பதுக்கப்படும் தொகைக்கும் பதுக்கலிலிருந்து விடுபடும் தொகைக்குமிடையே சமன்பாடு ஏற்படமுடியும். ஆனால், இப்படிப் பட்ட சூழ்நிலையில் வாங்கப்படும் கடன் தொகையையும் வழங்கப்படும் கடன்தொகையையும் சமமாக வைத்திருக்கும் ஆற்றல், வட்டி வீதத்துக்கு உண்டென்றாலும், சேமிப்பையும் முதலீட்டையும் சமநிலையில் வைக்கும் வலிவிழந்து நிற்கும் என்பது புலனாகும். இந் நிலையில் வட்டிவீதம் எவ்விடத்தில் நிருணயிக்கப்படும்? கடன் தொகையின் தேவையும் அளிப்பும் சந்திக்கும் இடத்திலா? அல்லது சேமிப்பும் முதலீடும் சந்திக்குமிடத்திலா என்பது கேள்விகளாகிவிடும். இத்தகைய சந்திப்புகளின்மூலம் வட்டிவீதத்தை நிருணயிக்க முடியாது என்பதை ஏற்கனவே விளக்கியுள்ளோம்.

ஆயின், புதுச்சம்பிரதாயக் கருத்தோரும் கீன்ஸும் கொடுத்துள்ள விளக்கங்களை ஒன்றாகச் சேர்த்துக் தொகுத்தால், வட்டிவீதம் பற்றிய புதியதோர் கோட்பாட்டை வகுக்கலாம் என்பது சிலரது கருத்து. எடுத்துக் காட்டாக, கடனாக வழங்கப்படக்கூடிய பல்வேறு தொகைகளின் பட்டியலையும் முதலீட்டுக்கான தேவையைப் பிரதிபலிக்கும் பட்டியலையும் ஒருங்கே இணைத்து ஜே. ஆர். ஹிக்ஸ் (J. R. Hicks) Is வளைகோட்டைப் படைத்துள்ளார். அதைப்போலவே, ரொக்க விருப்பப் பட்டியலையும் பணத்தினளிப்பையும் பிரதிபலிக்கும் பட்டியலையும் ஒருங்கே இணைத்து LM வளைகோட்டை அவர் வகுத்துள்ளார். இவ்விரு வளைகோடுகளும் சந்திக்கும் இடத்தைக் கொண்டு வட்டிவீதத்தை நிருணயிக்கலாம் என்ற ஹிக்ஸின் கோட்பாடு இன்றுவரை நின்று நிலவிவரும் வட்டிக்கோட்பாடாகும்.

சேமிப்பும் முதலீடும் எப்போதும் சமநிலையில் இருக்கவேண்டியதன் அவசியத்தை உணருபவர்கள் முதலீட்டு வளைகோடும் சேமிப்பின் வளைகோடும் ஒன்றாக ஒட்டியிருக்க வேண்டியதன் அவசியத்தையும் எளிதில் புரிந்து கொள்வார்கள். முதலீட்டின் ஒவ்வோர் அளவுக்கும் ஒத்ததோர் வருவாயினளவு உண்டு; அதே போல், வருவாயின் ஒவ்வொரு அளவுக்கும் ஒத்ததோர் சேமிப்பினளவுமுண்டு. எனவே, குறிப்பிட்டதோர் வட்டிவீதத்துக்கேற்ப முதலீட்டினளவுக்கும் அம் முதலீட்டைச் சார்ந்த வருவாயினளவுக்கும் வட்டிவீதத்துக்குமேற்பச் சேமிப்பின் பட்டியலும் அமையும் என்பர். இவ்விரு வளைகோடுகளும் சந்திக்கும் இடத்தில் வட்டிவீதம் நிருணயிக்கப்படும். சேமிப்பு, அளிப்பு வளைகோட்டிலுள்ள ஏனைய புள்ளிகள் வருவாயின் பல்வேறு அளவுகளைப் பிரதிபலித்த போதிலும், அவற்றால் பயனில்லை. ஏனெனில், அப் புள்ளிகள் குறிப்பிட்டதொரு வட்டி

வீதத்தையோ அதற்கேற்ற முதலீட்டையோ சார்ந்தவை அல்ல. வட்டிவீதம் ஒரு குறிப்பிட்ட அளவினதாக இருக்கும்போதுதான், சேமிப்பினளவும் முதலீட்டினள்வும் சமமாக இருக்கும். வட்டி வீதத்தோடு இவ்வாறு தொடர்பு கொண்ட அளிப்பு வளைகோட்டுப் புள்ளிகள் முதலீட்டு வளைக்கோட்டுடன் ஒன்றி ஒரு மையமாகி Is வளைகோடாக வடிவெடுக்கிறது என்பர். இதிலிருந்து புதுச்சம்பிரதாயக் கருத்தின்படி முதலீட்டுக்கான தேவை—அளிப்பு இரண்டையும் பிரதிபலிக்கக்கூடிய பட்டியல்கள் கொடுக்கப்பட்டிருக்குமானால், வட்டிவீதத்தின் பல்வேறு அளவுகளுக்கேற்ப வருவாயின் அளவுகள் எவை என்பதைப் எளிதில் நிருணயிக்கலாம் என்பது புலப்படும்.




படம் 16 : சேமிப்பு—முதலீட்டு வளைகோடு

மேற்கண்ட வரைபடத்திலிருந்து வட்டிவீதம் குறைந்து வரும்போது முதலீடு பெருகுவதன் காரணமாக, வருவாய் அதிகரித்து அதன் பயனாகச் சேமிப்பு முதலீட்டினளவை எட்டிப் பிடிக்கும் என்பது விளங்கும். இச் சமன்பாடு வட்டிவீதத்தின் புதியதோர் நிலையில் ஏற்படும் என்பதைக் காணலாம். ஆயின், Is வளைகோட்டைக் கொண்டுமட்டும் வட்டிவீதத்தை நிருணயிக்க இயலாது.

அதைப்போலவே வருவாயின் பல்வேறு அளவுகளுக்கேற்ப ரொக்க விருப்பம் மாறுபடும். இந் நிலையில் பணத்தினளவு மாறுமலிருந்தால் வருவாயின் பல்வேறு அளவுகளுக்கேற்ப ரொக்கவிருப்பமும் வட்டி வீதமும் மாறுபடும் என்பது தெளிவு. வருவாய் அதிகமாக இருப்பின் அதற்கேற்ப ரொக்கவிருப்பம் அதிகரிக்கும்; வட்டிவீதம் உயரும்; மாருக, வருவாய் குன்றினல் அதற்கேற்ப ரொக்கவிருப்பம் குறையும்; வட்டிவீதமும் குன்றும். எனவே, பணத்தினளவும் ரொக்கவிருப்பப் பட்டியலும் மாருத நிலையில், வருவாயின் பல்வேறு அளவுகளுக்கேற்ப வட்டிவீதம் எப்படி மாறுபடும் என்பது LM வளைகோட்டிலிருந்து தெரியவரும்.




படம் 17 : பண—ரொக்கவிருப்ப வளைகோடு

மேற்கண்ட LM வளைகோடு வருவாய்க்கும் வட்டிவீதத்துக்குமுள்ள உறவை விளக்கியபோதிலும் அதைக்கொண்டு வட்டிவீதத்தை நிருணயிக்கமுடியாது என்பது தெளிவு. ஆயின், IS வளைகோட்டையும்

LM வளைகோட்டையும் கொண்டு வட்டிவீதத்தை நிருணயிக்கலாம் என்பது தற்காலத்தில் நிலவிவரும் கருத்தாகும்.




படம் 18 : புதியகோட்பாட்டின்படி வட்டிவீத நிருணயம்

மேற்கண்ட வரைபடத்தில் LM வளைகோடு இடமிருந்து வலமாக கீழிருந்து மேல்நோக்கிச் செல்கிறது. மாறாக, Is வளைகோடு இடமிருந்து வலமாக மேலிருந்து கீழ்நோக்கிச் செல்லுகிறது. இரண்டு வளைகோடுகளும் சந்திக்குமிடத்தில் வட்டிவீதம் நிருணயிக்கப் படுவதைக் காணலாம். வட்டியினளவு 4 சதவீதம் என்பதும் அப் படத்திலிருந்து தெரிகிறது. இவ் வட்டிவீதத்தை முதலீட்டின் அளவிற்கேற்ப வருவாய் மாறுபட்டு சேமிப்பையும் முதலீட்டையும் சமநிலையில் வைத்திருப்பதுடன் ரொக்கவிருப்பத்தையும் ஏற்ற அளவில் மாற்றியமைப்பதன்மூலம் வட்டிவீதத்தையும் நான்கு சதவீதமென நிருணயிக்க உதவுகிறது என்னலாம். இதிலிருந்து தெளிவாக நிருணயிக்க உதவும் வட்டிவீதக் கோட்பாடு கீழ்க்கண்ட நான்கு தீர்மானிகளைப் பொருத்தது என்னலாம். அவையாவன :

(1) முதலீட்டுக்கான தேவையின் சார்பு;

(2) சேமிப்புச் சார்பு;

(3) ரொக்கவிருப்பச் சார்பு;

(4) பணத்தினளிப்பு

கீன்ஸின் கருத்துகளை மொத்தமாக நோக்கினல், மேற்கண்ட நான்கு தீர்மானிகளும் அவரது ஆய்வுகளில் பொதிந்திருப்பது தெரிய வரும். ஆயினும், அவற்றின் தொடர்புகளை ஒருங்கே இணைத்துப் பொருத்தி ஒன்றுபட்டதொரு வட்டிவீதக் கோட்பாட்டை வகுப்பதில் கீன்ஸ் வெற்றி பெற்றதாகக் கூற வழியில்லை. ரொக்கவிருப்பத்துக்கும் பணத்தினளவுக்குமுள்ள தொடர்பைக் கொண்டு LM வளைகோட்டை மட்டும்தான் நிருணயிக்கமுடியும் என்பதை அவரால் உணர முடியவில்லை. மாருக, கீன்ஸ் கையாண்ட அதே கருவிகளைக் கொண்டு முதலீடு (ஆக்கசக்தி), சேமிப்பு (சிக்கனம்), ரொக்கவிருப்பம், பணத்தினளிப்பு ஆகியவற்றின் தொடர்புகளை ஒருங்கே தொகுத்து இணைத்துக்கட்டி இலகுவில் நிருணயிக்கக்கூடியதோர் வட்டிவீதக் கோட்பாட்டைப் பரந்த அடிப்படையில் உருவாக்கித் தந்த பெருமை ஜே. ஆர். ஹிக்ஸையே (J. R. Hicks) சாரும்.

# 6. வாணிகச்சுழல் பற்றிய கோட்பாடு

*[வாணிகச்சுழல் முதலாளித்துவத்தின் பீடை — வாணிகச்சுழல் பற்றிய பல்வேறு விளக்கங்கள் — ஜெவான்ஸின் கருத்துக்குக் கீன்ஸது ஆதரவு — காசலின் கருத்துக்கு எதிர்ப்பு — நுகர்வு வாட்டக் கோட்பாடுகள் — கீன்ஸியக் கோட்பாட்டின் வளர்ச்சி — பொதுக் கோட்பாட்டில் பொதிந்துள்ள விளக்கம் — வாணிகச் சுழலின் போக்கு — முதலீட்டுப் பெருக்கியின் முக்கியத்துவம் — கீன்ஸியக் கோட்பாட்டிலுள்ள குறைபாடுகள் — முதலீட்டு இறுதிநிலைத்திறன் பற்றிய குழப்பங்கள் — வாணிகச்சுழல் ஒரு வரன்முறைக்குட்பட்டதா? — பணவீக்கத்தைப் புறக்கணித்ததேன்? — கோட்பாட்டு ரீதியில் பயன்தரும் கீன்ஸியக் கருத்துகள்.]*

## வாணிகச்சுழல் முதலாளித்துவத்தின் பீடை

மனித சமுதாய அமைப்பின் வளர்ச்சியைச் சுருக்கி வரைய வேண்டுமாயின் மனிதன், ஆதிப்பொதுவுடைமை, அடிமைமுறை, நிலப்பிரபுத்துவம், முதலாளித்துவம் ஆகிய பல படிகளைக் கடந்து இன்று சமதர்மச் சமுதாயத்தின் வாயிலைத் தட்டிக் கொண்டிருக்கிறான் என்று கூறலாம். ஆதிப்பொதுவுடைமையில் தனக்கென்று நிலமோ ஏனைய சொத்துகளோ எவரும் வைத்திருக்கவில்லை. ஆக்கிய ஒரு சில புராதனக் கருவிகளைக் கொண்டு கூட்டங்கூட்டமாக ஆங்காங்கே அலைந்து அன்றாடம் தங்கள் வயிற்றைக் கழுவவேண்டி கனிவகைகளையும், காய்கறிகளையும் காடுகளிலிருந்து பொறுக்கியும், காட்டு விலங்குகளையும் நீரில் வாழும் மீன்வகைகளையும் வேட்டையாடிப் பிடித்தும் கூட்டமாக உழைத்து வந்தார்கள். தட்பவெப்ப நிலங்களுக்கேற்பச் சேகரித்த பொருள்களையும், வேட்டைக் கறியையும் குளிர், மழை போன்ற காலங்களுக்கு வேண்டி ஒதுக்கிப் பாதுகாப்பதைத் தவிர, வேறு சேமிப்போ, முதலீடோ இருந்ததாகக் காணோம். காடும், கடலும், நீர்நிலைகளும் அவற்றிலுள்ள தாவரங்களும் உயிரினங்களும் இருந்த வரையில் அப் பொருளாதாரம் சிக்கலின்றி ஒரே சீராக இயங்கி வந்தது என்னலாம்.

அடிமைமுறையில் ஆடு, மாடு, நிலம், வீடு என்பதுபோல் மனிதனையும் மனிதன் அடிமைகொண்டு தனது உடைமையாகப் பாராட்டினன். இம் முறையில் உழைப்பாளரும் அவர்களின் உழைப்புக்கு உறுதுணையான கருவிகளும் எசமானருக்குச் சொந்தமாக இருந்து வந்தன. அவரவரின் பலத்துக்கும் அந்தஸ்துக்கும் ஏற்பக் கொஞ்சமாகவோ, அதிகமாகவோ அடிமைகளை ஆட்கொண்டிருந் தனர். அடிமைகளின் உழைப்பைக் கொண்டு விவசாயம், தொழில் ஆகியவற்றில் பொருளுற்பத்தி செய்யப்பட்டது. அடிமைகளும் பொருள்களைப் போன்று விலைகூறி விற்கப்பட்டனர். அடிமைத் தனத்தை அடிப்படையாகக் கொண்டு கட்டி எழுப்பப்பட்ட சாம் ராஜ்யங்களும் உண்டு. இம் முறையில் கருவிகளைப் பொறுத்தமட்டில் குறிப்பிடத்தக்க புரட்சிகள் எதுவும் ஏற்படவில்லை. ஆனல், ஒரு குறிப்பிட்ட அளவுக்கு அதிகமான அடிமைகளைக் கொண்டவர்கள் அவர்களின் உழைப்பைக்கொண்டு தங்களுக்கான சல்லாபப் பொருள் களையும் பேரளவில் உற்பத்தி செய்ய முடிந்தது. அடிமை முறையை அடிப்படையாகக் கொண்ட எகிப்திய, ரோம சாம்ராஜ்யங்கள் இன்றும் கண்டோரின் கருத்தைக் கவரத்தக்க மாபெரும் பிரமிடுகள், அரண்மனைகள், கோவில்கள், கோட்டை கொத்தளங்கள் ஆகிய வற்றைப் படைக்க முடிந்தது. அச் சாம்ராஜ்யங்கள் தோன்றி, வளர்ந்து, செழித்து, க்ஷீணித்து, அழிவதற்கு அடிமைமுறையே அடிப் படையான காரணம் என்ருல் மிகையாகாது. அச் சாம்ராஜ்யங்கள், வளர்ந்து, வலிவுடன் நிலைபெற்றிருந்தபோது அடிமைப்பட்ட நாடு களின் செல்வங்களையும் அடிமைகளின் உழைப்பையுங் கொண்டு சமுதாயத்தின்மேல்தளத்திலுள்ளவர்கள் பலர் சீரும் சிறப்பும்பெற்றுச் செல்வங்களையும் சல்லாபங்களையும் அத்துமீறி அனுபவிக்க முடிந்தது. அதேபோல், அச் சாம்ராஜ்யங்களின் அடித்தளம் ஆட்டம் கொடுத்து, பலவீனமுற்று அழிந்து வரும்போது அதன் கொடுமுடியில் வீற்றிருந்த பலர் நிலைதவறித் தலைகுப்புற கீழே விழுவதும் வரலாற்றில் காணக் கூடிய காட்சிகளாகும். ஆனல், அடிமைப் பொருளாதாரம் அமைந்த முறையிலே அதை இயக்கி வந்த விதிகளின் காரணமாகவோ, அதன் பல்வேறு உறுப்புகளினிடையே காணப்பட்ட முரண்பாடுகளின் காரணமாகவோ செழுமையும் மந்தமும் சகடக்கால்போல ஒரு முறைக்கு உட்பட்டு மாறி வந்ததாக ஆதாரமில்லை. இயற்கைச் சூழ்நிலையால் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளைத் தவிர, வாணிகச்சுழல் என்று கூறக்கூடிய அளவில் குறிப்பிடத்தக்க மேடுபள்ளங்கள் அதன் போக்கில் காணப்படவில்லை என்னலாம்.

பண்ணையடிமை முறை அல்லது படைமானியம் (Feudalism) நில உரிமையினடியாக அமைந்தது. அதன்படி மன்னவனே தனது நாட்டின் நிலபுலங்களுக்கெல்லாம் அதிபன் எனக் கருதப்பட்டான்.

நிலத்தின் பலனை அனுபவிக்கும் உரிமையைத் தனது உற்றார், உறவினர், தனது பாராட்டுக்கும் கொடைக்கும் தகுதி பெற்றவர்கள், இராணுவம், ஆட்சி ஆகியவற்றில் முதுகெலும்பாக நின்று உதவிய பிரபுக்கள், மடாதிபதிகள், கோவில்கள் ஆகியவற்றுக்கு, மன்னன் பரம்பரையாகப் பகிர்ந்தளித்து வந்தான். இம் முறையின் அடித்தளத்தில் இருந்தவர்கள்தான் பண்ணையடிமைகள் (Serfs). அடிமைமுறையின்கீழ் உள்ளதுபோல் முழு அடிமைகளல்ல அவர்கள்; அரையடிமைகள் என்னலாம். தலைமுறை தலைமுறையாக நிலத்தோடு பிணைக்கப்பட்டிருந்தனர் அப் பண்ணையடிமைகள். நிலத்தைவிட்டு விட்டு மனம்போனதுபோல் இடம் பெயரும் உரிமை அவர்களுக்கு இருக்கவில்லை. தங்கள் உழைப்பில் ஒரு பகுதியை இலவசமாக அவர்கள் நிலப்பிரபுவுக்கோ, மடாதிபதிகளுக்கோ வழங்கவேண்டிய கட்டாய மிருந்தது. அதற்கு ஈடாகத் தாங்கள் உயிர் வாழ்வதற்கு வேண்டிய உணவைத் தாங்களாகவே உற்பத்தி செய்து கொள்ளும் வகையில் சிறிதளவு நிலம் பண்ணையடிமைகளின் கைவசம் விட்டு வைக்கப்பட்டிருந்தது. மக்கள்தொகைப் பெருக்கத்திற் கேற்பத் தரிசாகக்கிடந்த நிலம் உழவுக்குத் தகுந்ததாகச் செய்யப்பட்டது. அடிப்படையில் பண்ணையடிமை முறை சுயதேவைப்பூர்த்தியை முக்கியமாகக் கொண்டிருந்தது. பண்ணை யடிமைகளின் உழைப்பின்மூலம் நிலப்பிரபுக்கள் சுகிக்க முடிந்தது. விவசாயத்திலிருந்து ஓய்வு கிடைத்த வேளையில் குடிசைத்தொழில் களின்மூலம் தங்களுக்கு வேண்டிய துணிமணிகள், பாத்திரங்கள், விவசாயக்கருவிகள் ஆகியவற்றை ஆக்கிக்கொண்டனர். ஆங்காங்கே தோன்றி வளர்ந்த சின்னஞ்சிறு பட்டணங்களுக்கு வேண்டிய உணவு பண்டமாற்றின் (Barter) மூலம் அளிக்கப்பட்டது. தொழிற்றுறை களில் ஈடுபட்டிருந்த பட்டணவாசிகள் ஆக்கிய பண்டங்களைக் கொண்டு நிலப்பிரபுக்களும் மன்னர்களும் தங்கள் வசதிகளையும் சல்லாபங்களையும் பெருக்கி வந்தனர். அப் பொருள்களை நகர்விட்டு நகருக்குக் கொண்டு சென்று விற்றுப் பொருளீட்டிய வணிகரும் ஆங்காங்கே வளர்ந்து வந்தனர்.

உள்நாட்டில் வாணிகம் செய்து வந்ததுபோல அண்டை அயல் நாடுகளுக்குத் தரைமார்க்கமாகப் பொருள்களைக் கொண்டு சென்று வாணிகம் செய்யும் உரிமைகளையும் சாசனங்களையும் சில குழுவினர் பெற்றனர். பதினாறும் பதினேழாம் நூற்றாண்டுகளில் பல்வேறு கண்டங்களுக்கும் கடல்மார்க்கமாகச் செல்லும் வழிகளைக் கண்டு பிடித்ததால், அயல்நாட்டு வாணிகம் செழித்தோங்கத் தலைப்பட்டது. அவ் வாணிகத்தில் மேலோங்கி நின்ற போர்ச்சுகீசியர், ஸ்பானியர், டச்சுக்காரர், பிரெஞ்சுக்காரர், ஆங்கிலேயர் அனைவரும் அயல்நாட்டு வாணிகத்தில் அமித இலாபங் கண்டனர். கடற்கொள்ளையும்,

காலனிச் சுரண்டலும் இந்த இலாபத்தில் கலந்தே இருந்தன. வாணிகத்தின் பயனாகப் பொன்னும் வெள்ளியும் வந்து குவிந்த வண்ணமிருந்தன. அதன் பயனாகப் பணப்புழக்கம் அதிகமாயிற்று. எனவே, பண்டமாற்றுக் குறைந்து பணத்தின் பயன் அதிகரித்தது. சந்தையைச்சார்ந்த பொருளுற்பத்தி பெருகலாயிற்று. வளர்ந்துவரும் உள்நாட்டுத்தேவைகளையும் அயல்நாட்டு வாணிகத்தையும் பூர்த்தி செய்யக்கூடியவகையில் பொருளுற்பத்தியையும்,தொழிலமைப்பையும் பேரளவினதாக மாற்றியமைக்க முயன்றனர் பலர். அம் முயற்சிக்கு உறுதுணையான மூலதனம் வாணிகம், சொத்துகளின் மதிப்பேற்றம் ஆகியவற்றிலிருந்து கிடைத்தது. அதன்பயனாக, உழைப்பை விலைகூறிவிற்று அதன்மூலம் கிடைக்கக்கூடிய கூலியைக்கொண்டு அன்றாடம் வயிறு கழுவவேண்டிய நிலையிலிருந்த பாட்டாளிகள் பலரை ஓரிடத்தில் திரட்டி முதலாளிகளுக்குச் சொந்தமான உற்பத்திச் சாதனங்களான கருவிகள், கச்சாப்பொருள்கள் ஆகியவற்றைக்கொண்டு பேரளவில் பொருளுற்பத்தி செய்யுமாறு பணிக்கும்முறை தோன்றலாயிற்று. இதைத்தான் முதலாளித்துவ முறை என்றனர்.

தொழிற்சாலைகளில் பணியாற்ற வேண்டிய கூலிப்படை நிலத்திலிருந்தே வரவேண்டியிருந்தது. ஆனால், பரம்பரையாக நிலத்தோடு பந்தப்பட்ட பண்ணையடிமைக்கு அதிலிருந்து விடுதலை கிடைப்பது எளிதாக இல்லை. பெருகிவரும் பரம்பரைச் சுமைகளின் பாரந்தாங்காமல் உறுமிக்கொண்டிருந்தான் பண்ணையடிமை. கலவரங்கள் பல வெடித்தன. நிலத்தைவிட்டு ஓட்டம் பிடித்தனர் பலர். பிடிபட்டவர்கள் அடி உதைக்கு ஆளானார்கள். விவேகமுள்ள ஒரு சிலர் தங்கள் விடுதலையை விலைகொடுத்து வாங்கினர். இதற்கிடையில் கொள்ளைநோய், பஞ்சம் பல மூளத்தன. அதனால் பண்ணையடிமைகளின் எண்ணிக்கை குறைந்துபட்டது. எஞ்சியவர்கள் மிஞ்சிய டளுவைச் சுமக்க வேண்டியநிலை ஏற்பட்டது. சுமை தாங்க முடியாத பண்ணையடிமை ஆங்காங்கே மும்முரமாகப் புரட்சிசெய்து விடுதலைப் பெற்றனர்.

பல நூற்றாண்டுகளாக நிலைபெற்று விளங்கிய இந்தப் பண்ணையடிமைமுறையின்கீழ் விவசாய முறையிலோ, கருவிகளிலோ குறிப்பிடத்தக்க முன்னேற்றங்கள் எதுவுமே நிகழவில்லை என்னலாம். பண்ணையடிமையின் உழைப்பில் மிச்சங்காணுவது மிகமிக அரிதாக இருந்தது. நிலப்பிரபுக்கள் தங்கள் நிலத்தில் கிடைத்த உபரியைக் கொண்டு தங்கள் வசதிகளையும் சல்லாபங்களையும் பெருக்கி வந்தனர். பெரும்பாலும் தரிசுநிலங்களைப் பண்படுத்துவதன்மூலம் உற்பத்தியினளவு பெருகியதேயன்றி, நிலத்தின் ஆக்கசக்தி அதிகரித்ததாலன்று.

இத்தகைய உற்பத்திமுறையில் கணிசமான அளவில் சேமிப்பு, முதலீடு என்ற வகையில் செலவினங்கள் இருக்கவில்லை. பெரும்பாலான பண்ணயடிமைகள் முக்கியமான நுகர்வுப் பொருள்களில் வருவாய் முழுவதையுமே செலவிட்டு வந்தனர் என்று கொள்ளலாம். நிலப் பிரபுக்கள் தங்கள் உபரிப் பொருள்களைக் கொண்டு மாளிகைகள், அரண்கள், அலங்காரப் பொருள்கள், அணிகலன்கள், ஆடல்பாடல்கள், கேளிக்கைகள் போன்ற சல்லாபங்களை அனுபவித்து வந்தனர். இந் நிலையில் பொருளுற்பத்தியில் ஏற்றத் தாழ்வுகள் இருந்து வந்ததென்றால் அது சேமிப்பு, முதலீடு, ஆக்க சக்தியின் அதிகரிப்பு ஆகியவற்றாலன்று; இயற்கை கருணை காட்டுவதால் ஏற்படும்மழை, தட்பவெப்பம் நோய்நொடி ஆகிய வற்றையே பெரும்பாலும் சார்ந்திருந்தது.

ஆனால், பதினெட்டாம் நூற்றாண்டில் நிலங்களைச் சுற்றி வளைத்து, மாற்றுப்பயிர் முறையைக் கையாண்டு விதைப்பது, களையெடுப்பது, உரமிடுவது, ஆடுமாடுகளைப் பேணி வளர்ப்பது ஆகியவற்றில் பல புது முறைகளைப் புகுத்தி "விவசாயப் புரட்சி"யை மேனாடுகளில் ஏற்படுத்தியபோது மேம்பட்ட விவசாயமுறைகளை மேற்கொள்ளு வதற்கு நிலத்திலும் முதலீடு அவசியமாயிற்று. பெருகிவரும் வருவாயிலிருந்து முதலீட்டுக்கான சேமிப்புகள் திரண்டு வந்தன. எஞ்சியவை வங்கிகளில் புகுந்து நகரங்களில் தோன்றி வளர்ந்த தொழில்கள், வாணிகம் ஆகியவற்றுக்கு உரமளித்து வந்தன. நிலத்தில் ஆக்கசக்தி பெருகியது. இத்தகைய மனித முயற்சிகளோடு இயற்கையின் சாதக பாதகங்களும் சேர்ந்து விவசாய உற்பத்தியில் குறிப்பிடத்தக்க விறுவிறுப்பும் மந்தமும் அப்போதைக்கப்போது தோன்றுவதற்குக் காரணமாயிற்று. சுயதேவை நிறைவு என்ற நிலைமாறிச்சந்தையைச் சார்ந்து இயங்கவேண்டிய நிலை ஏற்பட்டதால் இயற்கையின் திருவிளையாடலோடு வாணிகச்சுழலும் விவசாய உற்பத்தியைப் பாதிக்கலாயிற்று.

தொழிற்புரட்சிக்கு முன்னரே முதலாளித்துவம் தோன்றி வளர்ந்து வந்தது என்றாலும், பல்வேறு தொழிற்றுறைகளிலும் நுட்பத்தொழிலறிவில் புரட்சிகரமான மாறுதல்கள் ஒன்றன்பின் ஒன்றாகப் புகுந்து வந்ததன் காரணமாகப் பொருளுற்பத்தி பேரளவில் பெருக்கெடுக்கத் தொடங்கியது. துணி உற்பத்தியில் ஆரம்பித்த இந்தப் புரட்சி, இரும்பு, பொறியியல், போக்குவரத்து, வேளாண்மை என்று பொருளாதாரத்தின் ஒவ்வொரு துறையிலும், அவற்றின் உட்பிரிவுகளிலும் பற்றிப் படரலாயிற்று. கனிப்பொருள், கச்சாப் பொருள், உணவுப் பொருள், பலதரப்பட்ட நுகர்வுப் பொருள்கள் இலகுதொழில், கனரகத் தொழில் என்று எல்லாத் தொழில்களும்

தொழிற்புரட்சிக்கு உள்ளாயின. இவ்வாறு தொழிற்புரட்சி அடுக்கடுக்காக ஒன்றன்பின்ஒன்ருக அலைமோதி வந்தது. நீராவி இயந்திரம், மின்சாரம், மோட்டார் வண்டி என்ற பல புதுப்புதுச் சுனைகள் திறந்து தொழிற்புரட்சியின் வேகத்தை அப்போதைக்கப் போது உந்தி வந்தன. தொழிற்புரட்சியின் பயனுக உற்பத்தி வெள்ளப் பெருக்கெடுத்தது; வருவாயில் ஏற்றத்தாழ்வுகள் வளர்ந்தன; சேமிப்பு அதிகரித்தது. முதல், வேகமாகத் திரட்சி யுற்றது. முதலீட்டு வாய்ப்புகளும் அங்காங்கே பெருகிவந்தன; பொருள்களுக்குள்ள தேவையும் அவற்றின் அளிப்பும் பேரளவில் பெருகின. மொத்தத்தில் பதினெட்டாம் நூற்ருண்டின் கடைக் காலப் பகுதியில் தோன்றிய தொழிற்புரட்சியின் முழுவேகமும் பத்தொன்பதாம் நூற்ருண்டு முழுவதும், ஏன்,முதலாம் உலகப்போர் வரையிலும், தணியாமல் மேற்கத்திய நாடுகளிலுள்ள முதலாளித்துவப் பொருளாதாரங்களை வளர்ச்சிப் பாதையில் மேன்மேலும் உந்தித்தள்ளி வந்தது என்னலாம். ஆனுல் இவ் வளர்ச்சிப் பாதையின் போக்கு ஒரே சீராக இருக்கவில்லை. முதலாளித் துவம் இளமைப் பருவத்தைக் கடந்து முதுமைப் பருவத்தை நெருங்கி வ்ரவர, அதன் வளர்ச்சிப் பாதையிலுள்ள சிக்கல்களும் முரண்பாடு களும் அதிகரித்து மேடுபள்ளங்கள் பல தோன்றலாயின.

### வாணிகச்சுழல் பற்றிய பல்வேறு விளக்கங்கள்

முதலாளித்துவப் பொருளாதாரத்தின் வளர்ச்சியைப் பாதித்து வந்த இத்தகைய வாணிகச் சுழல்கள் பத்தொன்பதாம் நூற்ருண்டின் கடைப்பகுதியில் கவலை தரக்கூடியதோர் கட்டத்தை அப்போதைக்கப் போது அணுகி வந்தது என்ருலும், உலகப் போர்களுக்கு இடைப் பட்ட காலத்தில்—குறிப்பாக பெரும் பொருளாதார மந்தத்தின் போது—ஏற்பட்டதுபோல் மாபெரும் மந்தப்படுகுழியில் சிக்கிச் சீரழியவில்லை. ஒரே சீராக இயங்காமல் இவ்வாறு அலசடிப்படுவதைக் கண்ட பொருளியல் வல்லுநர் பலர் வாணிகச்சுழலின் காரணங்க ளெவை, அதன் கூறுகளெவை, அச் சுழலின் கோரத்தை மட்டுப் படுத்தக்கூடிய மருந்து வகைகளெவை என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டு வந்தனர். இவர்களில் கீன்ஸூம் முக்கியமானவர் என்று ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம்.

முதலாளித்துவப் பொருளாதாரங்கள் மிடுக்குடன் துள்ளிப் பாய்ந்து வந்த இளமைப் பருவத்திலேயே அதன் போக்கை ஊன்றிக் கவனித்து வந்த ஆதம்ஸ்மித், மால்த்தஸ், கார்ல்மார்க்ஸ் போன்ற வர்கள் நெடுங்காலப் போக்கில் முதலாளித்துவப் பொருளாதாரம் மப்பும் மந்தாரமும் பிடித்து அசதியுறும் என்று எதிர்பார்த்தனர்.

ஆனால், வேறு பலர் நெடுங்காலப் பாதையில் மேடுபள்ளங்கள் தோன்றக் காரணமென்ன என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டனர். குறிப்பாக, வாணிகச்சுழலின் குறுகிய காலக் குணநலன்களின் ஆராய்ச்சியில் அவர்கள் தங்கள் கருத்தைச் செலுத்தி வந்தனர். அதன் விளைவாக, வருணபகவானின் கருணைகடாட்சம், நுகர்வு வாட்டம், வட்டிக் கொடுமை, கண்மூடித்தனமான முதலீடு என்று பலவாறான காரணங்களை கற்பிக்க முற்பட்டனர்.

### ஜெவன்ஸின் கருத்துக்குக் கீன்ஸின் ஆதரவு

மாதம் மும்மாரி பெய்தால் பஞ்சமே அணுகாது என்பது தமிழ் நாட்டு மரபு. அதைப் போலவே, காலாகாலத்தில் போதிய மழை பெய்தால் பொருளாதாரம் ஒரே சீராக இயங்குமென்று எதிர் பார்க்கலாம். அவ்வாறின்றி, அளவுக்குமீறி மழை பெய்தால் பயிர்கள் அழுகி நாசமாகலாம்; வெள்ளத்தால் வேரறுந்து நிலைபெயர்ந்து அடித்துச் செல்லப்படலாம்; அல்லது பயிர் முதிர்ந்து வரும்போது அடைமழை பிடிக்குமானால் மகசூல் வீடு வந்து சேராமல் சேதமுறலாம். மாறாக, விதைப்புக்கு முன்னர் நிலத்தை உழுது பண்படுத்துவதற்கோ விதைத்த பின்னர் பயிர் வளர்ச்சியின் ஒவ்வொரு பருவத்துக்கும் போதிய உயிரும் உரமும் ஊட்டக்கூடிய வகையிலோ பருவமழை பெய்யாது போனால், விதைப்பும் சரியாக நடக்காது; விதைத்த பயிரும் வெயிலின் கொடுமைக்கு ஆளாகி வெம்பி, வாடி, வதங்கி, கருகிப் போகலாம். கதிர் பொதி தள்ளினாலுங்கூட மணிகள் திரட்சியுறாமல் சாவியாகலாம். வெப்ப பிரதேசங்களில் உள்ளது போலவே மிதமான சீதோஷ்ணங்களிலும் தட்பவெப்பம்,பனி,மழை ஆகியவை ஒரு காலவரையறைக்குட்பட்டுச் சீராக அமையாவிட்டால், விவசாயம் செவ்வனே நடைபெறாது. நிலத்திலிருந்து போதுமான உணவோ, கச்சாப் பொருள்களோ கிடைக்காவிட்டால் அதை நம்பி வாழும் வாணிகமும் தொழில்களும் மந்தப்படும். மாறாக, இயற்கை இசைவாக இருந்து மழை கருணை காட்டும் வகையில் கண் திறந்தால், விவசாயம் செழித்து அதன்மூலம் வாணிகமும் தொழிலும் சிறக்கும். எனவே, விவசாயத்தை அடிப்படையாகக் கொண்ட பொருளாதாரங்களில் பருவத்தின் மாறுதல்களுக்கேற்பப் பொருளாதாரத்தில் ஏற்றமும் தாழ்வும் ஏற்படும் என்பது ஜெவன்ஸ் போன்றவர்களின் கருத்தாகும். இக் கருத்தையொட்டியே இன்றுகூட இந்தியப் பொருளாதாரத்தை வானம்பார்த்த பொருளாதாரம் என்று அழைப்பதுண்டு. பெரும் பாலும் ஜெவன்ஸின் கருத்துப் பொருத்தமானதுதான் என்பது கீன்ஸின் அபிப்பிராயம். குறிப்பாக, இருப்புகட்டி களஞ்சியங்களில் சேர்த்து வைக்கப்படும் விவசாயப் பொருள்களின் அளவைப்

பொறுத்தும் முதலீட்டிலுள்ள மாற்றங்களைப் போலவே பொருளாதாரத்தில் வாணிகச் சுழல் ஏற்பட முடியும் என்று கீன்ஸ் எண்ணினர். ஆனல், அடிப்படையில் அக் கருத்தை ஆமோதித்த போதிலும், தொழிலை முக்கியமானதாகக் கொண்ட இன்றைய பொருளாதாரங்களின் போக்கை இயற்கையின் ஜாலங்களைக் கொண்டு விளக்க இயலாது என்பதும் கீன்ஸின் கருத்து.

### காசலின் கருத்துக்கு எதிர்ப்பு

இயற்கையின் திருவிளையாடலே வாணிகச் சுழலுக்குக் காரணம் என்று எண்ணியவர்களின் எண்ணிக்கை குறைவு. பெரும்பாலோர் முதலீட்டைத் தடுக்கும் முட்டுக்கட்டைகள் அல்லது பொருள்களுக்கான தேவையில் காணப்படும் வாட்டம் அல்லது மிதமிஞ்சிய முதலீடு ஆகியவைகளே மந்தத்துக்கான காரணங்கள் என நம்பலாயினர். உதாரணமாக, கஸ்டாவ் காசல் (Gustav Cassel) என்ற பொருளறிஞர் முதலினப் பொருள்களின் விலைவாசிகளிலும் வட்டி வீதத்திலும் காணப்படும் ஏற்றத்தாழ்வுகளே வாணிகச்சுழலுக்கான மூலகாரணங்களாகும் என விளக்க முற்பட்டார். முதலீட்டுக்கான வாய்ப்புகள் எண்ணிறந்தவை என்பது காசலது நம்பிக்கை. எனவே, முதலீட்டின் வாயிலாக எதிர்பார்க்கப்படும் விளைவுகளில் கணிசமான ஏற்றத்தாழ்வுகள் ஏற்படும் என்று எண்ண இடமில்லை என்பது அவரது கருத்து. மாருக, பொருளாதாரம் வளமான பாதையில் விறுவிறுப்புடன் ஏறிவரும்போது முதலினப் பொருள்களுக்கான தேவைகள் அதிகரிப்பதால், அவற்றின் விலைவாசிகள் மேன்மேலும் உயர்ந்துகொண்டே போகும் என்று எதிர்பார்க்கலாம். ஏனெனில் அப் பொருள்களை உற்பத்தி செய்து அளிக்கும் நிறுவனங்களின் அளிப்பு வளைகோடு (Supply Curve) U வடிவினதாக இருக்கும். முதலினப் பொருள்களின் உற்பத்தி உத்தமமானதோர் (Optimum) அளவினதாக இருக்கும்போது அப் பொருள்களின் உற்பத்திச் செலவு குறைந்தபட்சமாக இருக்கும் என்பது தெளிவு. ஆனல், தேவை மிதமிஞ்சி அதிகரித்துக்கொண்டு வரும்போது, அதை ஈடுசெய்யக் கூடிய வகையில் உற்பத்தியைப் பெருக்கும்போது உத்தமமானதோர் நிலையைத் தாண்டிச் செல்ல நேரிடும். அதன் பயனுக, முதலினப் பொருள்களின் உற்பத்திச் செலவும் விலைவாசிகளும் அதிகரிக்கும் என்பது தெளிவு. முதலினப் பொருள்களுக்குக் கிராக்கி ஏற்படுகின்ற அதே சமயத்தில் தொழிலாளருக்குத் தட்டுப்பாடு உண்டாகுமானல் மொத்தத்தில் பொருள்களின் விலைவாசிகள் ஏறிவரும் என்பதும் கண்கூடு. மேலும், முதலினப் பொருள்களுக்கான தேவை அதிகரிப்பதால் அப் பொருள்களில் முடக்கப்படும் முதலுக்காகத் திரட்டப்படும் கடன்தொகைக்கு வழங்கப்படும்

வட்டிவீதமும் வளர்ந்து வரும் என்று எதிர்பார்க்கலாம். முதலீட்டுச் செலவுகள் இவ்வாறு அதிகரித்து வருவதால் சுபிட்சம் கெட்டு முதலீடும் குன்றி வரலாகும். அதன் விளைவுதான் பொருளாதார மந்தம் என்பது காசலது கருத்தாகும். ஆனால், கீன்ஸ் அக் கருத்தை ஏற்றுக் கொள்ளுவதாக இல்லை. குறிப்பாக, எதிர்பார்க்கப் படும் விளைவுகள் கூடியமட்டும் நிலையானதாக இருக்கும் என்று காசல் எண்ணினார். மாறாக, எதிர்பார்க்கப்படும் விளைவுகளில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகளே வாணிகச்சுழலுக்கான முக்கியமான காரணம் என்பது கீன்ஸின் கருத்து. அதன்படி, முதலீட்டு இறுதி நிலைத்திறன் திடீரெனச் சரிவதனாலேயே பொருளாதாரம் நிலைதவறி மந்தப்படுகுழியை நோக்கி விரையும்; வட்டிவீதம் வளர்வதனாலன்று என்பது கீன்ஸின் விளக்கமாகும்.

அத்துடன், வாணிகச்சுழலின் வேகத்தைத் தணிப்பதற்கான கொள்கை எது என்ற கேள்விக்குப் பதிலிறுக்கும்போது, கீன்ஸ், வட்டி வீதத்துக்கு அவ்வளவு முக்கியத்துவம் அளிக்கவில்லை. மிதமிஞ்சிய முதலீடே பொருளாதாரம் விறுவிறுப்புடன் சுபிட்ச பாதையில் முன்னேறுவதற்கான முக்கிய காரணம் எனச் சிலர் நம்பினார்கள். எனவே, வட்டிவீதத்தை ஏற்ற வகையில் உயர்ந்தினால்தான் முதலீடு மிதமிஞ்சிப் போகாமல் தடுத்து நிறுத்த முடியும் என்று அவர்கள் நம்பினார்கள். ஆனால், வட்டிவீதத்தை உயர்த்துவதைக் கீன்ஸ் வரவேற்கவில்லை. சுபிட்சத்தை மட்டந்தட்டுவதைவிட, அந் நிலை நீடித்து நிலைப்பதற்கான முயற்சியில் ஈடுபடுவதே சாலச் சிறந்தது. சுபிட்சம் நிலைத்து நின்றால்தான் வேலைக்கான வாய்ப்பு களும் வளமாக இருக்கும் என்பது கீன்ஸின் கருத்து. அத்தகைய சுபிட்சத்துக்கு அடிப்படையாக இருப்பது முதலீடு. வட்டிவீதத்தை உயர்த்துவதால் முதலீட்டைத் தூண்ட முடியாது; மாறாக, சுபிட்சம் நீடிக்க வேண்டுமாயின், வட்டிவீதத்தைக் குறைத்து, முதலீட்டைத் தூண்ட வேண்டும். அப்போதுதான் வேலைக்கான வாய்ப்புகள் பெருகும் என்பது கீன்ஸின் கருத்து. உண்மையில், கடந்த காலங்களில் சுபிட்சம் என்ற ஒரு நிலை நிலவிய போதெல்லாம் வட்டிவீதம் அளவுக்கு மிஞ்சி அதிகமாக இருந்து வந்தது என்பது கீன்ஸின் கருத்து.

### நுகர்வு வாட்டக் கோட்பாடுகள்

விளையும் பயிர் முளையிலே தெரியும் என்பார்கள். முதலாளித்துவப் பொருளாதாரத்தின் குழந்தைப் பருவத்தைக் கூர்ந்து கவனித்து வந்த தொன்மைப் பொருளாதாரிகளான மால்த்தஸ், கார்ல்மார்க்ஸ், போன்றவர்கள் நாட்டுவருவாய், கூலி, இலாபம் ஆகிய வகையில் பகிரப்படும் விதத்தைப் பார்த்ததன் பயனாக, நுகர்வு போதிய

அளவில் அதிகரிக்காமல் அல்லற்பட நேரிடலாம் என்று அஞ்சினர். குறிப்பாக, கார்ல் மார்க்ஸ் முதலாளித்துவப் பொருளாதாரங்கள் தாங்கள் ஆக்கிய பண்டங்களை விற்கமுடியாமல் திணற நேரிடலாம் என்று எச்சரித்தார். முதலாளிகளின் இலாப வேட்கையின் காரணமாகக் கணிசமான அளவில் முதல் திரண்டு வருவதைக் கார்ல் மார்க்ஸ் கண்ணாரக் கண்டார். அம் முதல் திரட்சியின் பயனாக முதற்கருவிப் பொருள்கள் பேரளவில் படைக்கப்படும் என்பதும் அவருக்குத் தெற்றெனத் தெரிந்தது. அதே சமயத்தில் தொழிலாளி வர்க்கத்தின் உழைப்பைச் சுரண்டுவதே முதல் திரட்சியின் அடிப்படை என்பது அவருக்கு நன்கு புலனாயிற்று. சுரண்டியதுபோக, எஞ்சிய கூலியைக்கொண்டு தங்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத முக்கியமான பொருள்களைக்கூட அவர்களால் வாங்க இயலாததால் பெருகி வரும் உற்பத்திச் சாதனங்களின்மூலம் பேரளவில் செய்து குவிக்கப்படும் பலதரப்பட்ட நுகர்வுப் பொருள்களையும் வாங்கும் சக்தி அவர்களிடம் இருக்கும் என்று எதிர்பார்க்க இயலாது. எனவே, ஆக்கிய பண்டங்களனைத்தையும் விற்க முடியாமல் முதலாளிகள் திண்டாட நேரிடும். முதற்கருவிப் பொருள்களும் வாங்கும் சக்தியும் வளரும் வேகத்திலுள்ள ஏற்றத்தாழ்வுகளே இத்தகைய நெருக்கடிக்குக் காரணம் என்பது கார்ல் மார்க்ஸின் கருத்து.

கார்ல் மார்க்ஸின் மரபை ஒட்டியே ஜான் ஏ. ஹாப்சன் (John A. Hobson) போன்ற சமதர்மவாதிகளும் நுகர்வுவாட்டமே பொருளாதார மந்தத்துக்கான மூலகாரணமாகும் என்று வலியுறுத்தி வந்தனர். எனவே, வேலையில்லாத் திண்டாட்டத்தை விரட்ட வேண்டுமாயின், வாங்கும் சக்தியை ஓங்கி வளரவிடாமல் ஒடுக்கிவரும் சொத்துரிமையையும் தனிவுடைமையினடியாக எழுப்பப்பட்டுள்ள பொருளாதார அமைப்பையும் அடியோடு மாற்றியமைக்க வேண்டும் என்று ஹாப்சன் வாதாடினார்.

நுகர்வுவாட்டக் கோட்பாட்டுக்கும் கீன்ஸின் போதாத் தேவைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பது கண்கூடு, ஆனால், நுகர்வுவாட்டத்தைப் போக்குவதற்கு ஹாப்சன் போன்ற சமதர்ம வாதிகள் சொத்துரிமையின் அடிப்படையை அடியோடு மாற்றி யமைக்க விரும்பினார்கள். ஆனால், கீன்ஸ், நடைமுறையிலுள்ள சொத்துரிமைக்கும் அதனடிப்படையில் கட்டப்பட்ட முதலாளித்துவ பொருளாதார அமைப்புக்கும் உட்பட்டே பொருளாதார மந்தத்துக்கு மருந்துதேட முயன்றார். உடைமையிலுள்ள ஏற்றத் தாழ்வுகளின் காரணமாக ஏற்படும் வருவாய் பங்கீட்டு முறைதான் போதாத் தேவைக்கு அடிப்படையான காரணம் என்பது கீன்ஸீக்குத் தெளிவாகத் தெரியுமென்றாலும், தனிவுடைமை முறையைக்

கைவிடுவதற்குக் கீன்ஸ் தயாராக இல்லை. மாறாக, நுகர்விலுள்ள வாட்டத்தை முதலீட்டைக்கொண்டு ஈடுசெய்வதிலேயே கீன்ஸ் கவனம் செலுத்தலானார்.

**கீன்ஸீயக் கோட்பாட்டின் வளர்ச்சி**

பணச்சீர்திருத்தம் பற்றிய தமது சிந்தனைகளில் கீன்ஸ் வாணிகச் சுழலைப்பற்றியோ பொருளாதார மந்தம் பற்றியோ அவ்வளவு அக்கறை காட்டவில்லை. மாறாக, விலைவாசியை ஒரே சீராக வைத்திருப்பதற்கு எத்தகைய பணச்சீர்திருத்தங்கள் பயன்தருவ தாகும் என்பதிலேயே அவர் மிகவும் கவலை கொண்டிருந்ததாகத் தெரிகிறது. விலைவாசிக்கும் வாணிகச்சுழலுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டென்றாலும் வாணிகச்சுழலின் காரணமென்ன? அதன் போக்கு என்ன? சுழலைத் தடுத்து நிறுத்துவதற்கான வழி வகைகள் என்ன? என்பன போன்ற கேள்விகளுக்கு விடைகாண முற்படாமல், பணத்தினளவுக்கும் விலைவாசிகளுக்குமுள்ள தொடர்பையே துருவி ஆராய முற்பட்டார் என்றால் மிகையாகாது.

பணம் பற்றிய சித்தாந்தத்தில் கீன்ஸ் வாணிகச்சுழலுக்கான காரணத்தைக் கண்டுபிடிக்க முனைந்ததாகத் தெரிகிறது. சேமிப்பு வீதமும் முதலீட்டுவீதமும் சீர்கெட்டு, நிலைதவறி, அலசடிப்படுவ தாலேயே, வாணிகச்சுழல் ஏற்படுகிறது என்ற கருத்து அந் நூலில் தொனிப்பதைக் காணலாம். பழையன கழிதலும் புதியன புகுதலும் முதலாளித்துவப் பொருளாதார வளர்ச்சியை உந்தித்தள்ளும் மூலசக்தியாகும் என்பது ஜே. சும்பீட்டரின் (J. Schumpeter) கருத் தாகும். அக் கருத்தைக் கீன்ஸ் அப்படியே ஏற்றுக்கொண்டதாகத் தெரிகிறது. அத்துடன் வட்டிவீதத்தில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளே சேமிப்புக்கும் முதலீட்டுக்குமுள்ள சமன்பாடு கெடுவதற்கான முக்கிய காரணமாகும் என்பது கீன்ஸின் கருத்து. சேமிப்பையும் முதலீட்டையும் சமநிலையில் வைத்திருக்கக்கூடிய வட்டிவீதத்தை இயற்கையான வட்டிவீதமென்றும் (Natural Rate) அச் சமநிலையைக் குலைக்கக்கூடிய வட்டிவீதத்தைச் சந்தையில் நிலவும் வட்டி வீதமென்றும் (Market Rate) கீன்ஸ் அழைக்கலானார். சேமிப்புக்கும் முதலீட்டுக்குமுள்ள சமன்பாடு கெடுவதற்கும், சந்தையில் நிலவும் வட்டிவீதம் இயற்கையான வட்டிவீதத்திலிருந்து விலகிச்செல் வதற்கும் முதலீட்டிலுள்ள முனைப்பே முக்கிய காரணம் என்று கீன்ஸ் நம்பினார். முதலீட்டில் ஏற்படும் சலனங்களின் பயனாக விலைவாசிகள் அலசடிப்படுவதோடு, சேமிப்புக்கும் முதலீட்டுக்குமுள்ள சமன்பாடும் கெடும் என்பது கீன்ஸின் கருத்து. எனவே சந்தையில் நிலவும் வட்டிவீதம் இயற்கையான வீதத்திலிருந்து விலகிப்போகாமல் தடுப்பது எப்படி? விலைவாசிகளை நிலையாக வைத்திருப்பது எப்படி?

சேமிப்பையும் முதலீட்டையும் சமநிலையில் வைத்திருப்பது எப்படி? என்ற பிரச்சினைகளில் கீன்ஸ் கவனம் செலுத்தி வந்தார். அதை ஒட்டித்தான் முதலீட்டளவை நிருணயிக்கக்கூடிய சக்திகளெவை? சேமிப்பு எவ்வாறு நடைபெறுகிறது? முதலீடு செய்யப்படுவது எப்படி? இவ்விரண்டு செயல்களின் போக்கிலுமுள்ள வேறுபாடுகள் என்ன? என்ற ஆராய்ச்சியில் அவர் ஈடுபட்டு வந்தார். இக் கருத்து களில் பல பழையவைதானென்றாலும் அவற்றைத் தொகுத்து நூல்வடிவாக்கிய பெருமை கீன்ஸையே சாரும்.

## பொதுக்கோட்பாட்டில் பொதிந்துள்ள விளக்கம்

பெரும் பொருளாதார மந்தத்துக்குப் பின்னர் வாணிகச்சுழல் ஏற்படக் காரணம் என்ன என்ற கேள்விக்குக் கீன்ஸ் புதியதோர் விடை அளிக்கலானார். ஏற்கனவே நெகிழ்ச்சியுள்ளதோர் வட்டி வீதத்தில் அவர் கொண்டிருந்த நம்பிக்கை கொஞ்சங் கொஞ்சமாகத் தளர்ந்துவந்தது. பெரும் பொருளாதார மந்தத்தின் விளைவாக அந் நம்பிக்கை மேலும் பலவீனமடைந்தது. எனவே, பொருளாதார மந்தத்துக்கான காரணங்களை ஆராயும்போது முன்போல வட்டி வீதத்துக்கு முக்கியத்துவமளிக்கவில்லை.

வேலையினளவை நிருணயிப்பதில் ஒன்றுக்கொன்று சார்பற்ற மூன்று மாறிகள் உண்டு என்பது பொதுக்கோட்பாட்டில் கீன்ஸ் வலியுறுத்திய கருத்தாகும். நுகர்வுநாட்டம், வட்டிவீதம், முதலீட்டின் இறுதிநிலைத்திறன் ஆகிய இம் மூன்றனுள் நுகர்வு நாட்டம் குறுகிய காலத்தில் மாறாமல் நிலைபெற்று விளங்கும் தன்மையது. வட்டிவீதமும் அவ்வளவு நெகிழ்ச்சியுடையதன்று; சிக்கலுடையது. இருப்பினும், நிதி நெருக்கடிகளில் வட்டி வீதத்துக்குக்குப் பெரும் பங்கு உண்டு. அதன் காரணமாக, வாணிகச் சுழலின் கோரத்தை வட்டிவீதம் ஓரளவு அதிகரிக்கவல்லது என்று கீன்ஸ் நம்பினார். ஆயினும், இவை இரண்டையும்விட முதலீட்டின் இறுதிநிலைத்திறனுக்கே பொதுக்கோட்பாட்டில் அவர் முக்கியத்துவம் அளித்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. முதலீடு பற்றிய அத்தியாயத்தில் முதலீட்டின் இறுதிநிலைத்திறன் குறுகிய காலத்தில் எவ்வளவு நிலையற்றவிதமாக மாறுந்தன்மையுடையது என்பதை ஆராய்ந்தோம். இத்தகைய குறுகியகால மாறுதல்களுக்கும் முதலினச் சொத்துகள் பெருக்கத்தால் நெடுங்காலத்தில் இலாபவீதம் குறைந்துபடுவதற்கும் உள்ள வேறுபாடுகளையும் தெளிவுற விளக்கியுள்ளோம்.

## வாணிகச்சுழலின் போக்கு

சுபிட்சமும் மந்தமும் எப்படிச் சிறிதாகத் தோன்றி உருண்டு திரண்டு சுழன்று பொருளாதாரத்தை உலுக்குகின்றன என்பதை பெருக்கியின் துணைகொண்டு கீன்ஸ் விளக்கியதை ஏற்கனவே கண்டோம். சுபிட்சப் பாதையில் செல்லும்போது சுபிட்சம் அலையலையாக ஓங்கி உயர்ந்து வரும். அப் போக்கில் தொடரும்போதே வளர்ச்சியைத் தூண்டும் சக்திகள் தளர்ச்சியுற்று மேன்மேலும் தொடர்ந்து வளரவிடாமல் தடுத்துக் கீழ்நோக்கித் தள்ளத் தொடங்கும். அதேபோல் மந்தப்படுகுழியை நோக்கி விரையும் பொருளாதாரமும் ஒரு மட்டத்தை எட்டியதும் வேகந்தணிந்து மேலும் கீழ்நோக்கிச் சரிய இயலாமல் மெதுவாக மேல்நோக்கி இழுக்கப்படும். வாணிகச்சுழல் இவ்வாறு ஓர் எல்லைக்குட்பட்டு இயங்குவதன் இரகசியத்தை கீன்ஸ் சிறந்த முறையில் விளக்கினார் என்பதில் சந்தேகமில்லை.

வாணிகச்சுழலின் எல்லைகளை நிருணயிப்பதற்குக் கீன்ஸ் கையாண்ட முறைகள் கவர்ச்சிகரமானவை. குறிப்பாக, வருவாய் வளர்ந்து வரும்போது அதன் வளர்ச்சி வேகத்துக்கேற்ப வருவாயில் நுகர்வின் பங்கு வளருவதில்லை என்ற உண்மையின்மூலம் எப்படிச் சுபிட்சப் பாதையில் செல்லும் பொருளாதாரங்கள் நெடுங்காலப் போக்கில் தேக்கமுற நேரிடும் என்பதை அவர் தெளிவுற எடுத்துக் காட்டினார். பத்தொன்பதாம் நூற்றாண்டு முழுவதும், ஏன், முதலாம் உலகப்போர் வரையிலுமே சுபிட்சப் பாதையில் சென்று கொண்டிருந்த மேற்கத்திய நாடுகளின் முதலாளித்துவப் பொருளா தாரங்கள் கொஞ்சங்கொஞ்சமாகத் தயக்கமுற்று வந்ததன் காரணமாகத் தேக்கத்தின் அறிகுறிகள் தென்படலாயின. ஆனால், இத்தகைய வளர்ச்சிப் பாதையிலும் தேக்கநிலையிலும் மேடுபள்ளங்கள் பல இருந்து வந்தன என்பது கண்கூடு. சுபிட்சம் நிலவியபோதும் சில காலங்களில் பொருளாதார வளர்ச்சி சுமாராக இருந்தது. வேறு சில காலங்களில் உன்னதமான பொருள் வளம் பெற்று விறுவிறுப் புடன் ஓங்கி வந்தது. மாறாக, பொருளாதாரம் சுணக்கமுறும்போது சற்றே அசதியுடன் இயங்கும் காலங்களும் உண்டு; மந்தத்தால் பீடிக்கப்பட்டு அடியோடு சோர்வுற்றுச் சோம்பிக் கிடந்த காலங்களும் உண்டு. ஆயின், சுபிட்சப் பாதையிலிருந்து புரண்டு மந்தப் பாதை யிலும், மந்தப் பாதையிலிருந்து தப்பிச் சுபிட்சப் பாதைக்கும் மாறி மாறி வருவதெப்படி என்ற விளக்கம் சுவையானதாகும்.

சுபிட்சம் ஓங்கி வரும்போது முதலீட்டின் இறுதிநிலைத்திறனும் விளக்கமுற்று உச்சநிலையிலிருக்கும் என்பது எளிதில் விளங்கும்.

எனினும், சுபிட்சம் ஓர் எல்லையை எட்டியதும் முதலீட்டின் இறுதி நிலைத்திறன் குன்ற ஆரம்பிக்கும். இரண்டு கோணங்களிலிருந்து முதலீட்டின் இறுதிநிலைத்திறன் பாதிக்கப்படும். முதலாவது, முதற் கருவிப் பொருள்கள் பெருகிவரும்போது அவற்றை உருவாக்கு வதற்குப் பயன்படுத்தப்படும் கனிப்பொருள்களுக்கும் கச்சாப் பொருள்களுக்கும் தட்டுப்பாடு ஏற்படலாம்; தரமான உழைப்பாளரும் தேவையான அளவில் கிடைக்காமல் போகலாம். இத்தகைய முட்டுக்கட்டைகளால் முதற்கருவிப் பொருள்களின் உற்பத்திச் செலவுகள் அதிகரித்து முதலீட்டின் இறுதிநிலைத்திறனை மட்டுப்படுத்தும். இரண்டாவது, புதிதாக நிறுவப்பட்ட முதலினச் சொத்துகளின் துணைகொண்டு ஆக்கப்படும் பண்டங்கள் மலிவதன் காரணமாக முதலீட்டின் விளைவுகள் எதிர்பார்த்த அளவுக்கும் குறைவாக இருக்கும் என்று எண்ண இடமுண்டு. எதிர்காலம் நன்றாக இருக்கும் என்ற நன்னம்பிக்கை ஓங்கி நின்றால்தான் முதலீட்டின் இறுதிநிலைத்திறன் சிறப்பாக இருக்கும். ஆனால், எதிர்காலத்தைப் பற்றிய எதிர்பார்ப்புகள் கானல்நீர் போன்று ஏமாற்றம் விளைவிக்கக்கூடும். ஆக்கச் செலவுகள் உயர்ந்து வரும் போது முதலினச் சொத்துகளின் துணைகொண்டு செய்து குவிக்கப் படும் பொருள்களின் விலைவாசிகள் சரியுமானால், எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கைகள் தவிடு பொடியாகலாம். அதன் விளைவாக, எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கைக் குடிகொண்டிருந்த மனத்தில் அவநம்பிக்கை புகுந்து குரங்காட்டம் காட்டி ஆட்டி வைக்கலாம். அரண்டு, மருண்டு வரும் இத்தகைய மனோபாவத்தின் காரணமாக முதலீட்டின் இறுதிநிலைத்திறன் திடீரென்று தலைக்குப்புறச் சரியலாம். அதன் விளைவுதான் வேலையின்மை.

சுபிட்சம் இவ்வாறு மந்தமாக மாறுவதற்கு முதலீட்டின் இறுதி நிலைத்திறனில் ஏற்படும் அதிர்ச்சிகளே அடிப்படையான காரணம் என்பதைக் கீன்ஸ் வலியுறுத்தினார். பெருக்கி வேலை செய்ததன் காரணமாகச் சுபிட்சம் வீறுநடை போட்டது போலவே, மந்தமும் வேகமாகக் கீழ்நோக்கி இழுத்துச் செல்லும். பெருக்கியின் சக்தியைப் பலப்படுத்தும் வகையில் நெகிழ்ந்து கொடுக்காத வட்டிவீதமும் பொருளாதாரத்தை மந்தப் படுகுழியில் உந்தித் தள்ளும். ரொக்க விருப்பமே வட்டிவீதம் உயருவதற்கான முக்கிய காரணம். இருப்பாக வைத்துள்ள பொருள்களையும் கச்சாப் பொருள்களையும் குறைப்பது, பத்திரங்களை மாற்றிப் பணமாக்க முயலுவது, விலைசரியும் போது 'மேலும் குறையட்டுமே' என்று நினைத்துப் பொருள்களை வாங்கத் தயங்குவது போன்ற காரணங்களாலேயே ரொக்க விருப்பம் அதிகரிக்கிறது. எனவே, குறைந்துவரும் முதலீட்டு இறுதிநிலைத் திறனை வளர்ந்துவரும் வட்டிவீதம் (அல்லது நெகிழ்ந்து கொடுக்காத

வட்டிவீதம்) மேன்மேலும் குறைந்துவிடுவதாலேயே, சுபிட்சம் நெருக்கடியாக மாறுகிறது என்பது கீன்ஸின் விளக்கமாகும்.

கீன்ஸீயக் கோட்பாட்டின்படி மந்தப் படுகுழியிலிருந்து பொருளாதாரத்தை மீட்க வேண்டுமாயின் முதலீட்டின் இறுதித் திறனை உயிர்ப்பிக்கவேண்டும் என்பது தெளிவு. அதற்கு அனுசரணை யான வகையில் பணவாக்கக் கொள்கையை மாற்றியமைப்பதன்மூலம் வட்டிவீதத்தைக் குறைக்கலாம். இருப்பினும், முதலீட்டின் இறுதி நிலைத்திறன் மிகவும் குன்றிப் போயிருக்குமானால் குறைந்த வட்டி வீதத்தால் மட்டும் முதலீட்டைத் தூண்டிவிட முடியாது. உண்மையில் முதலீட்டு இறுதிநிலைத்திறனை மேம்படுத்துவதற்குக் கொஞ்சகாலம் பிடிக்கும். முதலினச் சொத்துகள் தேய்ந்து வருவதாலும் வழக்கிறந்து பயனற்றுப் போவதாலும் இருப்பாக உள்ள முதற்கருவிப் பொருள்கள் முடிவதற்கு முன்னரே அவற்றுக்கான தேவை திடீரென்று தலைதூக்கும். அதன் விளைவாக, முதலீட்டின் இறுதி நிலைத்திறன் உயிர்ப்பிக்கப்படும் என்று எதிர்பார்க்கலாம். அதே சமயத்தில், வாணிக நடவடிக்கைகள் காரணமாகவும் வருவாய் காரணமாகவும் தேவைப்படும் பணத்தின் அளவு குன்றுவதால் ரொக்கவிருப்பம் குன்றி வட்டிவீதம் குறைவதற்கு ஏதுவாகும். வட்டிவீதத்தில் ஏற்படும் இத்தகைய வீழ்ச்சியும் பொருளாதாரத்தை மீட்பதற்குப் பக்கதுணையாக இருந்து உதவும் என்பது கீன்ஸின் கருத்து.

### முதலீட்டுப்பெருக்கியின் முக்கியத்துவம்

வாணிகச்சுழல் பற்றிய கீன்ஸீயக் கோட்பாட்டில் முதலீட்டுப் பெருக்கி முக்கிய இடம் வகிப்பது கண்கூடு. பொருளாதாரம் சுபிட்சப் பாதையில் ஓங்கி வளரவளர முதலீட்டுப் பெருக்கிக் கொஞ்சங் கொஞ்சமாக அதிகரிக்கும். அதாவது, சுபிட்சப் பாதையில் விரையும் போது அடுக்கடுக்காக ஈடுபடுத்தப்படும் முதலீடு ஒரே அளவினதாக இருந்தாலும் அதன் விளைவாகப் பெருகும் வருவாயும், வேலைக்கான வாய்ப்புகளும் கொஞ்சங்கொஞ்சமாகக் குறைந்துவரும்; மாறாக, மந்தப் படுகுழியை நோக்கி விரையும்போது அடுக்கடுக்காக ஈடுபடுத்தப்படும் முதலீடு ஒரே அளவினதாக இருந்தாலும் அதன் விளைவாகப் பெருகும் வருவாயும், வேலைக்கான வாய்ப்புகளும் கொஞ்சங்கொஞ்சமாகக் குறைந்து வரும். அதன்படி, சுபிட்சம் ஓங்கஓங்க மேன்மேலும் வருவாயையும் வேலைக்கான வாய்ப்புகளையும் பெருக்கவேண்டுமாயின் அதற்காக ஈடுபடுத்தப்படும் முதலீட்டின் அளவு மேன்மேலும் அதிகரிக்கும். அதாவது, சுபிட்சம் ஓங்கிவரும்போது ஒரே அளவான வருவாயையும் வேலைக்கான வாய்ப்புகளையும் பெருக்குவதற்கு அதிகமான முதலீட்டுச் செலவை மேற்கொள்ள வேண்டியதேற்படும்

எனவே, சுபிட்சத்தின் கொடுமுடியில் இருக்கும்போது பொருளா தாரம் திறன்குன்றி இயங்குவது இலைமறை காய்போலத் தெரிவ தாகும். அதன் விளைவாகத்தான் பொருளாதாரத்தின் வளர்ச்சிக் குன்றத் தொடங்குகிறது.

மாறாக, பொருளாதார நெருக்கடி முற்றிவரும்போது அடுக்கடுக்காக ஈடுபடுத்தப்படும் முதலீடு ஒரே அளவினதாக இருந்த போதிலும், அதன்விளைவாகப் பெருகும் வருவாயும் வேலைக்கான வாய்ப்புகளும் கொஞ்சங்கொஞ்சமாக அதிகரித்து வரும். அதாவது, முதலீடு ஒரே அளவினதாகக் குறைந்துவருமானால், அதன் பயனாக வருவாயும் வேலைக்கான வாய்ப்புகளும் அதிகப்படியான வீதத்தில் குறைந்துவரும். எனவே, மந்த சக்திகள் துரிதப்படுத்தப்பட்டு மேன்மேலும் வலிவடை யும்.

நுகர்வு நாட்டத்திலுள்ள மாற்றங்களே சுபிட்சத்தின்போது பெருக்கி குறைவதற்கும் மந்தத்தின்போது பெருக்கி அதிகரிப்பதற்கும் அடிப்படைக் காரணங்களாகும் என்பது கீன்ஸின் கருத்து. வருவாய் குறைந்திருக்கும்போது இறுதிநிலை நுகர்வு நாட்டம் அதிகமாக இருக்கும். எனவே வருவாய் குறைந்துவரும்போது இறுதிநிலை நுகர்வு நாட்டம் அதிகரித்து வரும். மாறாக, வருவாய் உயர்ந்திருக்கும் போது இறுதிநிலை நுகர்வு நாட்டம் குறைந்திருக்கும். எனவே, வருவாய் அதிகரித்துவரும்போது இறுதிநிலை நுகர்வு நாட்டம் குறைந்துவரும்; மந்தத்தின்போது வருவாய் சுருங்கும்; இறுதிநிலை நுகர்வு நாட்டம் அதிகரிக்கும். அதன் காரணமாகப் பெருக்கியின் அளவும் அதிகரிக்கும். ஆனால் சுபிட்சத்தின்போது வருவாய் அதிகரிக்கும்; இறுதிநிலை நுகர்வு நாட்டம் குறையும். அதன்பயனாகப் பெருக்கியின் அளவு சுருங்கும். எனவே, மந்தத்தின்போது வருவாய், நுகர்வைக் காட்டிலும் வேகமாகச் சுருங்கும். ஆதலின் வருவாய்க்கும் நுகர்வுக்குமுள்ள இடைவெளி சுருங்கும். ஒரு குறிப்பிட்ட எல்லையை அடைந்ததும் வருவாயும் நுகர்வும் சமமாக இருக்கும் என்றும் எதிர்பார்க்கலாம். அக் கட்டத்தில் வேலையினளவு மிகவும் குறைவாக இருந்தாலும் நிலையாக இருக்கும் என்பது புலனாகும். அந் நிலையில் முதலீடு தூண்டப்பட்டால்தான், பொருளாதாரம் மீண்டும் மீட்சிப் பாதைக்குத் திருப்ப முடியும். இவ்வாறு, வாணிகச்சுழலின் எல்லைகளைப் பெருக்கியின் துணைகொண்டு விளக்குவதன்மூலம் கோட்பாட்டு ரீதியில் கீன்ஸ் புதியதோர் கோணத்தைச் சுட்டிக் காட்டினார் என்பதில் ஐயமில்லை.

**கீன்ஸீயக் கோட்பாட்டிலுள்ள குறைபாடுகள்**

பொதுக் கோட்பாட்டின் 2-வது அத்தியாயத்தில் வாணிகச் சுழல் பற்றிக் கீன்ஸ் விளக்கும்போது தமது கோட்பாடு ஒன்றும் புதியதன்று

என்றும், ஏற்கனவே பலரும் வெளியிட்டுள்ள கோட்பாடுகளைப் பயன்படுத்தியே வாணிகச்சுழலை விளக்க முற்பட்டதாகவும் குறிப்பிட்டுள்ளார். ஆனால், உண்மையில் அவர் கடன் வாங்கிய கருத்துகளில் காணப்பட்ட குறைபாடுகளுடன் மேலும் பலவற்றை அவர் கூட்டியுள்ளார் என்று சிலர் கீன்ஸின்மீது குறை கூறியுள்ளனர். ஏற்கனவே, நாம் ஐந்தாவது அத்தியாயத்தில் கண்டபடி, முதலீட்டின் இறுதித் திறனைப் பற்றித் தெளிவான இலக்கணமோ விளக்கமோ கீன்ஸ் தரவில்லை. மேலும், பல்வேறு இடங்களிலும் பலவிதமான பொருள்படும் வகையில் அவர் அக் கருத்தைக் கையாண்டுள்ளார். ஓர் இடத்தில் தற்காலத்தில் முதலினச் சொத்துகளிலிருந்து கிடைக்கும் விளைவுகள் என்ற பொருள்படும்படி முதலீட்டு இறுதி நிலைத்திறனைப் பயன்படுத்தியுள்ளார். மற்றோர் இடத்தில் குறிப்பிட்ட முதலினச் சொத்துகளிலிருந்து வருங்காலத்தில் எதிர்பார்க்கப்படும் விளைவுகள் என்ற கருத்தில் கையாண்டுள்ளார். இன்னொரு இடத்தில் இலாபத்தைப் பற்றி முதலாளிகள் என்ன மனோபாவம் கொண்டுள்ளார்கள் என்பதைக் குறிக்கும் வகையில் எழுதியுள்ளார். ஆழமாக ஆராயப் புகுந்தால், குஞ்சு முதலா? முட்டை முதலா? என்ற சர்ச்சையாகத்தான் முடியும். உண்மையில் முதலீட்டு இறுதிநிலைத்திறன் மாறுவதால் வாணிகச்சுழல் ஏற்படுகிறதா அல்லது வாணிகச்சுழலால் முதலீட்டு இறுதிநிலைத்திறன் பாதிக்கப்படுகிறதா என்ற கேள்வியைத் தவிர்க்க முடியாது. நடைமுறையில் முதலீட்டு இறுதிநிலைத்திறனுக்கும் இலாபத்தைப் பற்றி முதலாளிகள் கொண்டுள்ள மனோபாவத்துக்கும் அதிக வேறுபாடு கிடையாது என்பது உண்மையானால், வணிகர்கள் இலாபத்தைப் பற்றிக் கொண்டுள்ள நம்பிக்கை தகர்ந்து தவிடு பொடியாவதாலேயே பொருளாதார நெருக்கடி முற்றி மந்தமாகிறது என்று எண்ண இடமுண்டு. இருந்தாலும் இத்தகைய விளக்கம் அவ்வளவு திருப்திகரமானதன்று. ஏனெனில், முதலாளிகளின் நம்பிக்கை அவ்வாறு தளர்ந்து பீதியாக மாறுவதற்குக் காரணம் என்ன? முதலீட்டு இறுதிநிலைத்திறன் இவ்வாறு திடீரென மங்குவானேன்? என்ற கேள்விகளுக்கு விடையளிப்பது எளிதன்று. எனவேதான் முதலாளிகளின் நம்பிக்கை நாசமாவதினால்தான் பொருளாதாரம் மந்தப்படுகிறது என்று திட்டவட்டமாகக் கூற முடிவதில்லை.

முதலினச் சொத்துகளிலிருந்து வருங்காலத்தில் எதிர்பார்க்கப்படும் விளைவுகளே முதலீட்டின் இறுதிநிலைத்திறன் என்றுகொண்டால் அதுவும் மனோபாவத்தை ஒட்டியதுதான். அதற்கும் என்ன இலாபம் கிடைக்கும் என்று முதலாளிகள் எதிர்பார்ப்பதற்கும் அதிக வித்தியாசம் கிடையாது. அவ்வாறின்றி, முதலீட்டு இறுதி

நிலைத்திறன் முதலினச் சொத்துகளின் தற்போதைய ஆக்கத்திறனைக் (பொருள் வடிவான) குறிக்குமானால், பொருளாதார நெருக்கடியின் போது அத்தகைய ஆக்கத்திறன் பாதிக்கப்படும் என்று எண்ணுவதற்கில்லை. அவ்வாறின்றி, முதலீட்டு இறுதிநிலைத்திறன் ஆக்கசக்தியின் பணமதிப்பைக் குறிக்குமானால் வாணிகச்சுழலே ஆக்கத்திறன் குன்றுவதற்குக் காரணம் என்று தயங்காமல் கூறலாம். சுருங்கச் கூறின், முதலீட்டு இறுதிநிலைத்திறன் திடீரென்று சரிவதாலேயே பொருளாதார நெருக்கடி முற்றி மந்தப்படுகிறது என்ற கீன்ஸீய விளக்கம் கவைக்குதவாதது. பயனற்றது; அக் கருத்துக்கு நாம் புகட்டும் பொருளைப் பொறுத்து அது பல தவறான, குழப்பமிக்க விளக்கங்களுக்கு வழிவகுக்கும் என்று சிலர் கருதுகிறார்கள்.

வாணிகச்சுழல் ஒரு முறைக்குட்பட்டதா ?

வாணிகச்சுழல் ஒரு கிரமத்துக்கும் ஒழுங்குக்கும் உட்பட்டே இயங்கி வருகிறது என்பது கீன்ஸின் நம்பிக்கை. எவ்வளவு காலம் மேல்நோக்கிச் செல்லும் எவ்வளவு காலம் கீழ்நோக்கிச் சரியும் என்பதை ஓரளவு நிருணயிக்க முடியும் என்றும் அவர் நம்பினார். எத்தனை ஆண்டுகள்தான் மந்தப்பாதையில் செல்லும் என்பது வெறும் கற்பனையன்று. பெரும்பாலும் மூன்று முதல் ஐந்து ஆண்டுகள் வரை மந்தம் நீடித்திருக்கும் என்று எதிர்பார்க்கலாம் என்பது கீன்ஸின் அபிப்பிராயம். ஆனால் புள்ளிவிவரங்களைக் கொண்டு ஆதாரங் காட்டி தமது கருத்தை அவர் நிலைநாட்டவில்லை. வாணிகச் சுழல்களை அளவிடுவது அவ்வளவு எளிதன்று என்பது அம் முயற்சியில் நெடுங்காலமாக ஈடுபட்ட புள்ளிஇயல்மேதைகளான மிட்சல் (Mitchell), பர்ன்ஸ் (Burns) ஆகியோரின் அபிப்பிராயமாகும். அவர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி தேசீயப் பொருளாதார ஆராய்ச்சிக் குழுவின் (National Bureau of Economic Research) சார்பில் ஜியாப்ரி எச். மூர் (Geoffrey. H. Moore) என்பவர் கி. பி. 1854 முதல் 1954 வரையுள்ள காலத்தில் நிகழ்ந்த 24 வாணிகச் சுழல்களைப் பற்றி மேற்கொண்ட ஆராய்ச்சியின்படி, மந்தங்கள் சராசரி 20 மாத கால அளவாக நீடித்திருந்ததாகக் குறிப்பிட்டுள்ளார். இதற்கும் கீன்ஸ் கற்பனை செய்த 3 முதல் 5 ஆண்டுகள் வரை என்பதற்கும் இருக்கும் வேற்றுமை பெரிது. மேலும் மந்தங்களிடையே கால அளவில் எத்தனை வேறுபாடுகள் ஏற்படக்கூடும் என்பதும் சிந்திக்கற்குரியது. சான்றாக 1873 அக்டோபரில் ஆரம்பித்த பொருளாதார மந்தம் 65 மாதங்கள் நீடித்தது. மாறாக, 1918 ஆகஸ்டில் ஆரம்பித்த மந்தம் ஏழு மாதங்களுக்கு மேல் நீடிக்கவில்லை. இத்தகைய ஏற்றத்தாழ்வுகள் கீன்ஸ் நம்பியதுபோல வாணிகச்சுழல்களிடையே உள்ள ஒருமைப்பாட்டையோ ஒழுங்குமுறையையோ கொஞ்சங்கூட எடுத்துக்காட்டுவதாக இல்லை.

வாணிகச்சுழல்கள் எவ்வளவு தூரம் ஒழுங்குமுறைக்குட்பட்டு இயங்கி வருகின்றன என்பதை முதலீட்டு இறுதிநிலைத்திறனைப் பாதிக்கக்கூடிய சக்திகளைக் கொண்டு கீன்ஸ் விளக்க முயன்றுள்ளார். இங்கேயும் முதலீட்டு இறுதிநிலைத் திறனுக்குக் குழப்பமிக்க இலக்கணம் கூறி வாசகர்களைத் திகைக்க வைக்கிறார். குறிப்பாக எதிர்கால விளைவுகளைப் பற்றிய நம்பிக்கை என்ற பொதுப்படையான பொருளைக் கைவிட்டுவிட்டுச் சில குறிப்பிட்ட முதலினச் சொத்துகளின் ஆக்கத்திறன் என்ற இலக்கணத்தைப் பயன்படுத்தியுள்ளார். அதன்படி, மந்தத்தின் கால அளவிற்கும் நிலையுறு முதலினச் சொத்துகளின் ஆயுள்காலத்துக்கும், பொருள்களை இருப்பாக வைத்திருக்கும் பொருட்டு மேற்கொள்ளப்படும் செலவுகளுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்று வலியுறுத்தியுள்ளார். இங்கேயும் அவர் புள்ளிவிவரங்களை நன்கு மதித்ததாகத் தெரியவில்லை. புள்ளி விவரங்களும் அவருக்குத் துணை புரிவதாக இல்லை. ஏனெனில், நிலையுறு முதலினச் சொத்துகளின் சராசரி ஆயுள்நாள் இவ்வளவு தான் என்று கணிப்பது கல்லில் நாருரிப்பது போலாகும் என்று துணிந்து கூறலாம். அதைப்போலவே, இருப்புச் சரக்குகள் எவ்வளவு காலத்தில் காலியாகும் என்று கணிப்பதும் எளிதன்று. ஒவ்வொரு முதலினச் சொத்தின் ஆயுளும் ஏனையவற்றிலிருந்து மிகவும் மாறுபட்டிருக்கும் என்று எதிர்பார்க்கலாம். ஒரே ஆயுளைக் கொண்ட முதலினச் சொத்துகள்கூட வெவ்வேறு காலத்தில் நிறுவப்பட்டிருக்குமானால் அவை ஒரே காலத்தில் புதியவற்றால் மாற்றப்படும் என்று எதிர்பார்ப்பதும் தவறாகும். அத்துடன் எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கை எவ்வளவு திடமாக இருக்கிறதோ அதைப் பொறுத்துதான் புதிய முதலினச் சொத்துகளுக்கான தேவை பிறக்கும். எனவே, முதலினச் சொத்துகளின் ஆயுள்காலம் மந்தத்தின் கால அளவை நிருணயிப்பதற்கான காரணங்களுள் ஒன்றாக இருக்கலாம்; ஆனால், அவ்வளவு முக்கியமான காரணமாகக் கருத இயலாது. ஏதோ ஓரளவு உறவு உண்டென்று மட்டும் கூறலாமே ஒழிய, அதன் தன்மையோ பலமோ இன்னதுதான் என்று புள்ளி விவரங்களுடன் அறுதியிட்டுக் கூறக்கூடிய நிலையில் இதுவரை யாரும் ஆராய்ச்சி நடத்தியதாகக் காணோம்.

### பணவீக்கத்தைப் புறக்கணித்ததேன் ?

பணப்பெருக்கத்தாலும் கடன்வசதிகளின் பெருக்கத்தாலும் அளவுக்கு மிஞ்சிய பணம் புழக்கத்தில் வருவதால் பணவீக்கம் ஏற்பட்டு அத்துமீறிச் சென்று இறுதியில் பொருளாதார நெருக்கடியிலும் மந்தத்திலும் கொண்டு போய்விடும் என்று பொருளறிஞர்கள் சிலர் நம்பினர்கள். எனவே, சுபிட்சம் நிலவி வரும்

போது பணவீக்கத்தை அத்துமீறிச் செல்லவிடாமல், மட்டுப்படுத்தும் பொருட்டு அவர்கள் வட்டிவீதத்தை உயர்த்த வேண்டும் என்று கோரி வந்தனர். அப்படித் தடுத்து நிறுத்தாவிட்டால் பணவீக்கம் கட்டுத்தெறித்துக் கடைசியில் பொருளாதாரத்தை மந்தப் படுகுழியில் கொண்டுபோய்த் தள்ளி விடுமாதலால், வேலை யின்மையும், பொருளாதார நெருக்கடியும் தாங்கொணுக் கொடுமைகளை இழைக்கும் என்று எதிர்பார்க்கலாம். எனவே, வெள்ளம் வருமுன் அணையிட்டுத் தடுப்பதுபோல, வட்டிவீதத்தை உயர்த்துவதன்மூலம் பணவீக்கத்தின் கொட்டத்தை அடக்க வேண்டும் என்று அவர்கள் வலியுறுத்தினர். ஆனல், கீன்ஸ் பணவீக்கத்தின் பலாபலன்களைப் பற்றிக் கவலைப்பட்டதாகக் காணேம். மாருக, கீன்ஸின் கவனம் முழுவதும் பொருளாதார மந்தத்திலேயே சென்றதாகத் தெரிகிறது. வேலையின்மையைப் போக்கி நிறைவேலையை நிலைநாட்ட வேண்டுமாயின், வட்டிவீதத்தை மட்டந்தட்டி வைக்க வேண்டும் என்பது கீன்ஸின் கருத்து. வட்டி வீதம் குறைந்து பணவீக்கம் ஏற்பட்டால் என்னென்ன கேடுகள் விளையும் என்பதைப் பற்றி அவர் அரற்றிக் கொள்ளவில்லை. பணவீக்கப் பிரச்சினைகளின்மீது கீன்ஸ் அசிரத்தை காட்டியதை ஒரு பெருங்குறையாகவே கொள்ள வேண்டும்.

பணவீக்கத்தையும் வட்டிவீதத்தை உயர்த்த வேண்டியதன் அவசியத்தையும் புறக்கணித்தற்கு முக்கியமான காரணம் ஒன்று உண்டு. பொதுவாக, கீன்ஸ் தொழிற்றுணிவைப் போற்றி வரவேற்று முதலாளிகளை வெறுத்து வந்தார். எனவே, ஓரளவு பணவீக்கம் இருந்தால் பாதகமில்லை; அது தொழிற்றுணிவை ஊக்குவிப்பதாகவே அமையும்; இலேசான பணவீக்கம் நிறைவேலை நிலைக்கு அனுசரணையாக இருக்கும்; எனவே, அத்தகைய பணவீக்கத்தைக் கண்டு மலைக்கவோ மருளவோ அவசியமில்லை என்பது கீன்ஸின் கருத்து. மேலும், பணவீக்கத்தை மட்டுப்படுத்த வேண்டி வட்டிவீதத்தை உயர்த்துவதால் நிதிமுதலாளிகள்தான் பெரிதும் பயனடைவார்கள். அதனல் பொருளுற்பத்திக்கு என்ன பயன்? என்பது கீன்ஸின் கேள்வியாக இருந்து வந்தது. எனவே பணத்தினளவைப் பெருக்கி வட்டிவீதத்தைக் குறைப்பதன் மூலம் தொழிற்றுணிவு கொண்டவர்களை ஊக்குவித்து அதன்மூலம் முதலீட்டைத் தூண்டி வேலையின்மையை விரட்டியடிக்க வேண்டு மென்று அவர் விரும்பினர்.

### கோட்பாட்டு ரீதியில் பயன் தரும் கீன்ஸியக் கருத்துகள்

முழுமை பெற்ற கருத்துகளைக் கொண்ட கோட்பாடுகளின்மூலம் வாணிகச்சுழலைக் கீன்ஸ் விளக்க முற்பட்டார் என்று சொல்ல இயலாதென்ருலும், வாணிகச்சுழல் பற்றிய கோட்பாட்டில் ஒரு சில

புதுமைகளைப் புகுத்தினார் என்றால் மிகையாகாது. கீன்ஸ் புகுத்திய மாற்றங்கள் நுகர்வு நாட்டம் என்ற கருத்தினடியாகப் பிறந்தவை. முதலாவது, முதலாளித்துவப் பொருளாதாரம் இயல்பாக இயங்கி வருகிறது அல்லது சமநிலையில் இருந்துவிடுகிறது என்றால் என்ன? என்பதைக் கீன்ஸ் இலக்கவடிவாகத் தெளிவுபடுத்த முயன்றார். நாட்டுவருவாய் எந்த அளவிலிருக்கும்போது உத்தேச சேமிப்பும் (Intended Saving) தூண்டப்படாத முதலீடும் (Non-Induced Investment) சமமாக இருக்குமோ அதையே சமநிலையில் இயங்கிவரும் பொருளாதாரம் என்னலாம் என்பது கீன்ஸின் கருத்து. இது கோட்பாட்டு ரீதியில் மிகவும் முக்கியமானதோர் பொருளாதாரக் கருத்தாகும்.

இரண்டாவதாக, சுபிட்ச நிலையிலிருந்து மந்தத்துக்கும் மந்தத்திலிருந்து சுபிட்சத்துக்கும் பொருளாதாரம் எப்படி மாறிவருகிறது என்பதை விளக்குவதன்மூலம் வாணிகச்சுழல்களின் தன்மையை நல்லமுறையில் அலசி ஆராய்வதற்கானதோர் அடிப்படையை அமைத்துத் தந்ததுமல்லாமல், வேலைபற்றிய கோட்பாட்டுக்கும் புதிய உருவமும் மெருகும் கீன்ஸ் அளித்தார் என்றால் மிகையாகாது இத்தகைய திருப்பங்களை விளக்குவதற்கு இறுதிநிலை நுகர்வு நாட்டம், இறுதிநிலை சேமிப்பு நாட்டம் ஆகிய கருத்துகள் பெரிதும் பயன் தருவதாக உள்ளன. இக் கருத்துகளைக் கீன்ஸ் வடித்தெடுக்கு முன்னர் வாணிகச்சுழல்களில் ஏற்படும் திருப்பங்களை விளக்குவது மிகவும் கடினமானதோர் பிரச்சினையாக இருந்து வந்தது. கீன்ஸீயக் கருத்துகள் பரவுவதற்கு முன்னால் திருப்பங்கள் இன்ன காரணத்தினால் தான் ஏற்படுகின்றன என்ற தெளிவு பிறக்கவில்லை. ஏதோ முதலாளித்துவப் பொருளாதாரத்தின் போக்கும் இயக்கமும் நிலையற்றவைதான்; ஏற்றமும் இறக்கமும் அதன் இயல்பாக அமைந்தவை; வளர்ச்சிப் பாதையில் ஏறியதும் பொருளாதாரத்தின் உள்ளிந்திரியங்கள் விறுவிறுப்படைந்து ஒன்றையொன்று தூண்டி பலப்படுத்தி வருவாயும் வேலைக்கான வாய்ப்புகளும் வேகமாக வளர்வதற்கு வழிவகுக்கும்; அதேபோல் பொருளாதாரம் நிலை தவறிச் சருக்கி விழுந்து மந்தப் பாதையில் இறங்கும்போதும் அதை இயக்கிவரும் உள்ளுறுப்புகளும் சக்திகளும் ஒன்றையொன்று தூண்டிப் பலப்படுத்தி மந்தப் படுகுழிக்குத் தள்ளிக்கொண்டு போவதன் காரணமாக வருவாயும் வேலைக்கான வாய்ப்புகளும் கணிசமான அளவில் சுருங்கிவரும் என்பது பொதுவாகப் பொருளியல் அறிஞர் களிடையே நிலவிவந்த நம்பிக்கை.

ஆனால் சுபிட்சமான பாதையிலிருந்து மந்தத்தையும் மந்தப் பாதையிலிருந்து சுபிட்சத்தையும் நோக்கித் திடீர் திருப்பங்கள் ஏற்படுவதேன் என்பதற்கு யாரும் திருப்திகரமான விளக்கங்களிக்க

வில்லை. வங்கிகளும் நிதிநிலையங்களும் போதிய அளவில் கடன் வசதிகளையும் பணப்பெருக்கத்தையும் மேற்கொள்ள முடியாத காரணத்தால்தான் சுபிட்சம் நீடித்து நிலைப்பதில்லை என்றனர் ஒரு சாரார். குறைந்துவரும் இருப்புவீதம் போன்ற பல காரணங்களால் நடவடிக்கை, வருவாய் ஆகியவற்றின் அடிப்படையில் அதிகரித்து வரும் கடன் (பண) தேவையை வங்கிகளாலும் ஏனைய நிதிநிலையங்களாலும் ஈடுசெய்ய முடிவதில்லை. இத்தகைய பண நெருக்கடியால் வட்டிவீதம் உயரும். அதன் விளைவாகப் பொருளாதாரம் சோபை இழந்து சுபிட்சப் பாதையிலிருந்து விலகி மந்தத்தின் வாயிலில் இறங்கும். அதன் காரணமாக உற்பத்தியும் வேலைக்கான வாய்ப்புகளும் சுருங்க ஆரம்பிக்கின்றன என்பது அவர்களது விளக்கம்.

உற்பத்திச் சாதனங்களுக்குள்ள தட்டுப்பாடே சுபிட்சம் குன்றுவதற்கான அடிப்படைக் காரணம் என்றனர் மற்றொரு சாரார். சுபிட்சம் பொங்கிப் பொருளுற்பத்திப் பெருக்கெடுத்து வரும்போது ஒரு சில உற்பத்திச் சாதனங்களுக்குத் தட்டுப்பாடு ஏற்பட்டால் பொருளுற்பத்தியின் வேகம் தணியும்; கட்டுப்பாடு என்ற முட்டுக்கட்டைகளோடு மோதிவரும் பொருளாதாரம் பின்னால் தள்ளப்பட்டு அதன் உந்து வேகத்தால் பின்னோக்கிச் சென்று மந்தப் பாதையில் சறுக்கி விழும் என்பது அவர்களது கருத்து. அதேபோல் பொருளாதாரம் மந்தத்தின் அடிமட்டத்தை எட்டியதும் முதலினச் சொத்துகளுக்குத் தட்டுப்பாடு ஏற்படுவதன் காரணமாக அவற்றுக்கான தேவை அதிகரித்து முதலீடு தூண்டப்பட்டுப் பொருளாதாரம் மீட்சியுற்று மறுபடியும் சுபிட்சப் பாதைக்குத் திரும்ப ஏதுவாகிறது என்பது அவர்களது விளக்கம்.

இலாப வேட்கை கொண்ட முதலாளிகளின் நம்பிக்கை தகர்ந்து நொறுங்குவதாலேயே மந்த இருள் சூழ்கிறது என்ற கருத்தைக் கொண்டிருந்தனர் ஒரு சிலர். மனோபாவத்தின் அடியாக எழுந்த இத்தகைய விளக்கம் பொருளாதார மந்தம் ஏன்? எப்படி ஏற்படுகிறது? என்பதை ஓரளவு விளக்க உதவுகிறது என்றாலும் மந்தத்திலிருந்து விடுபட்டு மீட்சிப் பாதைக்குத் திரும்புவதற்கான காரணத்தையோ வழிவகைகளையோ விளக்குவதற்குப் பயன்படுவதில்லை.

கீன்ஸின் பொதுக்கோட்பாடு வகுக்கப்பட்டபின் முட்டுக்கட்டை, வட்டிவீதத்திலுள்ள சிக்கல்கள் ஆகியவற்றைக்கொண்டு திருப்பங்களை விளக்கவேண்டிய அவசியம் இல்லாது போயிற்று. இறுதிநிலை நுகர்வு நாட்டம் என்ற கருத்தைக் கொண்டு திருப்பங்களைக் கீன்ஸ் விளக்க முற்பட்டதே கோட்பாட்டு ரீதியில் ஏற்பட்ட இம் மாற்றத்துக்கு முக்கியமான காரணமாகும். வருவாய் அதிகரிக்கும் வேகத்தில் நுகர்வு அதிகரிப்பதில்லை; வருவாய் குறையும் வேகத்தில் நுகர்வு குறைவதில்லை என்பதே அக் கோட்பாட்டின் அடிப்படை. அதன்

பயனுக, வளர்ந்துவரும் பொருளாதாரங்களில் வளர்ச்சியைத் தூண்டும் சக்திகள் ஒன்றையொன்று தூண்டிப் பலப்படுத்தி வளர்ச்சிப் பாதையிலேயே தள்ளிக்கொண்டு போகும் என்று சொல்ல இயலாது. வருவாய்க்கும் இறுதிநிலை நுகர்வு நாட்டத்துக்கும் உள்ள உறவைப் பொறுத்துச் சுபிட்சம் மங்கி மந்தமாகவும் மந்தம் மாறிச் சுபிட்ச மாகவும் மாறலாம் என்ற கருத்தைக் கீன்ஸ் தமது பொதுக்கோட் பாட்டில் தெளிவுற விளக்கியுள்ளார்.

உண்மையில் பொதுக் கோட்பாட்டுக்கு முன்னர் வாணிகச்சுழல் பற்றிய கோட்பாடுகளில் நுகர்வுக்கு உரிய இடம் அளிக்கப்படவில்லை. பொருளுற்பத்தி முறை அமைந்துள்ள விதத்தைப் பொறுத்து திருப்பங்கள் நிருணயிக்கப்படும் என்பது கீன்ஸின் கருத்து. இக் கருத்து வாணிகச் சுழல் பற்றிய கோட்பாடுகளுக்குப் புதிது என்பது மட்டுமன்று; பொருளாதாரக் கொள்கைகளுக்கும் அச்சாணிபோல் அமைவதாகும்.

சே விதியில் நம்பிக்கைக் கொண்டிருந்த தொன்மைப் பொருளா தாரிகளும் அவர்களது மரபைப் பின்பற்றியவர்களும் அளிப்பு அதிகரித்தால் அதற்கேற்பத் தேவையும் அதிகரிக்கும் என்று திடமாக நம்பினுர்கள். எனவே, அவர்கள் நுகர்வின் முக்கியத்துவத்தை நன்கு உணரவில்லை. அதனுல்தான் அவர்கள் பணவாக்கக் கொள்கைகளின் மூலமாகப் பொருளாதாரம் இயங்கிவரும் விதத்தில் காணப்படும் சிக்கல்களையும் முரண்பாடுகளையும் ஏற்றத்தாழ்வுகளையும் அகற்றிச் சமநிலையை நிலைநாட்ட முடியும் என்று நம்பினுர்கள். மாருக, கீன்ஸ் பணவாக்கக் கொள்கைகளில் வைத்திருந்த நம்பிக்கையைக் கைவிட்டுத் தேவையில் காணப்படும் குறைபாடுகளைப் போக்குவ தற்கான வழிவகைகளைத் தேடலானுர். இம் முயற்சியில் நுகர்வு பற்றிய கீன்ஸீயக் கோட்பாடுகள் மிகவும் உதவிபுரிந்தன. வாணிகச் சுழலிலுள்ள திருப்பங்களை விளக்குவதற்குத் துணை செய்ததுடன் உந்துவேகக் கருத்தை எடுத்தோதவும் அஃது உதவியது. அதனடிப் படையில்தான் வேலையின்மையை விரட்டவும் பொருளாதார மந்தத்தைப் போக்கவும் கூடிய பல முனைத்தாக்குதலுக்கேற்ற பொருளாதாரக் கொள்கைகளை வடித்தெடுத்து, வாங்கும் சக்தியைப் பலப்படுத்திப் போதாத் தேவையை நிரப்ப முயன்றுர். அதன் விளைவாகத்தான் முதலாளித்துவப் பொருளாதாரம் செப்பனிடப் பட்டு இன்றுவரை வாழ்ந்து வரமுடிந்தது என்ருல் மிகையாகாது.

## மேலும் படித்தற்குரியவை


1. Dillard D., Op. Cit., Chapter XI.
2. Hansen A. H., Op. Cit., Chadter XII.
3. Hariss S. E., Op. Cit. Chapter XXXIII.
4. Keynes J. M., Op. Cit. Chapter XI, XII &XIII.
5. Klein L. R., Op. Cit. Chapter V.

# 7. விலைவாசிகளைப்பற்றிய கோட்பாடு

*[பிஷரது பணப்பரிமாணக் கோட்பாட்டைப் பின்பற்றியவர் — பணச் சீர்திருத்தம் பற்றிய சிந்தனைகளில் தந்த விளக்கம் — பணம் பற்றிய சித்தாந்தத்தில் தோன்றிய கருத்து வேறுபாடுகள் — பொதுக் கோட்பாட்டில் பொதிந்துள்ள கருத்துகள் — நிறைவேலைக்குமுன் பணவீக்கம் ஏற்படுவதேன்? — 20 ஆம் 21 ஆம் அத்தியாயங்களை இணைத்திருக்கலாம் — முட்டுக்கட்டைகளைக் களைய முடியாதா? கீன்ஸ் புகுத்திய புதுமைகள் — பணவீக்கம் பற்றிய விளக்கம் — போர்க்காலப் பணவீக்கம் — அமைதியும் பணவீக்கமும்.]*

கீன்ஸ் சிறந்ததோர் பணவியல் வல்லுநராவர். அவர் எழுதிய நூல்களில் மிகமுக்கியமானவை பணவியலைப் பற்றியவை. பொதுக் கோட்பாட்டில்கூட பணம்பற்றிய கருத்துகள் மிகுந்து காணப்படு கின்றன. பணத்தினளவுக்கும் விலைவாசிகளுக்கும் உள்ள உறவுகளை விளக்குவதே பணவியல் கோட்பாடாகும். பணத்தினளவுக்கும் வாணிகச்சுழல்களுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. எனவே, பணத்துக்கும் வேலையினளவுக்கும் விலைவாசிகளுக்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு என்பது தெளிவு. ஆனால், கீன்ஸ் தமது பொதுக் கோட்பாட்டை எழுதியபோது முதலாளித்துவப் பொருளாதாரங்கள் மாபெரும் மந்தச் சேற்றில் பதிந்திருந்தன. ஆகவே, வேலை பற்றிய கருத்துகள் அந் நூலில் தொனித்து விளங்குவது இயல்பு. ஆனால், வேலைபற்றிய பொதுக்கோட்பாட்டை வகுப்பதில் சிந்தனை அலைகளைச் செலுத்தி வந்த கீன்ஸ், பணவியலையும் பரந்த அடிப்படையில் மாற்றி யமைப்பதிலும் வெற்றி கண்டார். பரம்பரையாக வழக்கிலிருந்து வந்த பணப் பரிமாணக் கோட்பாட்டுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது கீன்ஸீயக் கோட்பாடு எத்துணைப் பொதுப்படையானதும் புரட்சிகர மானதுமாகும் என்பது புரியும். பொதுவாகக் கூறுமிடத்து, கீன்ஸ் பணத்தினளவுக்கும் விலைவாசிகளுக்கும் நெருங்கிய உறவு உண்டு என்ற பரம்பரைக் கருத்தை ஏற்றுக் கொண்டாரென்றாலும், பணப் பெருக்கத்தினால் அல்லது சுருக்கத்தினால் விலைவாசிகள் எவ்விதமாகப் பாதிக்கப்படுகின்றன என்ற கேள்விக்குப் புதியதோர் விளக்கம்

கொடுத்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. கீன்ஸ் வகுத்த கோட்பாட்டினடியாகத்தான் முதலாளித்துவப் பொருளாதாரங்களில் இன்றுவரை பணக்கொள்கை உருவாக்கப்பட்டு வருகின்றது என்றால் மிகையாகாது. எனவே, பணவியல் பற்றிக் கீன்ஸ் கொண்டிருந்த பரம்பரையை ஒட்டிய கருத்துகள் எவை? காலப்போக்கில் அவை எவ்வாறு மாறிவந்தன? பொதுக்கோட்பாட்டில் அவை எவ்வாறு எத்தகைய வடிவெடுத்தன? பணக்கொள்கைகளை வகுப்பதில் அவை எவ்வாறு பயன்படுத்தப்பட்டன? என்று தெரிந்து கொள்ளுவது பயன் தருவதாகும்.

பிஷரது பணப்பரிமாணக் கோட்பாட்டைப் பின்பற்றியவர்

முதலாவது உலகப்போரின்போது பெரும்பாலான பொருளியலறிஞர்கள் பணப்பெருக்கமே பணவீக்கத்துக்கான மூலகாரணமாகும் என்று வலியுறுத்தி வந்தனர். அத்தகைய முடிவுக்கு அடிப்படையாக இருந்தது பணப்பரிமாணக் கோட்பாடு பற்றி இர்விங்பிஷர் (Irwing Fisher) வகுத்த சமன்பாட்டு உறவாகும். பிஷரது சமன்பாடு பின்வருமாறு :

$$P=\frac{M-V}{T}$$

இதில் P என்பது விலைவாசிகளின் நிலையையும்,
M என்பது பணத்தின் அளவையும்,
V என்பது பணத்தின் புழக்க வேகத்தையும்,
T பொருள்களினளவையும்
குறிப்பதாக உள்ளன.

இச் சமன்பாட்டை மேலும் விவரித்தவர்கள் பணத்தை நாணய—செலவாணிப்பணம், வங்கிப்பணம் எனப் பிரித்து அவற்றின் புழக்க வேகத்தையும் குறிப்பிடலாயினர். அதைப்போல் பொருள்களின் புழக்க வேகத்துக்கும் விலைநிருணயத்தில் முக்கிய பங்கு உண்டு என்று விளக்கலாயினர். எப்படியாயினும் இச் சமன்பாட்டின்படி விலைவாசிகள் நேரடியாகப் பணத்தினளவையும் அதன் சுழற்சி வேகத்தையும் எதிரிடையாகப் பொருள்களின் அளவையும் அவை கைமாறும். வேகத்தையும் சார்ந்து ஏறவோ இறங்கவோ செய்யலாம் என்பது பொருளாகும். பிஷரது கோட்பாட்டின் செல்வாக்கு முதலாவது உலகப்போர் முடிந்த பின்னரும் பல்லாண்டுகள் நீடித்து நின்றது. கீன்ஸும் ஏனைய பணவியல் வல்லுநர்களும் பிஷரது பணப்பரிமாணக் கோட்பாட்டுக்கு உட்பட்டே அக் காலத்தில் ஆங்காங்கே தலைதூக்கி வந்த பணப்பிரச்சினைகளுக்குப் பரிகாரம் காண விழைந்தனர். உண்மையில், இக் கோட்பாட்டினடியாக பிஷர் வகுத்த "பணத்தின்

வாங்கும் சக்தி'' (Purchasing power of Money) என்ற கருத்தையும் அது பற்றிய ஆய்வையும் அப்படியே ஆமோதித்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

1911-ல் தங்க—வெள்ளிக்குழுவின் முன்னுல் மார்ஷல் பிகு சேர்ந்து சாட்சியம் கூறியபோதும், இந்தியச் செலவாணிக் குழுவின் முன்னுல் தமது கருத்துகளைச் சமர்ப்பித்தபோதும் இருப்புக் கட்டப்படும் தங்கத்தின் அளவு அதிகரிப்பதால் ஏற்படக்கூடிய விளைவுகளைப் பணப்பரிமாணக் கோட்பாட்டினடியாகவே கீன்ஸ் விளக்க முற்பட்டார். அதேபோல் 1913-ல் இந்தியச் செலவாணியும் நிதியும் பற்றிய குழுவில் அங்கம் வகித்தபோதும் இந்தியாவில் புகும் தங்கத்தினளவுக்கும் இந்திய விலைவாசிகளுக்குமுள்ள உறவை எடுத்துக்காட்டலானுர். அதனடியாகத்தான் விலைவாசிகளிலுள்ள ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்க வேண்டுமானுல், தங்கத்தை மையமான தோர் இடத்தில் இருப்பாக வைக்க வேண்டுமென்று பரிந்துரை செய்தார். (அடிமைப்பட்ட நாடானதால் தனக்குச் சொந்தமான தங்கத்தைத் தன்னுட்டில் வைக்கும் உரிமைகூட இந்தியாவுக்கு மறுக்கப்பட்டதென்பது ஒரு புறமிருக்க), தங்கத்தினளவில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளை நிரப்பாவிட்டால் விலைவாசிகள் அலைமோது வதைத் தடுக்க இயலாது என்று கீன்ஸ் நம்பினுர். அந்த நம்பிக்கை யினடியாகப் பிறந்ததுதான் நிருவகிக்கப்பட்ட செலாவணி முறை (Managed Currency System) யாகும். சமாதானத்தினுல் ஏற்படக் கூடிய பொருளாதார விளைவுகள் என்ற நூலிலும் பணப்பரிமாணக் கோட்பாட்டின் நாதமே தொனிப்பதைக் கேட்கலாம்.

பணச்சீர்திருத்தப் பற்றிய சிந்தனைகளில் (Tract on Monetary Reforms) தந்த விளக்கம்

பணப்பரிமாணக் கோட்பாடே, பணச்சீர்திருத்தம் பற்றிக் கீன்ஸ் கொண்டிருந்த சிந்தனைகளின் அடிப்படையாக அமைந்திருந்தது. அந் நூல் முழுவதுமே கேம்பிரிட்ஜ் ரொக்க இருப்புப் பரிமாணச் சமன்பாட்டைக் (Cambridge Cash Balance Quantity Equation) கீன்ஸ் கையாண்டிருப்பதைக் காணலாம். அச் சமன்பாட்டைக் கொண்டு வாழ்க்கைச் செலவுகளைப் பாதிக்கக் கூடிய விலைவாசிகள் (P) முதலாவதாக, பொதுமக்கள் ரொக்க இருப்பாக வைத்திருப்பதற்குத் தேவைப்படும் பணத்தினளவையும் (K & K[1]) இரண்டாவதாக, வங்கி முறையின்மூலம் ரொக்கமாகவும் வங்கி வைப்பாகவும் வழங்கப்படும் தொகையினளவையும் (n), மூன்ருவதாக, வங்கிகளின் பாதுகாப்பு

நிதியாக வைக்கப்படும் தொகையின் வீதத்தையும் (r) சார்ந்திருக்கும் என்று கீன்ஸ் விளக்கினார்.

$P=\frac{n}{K+rK^1}$ என்பது அச் சமன்பாட்டின் சுருக்கமாகும். அதாவது, பணத்துக்கான தேவையையும் அளிப்பையும் பொறுத்து விலைவாசிகள் மாறுபடும் என்னலாம். இக் கருத்து முழுக்கமுழுக்க பரம்பரையான பணப்பரிமாணக் கோட்பாட்டை ஒத்திருப்பது தெளிவு.

விலைவாசிகளை நிலைபெறச் செய்வதன்மூலம் வாணிகச்சுழலைத் தவிர்க்கலாம் என்பது கீன்ஸின் நம்பிக்கை. எனவே, பணச் சீர்திருத்தம் பற்றிய தமது சித்தாந்தத்தில் பணப்பரிமாணக் கோட்பாட்டுக்குட்பட்டு விலைவாசிகளை ஒரே சீராக வைத்திருப்பதற்கான வழிவகைகளைத் தேடலானார். வாணிகச்சுழல்களின் வரலாற்றைப் புரட்டும்போது, சுபிட்சத்தின்போது விலைவாசிகள் விறுவிறுப்படைவதும், மந்தத்தின்போது விலைவாசிகள் படுப்பதும் பளிச்சென்று தெரிந்தது. இத்தகைய ஏற்றத்தாழ்வுகளின் காரணத்தை ஆராயப் புகுந்த கீன்ஸ் K & K$^1$ ஆகியவற்றின் அளவுகள் சுபிட்சத்தின்போது குறைவதையும் மந்தத்தின்போது அதிகரிப்பதையும் கண்டார். அதே சமயத்தில், 'n'ம் 'r'ம் K & K$^1$ ஆகியவற்றில் ஏற்படும் மாற்றங்களுக்கேற்ப நெகிழ்ந்து கொடுக்கவில்லை என்பதையும் கீன்ஸ் நன்குணர்ந்தார். வலிமை மிக்கதோர் மையவங்கி திறமையுடன் செயலாற்றி வந்தால்தான், வட்டி வீதத்தை ஏற்றவகையில் மாற்றுவதன்மூலம் K & K$^1$ன் அளவுகளையும் மாற்ற முடியும். அத்துடன் வங்கிகளின்மீது தனது ஆணையையும் செல்வாக்கையும் செலுத்துவதன்மூலம் மையவங்கி, வங்கிமுறை அளிக்கும் பணத்தின் அளவையும் காப்புநிதியின் வீதத்தையும் விரும்பியவாறு மாற்ற முடியும் என்று கீன்ஸ் வலியுறுத்தி வந்தார்.

ஆனால், பணப்பரிமாணக் கோட்பாட்டின் மயக்கத்திலிருந்த கீன்ஸுக்குப் பொருளுற்பத்தியின் அளவு மாறாமல் நிலைபெற்றிருந்தால் மேற்கண்ட சமன்பாடு பொருத்தமாக இருக்கும் என்பது புலனாகவில்லை. இரண்டாவது, பணச்சீர்திருத்தம் பற்றிய சிந்தனைகளில் பணம் செய்யும் பணிகள் என்ன என்பதைப் பற்றிய தெளிவான கருத்துக் கீன்ஸுக்கு இருக்கவில்லை என்று கூறலாம். பொருள் மாற்றத்தைச் சுமுகமாக நடைபெறச் செய்வதே பணத்தின் வேலை என்று கீன்ஸ் நினைத்ததாக எண்ண இடமுண்டு. எச்சரிக்கை நோக்கம் பற்றியும் தெளிவற்ற முறையிலேயே பணச்சீர்திருத்தம் பற்றிய சித்தாந்தத்தில் விளக்கியுள்ளார் என்றாலும் ஊகவாணிக

நோக்கத்தின் காரணமாகவும் பணம் பேரளவில் பதுக்கி வைக்கப் படுகிறது என்ற உண்மை அக் காலத்தில் அவருக்குப் பிடிபடவில்லை. கோட்பாட்டினடியாகக் காணப்பட்ட இத்தகைய குறைபாடுகளின் காரணமாகக் கீன்ஸ் வகுத்த பணச்சீர்திருத்தக் கொள்கைகள் விரும்பிய பயனளிக்கவில்லை என்பது குறிப்பிடத் தக்கது. எனவே, பணச்சீர்திருத்தம் பற்றிய சிந்தனைகள் வெளியாகி ஏழெட்டு ஆண்டுகளுக்குள்ளாக பணம் பற்றிய சித்தாந்தம் என்ற விவரமான தோர் நூலை எழுத முற்பட்டார்.

### பணம்பற்றிய சித்தாந்தத்தில் (Treatise on Money) தோன்றிய கருத்து வேறுபாடுகள்

பணம் பற்றிய சித்தாந்தத்தில் கீன்ஸ் வெளியிட்ட கருத்துகள் பணச் சீர்திருத்தம் பற்றிய சிந்தனைகளில் கண்ட கருத்துகளிலிருந்து பெரிதும் மாறுபட்டிருப்பதைக் காணலாம். முதற்கண், பொதுவான விலைவாசிகளின் நிலையை (General price level) நிருணயிக்கக்கூடிய காரணிகள் எவை? பல்வேறு பகுதிகளுக்குரிய விலைவாசிகளின் நிலையை (partial price level) நிருணயிக்க உதவும் காரணிகளெவை? என்று பாகுபடுத்தியிருப்பது குறிப்பிடத் தக்கது. இரண்டாவதாக, பணத்தைக் கையிருப்பாக வைத்திருப்பதன் காரணங்களெவை? என்பதையும் மிகவும் விவரமாகப் பணம் பற்றிய சித்தாந்தத்தில் ஆராய்ந்துள்ளார் என்பதும் கவனத்திற்குரியது.

நுகர்வுப் பொருள்களுக்குரிய விலைவாசிகளின் நிலையை (consumer goods' price level) கீன்ஸ் பின்வரும் சமன்பாட்டின்மூலம் விளக்க முற்பட்டார்:

$$P = \frac{E}{O} + \frac{I' - S}{r}$$

இச் சமன்பாட்டில், 'P' நுகர்வுப் பொருள்களுக்குரிய விலைவாசிகளின் நிலையையும், 'E' உற்பத்திக் காரணிகளுக்குக் கிடைக்கும் ஊதியத்தையும் 'O' பொருளுற்பத்தியின் அளவையும், I' புதிய முதலீடுகளின் உற்பத்திச் செலவையும், 'S' சேமிப்பையும் 'r' நுகர்வோர் வாங்கும் நுகர்வுப்பொருள்களின் அளவையும் குறிக்கும்.

மேற்கண்ட சமன்பாட்டிலிருந்து விலைவாசிகளின் நிலை இரு கோவையான காரணிகளால் நிருணயிக்கப்படுகின்றன என்பது விளங்கும். முதல் தொடர்பு உற்பத்திக்கும் ஊதியத்துக்கும் உள்ள சம்பந்தத்தைப் பற்றியது. அதாவது, உற்பத்தி மாறாமல் நிலை பெற்றிருக்கும்போது கூலிமட்டும் உயருமானால் விலைவாசிகள்

உயரும் என்பதாகும். இரண்டாவது தொடர்பு, நடப்புச் சேமிப்பையும் (current savings) நடப்பு முதலீட்டையும் (current investment) பற்றியது. நடப்பு முதலீட்டைக் காட்டிலும் மக்கள் அதிகமாகச் சேமிப்பார்களானால் விலைவாசிகள் வீழும். மாறாக, நடப்புச் சேமிப்பைக் காட்டிலும் முதலீடு அதிகமாக இருக்குமானால் விலைவாசிகள் ஏறும். விலைவாசிகள் எவ்வளவில் மாறும் என்பது சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் இடையேயுள்ள இடைவெளியையும் இவ் வித்தியாசத்துக்கும் வாங்கப்படும் நுகர்வுப் பொருள்களின் மதிப்புக்குமுள்ள உறவையும் பொறுத்தது என்பது கீன்ஸின் கருத்து

இப் புதிய விளக்கத்தின்படி செலவிடும் நோக்கத்துக்காக மட்டுமே மக்கள் ரொக்கப் பணத்தை இருப்பாக வைத்திருக்க விரும்புகிறார்கள் என்ற கருத்தைக் கீன்ஸ் கைவிட்டுவிட்டார். வருவாயில் எப் பகுதியைச் செலவிடுவது? எப் பகுதியைச் சேமிப்பது? நடப்புச் சேமிப்பில் எப் பகுதியை முதலீடு செய்வது? எப் பகுதியை ரொக்க இருப்பாக வைத்திருப்பது? என்ற கேள்விகளை மனதிற் கொண்டு பொதுமக்களளிக்கும் விடையைப் பொறுத்தே விலைவாசிகள் நிருணயிக்கப்படும் என்பது கீன்ஸின் கருத்து. முதலாவது, வருவாயில் எந்த அளவு வருவாயின் காரணமான வைப்பாக (income deposit) வைக்கப்படும் என்பதை முடிவு செய்யவேண்டும். இரண்டாவது, முதலீடு எவ்வளவு கவர்ச்சிகரமாக இருக்கிறது என்பதைப் பொறுத்தே சேமிப்பு வைப்புக்குள்ள (savings deposits) தேவை நிருணயிக்கப்படும். இந்த அடிப்படையில், உற்பத்தியும், வருவாயும் கைமாறும் வேகம் (output and income velocities) மாறாமலிருந்த போதிலும், பணத்தினளிப்புக்கேற்ப விலைவாசிகள் வீதாச்சாரமாக உயரும் என்று சொல்லுவதற்கில்லை. ஏனெனில், புதிதாக இருப்பாக வைக்கப்படும் பணத்தை வருவாய்வைப்பாக இருப்புக் கட்டலாம் என்ற கருத்தைக் கீன்ஸ் புகுத்தலானார்.

மேலும், பணத்தின் உற்பத்திச் செலவுக்கும் அதன்மூலம் ஈட்டக்கூடிய வருவாய்க்குமுள்ள உறவைப் பொறுத்தே விலைவாசிகள் நிருணயிக்கப்படும் என்பது போன்றதோர் கருத்தைக் கீன்ஸ் பணம் பற்றிய சித்தாந்தத்தில் வெளிப்படுத்தியிருப்பதைக் காணலாம். ஆனால், தமது அடிப்படைச் சமன்பாட்டில் உற்பத்தியினளவு மாறாதிருக்கும் என்பதை எடுகோளாகக் (assumption) கொண்டுள்ளார். இந்த எடுகோள் எவ்வளவு பொருத்தமற்றது என்பதை அவரது வாயிலாகவே பொதுக் கோட்பாட்டில் பார்க்கலாம்.

இருப்பினும், உற்பத்திச் சாதனங்கள் ஈட்டிய ஊதியத்தைக் குறிக்கும் 'E'க்குக் கீன்ஸ் அவ்வளவு தெளிவான விளக்கம் தரவில்லை

என்பது தெளிவு. உண்மையில் 'E' என்ற மாறி பயனுள்ள தேவையைக் குறிக்கும் வகையில் அமைந்துள்ளது என்னலாம். ஆனுல் பணம் பற்றிய சித்தாந்தத்தை எழுதியபோது பயனுள்ள தேவை பற்றிய தெளிவான கருத்துக் கீன்ஸுக்குக் கிடையாது. எனவே E/O என்ற விகிதம் குறுகிய காலத்தில் மாறுந்தன்மையுடைய தன்று என்று கீன்ஸ் கருதினர். பொருளாதாரத்தின் வளர்ச்சிப் போக்கைப் பொறுத்தே மெதுவாக அவ்விகிதம் மாறக்கூடியது என்று அவர் நம்பினுர்.

எனவே கீன்ஸின் அடிப்படைச் சமன்பாட்டில் (Fundamental equation) விளக்கப்பட வேண்டிய ஒரே மாறி Q அல்லது (I-S) ஆகும். Q இயற்கையான வட்டிவீதத்துக்கும் (Natural rate of interest) சந்தையில் நிலவும் வட்டிவீதத்துக்கும் (Market rate of interest) உள்ள வேறுபாட்டைக் குறிப்பதாகும். இயற்கைவீதம், சந்தையின் வீதத்தைக் காட்டிலும் அதிகமாக இருக்கும்போது Q வின் மதிப்பு பூஜ்யத்தைவிட அதிகமாக இருக்கும்; இருவீதங்களும் சமமாக இருக்கும்போது Q வின் மதிப்பு பூஜ்யமாக இருக்கும்; சந்தைவீதம் இயற்கைவீதத்தைக் காட்டிலும் அதிகமாக இருந்தால் Q வின் மதிப்பு, பூஜ்யத்தைவிடக் குறைவாக இருக்கும் என்பது கீன்ஸின் விளக்கம். எனவே, விலைவாசிகள் அலைமோதுவதற்கான மூலகாரணம் வட்டிவீதங்களிலுள்ள வேறுபாடுகளேயாகும் என்பது கீன்ஸ் தந்த விளக்கமாகும்.

Q என்பது I-முதலீட்டுக்கும் S-சேமிப்புக்குமுள்ள வித்தியாசத்தைக் குறிக்கும் என்று ஏற்கெனவே குறிப்பிட்டோம். அதன் விளைவாக, ரொக்கப்பணம் அதிகரிக்கும்போது வங்கிகளின் காப்புநிதி அளவுக்கு மிஞ்சியிருக்குமாதலால் குறைந்த வட்டியில் கடன் வழங்கும் வங்கிகள் தூண்டப்படும். எனவே, வங்கி வட்டி வீதம் (Bank Rate) தாழும். அதன் பயனுக முதலீடு தூண்டப்படும்; சேமிப்புத் தயங்கும்; எனவே, சேமிப்பும் முதலீடும் சமமாக இல்லாமல் வேறுபட ஏதுவாகும். முதலீட்டுக்கும் சேமிப்புக்குமிடையே உள்ள வேறுபாட்டின் காரணமாக மேலும் விலைவாசிகள் உயரும்; ஆனுல், விலைவாசிகள் உயரும் வகையில் உந்தித் தள்ளக்கூடிய சக்திகள் அதோடு தளர்ச்சியுறுவதில்லை. தூண்டப்பட்ட முதலீட்டின் காரணமாக முதலினச் சொத்துகளின் உற்பத்தியில் ஈடுபடக்கூடிய உழைப்பாளருக்கான தேவை அதிகரிக்கும். எனவே, அவர்களின் கூலி உயரலாம். அதன் பயனுக விலைவாசிகள் மேலும் உயரும்.

மேற்கண்ட ஆய்விலே ஒரு சில குறைபாடுகளைக் காணலாம். கீன்ஸ் பணத்தின் அளவு (M) நிறைவேலையின்போது இருக்கக்கூடிய பொருளுற்பத்தி (Y) ஆகியவற்றைப்பற்றி தொன்மைப் பொருளாதாரிகள்

கொண்டிருந்த எடுகோள்களை ஏற்றுக்கொள்ளத் தயங்கவில்லை. அதே சமயத்தில், ரொக்க விருப்பத்தை (K) ஓர் எடுகோளாகக் கீன்ஸ் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை. நுகர்வோரின் நிலையான பழக்க வழக்கங்களை நுகர்வு நாட்டமெனக் கருதி அதைப் பணச்சீர்திருத்தம் பற்றிய சிந்தனைகளில் கீன்ஸ் ஒரு வகையாகக் குறிப்பிட்டிருந்தார். ஆனால், பணம் பற்றிய சிந்தாந்தத்தில் அக் கருத்தைக் கையாள முன்வரவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. உண்மையில் K வட்டி வீதத்தின் செல்வாக்குக்குட்பட்டது என்று கீன்ஸ் நம்பினர். ஆனல், 'E' ல் ஒரு சிறு பகுதியே பழக்க வழக்கங்களுக்குட்பட்டு நிலையாக இருக்கும் என்று கீன்ஸ் எண்ணினர். எனவேதான் நுகர்வு நாட்டத்துக்குப் பணம் பற்றிய சித்தாந்தத்தில் முக்கியத்துவம் அளிக்கவில்லை போலும்.

முதலினப் பொருள்களின் விலைவாசிகளின் நிலையைக் (Price level for investment Goods) குறிக்கும் ($P^1$)யை நிருணயிப்பதில் கோட்பாட்டு ரீதியில் பல ருசிகரமான புதுமைகளைக் கீன்ஸ் புகுத்தினர். ரொக்கமாகக் கூடிய சொத்துகளைத் (Liquid assets) தவிர ஏனைய சொத்துகளின் விலைவாசிகளை நிருணயிப்பதில் அத்தகைய சொத்துகளை எவ்வளவில் மக்கள் பதுக்கி வைக்க விரும்புகிறார்கள்? எவ்வளவு சேமிப்புவைப்பை வங்கிகள் வழங்கத் தயாராக உள்ளன? என்ற கேள்விகள் முக்கியமானவை என்பது கீன்ஸின் கருத்து.

எனவே சேமிப்பு வைப்புகளையும் வங்கி வட்டிவீதத்தையும் கட்டுப்படுத்துவதில் மையப்பாங்கு மிகவும் அக்கறை காட்டவேண்டும் என்று கீன்ஸ் வலியுறுத்தி வந்தார். எனினும், மையப்பாங்கின் வலிமையையும் செல்வாக்கையும் கீன்ஸ் மிகைப்படுத்தி மதிப்பிட்டுள்ளார் என்று எண்ண இடமுண்டு. பொருளாதாரத்தின் முக்கியமான மாறிகளை அவ்வளவு இலகுவாக வங்கிக் கொள்கையின்மூலம் கட்டுப்படுத்தலாம் என்று எதிர்பார்க்க இயலாது. அத்தகைய கட்டுப்பாடுகளின் பயனும் அவ்வளவு வெற்றிகரமாக இருக்காது என்பதை அக் காலத்தில் கீன்ஸ் நன்குணரவில்லை.

கீன்ஸீயக் கோட்பாட்டுக்கு நீண்டகால வட்டிவீதம் முக்கியமானது என்பது கீன்ஸுக்குத் தெரிந்திருந்தது. நிலையுறு முதலிலுள்ள ஏற்றத்தாழ்வுகளைக் கட்டுப்படுத்துவதில் நெடுங்கால வட்டிவீதத்துக்கு முக்கிய பங்கு உண்டு என்பதை அவர் நன்குணர்ந்திருந்தார். ஆனல், நெடுங்கால வட்டிவீதத்தின்மீது வங்கிகள் நேரடியாகத் தங்கள் செல்வாக்கை எளிதில் செலுத்த இயலாது என்பதும் அவருக்குத் தெரியும். எனவே, புள்ளிவிவரங்களின் துணைகொண்டு குறுகியகால வட்டிவீதத்துக்கும் நெடுங்கால வட்டிவீதத்துக்கும் நெருங்கிய உறவு உண்டு என்பதை நிலைநாட்ட முயன்றார். அதன்

பயனாக, வங்கிகள் குறுகியகால வட்டிவீதத்தைக் கட்டுப்படுத்தினால் அதன்மூலம் நெடுங்கால வட்டிவீதத்தின்மீதும் மறைமுகமாகத் தனது செல்வாக்கைச் செலுத்த முடியும் என்று கூற முற்பட்டார். ஆயின், சம்பந்தப்பட்ட புள்ளிவிவரங்களனைத்தையும் சேகரித்து அலசி ஆராய்ந்தபோது, குறுகியகால வட்டிவீதத்துக்கும் நீண்டகால வட்டிவீதத்துக்கும் உள்ள தொடர்பு நிரந்தரமானதுமன்று; அவ்வளவு நெருங்கியதுமன்று என்பது தெரிய வந்தது. எனவே கீன்ஸ் பின்னால் எழுதிய கட்டுரை ஒன்றில் குறுகியகால வட்டி வீதத்தின்மீது வங்கிகளுக்குள்ள செல்வாக்கைப் பயன்படுத்தி முதலீட்டைத் தூண்டுவது கடினம் என்று கூற முற்பட்டார் போலும்.

பொதுக்கோட்பாட்டில் பொதிந்துள்ள கருத்துகள்

பணத்தினளவுக்கும் விலைவாசிகளுக்குமுள்ள சம்பந்தத்தை விளக்குவதில் பொருள்களுக்குள்ள தேவையிலும் அளிப்பிலும் காணப்படும் நெகிழ்ச்சி எவ்வளவு முக்கியத்துவம் வகிக்கிறது என்பதைக் கீன்ஸ் தமது பொதுக்கோட்பாட்டில் தெளிவுபடுத்தி யுள்ளார். பழைய பணப்பரிணமைக் கோட்பாட்டில் கண்டதுபோல் பணத்தின் அளவுக்கும் விலைவாசிகளுக்கும் நேரடியான தொடர்போ வீதாச்சாரமான உறவோ கிடையாது என்பதைப் பொதுக்கோட் பாட்டில் கீன்ஸ் சுட்டிக் காட்டலானார். பணத்தினளவுக்கும் மொத்த தேவைக்கும் சம்பந்தமுண்டு; பணத்தினளவால் மொத்ததேவை பாதிக்கப்படும் விதத்தைப் பொறுத்து பொருளுற்பத்தியிலும் விலை வாசிகளிலும் மாற்றங்களைக் காணலாம் என்பதே பொதுக்கோட் பாட்டில் காணும் விலைக்கோட்பாட்டின் சாரமாகும். இங்கே பொருளுற்பத்தியின் ஒவ்வொரு அளவுக்குமேற்ப அளிப்பில் காணப்படும் நெகிழ்ச்சி மாறுபடும் என்ற கருத்துப் பெரிதும் பயன்படுத்தப்பட்டிருப்பதைப் பார்க்கலாம்.

பணத்தினளவு பெருகுவதால் ஊகவாணிக நோக்கத்தினடியாகப் பிறக்கும் ரொக்க வேட்கை ஒருவாறு தணியும். அதன் பயனாக, வட்டிவீதம் குறையலாகும். எனவே, வேலை, உற்பத்தி, வருவாய் ஆகியவை பெருகும். ஆதலின் பயனுள்ள தேவை அதிகரிக்கும். வேலையினளவு பெருகப்பெருக கூலியின்வீதம் கூடும். கூலி என்ற வகையில் மேற்கொள்ளப்படும் செலவு அதிகரிக்கும். விளைவு குறைந்து செல்லும் (diminishing returns); முட்டுக்கட்டைகள் (bottle necks) பல முளைக்கும்; இன்ன பல காரணங்களால் விலைவாசி களும் உயரலாகும். இத்தகைய கண்ணோட்டத்தில் காணும்போது பணத்தினளவு அதிகரிப்பதால் ஆரம்பத்தில் வேலையினளவே பெரிதும் பாதிக்கப்படும்; நிறைவேலைநிலையை அணுகஅணுக பணப் பெருக்கத்தால் விலைவாசிகள் மிகவும் பாதிக்கப்படும். நிறைவேலை

நிலையை எய்திய பின்னர் மேலும் உற்பத்தியோ வேலையோ பெருகும் என்று எதிர்பார்க்க இயலாது. எனவே மேன்மேலும் பணப்பெருக்கம் ஏற்படுமானால் அது பணவீக்கத்தில்தான் கொண்டுபோய்விடும் என்பது தெளிவு.

தொழிலாளர் கூலி உயர்வு கோராமலிருந்தால் நிறைவேலையை எய்தும்வரை ஏனைய உற்பத்திக் காரணிகளுக்கு எவ்விதமான தட்டுப்பாடும் ஏற்படாமலிருந்தால், உற்பத்திக் காரணிகள் அனைத்துமே ஊதிய உயர்வை நாடாமலிருந்தால், அளிப்பில் நிறைவான நெகிழ்ச்சி (perfect elasticity) இருப்பதாகக் கொள்ளலாம். எனவே மொத்த தேவை அதிகரிப்பதற்கேற்ப மொத்த அளிப்பும் அதிகரிக்கும். அதே வீதாச்சாரத்தில் அதிகரிக்கும் என்று எண்ண இடமுண்டு. ஆனால், நிறைவேலை நிலையை எட்டியதும் அளிப்பில் கொஞ்சங்கூட நெகிழ்ச்சியை எதிர்பார்க்க முடியாதாதலால் நிறைவேலை நிலைக்கு அப்பால் பணம் பெருகி வரும். அதே வீதாச்சாரத்தில் விலைவாசிகளும் ஏறி வரும் என்பது கீன்ஸது கருத்தாகும்.

இக் கருத்தைப் பின்வரும் படத்தின் வாயிலாக விளக்கலாம்.




படம் 19 : விலைவாசிகளும் வேலையும் உற்பத்தியும்

மேற்கண்ட படத்தில் SS அளிப்பின் பட்டியலைப் பிரதிபலிக்கும் வளைகோடாகும்; DDI , DDII, DDIII என்பவை மொத்த தேவையின்

பல்வேறு அளவுகளைக் குறிக்கும் வளைகோடுகளாகும். [தேவைக்கோடு DDI ஆக இருக்கும்போது ONI அளவு உற்பத்தி PI என்ற விலையில் அளிக்கப்படும். மொத்த தேவையினளவு ONII இருப்பதுபோல் நிறைவேலை நிலையி னளிப்புக்குச் சமமாக இருக்குமானால் அதே விலையில் ( PI ) அதிகப் பொருள் அளிக்கப்படுகிறது என்பது தெளிவாகும். ஆனால், நிறைவேலை நிலையை எட்டியபின் தேவை அதிகரித்த போதிலும் அளிப்பில் எவ்விதமான மாற்றமும் காணப்படாமல் விலைவாசிகள் மட்டும் ( PIII ) என்ற நிலைக்கு உயரும் என்பது படத்திலிருந்து தெரிய வரும்.

நடைமுறையில் அளிப்பின் வளைகோடு மேற்கண்ட படத்தில் குறித்ததுபோல்தானிருக்கும் என்று எண்ணுவது தவறு. நிறைவேலை நிலையை எட்டிப் பிடிக்கும்வரை அளிப்பில் பூரணமான நெகிழ்ச்சி காணப்படும் என்று எதிர்பார்ப்பது பொருத்தமற்றது என்பது கண்கூடு. நிறைவேலை நிலையை அடைவதற்கு முன்னரே பணத்தி னளவையும் அதையொட்டி பொருள்களுக்குள்ள தேவையும் அதிகரிப்பதன் காரணமாக விலைவாசிகள் ஏறத்தொடங்கும் என்று எண்ண இடமுண்டு. இத்தகைய விலையேற்றத்துக்கான காரணங் களைக் கீன்ஸ் மிகவும் தெளிவாக விளக்கியிருப்பது பயன் தருவதாகும்.

### நிறைவேலைக்கு முன்னரே பணவீக்கமேற்படுவதேன் ?

தேவைக்கேற்ப அளிப்பு நெகிழ்ந்து கொடுக்காததேன் என்பதற்குக் கீன்ஸ் கொடுத்துள்ள விளக்கத்தைக் காண்பது அவசியம். பொருளுற்பத்திகுறைந்துசெல் விதிக்கு (Law of Diminishing Returns) உட்பட்டிருப்பதாலும், நிறைவேலை நிலையை எய்துவதற்கு முன்னரே தொழிலாளர் கூலி உயர்வு கோருவதாலும், முட்டுக்கட்டைகள் பல தோன்றுவதாலும் பொதுவாக அளிப்பு, தேவைக்கேற்ப நெகிழ்ந்து கொடுப்பதில்லை என்பது கீன்ஸின் கருத்து. இந்நிலையில் பணப் பெருக்கத்தின் பயனாகப் பலப்படும் பயனுள்ள தேவை ஓரளவு உற்பத்தியைப் பெருக்க உதவுகின்ற அதே சமயத்தில் விலை உயர்வுக்கும் வழிவகுக்கும் என்று எதிர்பார்க் கலாம் என்பது கீன்ஸின் துணிபு.

பொருளுற்பத்தி பெருகி வரும்போது ஓர் உருப்படியின் உற்பத்திச் செலவு (cost per unit) அதிகரித்து வரும் என்பதே குறைந்து செல்விதியின் இலக்கணமாகும். குறுகிய கால அளவில் ஆக்கத்துறைகளில் பயன்படுத்தப்படும் முதலினக் கருவிகளின் அளவு மாறாதிருக்கும் என்று கொள்ளலாம். எனவே, ஒரு குறிப்பிட்ட அளவான கருவிகளையும் இயந்திரங்களையும் பயன்படுத்துவதற்கு அதிகமான ஆள்களை வேலையில் அமர்த்த முற்பட்டால் உற்பத்திச் செலவு உற்பத்தியினளவைக் காட்டிலும் வேகமாக அதிகரிக்கும்

என்று எதிர்பார்க்கலாம். மேலும், உற்பத்திச் சாதனங்கள் ஒருபடித்தாகவும் ஒரே தன்மை உடையதாகவும் இல்லாமலிருப்பதாலும் உற்பத்தி பெருகும்போது ஆக்கச் செலவுகள் அதைக்காட்டிலும் வேகமாக அதிகரிக்கும் என்று எண்ண இடமுண்டு. அத்துடன் திறமைமிக்க உழைப்பாளரும் இயந்திரங்களும் ஏற்கனவே ஈடுபடுத்தப்பட்டுத் தரங்குறைந்த தொழிலாளர்களும் இயந்திரங்களும் பின்னல் வேலையில் ஈடுபடுத்தப்படுவதால் அதிகரிக்கும் பொருளுற்பத்தியின் பகுதிச் செலவு (Unit Cost) அதிகமாகிக் கொண்டே வரும் என்று எதிர்பார்க்கலாம். எனவேதான், பொதுவாக, பொருளுற்பத்தி பெருகும்போது ஒரு குறிப்பிட்ட அளவுக்குமேல் குறைந்து செல்விதியின் ஆணைக்கு உட்படுத்தப்படுகிறது என்று கீன்ஸ் கருதலானர்.

தொழிலாளருக்கான தேவை அதிகரிக்கும்போது அவர்களது பேரம் பேசக்கூடிய பலம் அதிகரிப்பது இயல்பு. அதன் பயனாகப் பணக்கூலி உயருவதற்கான வாய்ப்புகள் உண்டாகும். தொழில்கள் செழித்து வரும்போது கூலி உயர்வை நாடும் தொழிலாளரின் கோரிக்கைகளை உதாசீனம் செய்து நிராகரிக்காமல் அவர்களோடு பேரம் பேசி கூடியமட்டும் அக் கோரிகைகளை ஏற்றுக்கொள்ளும் வகையில் இணங்கி வருவார்கள் என்று எதிர்பார்க்கலாம். அதே சமயத்தில், கூடிவரும் ஆக்கச் செலவுகளுக்கேற்ப விலைவாசிகளையும் ஏற்றி வைப்பதற்கு அவர்கள் தயங்குவதில்லை. எனவேதான், நிறைவேலை நிலையை எய்தாத நிலையிலும் பணக்கூலி உயருவதால் விலைவாசிகள் விறுவிறுப்படைவதுண்டு.

உற்பத்திச் சாதனங்களனைத்துமே ஒருபடித்தாக அமைந்திருந்த போதிலும் நிறைவேலை நிலையை அடையும் வரை அவையனைத்தும் போதிய அளவில் கிடைக்குமென எதிர்பார்க்க இயலாது. சான்றாக, எண்ணிறந்த தேர்ச்சி பெறாத தொழிலாளர் வேலைக்கான வாய்ப்புகள் கிடைக்காமல் வாடுகின்ற வேளையில் தேர்ச்சி பெற்ற தொழிலாளருக்குத் தட்டுப்பாடு ஏற்படலாம். அதைப் போலவே நிறைவேலைநிலையை எட்டுமுன் கச்சாப்பொருள்களுக்குப் பஞ்சம் ஏற்படலாம்; கனிப்பொருள்கள் போதிய அளவில் கிடைக்காமல் போகலாம்; குறிப்பிட்ட இயந்திரங்களோ கருவிகளோ இல்லாமலிருக்கலாம். மேற்கண்ட உற்பத்திச் சாதனங்களனைத்தும் குறிப்பிட்ட விதாச்சாரத்தில் போதிய அளவில் கிடைத்துக் கொண்டே இருக்காவிட்டால் பொருளுற்பத்தியில் சிக்கல்கள் ஏற்படும். கிடைக்கின்ற சாதனங்களைக் கொண்டு கிடைக்காதவற்றை ஈடுசெய்வதும் சாத்தியமில்லை. உற்பத்திச் சாதனங்களில் ஏற்படும் இத்தகைய சிக்கல்களைத் தான் 'முட்டுக் கட்டைகள்' (bottlenecks) என்று கீன்ஸ் அழைக்க

லானுர். உண்மையில் 1940—43 வரை பலதரப்பட்ட தொழிலாளர், கச்சாப் பொருள்கள், மூலப்பொருள்கள், இயந்திரங்கள் ஆகியவற்றில் முட்டுக்கட்டைகள் தோன்றலாயின. எஃகு, அலுமினியம், ரப்பர், நிலக்கரி ஆகிய பல தொழில்களை இத்தகைய முட்டுக்கட்டைகள் எதிர்நோக்கி நின்றன. பொருளுற்பத்தியில் ஈடுபட்டிருக்கும் ஏதாவது ஒரு துறையில் முட்டுக்கட்டைகள் முளைக்குமானுல் அப் பொருளின் விலை விர்ரென்று ஏறும். விலைக்கட்டுப்பாடு எதுவும் இல்லாத நிலையில் முட்டுக்கட்டைக்குட்பட்ட பொருள்களின் விலை ஏனையவற்றைக் காட்டிலும் விறுவிறுப்பாகத் திமிறி எழும் என்று எதிர்பார்க்கலாம். குறுகிய காலத்தில் விலையேற்றத்துக்கேற்பப் பொருளுற்பத்தி நெகிழ்ந்து கொடுப்பதில்லை. எனவே, அப் பொருளுக்கான தேவை அதிகரித்து வரும்போது அதன் சக்தி முழுவதும் விலைவாசிகளை உந்தி உயரத் தள்ளுவதிலேயே செலவிடப்படும். பொருளுற்பத்தி மிஞ்சிய தேவையை ஈடுசெய்யக்கூடிய வகையில் அதிகரிக்கும்வரை விலைவாசிகளின் கொட்டம் அடங்காது. இதைத் தான் முட்டுக்கட்டைகளால் மூட்டப்படும் பணவீக்கம் (bottleneck inflation) என்பர் சிலர். காலப்போக்கில் இத்தகைய முட்டுக் கட்டைகள் மறையுந்தன்மை உடையவை. உடனடியாக உற்பத்தியை அதிகரிக்க இயலாவிடினும், நெடுங்காலத்தில் உற்பத்தி பெருகுமாதலால் இத்தகைய பணவீக்கம் நீங்கும் என்றும் எதிர்பார்க்க இடமுண்டு. எவ்வளவு காலம் இத்தகைய முட்டுக்கட்டைகள் நீடிக்கும் என்பது அந்தத் தொழிலுக்குரிய தொழில்நுட்ப நிலைமைகளைப் (வாய்ப்புகளைப்) பொறுத்தது.

மேற்கண்ட காரணங்களே நிறைவேலை நிலையை எய்துவதற்கு முன்னரே விலைவாசிகளைத் தூக்கிவிடுவதில் முக்கிய பங்கு வகிக்கின்றன என்பது கீன்ஸின் கருத்து. நிறைவேலைநிலை நெருங்க நெருங்க முட்டுக்கட்டைகள் மலியும்; திறமை குன்றிய உற்பத்திச் சாதனங்களைப் பயன்படுத்த வேண்டிய அவசியமேற்படும்; சாதகமான வகையில் பேரம் பேசக்கூடிய வலிமையும் தொழிற்சங்கங்களிடையே மிகுந்து வரும்; தட்டுப்பாடுகளைத் தவிர்ப்பதில் அதிக இடர்ப்பாடுகளேற்படும்; கிடைப்பதற்கரிய சாதனங்களுக்கு மாற்றுகள் கண்டுபிடிப்பதும் எளிதன்று. இன்ன பல காரணங்களால் நிறைவேலை நிலையை அடையுமுன்னரே விலைவாசிகள் தலைதூக்கலாகும் என்பது தெளிவு. அதே சமயத்தில் வேலையினளவும் கொஞ்சங்கொஞ்சமாக அதிகரித்து வரும் என்பது குறிப்பிடத்தக்கது. ஆனுல், நிறைவேலை நிலையை எட்டிப் பிடித்த பின்னர் மேலும் பணத்தினளவோ பயனுள்ள தேவையோ அதிகரித்து வருமானுல், மேற்கொண்டு உற்பத்தியைப் பெருக்குவது என்பது சாத்தியமன்று. எனவே, பெருகி வரும் பயனுள்ள தேவையின் பலம்

முழுவதும் விலைவாசிகளை நேராக உயரத் தூக்குவதிலேயே பயன் படும். இவ்வுண்மையைப் பின்வரும் வரைபடத்தின்மூலம் விளக்கலாம்.




படம் 20 : முட்டுக்கட்டைகளும் விலைவாசிகளும்

மேற்கண்ட படத்தில் காண்பதுபோலத் தேவையைப் பிரதிபலிக்கும் வளைகோடு DI லிருந்து DII ஆக உயரும்போது பொருளுற்பத்தி ONI லிருந்து ONII ஆக அதிகரிக்கும். விலைவாசிகளும் PI லிருந்து PII ஆக உயரும். ஆனால், விதாச்சாரப்படி பார்த்தால் உற்பத்திவிலையைக் காட்டிலும் அதிகமாக இருப்பது புலனாகும். ஆனால் தேவையைப் பிரதிபலிக்கும் வளைகோடு DII லிலிருந்து DIII ஆக உயரும்போது விதாச்சாரப்படி உற்பத்தியைக் காட்டிலும் விலைவாசிகள் அதிகரிப்பதைக் காணலாம். தேவையைப் பிரதிபலிக்கும் வளைகோடு DIII யிலிருந்து DIV ஆக உயரும்போது அளிப்பின் அளவில் எவ்விதமான மாற்றமும் காணப்படவில்லை. ஆனால், விலைவாசிகள் மட்டும் கணிசமான அளவில் உயர்ந்திருப்பது கண்கூடு.

மேற்கண்ட விளக்கமே நடைமுறையைச் சரியாக எடுத்துக் காட்டுவதாகும் என்பது சொல்லாமலே விளங்கும். மாறாக, பொதுக் கோட்பாட்டில் கீன்ஸ் கொடுத்துள்ள விளக்கம் அவ்வளவு பொருத்தமானதன்று.

"வேலையின்மை காணப்படும்போது பணத்தினளவு எந்த வீதாச்சாரத்தில் அதிகரிக்கிறதோ அதே வீதாச்சாரத்தில் வேலையினளவும் அதிகரிக்கும்; ஆனால், நிறைவேலை நிலை ஏற்பட்டபின் பணத்தினளவு எந்த வீதாச்சாரத்தில் அதிகரிக்கிறதோ அதே வீதாச்சாரத்தில் விலைவாசிகள் உயரும்"

என்பது விலைவாசிகளைப்பற்றிக் கீன்ஸ் வகுத்த பொதுக்கோட்பாடாகும். பயனுள்ள தேவைக்கும் பணத்தினளவுக்கும் நெருங்கிய உறவு உண்டு என்பது உண்மை. ஆனால் அவ்வுறவு மறைமுகமானது; சிக்கல்கள் நிறைந்தது. கீன்ஸ் எண்ணியதுபோல் அவ்வளவு நேரடியானதன்று என்பது குறிப்பிடத்தக்கது.

இருபதாம் இருபத்தோராம் அத்தியாயங்களை இணைத்திருக்கலாம்.

பொதுக்கோட்பாட்டில் இருபதாம் இருபத்தோராம் அத்தியாயங்களைக் கீன்ஸ் இணைத்திருப்பாரேயானால், வேலையினளவுக்கும் பொருளுற்பத்திக்கும் பயனுள்ள தேவைக்குமுள்ள உறவை மேலும் தெளிவாக விளக்கியிருக்க முடியும் என்பது சிலரது கருத்து.

*பயனுள்ள தேவைக்கும் வேலையினளவில் காணப்படும் நெகிழ்ச்சிக்கும் உள்ள உறவை*

$$\frac{dN}{dDW} \times \frac{DW}{N}$$ *என்ற சமன்பாட்டின்மூலம்*

*விளக்கலாம். இதில் 'N' என்பது வேலை, பொருளுற்பத்தி ஆகியவற்றின் அளவைக் குறிக்கும். 'DW' என்பது பயனுள்ள தேவையைக் குறிக்கும். தேவைக்கேற்ப உற்பத்தி பெருகாவிட்டால் உற்பத்தியின் இறுதிநிலைச் செலவு (Marginal Cost of Production) அதிகரிக்கும்; விலைவாசிகள் கூலியைக் காட்டிலும் வேகமாக உயரும். பயனுள்ள தேவை (DW) அதிகரிக்கஅதிகரிக்க கூலிக்கும் விலைவாசிகளுக்குமுள்ள இடைவெளியும் விரிந்துவரும். மாறாக, உற்பத்தியிலுள்ள நெகிழ்ச்சியினளவு ஒன்றாக இருக்குமானால் இறுதிநிலையாகச் செலவுக்கும் (Marginal Cost of Production) கூலிக்குமுள்ள வித்தியாசம் அவ்வளவு கணிசமாக அதிகரிக்காது. இந் நிலையில் தேவை அதிகரிக்கும்போது, அதற்கேற்ப இறுதிநிலையாக்கச் செலவு அதிகரிக்காமலிருந்தால் உற்பத்திச் சாதனங்களின் மெய்வருவாய் அதிகரிக்கும் என எதிர்பார்க்கலாம். இக் கருத்துக்கு அடிப்படையாகக் கீன்ஸ் இறுதிநிலையாக்கச் செலவுகளைக் குறிக்கும் வளைகோடு குறுகிய காலத்தில் U வடிவத்தில்தான் இருக்கும் என்று நம்பியதாகத் தெரிகிறது. அதனால்தான் வேலையினளவு அதிகரிக்கும்போது விலைவாசிகள் கூலிவீதத்தைக் காட்டிலும் வேகமாக அதிகரிக்கும் என்பதை வலியுறுத்தி வந்தார் போலும்.*

இத்தகைய எடுகோள்களினடியாகப் பிறந்ததே விலைவாசிகள் பற்றிய கீன்ஸீயப் பொதுக்கோட்பாடாகும். செலவிடப்படும்

பணத்தினளவு அதிகரித்து வரும்போது விலைவாசிகள் எவ்வளவு தூரம் உயரும் என்பது உற்பத்தியிலுள்ள நெகிழ்ச்சியைப் பொறுத்தது என்பது கீன்ஸின் கருத்து. அதன்படி, உற்பத்தியிலுள்ள நெகிழ்ச்சி குறைவாக இருப்பின் விலைவாசிகளிலுள்ள நெகிழ்ச்சி அதிகமாக இருக்கும்; மாறாக, உற்பத்தியிலுள்ள நெகிழ்ச்சி அதிகமாக இருப்பின் விலைவாசிகளிலுள்ள நெகிழ்ச்சி குறைவாக இருக்கும் என்று புலப்படும். இவ்விதம், பயனுள்ள தேவையின் சக்தியில் ஒரு பகுதி உற்பத்தியைப் பெருக்குவதிலும் மற்றது விலைவாசிகளை உயர உந்தித் தள்ளுவதிலுமாகச் செலவிடப்படுகிறது.

பொருள்களின் மதிப்பை அவற்றில் அடங்கிய உழைப்பைக் கொண்டல்லாமல் பணத்தைக் கொண்டு அளந்தால், பயனுள்ள தேவையின் பயனாக எப்படி விலைவாசிகளின் நெகிழ்ச்சியும் பணக் கூலியும் பாதிக்கப்படுகிறது என்பது தெரியவரும். இங்கே விலைவாசிகளில் காணப்படும் நெகிழ்ச்சி உற்பத்தியிலுள்ள நெகிழ்ச்சியையும் கூலிவீதத்தையும் சார்ந்திருப்பது தெரியவரும். எனவே, உற்பத்தியிலுள்ள நெகிழ்ச்சி பூஜ்யமாகவும் கூலியிலுள்ள நெகிழ்ச்சி ஒன்றாகவும் (Unity) இருக்குமானால், பயனுள்ள தேவை எந்த வீதாச்சாரத்தில் அதிகரித்து வருகிறதோ அதே வீதாச்சாரத்தில் விலைவாசிகளும் ஏறி வரும் என்பது கீன்ஸின் விளக்கமாகும்.

மேலும், ஒவ்வொரு தொழிலிலும் மொத்த தேவை மாறிவரும் வீதாச்சாரத்துக்கேற்பப் பயனுள்ள தேவையும் மாறும் என்று கீன்ஸ் கருதவில்லை. அத்துடன் பொருளுற்பத்தியிலுள்ள நெகிழ்ச்சி தொழிலுக்குத் தொழில் மாறிவரும் என்று அவர் நம்பினார். இதிலிருந்து மொத்தத்தில் விலைவாசிகள் மாறிவரும்போது பல்வேறு பொருள்களின் விலைவாசிகளினிடையே உள்ள உறவும் மாறிவரும் என்று எண்ண இடமுண்டு என்பது கீன்ஸின் கருத்து. அதே காரணங்களினால் பொருள்களுக்குமுள்ள மொத்த தேவை மாறாதிருந்த போதிலும், அதன் போக்கும் மாதிரியும் (Pattern) மாறி வருமானால் அதன் பயனாக வேலையினளவு மாறுபடும் என்று அவர் எண்ணினார்.

### முட்டுக்கட்டைகளைக் களைய முடியாதா?

ஆனால், வேலையின்மை அறவே மறையுமானால் மேற்கொண்டு மேற்கொள்ளப்படும் பணச் செலவுகளால் கூலியும், இலாபமும் அதிகரிக்கும்; உற்பத்தியினளவு மாறாது; எனவே, பணத்தினளவு எந்த வீதாச்சாரத்தில் அதிகரித்து வருகிறதோ (அதாவது, மொத்த தேவை எந்த வீதாச்சாரத்தில் அதிகரிக்கிறதோ) அதே வீதாச் சாரத்தில் விலைவாசிகள் ஏறிவரும் என்பது தெளிவு. இதிலிருந்து பணவீக்கமும் பணவாட்டமும் சீரற்றிருப்பது விளங்கும். பண

வாட்டத்தின்போது வேலையினளவும், விலைவாசிகளும் குறைந்து வரும். ஆனால், பணவீக்கத்தின்போது விலைவாசிகள் ஏறுமே தவிர வேலையினளவு அதிகரிக்காது. ஒரு சில உற்பத்திச் சாதனங்கள் வேலையில் ஈடுபடுத்தப்படாமல் இருக்கும்போதே சில பொருள்களின் அளிப்பு நெகிழ்ச்சியற்றுக் காணப்படலாம் என்று கீன்ஸ் நம்பினார். தேவை அதிகரித்து வரும்போது முட்டுக்கட்டைகள் ஒன்றன்பின் ஒன்றாகத் தலைதூக்குமானால் நிறைவேலை நிலையை எய்துவதற்கு முன்னரே குறிப்பிட்ட சில பொருள்களின் விலைவாசிகள் விறுவிறுப்புடன் ஏறும் என்பது கீன்ஸின் நம்பிக்கை. ஆனால், மொத்த விலையைப் பொறுத்தமட்டில் உற்பத்திச் சாதனங்கள் பல வேலையில் ஈடுபடுத்தப்படாமல் சோம்பி இருக்கும்போது பொருளுற்பத்தியும் ஓரளவு அதிகரித்து வருமாதலால் விலைவாசிகள் அவ்வளவு அதிகமாகப் பாதிக்கப்படாது என்று எண்ண இடமுண்டு. இருப்பினும், தேவை திடீரென்று பேரளவில் அதிகரிக்கும்போது அடுக்கடுக்காக முட்டுக்கட்டைகளின் எண்ணிக்கை பெருகும். அதன் பயனாக, வேலையின்மை மிகுந்துள்ள வேலையிலும் மொத்த விலைவாசிகளில் கணிசமான ஏற்றத்தைக் காணலாம். அவ்வாறின்றித், தேவை திடீரென்று அதிகரிக்காமல் கொஞ்சங்கொஞ்சமாக அதிகரித்து வருமானால் முட்டுக்கட்டைகள் முளைக்கமுளைக்க ஒவ்வொன்றாகக் களைவதும் அவ்வளவு கடினமன்று.

### கீன்ஸ் புகுத்திய புதுமைகள்

நிறைவேலை நிலையை அடைவதற்கு முன்னரே கூலி உயர ஆரம்பிக்கலாம். சுபிட்சத்தின்போது கூடிவரும் இலாபத்தைக் காணும் தொழிற்சங்கங்கள் தொழிலாளரின் நலன்களைப் பாதுகாப்பதற்கான நடவடிக்கைகளில் ஈடுபடுவதே அதற்கு மூலகாரணமாகும். அத்தகைய கூலி உயர்வு ஒரே சீராக உயர்ந்து வரும் என்று சொல்ல முடியாது; திடீர்திடீரென குதித்தெழும்பலாம். இந் நிலை ஏற்படுமானால் மொத்த தேவை அதிகரிப்பதால் ஏற்படும் பயன் விலைவாசிகளை மேல்நோக்கித் தள்ளுவதில் வீண்விரயம் செய்யப்படுமேயன்றி உற்பத்தியையோ வேலையினளவையோ பெருக்குவதற்கு அவ்வளவாகத் துணைபுரியாது. தேவை அதிகரித்து வரும்போது இறுதிநிலையாக்கச் செலவுகளும் அதிகரித்து வருமானால், விலைவாசிகள் உயருவதைத் தவிர்க்க முடியாது. அத்தோடு கூலி உயர்வும் ஏற்பட்டு வருமானால் அதன் விளைவாக ஏற்கனவே வேலையில் அமர்ந்திருப்பவர்களின் கூலியும் உயருமாதலால், கூலி உயர்வு, வேலையினளவைப் பெருக்குவதற்குப் பெரிய தடையாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

விலைவாசிகளைப்பற்றி கீன்ஸ் வகுத்த பொதுக்கோட்பாடு பரம்பரையாகப் பழக்கத்தில் இருந்தது வந்த பணப்பரிமாணக் கோட்பாட்டிலிருந்து பெரிதும் மாறுபட்டிருப்பது தெளிவு. இவ் வகையில் பார்த்தால் பணவீக்கம் தலைதூக்கும் விதத்தையும் அதன் தன்மைகளையும் எளிதில் புரிந்துகொள்ளும் வகையில் எவ்வாறு கீன்ஸ் விளக்கியுள்ளார் என்பது புரியும். பணவாக்கக் கோட்பாட்டையும் (Monetary Theory) மதிப்புக் கோட்பாட்டையும் (Theory of Value) ஒன்றாக இணைத்த பெருமை கீன்ஸைச் சாரும் என்று தயங்காமல் கூறலாம். கீன்ஸ் பொதுவான விலைவாசிகளைப்பற்றி விளக்குவதற்கு உற்பத்திச் செலவு, அளிப்பின் நெகிழ்ச்சி தேவை போன்ற பல கருத்துகளைக் கையாண்டிருப்பது கண்கூடு. இக் கருத்துகள் அனைத்தும் மதிப்புக் கோட்பாட்டுக்கு அடிப்படையானவை என்பது குறிப்பிடத்தக்கது.

ஆக்கச் செலவுகள் அதிகரிப்பதால் விலைவாசிகள் உயரும்; குறுகிய காலத்தில் அளிப்பு நெகிழ்ச்சியற்றிருப்பது ஆக்கச் செலவுகள் உயருவதற்கான முக்கிய காரணங்களுள் ஒன்றாகும். வேலையினளவையும் குறுகிய காலத்தில் பெருக்குவதில் சிக்கல்கள் உண்டு. எனவே, உற்பத்தியையும் வேலையினளவையும் பெருக்கக்கூடிய வழிவகைகளைச் சுட்டிக்காட்டும் வகையில் வேலைக்கோட்பாடு அமைதல் வேண்டும் என்பதை நன்கு உணர்ந்தவர் கீன்ஸ். அத்துடன் பணக் கோட்பாட்டையும் உற்பத்திக் கோட்பாட்டையும், அவர் ஒன்றாக இணைத்துள்ளார். மாறாக, பரம்பரையான பணப்பரிமாணக் கோட்பாடு பணத்தினளவுக்கும் விலைவாசிகளுக்கும் நேரடியான தொடர்பு இருப்பதாக எண்ணி வந்தனர். நிறைவேலை நிலையை எடுகோளாகக் கொண்டதாலேயே அவர்கள் உற்பத்தியின் முக்கியத்துவத்தைக் கணக்கில் எடுக்காமல் விட்டுவிட்டனர் என்னலாம். ஆரம்பத்திலிருந்தே நிறைவேலைநிலை நிலவுவதாகக் கொண்டால், பணப் பெருக்கத்தால் உற்பத்தியினளவு பெருகும் என்று எண்ணுவதற்கே இடமிராது. எனவே, அளிப்பிலுள்ள நெகிழ்ச்சி இறுதிநிலையாக்கச் செலவுகள் ஆகிய கருத்துகள் விலைக் கோட்பாட்டில் இடம் பெறவேண்டிய அவசியமில்லை. நிறைவேலை நிலை என்பது அரிதாக இருக்கும்போது, அதை எடுகோடுகளாகக் கொண்டு எழுப்பப்பட்ட பணப்பரிமாணக் கோட்பாடு பகற்கனவு போன்றது என்பதை இலகுவில் உணரலாம். நிறைவேலை நிலை என்ற எடுகோடுகளைத் தூக்கி எறிந்துவிட்டு விலைக்கோட்பாட்டின் அடிப்படையை மாற்றியமைப்பதன்மூலம், கீன்ஸ் அக் கோட்பாட்டை நடைமுறைக்கு ஏற்ற வகையில் வகுக்க உதவினார் என்றால் மிகையாகாது.

பணத்தினளவையும் பயனுள்ள தேவையையும் கீன்ஸ் ஒன்றெனக் கருதியிருப்பது குறிப்பிடத்தக்கது. ஆனால், பணத்தினளவால் பயனுள்ள தேவை எவ்வளவாகப் பாதிக்கப்படும் என்பது முக்கியமான சில கேள்விகளுக்குக் கிடைக்கும் விடைகளைப் பொறுத்தது. முதலாவது, புதிதாகப் புகுத்தப்பட்ட பணம் பலரது கையில் வருவாயாகப் போய்ச் சேருகிறதா? இல்லையா? என்று தெரியவேண்டும். இரண்டாவது, பணப்பெருக்கம் வருவாய் நடவடிக்கையின் காரணமாக அன்றி வெறும் வங்கிக் கடனாக மட்டும் காட்சியளிக்கிறதா? இல்லையா? புதிய பணம் ஒருமுறை செலவிடப் பட்டபின் நடவடிக்கை காரணமாக ரொக்கமாக வைக்கப்படும் இருப்பு அதிகரிப்பதோடு ஊகவாணிக நோக்கத்துக்காக வைக்கப்படும் ரொக்கப்பணமும் அதிகரிக்குமா? என்பன முக்கியமான கேள்வி களாகும். உண்மையில் ஊகவாணிக நோக்கத்துக்காக வைக்கப்படும் ரொக்க இருப்புப் பயனுள்ள தேவையால் பாதிக்கப்படுமா? இல்லையா? எப்படிப் பாதிக்கப்படும்? என்பது ரொக்கவிருப்பப் பட்டியலின் தன்மையையும் முதலீட்டு இறுதிநிலைத்திறனையும் இறுதிநிலை நுகர்வு நாட்டத்தையும் பொறுத்தது என்பது குறிப்பிடத்தக்கது.

பணத்தினளவுக்கும் விலைவாசிகளுக்குமுள்ள உறவுகளை வெளிப் படுத்தும் காரண காரியங்களைக் குறுகியகாலக் கண்ணோட்டத்துடன் அணுகி அலசி ஆராய்ந்தவர் கீன்ஸ். நீண்டகாலக் கண்ணோட்டத்தில் நோக்கினாலும் அடிப்படையில் அதே உறவு இருப்பதைக் காணலாம் என்பது கீன்ஸது கருத்து. நீண்ட காலத்திலும், நாட்டு வருவாய்க்கும் பணத்தினளவுக்குமிடையே ஒரு வகையான உறவு இருப்பது தெரிய வரும் என்பது அவரது எண்ணம். எனினும், இத்தகைய உறவை விளக்குவதற்குப் பணத்தினளவைப் பற்றியும் பயனுள்ள தேவையின் மீது பணத்துக்குள்ள செல்வாக்கைப் பற்றியும் சமுதாயத்தில் வாழும் மக்கள் என்னென்ன கருத்துகள் கொண்டுள்ளனர் எந்தெந்த விதமாகத் தங்கள் நடவடிக்கைகளை அமைத்துக் கொள்ளுகிறார்கள் என்பது மிகவும் முக்கியம்.

### பணவீக்கம் பற்றிய விளக்கம்

நிறைவேலை நிலையைத் தாண்டும்போதுதான் பணவீக்கம் தலைதூக்கத் தொடங்குகிறது. குறைவேலை நிலைபற்றிய பிரச்சினைகளைப் போக்குவதிலேயே பெரும்பாலும் தமது கவனத்தைச் செலுத்தி வந்த கீன்ஸ் மந்தப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கான கோட்பாடுகளையும் கொள்கைகளையும் வகுப்பதில் மாபெரும் வெற்றிகளைக் கண்டார் என்பது உண்மை. ஆனால், அதே சமயத்தில் நிறைவேலை நிலையைக் கடந்தபின் விளையக்கூடிய பணவீக்கப் பிரச்சினைகளைப் பற்றிக் கீன்ஸ் கொடுத்துள்ள விளக்கங்களையும் அவற்றைத் தீர்ப்பதற்கான

பரிகாரங்களை வகுப்பதில் கண்ட வெற்றிகளையும் குறைத்து மதிப்பிட இயலாது. உற்பத்திப்பெருக்கம் ஏற்படுவதால் பலதரப் பட்டவர்களும் பலவிதமாகவும் பலவாறுகவும் பாதிக்கப்படுவது இயற்கை. பல வர்க்கத்தினரும் வேறுபட்ட வருவாயையும் சொத்துகளையும் கொண்டவர்களும் வெவ்வேறு விதமாகப் பாதிக்கப் படுவது பணவீக்கத்திஞல் ஏற்படும் சமூகப் பொருளாதார விளைவு களில் முக்கியமானதாகும். பணவீக்கம் எவ்வகையில் தலைதூக்கி வேலை செய்கிறது? அதனுல் விளையக்கூடிய கேடுகளை மட்டுப்படுத்துவ தெப்படி? என்ற கேள்விகள் கீன்ஸின் கருத்தைக் கவர்ந்து வந்த முக்கியமான கேள்விகளுள் சிலவாகும் என்பதில் ஐயமில்லை. பணவீக்கம், பணவாட்டத்தைப் போன்று அவ்வளவு கேடு நிறைந்தது அன்று என்பது கீன்ஸின் கருத்து. பணவாட்டத்தால் இரண்டு விதமான கேடுகள் விளைவதுண்டு. முதற்கண், அது செல்வத்தைக் கண்மூடித்தனமாக மறுபங்கீடு செய்கிறது. இரண்டாவது, வேலை யின்மையின் காரணமாகப் புதிய செல்வங்கள் பல உருவாக முடியாமல் தடைபடுகின்றன. மாறுக, பணவீக்கத்தால் ஒரே ஒரு கேடுதான் விளைவதுண்டு. கண்மூடித்தனமாக வருவாயையும் செல்வத்தையும் மறுபங்கீடு செய்வதைத் தவிர வேறு பல கேடுகள் எதுவும் பணவீக்கத்தால் விளைவதில்லை என்பது கீன்ஸின் கருத்து.

வேலையின்மையை விளக்குவதற்குப் பயன்படுத்தப்பட்ட அதே கருத்துகளைக் கொண்டுதான் கீன்ஸ் பணவீக்கத்தையும் அது வேலை செய்யும் விதத்தையும் விளக்க முற்பட்டார். வருவாய்க்கும் நுகர்வுக்குமிடையே உள்ள இடைவெளி அகன்று விரிவதால் பயனுள்ள தேவை போதிய அளவில் இருப்பதில்லை; எனவே, வேலையின்மை தலைதூக்கி வளருகிறது என்பது வேலையின்மைக்குக் கீன்ஸ் கொடுத்த விளக்கமாகும். அதேபோல் பயனுள்ள தேவை, அளிப்பை மிஞ்சி நிற்பதால்தான் பணவீக்கம் ஏற்படுகிறது என்பது கீன்ஸின் கருத்து. முதலீடு நிறைவேலை நிலைக்குப் பொருத்தமான வருவாய்க்கும் நுகர்வுக்குமுள்ள இடைவெளியை நிரப்புவதற்குப் போதியதாக இல்லாவிட்டால் வேலையின்மை ஏற்படும். மாறுக, முதலீடு நிறைவேலை நிலைக்குப் பொருத்தமான வருவாய்க்கும் (விலைவாசி மாறுதிருக்கும்போது) நுகர்வுக்குமுள்ள இடைவெளியை நிரப்புவதற்கும் அதிகமாக இருந்தால் பணவீக்கம் ஏற்படும் என்பது கீன்ஸின் கருத்து. நுகர்வின் காரணமாக உண்டாகும் பயனுள்ள தேவையையும் முதலீட்டின் காரணமாக உண்டாகும் பயனுள்ள தேவையையும் சேர்த்துக் கூட்டிய தொகை மொத்த வருவாயைக் காட்டிலும் அதிகமாக இருந்தால் நடப்பு விலைவாசிகள் உயரும் எனலாம். Y (வருவாய்) = C (நுகர்வு) + I (முதலீடு) என்ற சமன்

பாட்டையும் I = S (சேமிப்பு) என்ற சமன்பாட்டையும் ஏற்படுத்துவதற்கு வேண்டிய மாற்றங்கள், விலைவாசிகள், பணவருவாய், பணச்சேமிப்பு ஆகியவற்றின்மூலம் நிலைநாட்டப்படுகின்றன. முதலீட்டின் மொத்த அளவும் புதிய விலைவாசிகளின் வாயிலாகவே மதிப்பிடப்படும். எனவே, பணவீக்கத்தைக் குறைக்க வேண்டுமாயின் பயனுள்ள தேவையை மட்டுப்படுத்துவது அவசியம். நுகர்வு நாட்டத்தைக் குறைப்பதன்மூலமாகவோ முதலீட்டைத் தடுப்பதன் மூலமாகவோ இரண்டையும் ஒரே சமயத்தில் மேற்கொள்ளுவதன் மூலமாகவோ பயனுள்ள தேவையைக் குறைக்க முடியும். நுகர்வு நாட்டம் அதிகமாக உள்ளவர்களைப் பாதிக்கக் கூடிய வரிவகைகளை அதிகரிப்பதன்மூலம் நுகர்வுப் பொருள்களுக்குள்ள நாட்டத்தைக் குறைக்க முடியும். அதாவது, நுகர்வு நாட்டத்தை மட்டுப்படுத்த வேண்டுமாயின் ஏழைகளின்மீது வரிச்சுமையை ஏற்ற வேண்டும். எனவே, பணவீக்கத்தை மட்டுப்படுத்துவதற்குப் பிற்போக்கு வரிகள் பயன்படுத்தப்படுகின்றன. பணத்தின் அளவைக் குறைப்பதன் மூலம் வட்டிவீதம் அதிகரிப்பதற்கான சூழ்நிலையை உருவாக்கலாம். அதன்மூலம் முதலீட்டுக்கான தூண்டுதல் தயக்கமுறும். அரசின் செலவுகளைக் குறைப்பதன்மூலமாகவும் பணவீக்கத்தின் அழுத்தத்தைத் தணிக்கலாம். மேற்கண்ட நடவடிக்கைகளால் மொத்த செலவினளவைக் குறைக்க முடியும். தனியாரின் துறையிலும் பொதுத்துறையிலும் மேற்கொள்ளப்படும் செலவுகளைக் குறைப்பதன் மூலமாகவே பணவீக்கத்தின் கொட்டத்தை அடக்க முடியும் என்பது தெளிவு.

முதலாளித்துவப் பொருளாதாரங்களில் சமாதான காலத்தில் சமூகக் கட்டுக்கோப்பு எப்படி இருக்கும் என்ற அடிப்படையிலேயே கீன்ஸ் விலைவாசிகள் பற்றிய தமது கோட்பாட்டை வகுக்கலானார். சமாதான காலத்திலும் பலதரப்பட்ட அரசின்கட்டுப்பாடுகள் இன்றியமையாதவை என்பதை அவர் வலியுறுத்தி வந்தாரென்றாலும், போர்க்காலத்தில் தேவைப்படும் கட்டுப்பாடுகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது அவை எவ்வளவு சொற்பமானவை என்பது புலனாகும். எனவே, பொதுக்கோட்பாட்டில் கண்ட கருத்துகள் முதலாளித்துவப் பொருளாதாரங்களின் சமாதான காலப் பிரச்சினைகளை அணுகுவதற்கு உதவுவதுபோலப் போர்க்காலப் பிரச்சினைகளை ஆராய்வதற்கு அவ்வளவு பயன்படுவதில்லை என்னலாம்.

பரம்பரையாகப் பழக்கத்தில் இருந்துவந்த கோட்பாட்டோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது விலைவாசிகளைப் பற்றிக் கீன்ஸ் வகுத்த பொதுக்கோட்பாடு எத்துணையோ முன்னேற்றகரமானதாகவும் பயனுள்ளதாகவும் இருந்தது என்பது உண்மையே. இருப்பினும்,

இரண்டாவது உலகப் போரின்போது கீன்ஸீயக் கோட்பாட்டினடியாக வகுக்கப்பட்ட கொள்கைகள் நடைமுறையில் நிறைய குறைபாடுகளைக் கொண்டதாக இருந்தன என்பது சிலரது கருத்து.

பணவீக்கம் எப்பொழுது தோன்றும்? எப்படிப் புகுந்து வேலை செய்யும்? எத் திக்கில் எத்துணை வேகமாகச் செல்லும்? என்பனவற்றைப் பொதுக்கோட்பாட்டில் கீன்ஸ் தெளிவாக விளக்கவில்லை. பணவீக்கத்தைக் கையாளுவதற்கான சகல கருவிகளும் ஏற்கனவே பொதுக்கோட்பாட்டில் பொதிந்திருந்தன என்பது உண்மை. கருவிகள் கைவசமாக இருந்த போதிலும் பணவீக்கப் பிரச்சினைகளை மேற்கொள்ளும் வகையில் அவற்றைக் கையாளுவதெப்படி என்பது பற்றிப் 'போருக்கான செலவை மேற்கொள்ளுவதெப்படி?' (How to pay for the war?) என்ற நூல் வெளிவரும் வரையில் தெளிவான கொள்கைகளும் நடைமுறைகளும் வகுக்கப்படவில்லை என்னலாம்.

நிறைவேலை நிலையைக் கடந்த பின்னர் பணப்பெருக்கம் (பயனுள்ள தேவை) எந்த வீதாச்சாரத்தில் அதிகரிக்கிறதோ அதே வீதாச்சாரத்தில் கூலியும் விலைவாசிகளும் அதிகரிக்கும் என்பது பொதுக்கோட்பாட்டில் கீன்ஸ் வெளியிட்ட கருத்தாகும். ஆனால், விலைவாசிகள் கூலியைக் காட்டிலும் வேகமாக முன்னேறி வந்தது என்பது நடைமுறையில் கீன்ஸ் கண்ட உண்மையாகும். எனவே, நடைமுறைக்கேற்ப விலைவாசிகள் பற்றிய தமது பொதுக்கோட்பாட்டை மாற்றி அமைக்க வேண்டியிருந்தது. இவ் வேலையைப் 'போருக்கான, செலவை மேற்கொள்வதெப்படி?' என்ற தமது நூலில் செய்து முடித்தார் என்னலாம்.

**போர்க்கால பணவீக்கம்**

பொதுக் கோட்பாட்டில் சிக்கனத்தைப் பழித்துக் கூறிய கீன்ஸ் போருக்கான நிதியைத் திரட்டுவதற்குக் கட்டாய சேமிப்பு மிகவும் அவசியம் என்று வலியுறுத்தியிருப்பது குறிப்பிடத்தக்கது. சமாதான காலப் பிரச்சினைகளும் போர்க்காலப் பிரச்சினைகளும் எப்படிச் சூழ்நிலையால் மாறுபட்டவை என்பதையே இக் கொள்கை மாற்றம் பிரதிபலிப்பதாகும். ஆனால், கொள்கை மாறுபட்ட போதிலும் அக் கொள்கைக்கு வழிநடத்தும் ஆய்விலே அடிப்படை மாற்றம் எதுவும் தோன்றவில்லை. சமாதான காலத்தில் ஏற்படக்கூடிய பணவீக்கத்துக்கும் போர்க்காலத்தில் ஏற்படக்கூடிய பணவீக்கத்துக்கும் அடிப்படையில் வித்தியாசம் எதுவும் கிடையாது ஆனால், போர்க்காலப் பணவீக்கம் கடுமையானது. 'விண்'ணென்று விலைவாசிகளைத் தூக்கித் தள்ளும் தன்மையுடையது. எனவே, காரசாரமான பரிகாரங்களைத் தேடவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது.

நுகர்வுப் பொருள்களுக்குள்ள தேவையை மட்டந்தட்டுவது எப்படி என்பதே போர்க்காலப் பணவீக்கத்தின்போது எழக்கூடிய மிக முக்கியமான பிரச்சினையாகும். வருவாய், வேகமாக அதிகரித்து வரும்போது நுகர்வு அதிகரிக்காமல் தடுப்பதே போர்க்காலத்தில் செய்யவேண்டிய முக்கியமான வேலையாகும். ஏனெனில் போர் நெருக்கடி முற்றிவரும்போது உற்பத்திச் சாதனங்களை நுகர்வுப் பொருள் உற்பத்தியிலிருந்து போருக்கு வேண்டிய தளவாடங்கள், ஆயுதங்கள் போன்ற பணிமுட்டுகளின் உற்பத்திக்காகத் திருப்பி விடுவது இயல்பு. எனவே, வேகமாக அதிகரித்து வரும் பயனுள்ள தேவையை ஈடுசெய்யக்கூடிய வகையில் நுகர்வுப் பொருளுற்பத்தி அதிகரிப்பதற்குப் பதிலாகச் சில வேளைகளில் குறைந்துபடும் என்று எதிர்பார்க்கலாம். எனவே, நுகர்வை மட்டந்தட்டாமல் விலைவாசிகள் அளவுக்கு மிஞ்சி உயராமல் தடுத்து நிறுத்துவது இயலாது. ஏழை எளியவர்களின்மீது வரிச்சுமையைச் சுமத்துவது நுகர்வைக் குறைப்பதற்குரிய சிறந்ததோர் கருவியாகும் என்பது கீன்ஸீயக் கொள்கையினடியாகப் பிறப்பதாகும். இத்தகைய மறைமுக வரிகளைச் சமூகக் கண்ணோட்டத்தில் காணும்போது எவ்வளவு அநீதி நிறைந்தவை என்பது தெரியவரும். அரசியல் ரீதியில் பார்த்தாலும் இத்தகைய பிற்போக்கு வரிமுறைகள் எவ்வளவு தூரம் காரிய சாத்திய மற்றவை என்பது விளங்கும் என்பது கீன்ஸுக்குத் தெரிந்திருந்தது. பணவீக்கம், மெய்வருவாயைக் குடித்துவரும்போது மக்கள் தங்களியல்பாகவே சேமிக்க முன்வருவார்கள் என்று எதிர்பார்க்கஇயலாது. பணவீக்கத்தின் பயனாகச் சிலரது சேமிப்பு அதிகரிக்கலாம். ஆனால் சேமிப்பு அதிகரிப்பதன் பயனாகப் பணவீக்கத்துக்கு முற்றுப்புள்ளி வைக்கலாம் என்று நினைப்பது பகற்கனவு என்பது கீன்ஸின் கருத்து.

பணவீக்கத்தின் தன்மைகளைத் தெளிவுற விளக்கிய பெருமை கீன்ஸுக்கு உண்டு. 1939-ம் ஆண்டு டிசம்பர் மாதம் வெளியான பொருளாதாரப் பத்திரிகை (Economic Journal)யில் "கிரேட் பிரிட்டனின் வருவாயும் நிதி பலமும்" (Income and Fiscal Potential of great Britain) என்ற தலைப்பில் கீன்ஸ் ஒரு கட்டுரை எழுதினார். அதில் பணவீக்கம் மெய்ச்சாதனங்களை (Real Resources) நுகர்வோரின் கையிலிருந்து தொழில்துணிவு கொண்டவர்களின் பணப்பைக்கு மாற்றுகிறது. இப்படி மாற்றப்படும் பணத்தில் ஒரு பகுதி ஏற்கனவே,நடைமுறையிலுள்ள வரிவகைகளின் வாயிலாகவும், அமித இலாப வரியின் மூலமாகவும், அரசாங்கக் கடன் என்ற வகையிலும், கூடிவரும் சேமிப்பு, காப்புநிதிகளென்ற கணக்கிலும் அரசின் கைவசம் வந்து சேருகிறது. இது பணவீக்கத்துக்கு இயற்கை வகுத்த பரிகாரமாகும் என்பது கீன்ஸ் அக் கட்டுரையில் வெளியிட்ட கருத்

தாகும். ஆனால், பணம் இப்படி ஓர் இடத்திலிருந்து உருண்டு மற்றோர் இடத்தில் போய் ஒதுங்குவதால் பணவீக்கம் முழுவதுமாக வற்றிவிடப் போவதில்லை. வீக்கம் ஓரளவு குறையலாம். எனவே, இயல்பாக அதிகரிக்கும் சேமிப்பால் பணவீக்கம் சிறிதளவு மட்டுப்படலாமே யொழிய தடுத்துப் நிறுத்தப்படப்போவதில்லை என்பது தெளிவு.

பணவீக்கத்துக்கு மருந்து

கட்டாயச் சேமிப்பே பணவீக்கத்தைக் குணப்படுத்துவதற்கேற்ற மருந்தாகும் என்பது கீன்ஸது கருத்து. நடப்பிலுள்ள கூலியிலும் சம்பளத்திலும் ஒரு பகுதியைச்சேமிப்புக்கணக்கில் போட்டு வைப்பதே அத்தகைய சேமிப்பைப் பெருக்குவதற்குரிய வழியாகும் என்பதை அவர் கண்டார். போர் முடியும்வரை அச் சேமிப்பைப் பயன்படுத்த இயலாமல் செய்துவிட்டால் அப் பணம் நுகர்வை நாடி அலைந்து திரிவதன்மூலம் பணவீக்கத்துக்குத் தூபமிட முடியாது.

சமாதான காலத்தில் காணப்படுவதைக் காட்டிலும் போர்க் காலத்தில் பணவீக்கம் மிகவும் கோரக் காட்சியளிக்கும் என்பது உண்மை. சமாதான காலத்தில் வருவாய்க்கும் நுகர்வுக்குமுள்ள வித்தியாசத்தை (சேமிப்பை) விட முதலீடு மிஞ்சி நிற்பதால் பணவீக்கம் தலைதூக்குவதுண்டு. எனவே, முதலீட்டைக் கட்டுப் படுத்துவதன்மூலம் பணவீக்கத்தைத் தடுக்கலாம். ஆனால், போர்க் காலத்தில் முதலீட்டைக் குறைப்பதென்பது முடியாத காரியம். எனவே, வருவாய்க்கும் நுகர்வுக்குமுள்ள இடைவெளியை விரிவாக்கி முதலீட்டுக்கு இணையாக அதிகரிக்க முயலுவர். சமாதான காலத்தில் இவ்வாறு நுகர்வை மட்டந்தட்ட முயன்றால் மக்கள் வெகுண்டெழு வார்கள். ஆனால், போர்க்காலத்தில் அவர்கள் வயிறு இறுக்கப் பட்டாலும் அவர்கள் அதை அவ்வளவு பொருட்படுத்துவதில்லை. நாட்டுப்பற்றே இத்தகைய தியாக உணர்ச்சிக்குக் காரணமாகும்.

போர் முடிந்த பின்னர் அரசின் செலவுகள் பெருவெள்ளத் துக்குப்பின் நீர்மட்டம் குறைவதுபோன்று சரசரவென்று சரிந்து வரும். ஆனால், தனியாரின்துறையிலுள்ள நுகர்வும் முதலீடும் அவ்வாறு குறைவதில்லை. அரசின் செலவு குறைந்துவரும் வேகத்துக்கு மேலாகத் தனியாரின் துறையிலுள்ள நுகர்வும் முதலீடும் அதிகரிக்குமானால் போர் முடிந்த பின்னரும் பணவீக்கம் மறையாது. மேலும் போருக்கான வகையில் மாற்றியமைக்கப்பட்ட பொருளுற்பத்தியைச் சமாதான காலத்துக்கேற்றவாறு சீரமைப்பதில் பல சிக்கல்கள் உண்டு. அத்துடன், படை அணிவகுப்பிலிருந்து விடுபடும் எண்ணிறந்த உழைப்பாளர் வேலையின்றி வாட நேரிடும்.

தொழிற்சங்கங்களும் போர்க்காலத்தில் இழந்த மெய்வருவாயைத் திரும்பப் பெறும் வகையில் வேலைநிறுத்தம் போன்ற போராட்டங்களில் ஈடுபடும். இக் காரணங்களால் பணவீக்கத்தின் தொல்லைகள் அதிகரிக்கும். இத் தொல்லைகளை நீக்கவேண்டுமாயின் ஒன்று பயனுள்ள தேவையைக் குறைக்கவேண்டும். அல்லது உற்பத்தியைத் துரிதமாகப் பெருக்கவேண்டும். போர்க்காலத்தில் ஒதுங்கி நின்ற மிதமிஞ்சிய சேமிப்பு, போர் முடிந்த பின்னர் வெளிப்படுமாதலால் பொதுவாகப் போருக்குப் பின்னர் வட்டிவீதம் குறைவாக இருக்கும். எனவே, முதலீட்டைத் தூண்டுவதற்குரிய சூழ்நிலை உண்டு. அதன் பயனாக முதலீடு இறுதிநிலைத்திறன் மேம்படும். எனவே, தனியாரின் துறையிலுள்ள முதலாக்கம் அதிகரிக்கும். அதன் விளைவாகப் பணவீக்கம் மேலும் உந்தப்படலாம். எனவே, போர் முடிந்த பின்னர் பணவீக்கத்தைக் குறைக்க வேண்டுமாயின் அரசு செலவுகளைக் குறைப்பதன்மூலம் அரசு சேமிப்பை அதிகரிக்க வேண்டும் என்பது கீன்ஸீயப் பரம்பரையை ஒட்டியப் பொதுநிதிக் கொள்கையாகும்.

## மேலும் படித்தற்குரியவை


1. Dillard D., Op. Cit. Chapters IX & X.
2. Hansen A. H., Op. Cit. Chapter XI.
3. Hariss S. E., Op. Cit. Chapters XI & XXXVII.
4. Keynes J. M., Op. Cit., Chapter XXI.
5. Klein L. R., Op. Cit., Chapter VI.

# 8. உலகப் பொருளாதார உறவு

*[பொன் (நாணயத்) திட்டமும் நிலையான நாணய மாற்று முறையும் — இணக்கமுள்ள நாணய மாற்றுமுறையில் நாட்டம் — பன்னாட்டுச் செலாவணி முறைக்கான பிரேரணைகள்—உலகப் பாங்கு — சாதகமான வாணிகக் கொடுக்கல் நிலை — தலையிடா வாணிகமும் காப்புக் கொள்கையும்.]*

கீன்ஸ் எழுதிய நூல்களில் சற்றேறக்குறைய 900 பக்கங்கள் சர்வதேசப் பொருளாதாரத்துக்காக ஒதுக்கப்பட்டுள்ளன. பலதரப்பட்ட சர்வதேசப் பொருளாதாரப் பிரச்சினைகளையும் பற்றிக் கிட்டத்தட்ட 100 கட்டுரைகள் வரைந்துள்ளார். பொதுக் கோட்பாட்டுக்கு முன்னால் கீன்ஸ் பணப்பிரச்சினைகளிலேயே அதிலும் பணத்தின் சர்வதேச அம்சங்களிலேயே பெரிதும் ஈடுபட்டிருந்தார் என்று தயங்காமல் கூறலாம். ஆனால், பொதுக் கோட்பாட்டில் பொருளாதார மந்தம் அவரது கவனத்தையும் கருத்தையும் முழுவதுமாகக் கவர்ந்து வந்த காரணத்தால் சர்வதேசப் பிரச்சினைகள் அவ்வளவு முக்கிய இடம் பெறவில்லை. இரண்டாவது உலகப் போருக்குப் பின்னரே மறுபடியும் கீன்ஸ் பணப்பிரச்சினையில் சர்வதேசக் கூட்டுறவின் அவசியத்தை உணரலானார். அதையொட்டி உலகப்பொருளாதாரப் பிரச்சினைகளிலும் அவர் தீவிரமாக ஈடுபடலானார்.

### பொன் (நாணயத்) திட்டமும் நிலையான நாணய மாற்றுமுறையும்

முதலாம் உலகப் போருக்கு முன்னர் நடைமுறையிலிருந்து வந்த பொன் (நாணயத்) திட்ட முறைப்படி, அயல்நாட்டு நாணய மாற்று வீதத்தை ஒரே நிலையில் வைத்திருப்பதே பணவாக்கக் கொள்கையின் முக்கியமான குறிக்கோளாக இருந்து வந்தது. அயல்நாட்டு நாணய மாற்றுவீதத்தைச் சமநிலையில் வைத்திருப்பதால் உள்நாட்டில் பணவாட்டமோ பணவீக்கமோ ஏற்பட்டபோதிலும், அதைப்பற்றி யாரும் அதிகமாகக் கவலைப்பட்டதில்லை. தங்கத்தினளவு அதிகரிப்பதற்கேற்ப உள்நாட்டில் புழக்கத்திலுள்ள பணத்தினளவைப்

பெருக்குவதும், தங்கத்தினளவு குறைவதற்கேற்ப உள்நாட்டில் சுழன்றுவரும் பணத்தினளவைச் சுருக்குவதும் பொன் (நாணயத்) திட்டத்தைப் பின்பற்றுவோர் கடைப்பிடிக்க வேண்டிய விதிகளுள் முக்கியமானதொன்ருக இருந்து வந்தது. ஒரு நாட்டின் வாணிகக் கொடுக்கல்நிலை பாதகமாக இருந்தால் (அதாவது இறக்குமதி ஏற்றுமதியை மிஞ்சி நிற்குமானுல்) கொடுக்கல் நிலையிலுள்ள அத் துண்டை ஈடுசெய்யும பொருட்டுத் தங்கத்தை ஏற்றுமதி செய்ய வேண்டியது அவசியமாகும். தங்கத்தை ஏற்றுமதி செய்யும் நாட்டில் வெளியேறும் தங்கத்தினளவிற்கேற்பப் பணத்தினளவைக் குறைத்தால் அதற்கேற்ப உள்நாட்டில் விலைவாசிகள் குறையும். மாருக, தங்கத்தை இறக்குமதி செய்யும் நாட்டில் உட்புகும் தங்கத்தினளவிற்கேற்பப் பணத்தினளவை அதிகரித்தால், அந்நாட்டில் விலைவாசிகள் அதிகரிக்கும். இவ்வாறு உள்நாட்டு விலை குறைந்து அயல்நாட்டு விலை அதிகரிப்பதால் அயல்நாட்டு வாணிகத்தின் போக்கு மாறி மிஞ்சிய ஏற்றுமதியும் தங்கமும் எதிர்த்திக்கில் பயணமாகும். அதன் பயனுக, மறுபடியும் கொடுக்கல் நிலைச் சீர்ப்பட்டு அயல்நாட்டு நாணயமாற்று வீதமும் சமநிலைக்கு வரும் என்பது பொன் (நாணயத்) திட்டத்தில் நம்பிக்கை வைத்தவர்களின் கருத்து.

உலகப் போர்களுக்கு இடைப்பட்ட காலத்தில் உள்நாட்டுப் பொருளாதாரத்தை ஒரே சீராக இயங்கச் செய்வதெப்படி என்ற பிரச்சினையிலேயே அரசுகளும் பொருளியல் வல்லுநர்களும் அக்கறை காட்டலாயினர். அதன் விளைவாகப் பலரும் நிரந்தரமான அயல்நாட்டு நாணயமாற்று வீதத்தைக் கைவிட்டுவிட்டு, அவ் வீதத்தை அவ்வப்போது ஏற்றவிதமாக மாற்றியமைப்பதன் மூலம் அயல்நாட்டுக் கொடுக்கல் நிலையிலுள்ள ஏற்ற இறக்கங்களைச் சரிக்கட்ட விரும்பினர். அத்தகைய விருப்பங்களுக்குக் கோட்பாட்டு ரீதியில் அடிப்படை அமைத்துக் கொடுத்துப் பொன் (நாணயத்) திட்டத்தை எதிர்த்துப் போர் தொடுப்பதற்கான பாணங்களைத் தமது பேனுமுனையின்மூலம் உதிர்த்தளித்த பெருமை பெரும்பாலும் கீன்ஸையே சாரும்.

### இணக்கமுள்ள நாணயமாற்றுமுறையில் நாட்டம்

முதலாம் உலகப்போர் ஆரம்பமாவதற்கு முன்னரே (1913-ல்) பொன் (நாணயத்) திட்டத்துக்கு எதிராகக் கீன்ஸ் போர்க்கொடியை உயர்த்திப் பல பாணங்களைத் தொடுக்கலானுர். ஒரு சர்வதேச நாணயத்தின் ஆதிக்கத்துக்குட்பட்டுப் பல்வேறு நாடுகளும் தங்கள் செலாவணியைச் சில வேளைகளில் தங்கள் நலன்களுக்கும் பாதகமான வகையில்கூட கொண்டு செலுத்தவேண்டிய நிர்ப்பந்தம் இருந்தது.

இங்கிலாந்து கடைப்பிடித்து வந்ததுபோல் ஏனைய நாடுகளும் பொன் (நாணயத்) திட்ட விதிகளைக் கருத்துடன் கடைப்பிடித்து வந்ததாகச் சொல்ல முடியாது. ஏன்? பொன் (நாணயத்) திட்டம் பல நாடுகளின் பொருளாதார நலன்களுக்கு உகந்ததாக இருக்கவில்லை. எனவே, அவைகள் அயல்நாடுகளில் முதலினச் சொத்துகளைச் சேர்ப்பது உள்நாட்டில் தங்கத்தை முடக்கி இருப்புக் கட்டுவது போன்ற கூடாத நடவடிக்கைகளில் ஈடுபடுவதன்மூலம் தங்கத்தால் தளையப்படாமல் தப்ப முயன்றனர். எனவேதான் கீன்ஸ் 'இந்தியச் செலாவணியும் நிதியும்' என்ற தமது நூலில் பொன் (நாணயத்) திட்டத்தைக் கைவிட்டுப் பொன்மாற்றுத் திட்டத்தைக் (Gold Exchange Standard) கடைப்பிடிக்க வேண்டுமென்று வற்புறுத்தினர் போலும்.

உள்நாட்டு விலைவாசிகளை ஒரே சீராக வைத்திருக்க வேண்டும் என்ற நோக்கத்துக்கும் அயல்நாட்டு நாணயமாற்றுவீதத்தை ஒரே நிலையில் வைத்திருப்பதற்கும் என்னென்ன முரண்பாடுகளும் சிக்கல்களும் உண்டு என்பதைக் கீன்ஸ் தமது 'பணச் சீர்திருத்தம் பற்றிய சிந்தனைகள்' என்ற நூலில் சித்திரித்துள்ளார். விலைவாசிகளை நிலைதவறாமல் வைத்திருக்க முயன்றால் அயல்நாட்டுக் கொடுக்கல் நிலை சீர்கெட்டுத் தொல்லை விளைவிப்பதுண்டு. எனவே, நிருவகிக்கப் பட்ட செலாவணிமுறையைக் (Managed Currency System) கடைப் பிடிப்பதன்மூலம் இருமுனைகளிலும் (உள்நாட்டு விலைவாசிகள்—அயல்நாட்டுக் கொடுக்கல் நிலை) ஏறுமாறுகள் ஏற்படாவண்ணம் கூடிய மட்டும் தடுக்க முடியும் என்பது கீன்ஸின் கருத்து. அப்படிச் செய்தால் குறுகிய காலத்திலும் பொருளாதாரம் நிலைகுலையாது; நீண்ட காலத்திலும் சிக்கல்களின்றி இணக்கமுடன் இயங்கி வரமுடியும் என்பது கீன்ஸின் கருத்து.

1920–30 வரையுள்ள காலத்தில் கீன்ஸீயக் கருத்து மேலும் வலுவடைந்தது. இந்தப் பத்தாண்டுக் காலத்தில் உள்நாட்டு வெளிநாட்டுச் செலாவணி, அயல்நாட்டு வாணிகமாற்றுவீதம் சம்பந்தமாகக் குறிப்பிடத்தக்க பல சம்பவங்கள் நிகழ்ந்தன. போர்ப் பரிகாரத்தால் பொருள்களையும் பொன்னையும் நாடுவிட்டுநாடு கடத்த வேண்டியதேற்பட்டது. தங்கத்தின் மதிப்பை அதிகரித்ததால் 1920-21-ல் தங்கம் அமெரிக்க நாட்டினுள் புகுவதற்குத் துடிதுடித்தது. ஆனால், உள்நாட்டில் தங்கத்தை அமெரிக்கா மலடாக்கியது. இங்கிலாந்து போருக்கு முன்னுள்ள, மாற்றுவீதத்தின் அடிப்படையில் பொன்திட்டத்துக்குத் திரும்பியது; அதன் பயனாகப் பணநெருக்கடியும் வேலையின்மையும் அதிகரித்தன. ஐரோப்பிய நாடுகள் பல தங்கள் நாணயங்களைத் தரமிழக்கச் செய்தன. அதனால் இங்கிலாந்தின் நிலைமை மிகவும் பாதிக்கப்பட்டது. இவ்வாறு ஏனைய நாடுகள்

செய்யும் தில்லுமுல்லுகளுக்கு இங்கிலாந்து இலக்காவது கீன்ஸுக்குப் பிடிக்கவில்லை. பொன் (நாணயத்) திட்டத்தின் விதிகளைப் பல்வேறு நாடுகளும் மீறமுற்பட்டதால் சர்தேச நாணய உறவில் தொன்மைப் பொருளாதாரிகள் எதிர்பார்த்த இணக்கம் ஏற்படப் போவதில்லை என்பதைக் கீன்ஸ் நன்குணர்ந்தார். குறிப்பாக அமெரிக்காவில் புகுந்துவந்த தங்கத்துக்கேற்ப அமெரிக்க அரசு கடனைப் பெருக்காமல் தங்கத்தை மலடாக்கி வந்ததைக் கண்டு கீன்ஸ் அதிருப்தியுற்ருர். தங்கம் மலடாக்கப்பட்டதால் அமெரிக்காவில் நிலவிவந்த விலைவாசிகள் வேண்டிய அளவு ஏறவில்லை. மாருக, இங்கிலாந்தில் தொன்மைப் பொருளாதாரிகள் எதிர்பார்த்ததுபோல் விலைவாசிகள் இறங்கவில்லை. கூலியும் குறைவதாக இல்லை. எனவே, அரசின் தலையீடின்றி நாடுகளிடையே உள்ள நாணய உறவு இணக்கமுறும் என்ற தொன்மைப் பொருளாதாரக் கோட்பாடு பொய்யாயிற்று. விலைவாசிகள் ஏறுவதற்குப் பதிலாக வேலையின்மை அதிகரித்து வந்தது. வட்டிவீதத்தை உயர்த்துவதன்மூலம் அயல் நாட்டு மூலதனத்தைக் கவரலாம் என்று சிலர் நினைத்தனர். ஆனால், அதன் விளைவாக உள்நாட்டு முதலீடு தடையுற்றது. எனவே பொன் (நாணயத்) திட்டம் நடைமுறையிலிருக்கும்வரை வேலையின்மையையும் பணவாட்டத்தையும் தவிர்க்கமுடியாது என்று கீன்ஸ் எடுத்தோதலானுர். பொன் (நாணயத்) திட்டத்தினல் ஏற்படும் சாதகங்களைக் காட்டிலும் பாதகங்களே மிகுதியாக உள்ளன என்பது கீன்ஸது கருத்து.

பொன் (நாணயத்) திட்டத்தைக் கைவிட, தேசீயச் செலாவணிச் சீர்திருத்தங்களை விரும்பிய கீன்ஸ், இங்கிலாந்து பொன் (நாணயத்) திட்டத்துக்குத் திரும்பியதைக் கண்டு மனம் புழுங்கினுர். மாக்மில்லன் குழுவில் அவருடன் அங்கம் வகித்தவர்களும் உலகச் செலாவணிப் பிரச்சினையை அடியோடு கைவிடத் தயாராக இல்லை. எனவே, கீன்ஸ் தமது விருப்புவெறுப்புகளை ஓரளவு விட்டுக் கொடுத்துத் தேசீயச் செலாவணித் திட்டத்தினடிப்படையில் சர்தேசக் கூட்டுறவு வேண்டும் என்ற கருத்தை மேற்கொள்ளலானுர். அதாவது, சம்பந்தப்பட்ட சகலநாடுகளின் நலன்களையும் பாதுகாக்கும் வகையில் பொன் (நாணயத்) திட்டத்தை நிருவகிக்க வேண்டும் என்பது கீன்ஸின் கருத்து. நிருவகிக்கப்பட்ட பொன் (நாணயத்) திட்டத்தைக் கொண்டு செலுத்தும் வகையில் பல புரட்சிகரமான கருத்துகளை கீன்ஸ் முன்வைக்கலானுர். அக் கருத்துகள் பிற்காலக் கொள்கைகளுக்கு அடிகோலின எனலாம். தங்கத்தை மலடாக்கி இருப்புக் கட்டுவதைக் கீன்ஸ் வன்மையாகக் கண்டித்து வந்தார்; தங்கத்தைச் சிக்கனமாகப் பயன்படுத்தவேண்டும் என்றும் ஆலோசனை கூறி வந்தார். உலக முழுவதிலும் பரவி வந்த பணவாட்டத்தைப்

போக்கக்கூடிய விலைக்கொள்கையை உலக அரங்கில் நிலைநாட்ட வேண்டும் என்றும் அடிக்கடி கோரி வந்தார். அயல்நாட்டு நாணய மாற்றுவீதத்தில் ஏற்படக்கூடிய ஏறுமாறுகளை மட்டுப்படுத்தக்கூடிய வகையில் உலகநிதி நிறுவனம் ஒன்று இருந்தால் நல்லது என்பது கீன்ஸின் எண்ணம். தங்கம் நாடுவிட்டுநாடு பெயர்வதால், உள்நாட்டு விலைவாசிகள் பாதிக்கப்படாமல் தடுப்பதே அத்தகைய நிறுவனத்தின் முக்கியமான வேலையாக இருக்கவேண்டும் என்பது அவரது விருப்பம்.

பணம் பற்றிய தமது சித்தாந்தத்தில் பொன் (நாணயத்) திட்டத்தில் பொதிந்துள்ள புதிரைப்பற்றிய புனராய்வு செய்துள்ளார். ஆனால், அப்போதைய இங்கிலாந்தில் பொன் (நாணயத்) திட்டம் நடைமுறையில் இருந்து வந்தது. எனவே, பொன் எல்லைகளைக் (Gold Points) கடந்து செல்லக்கூடிய பிரேரணைகள் எதையும் முன்வைக்க அவர் விரும்பவில்லை. உள்நாட்டுச் செலாவணியைக் கொண்டு செலுத்துவதில் அந்தந்த நாடுகளுக்கு உரிமை இருந்தாலே போதுமானது என்பது அவரது எண்ணம். 1931-ல் மறுபடியும் இங்கிலாந்து பொன் (நாணயத்) திட்டத்திலிருந்து விலகியபோது இங்கிலாந்து, ஐரோப்பா உட்பட உலகநாடுகளில் முக்கால் பகுதியை ஒன்று திரட்டிப் பொன் (நாணயத்) திட்டத்தில் புரட்சிகரமான மாறுதல்களைப் புகுத்தக் கூடிய வகையில், உலகச் செலாவணித் திட்டம் ஒன்றை வகுப்பது நல்லது என்று வற்புறுத்தி வந்தாரே தவிர, பொன் (நாணயத்) திட்டத்தை அடியோடு கைவிடவேண்டுமென்று கீன்ஸ் கோரவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

பொன் (நாணயத்) திட்டம் தோல்வியுற்றதைக் கண்டு கீன்ஸ் பூரிப்படைந்தார் எனலாம். இருப்பினும் அண்டை அயலாரை வறியராக்கும் நோக்குடன் ஐரோப்பிய நாடுகள் பலவும் செலாவணித் தரமிழப்புப் போட்டியில் ஈடுபட்டிருந்ததைக் கண்டு அவருக்கு வருத்தமேற்பட்டது. இணக்கமுள்ள நாணயமாற்றுக்கொள்கை இவ்வாறு ஒருசில நாடுகளின் சுயநலத்துக்காகத் துஷ்பிரயோகம் செய்யப்படுவது தவறு என்று அவருக்குப்பட்டது. எனவே, சர்வதேசப் பணவாக்கக் கூட்டுறவை வற்புறுத்தலானார். 1933-ல் அவர் எழுதிய 'சுபிட்சத்துக்கான வழிவகைகள்' (Means to Prosperity) என்ற நூலில் பன்னாட்டுச் செலாவணித் திட்டத்தின் அடிப்படைக் கருத்துகளைக் கோடிட்டுக் காட்டினார். அதன்படி ஒவ்வொரு நாட்டின் செலாவணியும் தங்கத்தோடு தொடுக்கப்படும். ஆனால், உலக அரங்கில் நிலவும் விலைவாசிகளிடையே காணப்படும் விரும்பத்தகாத ஏற்றத்தாழ்வுகளை விலக்கும் வகையில் நாணயமாற்றுவீதங்களை அவ்வப்போது மாற்றியமைக்க வேண்டும் என்பது அவரது கருத்து. 1935-ல்

மறுபடியும் உலக அரங்கில் முக்கியத்துவம் வகிக்கும் செலாவணிகளைச் சீர்படுத்தவேண்டும் என்று வலியுறுத்தினர். குறுகிய காலத்தில் செலாவணியின் மதிப்பு அலசடிப்படாமல் பாதுகாப்பதுடன் நீண்ட காலத்தில் அயல்நாட்டுக் கொடுக்கல் நிலையில் ஏற்படக்கூடிய அடிப் படையான சீர்கேடுகளைச் சரிக்கட்டும் வகையில் சர்வதேசச் செலாவணிகளை நிருவகிக்க வேண்டும் என்பது கீன்ஸின் கருத்து. கொடுக்கல் நிலையில் அடிப்படையான சீர்கேடு காணப்படுகிறதா? இல்லையா? என்பதைப் பரீக்ஷார்த்த ரீதியில் எப்படி நிருணயிப்பது என்ற பிரச்சினையிலும் கீன்ஸ் தமது மனதைச் செலுத்தலானார். எட்டாண்டுகளுக்குப் பின்னர் பன்னாட்டுத் தீர்வகக் கூட்டுறவு (International Clearing Union) பற்றிய திட்டத்தை வகுக்கும்போதும், கொடுக்கல் நிலையில் நெருக்கடியை அனுபவிக்கும் ஒரு நாடு ஒரு குறிப்பிட்ட அளவுக்குமேல் தீர்வகக் கூட்டுறவிலிருந்து பின்வலிக்கு மானால் (திரும்பப் பெறுமானால்) அந் நாடு தனது செலாவணியைக் குறிப்பிட்ட அளவில் தரமிழக்கச் செய்யும் வகையில் அனுமதிக்கப் படலாம் என்ற கருத்தைக் கீன்ஸ் வெளியிட்டார்.

### பன்னாட்டுச் செலாவணி முறைக்கான பிரேரணைகள்

சம்பந்தப்பட்ட நாடுகளுக்கு அனுவசியமாகத் தொல்லை கொடுக் காத வகையில் நாணயமாற்றுவீதத்தைக் கூடியமட்டும் நிலையாக வைத்திருப்பதே பன்னாட்டுச் செலாவணித்திட்டங்களின் முக்கியமான குறிக்கோளாகும். பன்னாட்டுத் தீர்வகக் கூட்டுறவை உருவாக்கு வதில் பலர் ஆர்வம் காட்டி வந்தனரென்றாலும் அக் கருத்தை ஆணித் தரமாக எடுத்துரைத்த பெருமை கீன்ஸையே சாரும். ஒரு நாட்டுக்கு ஏற்றுமதி செய்வதன்மூலம் ஈட்டிய அயல்நாட்டுச் செலாவணியைக் கொண்டு வேறொரு நாட்டில் அல்லது வேறு பல நாடுகளிலிருந்து பொருள்களை இறக்குமதி செய்வதற்குப் பயன்படுத்துவதே பன்னாட்டுத் தீர்வகக் கூட்டுறவின் முக்கியமான நோக்கமாகும் என்பது கீன்ஸது விளக்கமாகும். இத்தகைய பன்முகத் தீர்வகத்துக்குத் (Multilateral Clearing) உறுதுணையாக இருக்கும்பொருட்டு "பாங்கோர்" (Bancor) என்றதோர் உலகச் செலாவணியை உருவாக்க விரும்பினர். அதன்படி அயல்நாட்டு வாணிகத்தில் ஈடுபட்டுள்ள நாடுகள் தங்கள் ஏற்றுமதிக்கு ஈடாக உலகச் செலாவணியைப் பெறுவர். பின்னர் அச் செலாவணியைப் பயன்படுத்தித் தங்களுக்கு வேண்டிய பொருள்களை வெவ்வேறு நாடுகளிலிருந்தும் இறக்குமதி செய்வர். ஒவ்வொரு நாடும் தங்கள் வாணிகக் கொடுக்கல் கணக்கை உலகச் செலாவணியின்மூலமே தீர்க்க முயலும்.

ஏற்றுமதிக்குகந்த சந்தைகளாக விளங்கும் நாடுகளிலிருந்து இறக்குமதிக்கான பொருள்களும் போதிய அளவில் மலிவாகக்

கிடைக்கும் என்று எதிர்பார்க்க முடியாது. எனவே, வாணிகத் தொடர்பு கொண்டுள்ள ஒவ்வொரு நாட்டுடனும் ஏற்றுமதி இறக்கு மதியைச் சமநிலையில் வைத்திருப்பது என்பது இயலாத காரியம். ஆதலின், ஒரு நாட்டின் கணக்கிலுள்ள எஞ்சிய ஏற்றுமதியைக் கொண்டு ஏனைய நாடுகளின் கணக்கிலுள்ள இறக்குமதித் துண்டுகளை ஈடுசெய்யும் வாய்ப்பை உருவாக்க வேண்டும் என்பது பன்னாட்டுத் தீர்வகத் திட்டத்தின் அடிப்படையாகும்.

இத் திட்டத்தின்கீழ் எந்த நாடும் தங்கத்தைப் பன்னாட்டு நிதியாக இருப்பு வைக்க வேண்டிய அவசியமில்லை. இருப்பினும், இத் திட்டம் தங்கத்தை அடியோடு மறந்துவிட்டதாகக் கூற இயலாது. புதிதாகப் பிறக்கும் உலகச் செலாவணியைத் தங்கத்தைக் கொண்டு வாங்கலாம்; ஆனால், "பாங்கோரை"க் கொண்டு தங்கத்தை வாங்க முடியாது. எனவே, மிஞ்சிய ஏற்றுமதியைக் கொண்டு பிறநாட்டுப் பொருள்களை வாங்கமுடியுமேயன்றித் தங்கத்தை வாங்க இயலாது. எனவே, தங்கத்தை மலடாக்கிப் பதுக்குவதற்கான வாய்ப்புகள் மறையும். ஆதலின், பன்னாட்டுப் பணமுறையின்மூலம் சர்வதேசப் பதுக்கலைக் குறைத்துப் பயனுள்ள தேவையைப் பெருக்குவதற்கான சூழ்நிலையை உருவாக்க முடியும். சுருங்கக்கூறின், உள்நாட்டுப் பொருளாதாரம் சீர்குலையாத வகையில் அதை உலகப் பொருளாதாரத்தோடு இணைப்பதே அத் திட்டத்தின் குறிக்கோள். அத் திட்டம் நடைமுறைக்கு வந்திருந்தால் குறுகிய காலச் செலாவணி மாற்றுவீதம் சீர்படும்; உள்நாட்டில் வேலையினளவு உன்னதமானதோர் நிலையை அடையும்; உள்நாட்டு விலைவாசிகளும் அலசடிப்படாமல் நிலைபெற்றிருக்கும் என்று எதிர்பார்த்தனர். குறுகிய காலத்தில் நிலையான செலாவணி மாற்றுவீதத்தை விரும்பிய கீன்ஸ் நீண்டகாலத்தில் அவ் வீதம் இணக்கமுற்றிருத்தல் வேண்டும் என்று எண்ணினார். அயல்நாட்டு நாணயமாற்றுவீதத்தை உள்நாட்டுச் செலாவணியின் மதிப்பிற் கேற்ப மாற்றியமைப்பதே நீண்டகால நடவடிக்கையாகும். அத்தகைய சீரமைப்பினால் விலைவாசிகள் நிலைபெறுவதற்கு ஏதுவாகும். பொன்திட்டத்தின்கீழ் அயல்நாட்டு நாணயமாற்றுவீதத்துக் கேற்ப உள்நாட்டு நாணயத்தின் மதிப்பை மாற்றியமைக்க வேண்டியிருந்தது; ஆனால், பன்னாட்டுப் பணமுறையின்கீழ் செலாவணியின் உள்நாட்டு மதிப்பிற்கேற்ப அதன் அயல்நாட்டு மாற்றுவீதத்தை மாற்றியமைக்க வேண்டிய நிலைஏற்பட்டது. எனினும் அத் திட்டம் ஏற்றுக்கொள்ளப்படவில்லை.

கீன்ஸ் வகுத்த பன்னாட்டுச் செலாவணிமுறை ஏற்றுக் கொள்ளப் படவில்லையென்றாலும் அதனடிப்படையாக அமைந்த தத்துவம் நாணயமாற்றுவீதத்தை நிருணயம் செய்வதற்கேற்ற வகையில்

வகுத்த நிபந்தனைகள் பன்னாட்டுப் பணவாக்கநிதியை (International Monetary Fund) நிறுவுவதற்கு உறுதுணையாக நின்று உதவின. பல முக்கியமான அம்சங்களில் தமது திட்டத்தைக் காட்டிலும் பன்னாட்டுப் பணவாக்கநிதி மிகவும் மேம்பட்டது என்பதைக் கீன்ஸே ஒப்புக்கொண்டிருக்கிறார். பன்னாட்டுப் பணவாக்க நிதியின் மேம்பட்ட அம்சங்களைப் பிரபுக்களின் சபையில் 1944 மே 28-ம் தேதி நிகழ்த்திய உரையில் கீன்ஸ் விவரித்துள்ளார்.

உலகச் செலாவணிகளுக்குப் பாதுகாப்பாக வைக்கப்படும் பண இருப்புக்குப் பன்னாட்டுப் பணவாக்கநிதி மிகவும் பக்கபலமாக இருக்கும் என்றும் அத்தகைய இருப்புநிதி கூடியமட்டும் பரவலாக விநியோகிக்கப்படும் என்றும் கீன்ஸ் நம்பினார். மேலும், பன்னாட்டுக் கொடுக்கல் நிலையில் ஏற்படக்கூடிய சீர்கேடுகளைச் சரிக்கட்டும் பொறுப்பை மிஞ்சிய ஏற்றுமதியைக் கொண்ட கடன் கொடுக்கும் நாடுகளிடமே ஒப்படைத்தது குறிப்பிடத்தக்கது. அத் திட்டத்தில் 52 ஆவது பிரிவின்கீழ் மிஞ்சிய ஏற்றுமதியைக் கொண்ட கடன் கொடுக்கும் நாடுகளிடமே ஒப்படைத்தது குறிப்பிடத்தக்கது. அத்திட்டத்தின் 52ஆவது பிரிவின்படி மிஞ்சிய ஏற்றுமதியைக்கொண்ட நாடுகள், ஏனைய நாடுகள் தங்கள் செலாவணிக்குக் காப்பாக வைத்திருக்கும் இருப்புப் பணத்தை வடிகட்டாமல் தடுக்கப்படும். மிஞ்சிய ஏற்றுமதிக்கு ஈடாகப் பிறநாடுகளிடமிருந்து இறக்குமதி செய்யலாம். அல்லது மிஞ்சிய ஏற்றுமதியைக் கடனாக வழங்கலாம். ஆனால், கொடுக்கல் நிலையைச் சரிக்கட்டவேண்டி தங்கத்தை ஏனைய நாடுகளிலிருந்து கிளப்பித் தன்னாட்டுக்குள் முடக்குவதை அத் திட்டம் அனுமதிப்பதில்லை. அதன் விளைவாக, உலக நாடுகளிடையே என்றுமில்லாத கூட்டுறவு வளருவதற்கு வாய்ப்புண்டாயிற்று என்பது பலரது கருத்து. ஒரு நாட்டின் கொடுக்கல் நிலையில் அடிப்படையான சீர்கேடு ஏற்பட்டாலன்றி அந் நாட்டுச் செலாவணியின் அயல்நாட்டுமாற்றுவீதத்தை மாற்றுவது கூடாது என்பது அந் நிதியின் கொள்கைகளுள் ஒன்றாகும். உள்நாட்டின் பொருளாதார நிலைமைக்கேற்ப ஒவ்வொரு நாடும் தனது பணக்கொள்கைகளை அமைக்கும் உரிமையைப் பன்னாட்டுப் பணவாக்கநிதியால் பறிக்கவோ குறைக்கவோ முடியாது. ஆனால், உள்நாட்டு நிலைமைகளுக்கேற்ப உருவாகும் பணக் கொள்கைகளினடியாக மாறிவரும் செலாவணி மதிப்பு, கொடுக்கல் நிலையிலுள்ள அடிப்படையான சீர்கேட்டைச் சுட்டிக் காட்டுமானால், அதற்கேற்ப அயல்நாட்டுச் செலாவணி மாற்று வீதத்தை அவ்வப்போது திருத்தியமைப்பது நல்லது என்பது பன்னாட்டுப் பணவாக்கநிதியின் அடிப்படைக் கொள்கைகளுள் ஒன்றாகும். இக் கொள்கையை வகுப்பதில் கீன்ஸுக்கு முக்கியமானதோர் பங்கு உண்டு.

**உலக வங்கி**

சர்வதேசச் சீரமைப்பிற்காகவும் பொருளாதார வளர்ச்சிக்காகவும் நிறுவப்பட்ட உலகவங்கி தோன்றுவதற்கேற்ற பல கருத்துகளும் கீன்ஸின் வாயிலாகவே உதிர்ந்தன. 1944 ஜூலை மாதம் உலக வங்கியைத் தோற்றுவிக்கும் நோக்கத்துடன் அமைக்கப்பட்ட இரண்டாவது குழுவின் முதல் கூட்டத்தின் தொடக்க உரையை நிகழ்த்தியபோது அவ் வங்கியில் பங்கு கொள்ளும் நாடுகளின் பொருளாதார நலன்களையும் சுபிட்சத்தையும் நட்புறவையும் வளர்க்கும் வகையில் எவ்வாறு செயல்படமுடியும் என்று விளக்கியபோது இரண்டு முக்கிய கூறுகளைக் கீன்ஸ் வலியுறுத்தினார். முதலாவது, போரால் அழிவுற்று நொறுங்குண்ட பொருளாதாரங்களைச் சீரமைக்கும் வகையில் உலக வங்கி, கடன் கொடுத்து உதவவேண்டும் என்று வலியுறுத்தினார். உலகநாடுகளின் உற்பத்திச்சாதனங்களையும் ஆக்க சக்தியையும் சிறந்த முறையில் வளர்ப்பது மற்றொரு முக்கியமான அம்சமாக அமைய வேண்டும் என்று அவர் விரும்பினார். குறிப்பாக, பயன்படுத்தப் படாமல் வீணாகிவரும் இயற்கை வளங்களையும் மூலப்பொருள்களையும் பயன்படுத்துவதன்மூலம் பின்தங்கிய நாடுகளின் எளிமை நிலையைப் போக்கி மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும் வகையில் உலகவங்கி செயல்பட வேண்டும் என்று கீன்ஸ் குறிப்பிட்டார்; அத்துடன், சம்பந்தப்பட்ட நாடுகளின் கொடுக்கல்நிலை சீர்கெடாமல் பாதுகாப்பதும் அதன் கடமையாகும் என வலியுறுத்தினார்.

உலகநாடுகளில் ஒரு சில வல்லரசுகளே அண்டை அயல்நாடுகளில் தங்கள் சேமிப்புகளை முதலீடு செய்யக்கூடிய சக்தி படைத்தவை என்பது தெளிவு. எனவே, பெரும்பாலான நாடுகள் தங்கள் கடன் வசதிக்காகச் செல்வமிக்க ஒரு சில நாடுகளையே சார்ந்திருக்கவேண்டிய நிர்ப்பந்தம் உண்டு; கடன் கொடுக்கக்கூடிய வசதி படைத்த நாடுகளுள் அமெரிக்கா முதலிடம் வகித்து வருவதும் கண்கூடு. அப்படியிருக்கும்போது ஏழை எளிய நாடுகள் உலகவங்கியில் பங்கு கொள்வதெப்படி என்பது பெரும் பிரச்சினையாக இருந்தது. ஒவ்வொரு நாடும் அதனதன் சக்திக்கு ஏற்றவாறு உலகவங்கியின் மூலதனத்தில் பங்கு கொண்டால் போதுமானது என்று அப் பிரச்சினைக்குப் பரிகாரம் கண்டனர். அதைப் போலவே வழங்கப்படும் கடனுக்கு உலக நாடுகளனைத்துமே கூட்டுப்பொறுப்பு அளிக்க முற்பட்டன. ஆனால், அத்தகைய உறுதி அந்தந்த நாட்டின் பங்குத் தொகையை மிஞ்சாது. எனவே, கடன்பட்ட ஒரு நாடு, வாங்கிய தொகையைத் திருப்பிக் கொடுக்கத் தவறினால் ஏனையநாடுகள் எதுவும் அதனால் கடுமையாகப் பாதிக்கப்படாது என்பது புலனாகும்,

பரவலான பொறுப்பே இத்தகைய பாதுகாப்புக்குத் துணை செய்வது என்பது தெளிவு. ஒவ்வொரு நாடும் தனது பங்கில் ஒரு பகுதியைத் தங்கமாகவும் மற்றதைத் தடையின்றி மாற்றக் கூடிய அயல்நாட்டுச் செலாவணியாகவும் செலுத்தி வந்தது. எனவே, கடனுக்குப் போதிய பாதுகாப்பு இருந்து வந்தது.

நாணய மாற்றுவீதம் சம்பந்தப்பட்ட அடிப்படை தத்துவத்தை வகுப்பதில் கீன்ஸ் முக்கியமான பங்கு கொண்டாரெனினும், நிதி ஒப்பந்தத்தின் கொள்கைகளை விவரிப்பதில் அக்கறை காட்டவில்லை. ஏற்கனவே, வெளியான கருத்துகளும் இவ் வகையில் உதவுவதாக இல்லை. கொடுக்கல்நிலையில் ஏற்படக்கூடிய அடிப்படையான சீர்கேட்டைச் சரிக்கட்ட வேண்டுமாயின் நாணயமாற்றுவீதத்தை அவ்வப்போது மாற்றியமைப்பது இன்றியமையாதது என்பதை முக்கியமானதோர் எடுகோளாகக் கொண்டிருந்ததாகத் தெரிகிறது. கொடுக்கல்நிலையிலுள்ள அடிப்படையான சீர்கேட்டைச் சரிப்படுத்துவதற்கு வேறு என்னென்ன வழிவகைகள் உண்டு என்று கீன்ஸ் ஆராய்ந்ததாகக் காணேம்.

இருப்பினும், உள்நாட்டுப் பொருளாதாரமும் வெளிநாட்டுப் பொருளாதார உறவுகளும் சீர்கேடின்றிச் சுமுகமாக இயங்குவதற்கு இணக்கமுள்ள நாணயமாற்றுவீதம் இன்றியமையாதது என்பதைப் பல்லாண்டுகளாக எடுத்தோதிய பெருமை கீன்ஸையே சாரும். பொருளாதாரத்தைச் சமநிலையில் வைத்திருக்கக்கூடிய நாணயமாற்று வீதம் என்பதற்குக் கீன்ஸ் கொடுத்த விளக்கமே பின்னல் நடைமுறைக்கு வந்த நாணயமாற்றுக் கொள்கைகளுக்கு அடிப்படையாக அமைந்தது என்னலாம். எந்த ஒரு நாணயமாற்றுவீதம் ஒரு நாட்டின் கொடுக்கல்நிலைக் கணக்கைப் பல ஆண்டுகளாகச் சமநிலையில் வைத்திருக்க உதவுவதுடன், உள்நாட்டிலும் பணவாட்டத்துக்கோ கண்டிப்பான இறக்குமதிக் கட்டுப்பாடுகளுக்கோ அவசியமில்லாமல் செய்கிறதோ, அதையே சமநிலை நாணயமாற்றுவீதம் (Equilibrium Rate of Exchange) என்பர். இத்தகைய இலக்கணத்தின்மூலம் வாங்குந்திறன் சமநிலையைவிட (Purchasing power parity) அயல்நாட்டுக் கொடுக்கல்நிலையே (Balance of Payments) நாணயமாற்றுவீதத்திலுள்ள சீர்கேட்டைச் சரியான வகையில் விளக்கவல்லது என்பது கீன்ஸின் கருத்து. ஆரம்பத்தில் வாங்குந்திறன் சமநிலைக்கோட்பாட்டில் கீன்ஸுக்கு மிகுந்த ஈடுபாடு இருந்து வந்தது. பணச் சீர்திருத்தம் பற்றிய சிந்தனைகளில் அக் கோட்பாட்டின் அடிப்படைகளை அவர் அலசி ஆராய்ந்திருப்பது குறிப்பிடத்தக்கது. வெளிநாட்டு வாணிகத்தில் பங்கு கொள்ளும் பொருள்களை மட்டும் கணக்கில்

எடுத்தால், வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாடு நடைமுறைக்கு இசைந்ததாக இருக்கலாம். ஆனால், வெளிநாட்டு வாணிகத்தில் கலந்து கொள்ளும் பொருள்களின் (சேவைகளுட்பட) விலைவாசிகளும் கலந்துகொள்ளாதவற்றின் விலைவாசிகளும் இணையாகச் செல்லா விட்டால் சகலவிதமான பொருள்களையும் சேவைகளையும் சேர்த்துக் கணக்கிடும்போது, வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாடு எவ்வளவு தூரம் நடைமுறைக்கு ஒவ்வாதது என்பது விளங்கும் என்பது கீன்ஸின் கருத்து. மேலும், நாணயமாற்றுவீதம் மாறுவதால் விலைவாசிகள் பாதிக்கப்படுகின்றனவா? அல்லது விலைவாசிகள் மாறுவதால் நாணயமாற்றுவீதம் மாறுகிறதா? என்ற கேள்விகளுக்குப் பதிலிறுப்பது அவ்வளவு எளிதன்று.

1920—30 வரையுள்ள காலத்தில் ஐரோப்பியச் செலாவணிகள் ஒரு நிலைக்கு வரலாயின. அதேசமயத்தில், விலைவாசிகளில் காணப் படும் ஏற்றத்தாழ்வுகளால்தான் கொடுக்கல் நிலை பாதிக்கப்படும் என்ற நம்பிக்கை தளர்ந்து வந்தது. மாறாக, விலைவாசிகளைத் தவிர வேறு பல காரணங்களினாலும் கொடுக்கல் நிலை பாதிக்கப்படலாம் என்ற எண்ணம் வலுவடைந்து வந்தது. எனவே, வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாடு வழக்கிறந்து வரலாயிற்று. 1930-ல் கீன்ஸ் அக் கோட் பாட்டை அடியோடு கைவிட்டுவிட்டார் என்னலாம். பணம் பற்றிய சித்தாந்தத்தில் அக் கோட்பாட்டின் அடிப்படையான குறை பாட்டைச் சுட்டிக் காட்டலானார். உலக அரங்கில் நிலவிவரும் விலைவாசிகளும் உள்நாட்டு விலைவாசிகளும் இணையாகக் கைகோத்துச் செல்லும் என்ற எடுகோளை அடிப்படையாகக் கொண்டிருந்ததே அக் கோட்பாட்டின் முக்கியமான குறைபாடாகும் என்பது கீன்ஸின் கருத்து. அக் காலத்தில் வாங்குந்திறன் சமநிலைக் கோட்பாட்டைப் புள்ளிவிவரங்களின் வாயிலாக நிலைநாட்ட விரும்பியவர்கள் பெரும் பாலும் வெளிநாட்டு வாணிகத்தில் பங்கு கொண்ட பொருள்களின் விலைவாசிகளுக்கே அதிக மதிப்புக் கொடுத்து வந்தனர். அப்படிச் செய்யும்போது விலைவாசிகளுக்கும் கொடுக்கல் நிலைக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதாகவே தோன்றும். எனவேதான் கீன்ஸ், வாங்குந் திறன் சமநிலைக் கோட்பாட்டை நிராகரித்துக் கொடுக்கல்நிலைக் கோட்பாட்டை அங்கீகரிக்கலானார். வாணிகத் தொடர்பு கொண்ட நாடுகளையும் கொடுக்கல் கடுமையாகப் பாதிக்காமல் தங்கமும் பேரளவில் நாடுவிட்டுநாடு பெயர்ந்து போகாமல் பாதுகாக்கக்கூடிய நாணயமாற்றுவீதமே சாலச்சிறந்தது என்பது கீன்ஸின் கருத்து.

நாணயமாற்றுவீதம் பற்றிய புதிய கோட்பாடுகள் எதையும் கீன்ஸ் படைக்கவில்லை. இருப்பினும், அப் பொருளைப் பற்றியும் பல்வேறு கோட்பாடுகளும் நடைமுறையில் செயல்படுத்தப்பட்டு

வந்த விதத்தைப் பற்றியும் அவ்வப்போது வெளியிட்டு வந்த கருத்துகள் அத் துறையில் வகுக்கப்பட்ட கொள்கைகளை நிருமாணிப்பதற்குப் பெரிதும் உதவி வந்தன என்றால் மிகையாகாது. ஆரம்பத்தில் பொன்நாணயத் திட்டத்தை ஆதரித்து வந்த, அவர் நாளடைவில் உள்நாட்டுப் பொருளாதாரம் நிலைகுலையாத வகையில் கொடுக்கல் நிலையைச் சீர்ப்படுத்தக்கூடிய பன்னாட்டுப் பணமுறையை நாடியது குறிப்பிடத்தக்கது.

### சாதகமான வாணிகக் கொடுக்கல் நிலை

பொருளாதாரத்தின் தந்தை என அழைக்கப்படும் ஆதம்ஸ்மிதின் காலத்திலிருந்து பல்வேறு தலைமுறைகளைச் சேர்ந்த தொன்மைப் பொருளாதாரிகள் பலர் வாணிகக் (Mercantilist) கொள்கைகளின் அடிப்படைத் தவறுகளை எடுத்துரைத்து வந்தனர். கீன்ஸ், தொன்மைப் பொருளாதாரிகளின் கோட்பாடுகளிலுள்ள குறைபாடுகளைச் சுட்டிக் காட்டியவர். எனவே, அவருக்கு வாணிகக் கருத்துகளின்மீது இயல்பானதோர் ஈடுபாடும் அனுதாபமும் உண்டாயிற்று. அவரை ஒரு வாணிக வல்லுநர் என்று கூறுவது பொருந்தாது எனினும், அவரது கருத்துகளில்வாணிகக் கருத்துகள் பல நிழலிடுவதைக் காணலாம்.

வாணிகக் கொடுக்கல் நிலையைத் தங்களுக்குச் சாதகமாகத் திரும்புவது வாணிகக் கொள்கைகளைக் கடைப்பிடித்து வந்த நாடுகளின் தலையாய குறிக்கோள்களுள் ஒன்றாகும். ஏற்றுமதி செய்யப்படும் பொருள்கள்,சேவைகள் ஆகியவற்றின் மொத்த மதிப்பு அத்தகைய இறக்குமதிகளைக் காட்டிலும் எப்போதும் அதிகமாக இருக்கவேண்டும் என்பதே அந் நாடுகளின் நோக்கமாகும். இத்தகைய மிஞ்சிய ஏற்றுமதிக்கு ஈடாகத் தங்கம், வெள்ளி, போன்ற விலை உயர்ந்த உலோகங்களைக் கைப்பற்றலாம் என்று அவர்கள் எண்ணி வந்தார்கள். தங்கமும் வெள்ளியும் அக் காலத்தில் செல்வத்தின் சின்னங்களாக மதிக்கப்பட்டன. எனவே, செல்வந்தர்களும் விலை உயர்ந்த உலோகங்களைக் கைப்பற்றுவதிலேயே கண்ணுங் கருத்துமாக இருந்து வந்தனர். அவ்வுலோகங்கள் எப்போதும் உள்நாட்டிலேயே ஏராளமாகக் கிடைப்பதில்லை. எனவே, அவற்றைப் பேரளவில் ஈட்டும்வகையில் வாணிகக் குழுக்களும் நாடுகளும் தங்கள் அயல் நாட்டு வாணிகத்தைக் கொண்டு செலுத்தலாயின.

தங்கமும் வெள்ளியுமே செல்வத்தின் சிறந்த வடிவங்களாகும் என்ற கருத்தைத் தொன்மைப் பொருளாதாரிகள் வன்மையாகக் கண்டித்தார்கள். தங்கத்தையும் வெள்ளியையும் ஏனைய விலையுயர்ந்த உலோகங்களையும் கைப்பற்றிக் குவித்து வைக்கும் பொருட்டு பொருள்களையும் சேவைகளையும் அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி

செய்வது அறிவின்பாற்பட்டதன்று. உற்பத்திசெய்யப்பட்ட பொருள்களையும் சேவைகளையும் மிகுதியாகக்கொண்ட நாடே செல்வமிக்க நாடு. எனவே, ஆக்கமுள்ள பொருள்களைக் கைவிட்டுவிட்டு ஆக்கமற்ற உலோகப்பொருள்களைக் கைப்பற்றுவது விவேகமாகாது என்பது ஆதம்ஸ்மிதின் பரம்பரையில் வந்தவர்களது கருத்து. ஏனெனில், சாதகமான வாணிகக் கொடுக்கல் நிலை என்பது தற்காலிகமானது. தங்கமும் வெள்ளியும் நாட்டினுள் புகுவதால் அவற்றால் செய்யப்படும் நாணயங்களின் அளவு பெருகும். பணத்தினளவு அதிகரிப்பதால் உள்நாட்டில் விலைவாசிகள் உயரும். மாறாக, தங்கத்தைப் பறிகொடுத்த நாடுகளில் விலைவாசிகள் இறங்கும். அதன் பயனாக, உலோகங்களைக் கைவசப்படுத்திய நாட்டின் ஏற்றுமதி குன்றும்; இறக்குமதி அதிகரிக்கும். எனவே கொடுக்கல் நிலையிலுள்ள சாதகமானநிலை மறைந்து பாதகமாகவும் திரும்ப முடியும். குறிப்பாக, பொன்நாணயத் திட்டம் நடைமுறையிலிருந்தபோது இத்தகைய விளைவுகளே எதிர்பார்க்கப்பட்டன.

ஆனால், கீன்ஸ், தொன்மைப்பொருளாதாரிகளின் வாதத்திலுள்ள குறைபாடுகளைக் கோடிட்டுக் காட்டிச் சாதகமான வாணிகக் கொடுக்கல் நிலையை நாடுவதால் கேடொன்றுமில்லை என்று வலியுறுத்தலானார். வேலையினளவை எப்படி உன்னதமான நிலையில் வைத்திருப்பது என்ற கோணத்தில் வெளிநாட்டு வாணிகப் பிரச்சினைகளை அணுகியவர் கீன்ஸ். அதன்படி நிகர ஏற்றுமதி, முதலீட்டுக்கு ஒப்பானதோர் பொருளாதார நடவடிக்கையாகக் கருதப்பட்டது. நிறைவேலை நிலையை எய்துவதற்கு முதலீட்டைப் பெருக்குவது அவசியம் என்பது பொதுக்கோட்பாட்டில் கீன்ஸ் வெளியிட்ட கருத்து. ஆனால், முதலை உள்நாட்டிலும் ஈடுபடுத்தலாம். கொடுக்கல்நிலை எவ்வளவு சாதகமாக இருக்கிறது என்பதைப் பொறுத்தே நடப்பில் எவ்வளவு மூலதனம் நாட்டைவிட்டு வெளியேறுகிறது என்பது தெரிய வரும். உள்நாட்டு முதலீட்டால் எப்படி வேலையினளவு பெருகுமோ அதேபோல் மிஞ்சிய ஏற்றுமதியும் வேலைக்கான வாய்ப்புகளைப் பெருக்க உதவும். இவ்விரண்டு விதமான முதலீடுகளின் பெருக்கியும் ஒரேவிதமாகவே வேலை செய்யும் என்று எண்ண இடமுண்டு.

ஒரு நாட்டின் மொத்த உற்பத்தியில் நுகர்வு நீங்கலாக எஞ்சியதை முதலீடாகக் கொள்ளலாம். வேலைக்கான வாய்ப்புகளைப் பெருக்கும் வகையில் இம் முதல் உள்நாட்டில் ஈடுபடுத்தப்பட்டாலும் சரிதான்; மிஞ்சிய ஏற்றுமதியாக நாட்டைவிட்டு வெளியேறினாலும் சரிதான். அப்படி ஏற்றுமதியாகும் பொருள் எவ் வடிவில் இருப்பினும் பாதகமில்லை. நடப்பு நுகர்வுக்காகவும் அவை பயன்

படுத்தப்படலாம்; அல்லது முதற்கருவிப் பொருள் வடிவாகவும் வெளியேறலாம். அவ்வாறு அயல்நாட்டில் முதலினச் சொத்துகளாக வடிவெடுக்கும் ஏற்றுமதிப் பொருள்கள் அந் நாட்டின் பொரு ளுற்பத்தியைப் பெருக்க உதவும் என்னலாம். ஆனால், ஏற்றுமதி செய்யும் நாட்டைப் பொறுத்த அளவில் ஏற்றுமதி செய்யப்படும் பொருள் எவ் வடிவில் இருப்பினும் (நுகர்வும் பொருள் அல்லது முதற் கருவிப்பொருள்) அது முதலீடாகவே கருதப்படும். ஆனால், உலக அரங்கில் அப் பொருள்கள் பயன்படுத்தப்படும் விதத்தைப் பொறுத்து நுகர்வாகவோ, முதலீடாகவோ கொள்ளப்படும். எனவேதான் நுகர்வு நாட்டம் மாறாத நிலையில் முதலீட்டினளவைப் பொறுத்து வேலையினளவு மாறுபடும் என்ற கருத்தைக் கீன்ஸ் தமது பொதுக் கோட்பாட்டில் வெளியிட்டுள்ளார். அதன்படி, முதலீடு அதிகரிப் பதற்கேற்ப வேலையினளவும் அதிகரிக்கும் என்றாகும். சாதகமான கொடுக்கல்நிலை, முதலீட்டைப் போலவே வருவாயையும் வேலை யினளவையும் அதிகரிக்க உதவும் என்று எதிர்பார்க்கலாம். இதிலிருந்து முதலீடு எவ்வளவு அதிகரிக்கப்படுகிறதோ அதன் ஒரு பெருக்குத் தொகையாக வருவாய் அதிகரிப்பதைப்போல சாதகமான கொடுக்கல் நிலையாலும் வருவாயும், வேலையினளவும் பன்மடங்காகப் பெருகும் என்பது புலனாகும். எனவே, கொடுக்கல் நிலையைச் சாதகமாக மாற்றக்கூடிய வகையில் அயல்நாட்டு வாணிகக் கொள்கையை மாற்றியமைப்பது முதலாளித்துவப் பொருளாதார நலன்களுக்கு உகந்ததாகும் என்பது கீன்ஸின் கருத்து. இவ் வகையில் முதலாளித்துவம் முளைத்து வளர்ந்த இளமைப் பருவத்தில் வாணிகக் கொடுக்கல்நிலை பற்றி வாணிகர்கள் கொண்டிருந்த கண்ணோட்டத் துக்கும் முதிர்ச்சியுற்ற முதலாளித்துவத்தைப் பலப்படுத்தும் வகையில் கீன்ஸ் வகுத்த கோட்பாட்டுக்கும் ஒருவகை ஒற்றுமை இருப்பது விந்தைதான்.

வேறு வகையிலும் சாதகமான வாணிகக் கொடுக்கல்நிலையால் உள்நாட்டில் வேலையின் அளவு அதிகரிக்க வழியுண்டு. அதன்பயனாக, நாட்டினுள் புகும் தங்கம், வெள்ளி போன்ற உலோகங்களின் அளவுக் கேற்பப் பணத்தினளவு பெருகலாம்; வட்டிவீதம் குறையலாம்; எனவே, உள்நாட்டில் முதலீடு தூண்டப்படலாம். முதலாளித் துவத்தின் இளமைப் பருவத்தில் இறக்குமதியான விலையுயர்ந்த உலோகங்கள் விலைவாசிகளின்மூலம் வட்டிவீதத்தைப் பெரிதும் பாதித்து வந்ததால், முதலீட்டைத் தூண்டுவதற்குரிய சூழ்நிலை உருவாகியது. அதன் விளைவாக இக் காலத்தில் நிருவகிக்கப்பட்ட செலாவணியினால் கிடைக்கக்கூடிய நன்மைகள் பல அப் பொருளா தாரங்களுக்குக் கிட்டின. முதலாளித்துவத்தின் இளமைப் பருவத்தில்

மிரட்டி வந்த பொருளாதார மந்தங்களை மேற்கொள்ளுவதில் வாணிகக் கொள்கைகள் பெரிதும் உதவி வந்தன என்பது தெளிவு.

வாணிகக் கருத்துகளை ஒத்திருப்பதால் கீன்ஸ் வாணிகத் துக்குத் திரும்ப விரும்பினர் என்று கொள்வது தவறு. ஆனல், தொன்மைப் பொருளாதாரிகள் கருதி வந்ததுபோல் வாணிகக் கொள்கைகள் எதுவும் வெறுத்து ஒதுக்கத் தக்கவை அல்ல; மாருக, பொருளாதாரத்தின் அன்றைய நடைமுறைத் தேவைகளுக்கேற்ப வகுக்கப்பட்டவை என்பது கீன்ஸின் கருத்து. சாதமான வாணிகக் கொடுக்கல் நிலையை உருவாக்கும் பொருட்டு வாணிகர்கள் ஏற்றுமதியைத் தூண்டுவது, இறக்குமதியைக் கட்டுப்படுத்துவது போன்ற கொள்கைகளைக் கடைப்பிடித்து வந்தனர். அக் காலத்தில் வாணிகக் கட்டுப்பாடே கொடுக்கல் நிலையைத் தங்களுக்குச் சாதக மாகத் திருப்புவதற்கான சிறந்த கருவியாக இருந்து வந்தது என்று எண்ண இடமுண்டு. ஆனல், இங்கிலாந்தைப் பொறுத்தவரை பத்தொன்பதாம் நூற்றுண்டில் தலையிடா வாணிகமே தலைசிறந்த கொள்கையாக அமைந்தது. ஆனல், தங்குதடையற்ற வாணிகக் கொள்கையை ஆதரித்த காரணத்தால் அவர்கள், வாணிகர்களைக் காட்டிலும் நாட்டுப்பற்றில் குறைந்தவர்கள் என்று கூறிவிட முடியாது. இங்கிலாந்தில் முதலாளித்துவம் மிடுக்குடன் வளர்ந்து வந்த காலத்தில் தலையிடா வாணிகமே நாட்டு நலனுக்கு மிகவும் உகந்ததாக விளங்கியது என்பதில் சந்தேகமில்லை. எனினும், பன்னாட்டு உழைப்பு வேலைப் பிரிப்பு (international division of labour) போன்ற பயன்தரத்தக்க கொள்கைகளின் பயன்களைத்தீர ஆராய்ந்து செயல்படாதது வாணிகர்களிடம் காணப்பட்ட பெருங்குறையாகும். பாதுகாப்புக் கொள்கைகளின்மூலம் அண்டை அயலாரை வறியவராக்கி ஒரு சில நாடுகள் பயன்பெற முடியும். ஆனல், அதேசமயத்தில் தலையிடா வாணிகத்தால் உலகநாடு களனைத்தும் பயன்பெறும் என்றும் சொல்லிவிட முடியாது. உலக வரலாற்றைப் புரட்டிப் பார்த்தால் பொருளாதார வளர்ச்சியின் குறிப்பாக, தொழில் வளர்ச்சியின் முன்னணியிலுள்ள நாடுகளே பெரும்பாலும் தலையிடா வாணிகக்கொள்கையால் பயன்பெற்று வந்திருப்பது தெரியவரும். எனவே, எக் கொள்கை நாட்டின் நலனுக்கு உகந்தது என்பது அந் நாட்டின் பொருளாதாரச் சூழ்நிலையைப் பொறுத்தது. ஒரு நாட்டின் சாதகபாதகமான சந்தர்ப்பங்களையும் சூழ்நிலைகளையும் கணக்கிலெடுக்காமல் தலையிடா வாணிகம் தலைசிறந்ததென்றே பாதுகாப்புக்கொள்கை பயன்தருவ தென்றே முடிவு கட்டிவிட இயலாது. எனவே, தனிப்பட்ட நாடு களின் பொருளாதார நலன்களையும் பலிகொடாமல் பன்னுட்டு உழைப்பு வேலைப் பிரிப்பால் விளையக்கூடிய நன்மைகளையும்

புறக்கணிக்காமல் இருக்கக்கூடியதோர் வாணிகக் கொள்கையை வகுப்பதில் கீன்ஸ் தமது சிந்தனையைச் செலுத்தியிருப்பது போற்றுதற் குரியது.

## தலையிடா வாணிகமும் காப்புக்கொள்கையும்

பரம்பரையாக வழக்கிலிருந்து வந்த தலையிடா வாணிகக் கொள்கை வேலையின்மையைப் புறக்கணிப்பதாக உள்ளது. வேலையினளவு பயனுள்ள தேவையைப் பொறுத்தது; பயனுள்ள தேவை நிறைவேலையை நிலைநாட்டுவதற்குப் போதியதாக இல்லாமலிருக்கலாம்; அப்படியானால், காப்புக்கொள்கையின்மூலம் ஒரு குறிப்பிட்ட நாடு உள்நாட்டில் வேலையினளவைப் பெருக்குவதில் வெற்றி பெறலாம். ஆனால், இம்முறையில் ஒரு நாடு காணும் வெற்றி ஏனைய நாடுகளின் தோல்வியாகவும் முடியலாம். நிறைவேலை நிலை நிலவும்போதுதான் பன்னாட்டு உழைப்பு வேலைப் பிரிப்பின் முழுப் பயனும் கைகூடும் என்னலாம். ஒவ்வொரு நாடும் எந்தெந்தப் பொருள்களை மலிவாக உற்பத்தி செய்யக்கூடிய வளங்களையும் வாய்ப்புகளையும், வசதிகளையும் கொண்டிருக்கின்றதோ அப் பொருள்களை உற்பத்தி செய்வதன் அடிப்படையில் அயல்நாடுகளுடன் வாணிகத் தொடர்பு கொள்ளுமானால் அவ் வாணிகத்தால் ஒவ்வொரு நாடும் குறைந்த விலையில் தங்களுக்கு வேண்டிய பொருள்களை வாங்கித் தங்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த முடியும் என்பதே அக் கொள்கையின் சாரம். ஆனால், அக் கொள்கை நிறைவேலையை எடுகோளாகக் கொண்டு வகுக்கப்பட்டது. அவ்வாறு உலகெங்கும் நிறைவேலை நிலவி வரும்போது ஒரு குறிப்பிட்ட நாடு காப்புக் கொள்கையைக் கையாளுவதால் அந் நாட்டின் பொருளாதார நலன்கள் கெடுவதுடன் ஏனைய நாடுகளும் நஷ்டமடைய நேரிடும். எனவே, நிறைவேலை நிலை உலகெங்கும் பரவி நிற்கும்போது ஒவ்வொரு நாடும் பன்னாட்டு உழைப்புவேலைப் பிரிப்புக்கு உட்பட்டுத் தனது பொருளாதாரத்தை இயக்கி வருமானால், காப்புக்கொள்கையால் எந்த நாடும் தனிப்பட்ட முறையிலோ கூட்டாகவோ நலம் பெற முடியாது என்னலாம். இந் நிலையில் காப்புக்கொள்கையைக் கையாள முற்படும் நாடுகளில் ஆக்கச் செலவுகள் அதிகரிக்கும். மலிவாக ஏனைய நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யக்கூடிய பொருள்களை ஒவ்வொரு நாடும் அதிகச் செலவுசெய்து உற்பத்தி செய்ய வேண்டியதாகும். எனவே, மொத்தத்தில் உலகப் பொருளாதாரம் திறங்குன்றி இயங்கிவரும் என்று எண்ண இடமுண்டு. அவ்வாறின்றி வேலையின்மை பரவியிருக்கும்போது காப்புக் கொள்கையைக் கடைப்பிடிக்காமற் போனால் உள்நாட்டுப் பொருளாதாரம் சுணக்கமுற்று உற்பத்திச் சாதனங்கள் பல

(உழைப்பாளர்) வேலையின்றி வாட நேரிடும். இவ்வாறு, பொருளாதாரம் மந்தப்பட்டு வேலையில்லாத் திண்டாட்டம் தாண்டவமாடும் போது காப்புக்கொள்கையைக் கையாண்டு வேலையில்லாக் கொடுமையை மட்டுப்படுத்துவதே விவேகமானது என்பதைக் கீன்ஸ் தெளிவாக உணர்ந்தார். இத்தகைய நெருக்கடிகளில் ஒவ்வொரு நாடும் காப்புக்கொள்கையால் கிடைக்கக்கூடிய நன்மைகளையும் அக் கொள்கையால் ஏற்படக்கூடிய அதிகப்படியான ஆக்கச் செலவுகளையும் எடைபோட்டுப் பார்த்து, எந்த அளவுக்குக் காப்புக் கொள்கையைக் கடைப்பிடிக்கலாம் என்று முடிவு செய்வது உண்டு. முரண்பட்ட விளைவுகளைப் பயக்கக்கூடிய காப்புக்கொள்கையை எவ் வகையில் கையாண்டால் நாட்டுவருவாயை உன்னதமான நிலையில் வைத்திருக்க முடியும் என்று கணக்கிட்டு, அதற்கேற்பக் காப்புக் கொள்கையை வகுப்பதே விவேகமானது என்பது கீன்ஸின் கருத்து. இப்படிப் பார்க்கும்போது தொன்மைப் பொருளாதாரிகளும் கீன்ஸும் கொண்டிருந்த வேறுபட்ட எடுகோள்களே அவர்கள் ஒன்றுக்கொன்று முரணான வாணிகக் கொள்கைகளை வகுப்பதற்கு மூலகாரணமாக அமைந்திருப்பது தெரியவரும். தொன்மைப் பொருளாதாரிகள் நிறைவேலையை எடுகோளாகக் கொண்டிருந்தனர்; மாறாக, கீன்ஸ் வேலையின்மையை எடுகோளாகக் கொண்டிருந்தார். எடுகோள்களிலுள்ள இந்த வேறுபாட்டின் பயனாகத் தொன்மைப்பொருளாதாரிகள் தலையிடா வாணிகக் கொள்கையை ஆதரித்து வந்தனர் மாறாக, கீன்ஸ் காப்புக் கொள்கையை ஆதரித்தார். எனினும், உலகப் பொருளாதாரங் களனைத்தையும் மந்த இருள் சூழ்ந்து வரும்போது, ஒரு நாடு மட்டும் காப்புக்கொள்கையைக் கடைப்பிடிக்க முயன்றால் அண்டை அயலாரை வறியவராக்குவதன்மூலமாகவே உள்நாட்டுப் பொருளாதாரத்துக்கு ஒளியூட்டி மந்தஇருளைக் கலைக்க முடியும் என்பது ஜோன் ராபின்சன் (Joan Robinson) போன்ற பொருளறிஞர்களது கருத்து.

எப்போதுமே கீன்ஸ் காப்புக்கொள்கைக்கு ஆதரவளித்து வந்தார் என்று கொள்ளலாகாது. உண்மையில் 1920-ம் ஆண்டுக்கு அண்மையிலுள்ள காலத்தில் காப்புக்கொள்கையால் வேலை இன்மையைப் போக்க இயலாது என்று ஆணித்தரமாக அறைந்து வந்தார். அக் காலத்தில், சுங்கச்சுவரால் பாதுகாக்கப்படும் தொழில்களில் வேலையினளவு அதிகரிக்கலாம் என்பதைக் கீன்ஸ் ஒப்புக் கொண்டார். எனினும், காப்புக்கொள்கையால் ஆக்கச்செலவுகள் அதிகரிக்குமாதலால், ஏற்றுமதி குன்றி அதன் விளைவாக ஏற்றுமதிப்பொருள்களின் உற்பத்தியில் ஈடுபட்டுள்ள தொழில்களில் வேலையின்மை அதிகரிக்கலாம். ஆதலின், மொத்தத்தில் காப்புக்கொள்கையின்

பயனுக வேலையினளவு அதிகரிக்கும் என்று சொல்லுவதற்கில்லை. வேலையினளவும் நாட்டுவருவாயும் நிச்சயமாக அதிகரிக்கும் என்று நிரூபிக்கும் பொறுப்பைக் கீன்ஸ் காப்புக்கொள்கைக்கு ஆதரவளித்தவர்களின் கையில் ஒப்படைத்தார் என்பது குறிப்பிடத்தக்கது. பூகம்பத்தால் செய்ய முடியாத எந்த உபகாரத்தைச் சுங்கச்சுவரால் செய்துவிட முடியும் என்று எள்ளி நகையாடும் வகையில் கீன்ஸ் தாம் 1923-ல் 'தலையிடாக்கொள்கையும் வேலையின்மையும்' (Free Trade and Unemployment) என்ற நூலில் குறிப்பிட்டிருப்பது மனதிலிறுத்த வேண்டியதோர் கூற்றாகும். இங்கே கீன்ஸ் தொன்மைப் பொருளாதாரியாகக் காட்சியளிப்பது கண்கூடு. தலையிடாக் கொள்கையில் இவ்வளவு தூரம் ஆணித்தரமான நம்பிக்கை கொண்டிருந்த கீன்ஸ், ஒரு சில ஆண்டுகளில் மனம் மாறிக் காப்புக்கொள்கையை ஆதரிக்கத் தொடங்கியது வியக்கத்தக்கதுதான்.

பணம் பற்றிய சித்தாந்தத்தில்தான் காப்புக்கொள்கையின் அவசியத்தைக் கீன்ஸ் முதன்முதலாக அங்கீகரித்ததாகத் தெரிகிறது. இங்கேகூட சுங்கச்சுவருக்கு அவர் அபரிமிதமான ஆதரவு எதுவும் அளிக்க முன்வரவில்லை. மிகவும் தயக்கத்துடனேயே சுங்கப் பாதுகாப்பை அவர் வரவேற்றதாகத் தெரிகிறது.

1930-ல் பிரிட்டிஷ் பொருளாதாரம் மந்தப் படுகுழியில் சறுக்கி விழுந்து கொண்டிருந்தபோது ஏற்பட்ட பணவாட்டத்தைப் போக்குவதற்கு மூன்றே வழிகள் இருப்பதாகக் கீன்ஸ் குறிப்பிட்டார். முதலாவது, அவர் ஸ்டெர்லிங் நாணயத்தைத் தரமிழக்கச் செய்ய வேண்டுமென்று விரும்பினர்; இரண்டாவது, ஆக்கச்சக்தியை அபிவிருத்தி செய்யும் வகையில் பிரிட்டிஷ் தொழில்களைச் சீரமைக்க விரும்பினர்; மூன்ருவது, சுங்கச் சுவரை ஓரளவு எழுப்பி உள்நாட்டுப் பொருளாதார வளர்ச்சிக்குப் பாதுகாப்பளிப்பதுடன் ஏற்றுமதியைத் தூண்டும் வகையில் கொடைகளும் மானியங்களும் அளிக்க விரும்பினர். ஆனல், அரசியல் ரீதியில் முதல் மார்க்கம் எத்துணைக் கரடுமுரடானது என்பதைக் கீன்ஸ் நன்குணர்ந்தார். இரண்டாவது வழி மிகவும் சுற்று வழி; அதில் பயணமானல் சுபிட்சத்தை அடைய நீண்ட காலம் பிடிக்கும் என்று எண்ணினர்; எனவே, அன்றுள்ள சூழ்நிலையில் சுங்கச்சுவரே சுபிட்சத்துக்குக் குறுக்கு வழிதானென்றுலும் தயங்கித் தயங்கிப் பதுங்கிப் பதுங்கியே அப் பாதையில் செல்ல எண்ணினர். வானளாவும் சுங்கச்சுவரை எழுப்புவதில் அவர் அதிக ஆர்வம் காட்டவில்லை.

மூன்று வகையில் சுங்கச்சுவர்மூலம் பிரிட்டிஷ் பொருளாதாரத்தைச் சீரமைக்கலாம் எனக் கீன்ஸ் எதிர்பார்த்தார். முதலாவது,

உள்நாட்டுப் பொருளாதார வளர்ச்சியைத் தூண்டுவதுடன் சுங்கச் சுவர் கொடுக்கல்நிலை கெடாமல் பாதுகாக்கவும் உதவும் என்று கீன்ஸ் நம்பினர். வாணிகக் கட்டுப்பாடு இல்லாவிட்டால் தங்க இறக்குமதி அதிகரித்துப் பொருளாதாரச் சீரமைப்பை உருப்படாமல் செய்துவிடும் என்று கீன்ஸ் அஞ்சினர். இரண்டாவது, சுங்க வரிகள் மூலம் ஈட்டும் வருவாயைக் கொண்டு அரசுகள் சீரமைப்புத் திட்டங்களைச் செயற்படுத்துவதற்கு ஆகும் செலவுகளை மேற்கொள்ள முடியும். மூன்ருவதாக, ஏற்கனவே இறக்குமதிப் பொருள்கள் சிலவற்றை சுங்கச்சுவரின் பாதுகாப்பின்கீழ் உள்நாட்டிலேயே உற்பத்திசெய்ய முற்படுவார்களாதலால் அதன் பயனுக வேலையினளவு அதிகரிக்கும் என்று கீன்ஸ் எதிர்பார்த்தார். பாதுகாக்கப்படும் தொழில்களில் அதிகரித்து வரும் வேலையினளவைக் காட்டிலும் ஏற்றுமதிக்கான பொருளுற்பத்தியில் ஈடுபட்டுள்ள தொழில்களில் வேலையிழப்போரின் எண்ணிக்கை அதிகரிக்குமோ என்ற பயம் அடியோடு அகலவில்லை என்ருலும், மொத்தத்தில் வேலையினளவு குறையும் என்று எண்ணுவதற்கில்லை என்று சொல்லி அவர் மனதைத் தேற்றிக் கொண்டார். மொத்தத்தில் இறக்குமதி குன்றி வந்தால்தான் ஏற்றுமதியும் அதற்கேற்பப் பாதிக்கப்படலாமோ என்ற பயத்துக்கு இடமுண்டாகும். ஆனல், தமது திட்டப்படி மொத்த இறக்குமதி குறைய வேண்டும் என்ற கட்டாயமில்லை; பொருளாதாரத்தை மந்தத்திலிருந்து விடுவித்துச் சீரமைப்பதால் ஏற்படும் விறுவிறுப்பின் காரணமாக இறக்குமதி அதிகரிக்காமல் தடுப்பதே சுமாரான சுங்கச்சுவரின் தலையாய நோக்கமாகும் என்பது கீன்ஸது கருத்து. குறிப்பாக, சுங்கச்சுவரால் பொறிசெய் பொருள்களின் இறக்குமதி குன்றும் என்பதில் சந்தேகமில்லை; ஆனல், உணவு, மூலப்பொருள்கள் ஆகியவற்றின் இறக்குமதி குறைய வேண்டிய அவசியமில்லை; இப் பொருள்கள் பெரும்பாலும் வரியின்றி இறக்குமதி செய்யப்படும் என்று எதிர்பார்க்கலாம்; ஒருவேளை சிறிதளவு வரிச்சுமையை அவை தாங்க வேண்டியநிலை ஏற்படலாம்; அதனல் மொத்த இறக்குமதியோ ஏற்றுமதியோ குறையும் என்று எண்ண இடமில்லை என்பது கீன்ஸது கருத்து.

பிரிட்டன் 1931 செப்டம்பரில் பொன் (நாணயத்) திட்டத்தைக் கைவிட்டதும் கீன்ஸ் சுங்கச்சுவர் பற்றிய தமது பிரேரணைகளைத்திரும்பப் பெற்றுக் கொண்டார். எனினும், அதற்குப் பின்னர் இரண்டுமுறை காப்புக்கொள்கைக்கான மாற்றுத் திட்டங்களை முன்வைக்கலானர். 1933-ல் வெளியிட்ட கட்டுரையொன்றில் தேசீய சுயதேவைப் பூர்த்தியின் அவசியத்தை வலியுறுத்தினர். பன்னாட்டு உழைப்பு வேலைப்பிரிப்பைக் கண்டிப்பாகக் கடைப்பிடிப்பதன்மூலம் ஒவ்வொரு நாடும் ஏனையநாடுகளின்மீது மிகவும் சார்ந்திருக்க

வேண்டிய அவசியமேற்படுகிறது. எனவே, ஒரு நாட்டின் பொருளா தாரம் நோய்வாய்ப்படும்போது அந் நோய் விரைவில் அண்டை அயலாரையும் தொத்திப் பரவுவதை எளிதில் தவிர்க்க முடிவதில்லை. இத்தகைய அபாயங்களால் உலக அமைதி பாதிக்கப்படலாம் என்று அவர் அஞ்சினுர். மேலும், பன்னுட்டு வேலைப் பிரிப்பின் பலன்களைப் பலரும் மிகைப்படுத்தியுள்ளனர். உண்மையில் அதன் பயன் பத்தொன்பதாம் நூற்றுண்டில் இருந்ததைப்போல் அவ்வளவு கணிசமாகக் காணப்படவில்லை என்று பெரும் பொருளாதார மந்தத் தின்போது கண்ட அனுபவத்தைக் கொண்டு ஒப்புக் கொள்ளலானுர்.

மந்தம் போன்ற தொத்துநோய்களிலிருந்து உள்நாட்டுப் பொருளாதாரங்களைப் பாதுகாப்பது மிகவும் அவசியமாகும் என்பதை கீன்ஸ் நன்குணர்ந்தவர். பொருளாதாரத்தைப் பீடிக்கும் நோய்களைக் குணமாக்குவதற்கெனத் தேர்ந்தெடுக்கப்படும் பல்வேறு மூலிகை களையும் மருந்துவகைகளையும் பரீட்சை செய்து பார்ப்பதற்கும் அதனுல் வாய்ப்புண்டாகும் என்று அவர் நம்பினுர். முதலாளித்துவம் ஏன் இப்படி மந்தப்படுகுழியை நோக்கிப் போய்ச் சேர வேண்டும் என்பது அவருக்குப் புரியவில்லை. பெரும் பொருளாதார மந்தத்தின் போது முதலாளித்துவம் பட்ட அவதியைக் கண்டு அது தோற்று விட்டதாக அவர் ஒப்புக் கொள்ளலானுர். முதலாளித்துவப் பொருளா தாரம் அறிவாற்றல் படைத்ததாகவுமில்லை; அழகாகவுமில்லை; நியாயமானதாகவுமில்லை; பழுதற்றதாகவுமில்லை; எதிர்பார்க்கப் படும் பலன்களை நல்குவதாகவுமில்லை என்று தீர்ப்புக்கூற முற்பட்டது அவர் அடைந்த ஏமாற்றத்துக்கு ஓர் எடுத்துக்காட்டாக அமைந் துள்ளது. அதைப்போலவே, தராசிலே நிறுக்கப்பட்டுக் குறைவுள்ள தாகக் காணப்பட்டது; எனவே, அளவுக்கு மீறிய முயற்சிகளினுலன்றி முதலாளித்துவத்தை அழிவிலிருந்து காக்க இயலாது என்று அபிப் பிராயம் தெரிவித்தார். அத்தகைய முயற்சிகளுக்கு தேசிய சுயதேவைப் பூர்த்தி இன்றியமையாதது என்பதைக் கீன்ஸ் நன்குணர்ந்தார்.

பொதுக்கோட்பாட்டில் வாணிகத்தைப்பற்றி எழுதிய குறிப்பு களில் பெரும் பொருளாதார மந்தத்தால் பீடிக்கப்பட்ட மேற்கத்திய முதலாளித்துவப் பொருளாதாரங்களின் சீரமைப்பிற்கு வாணிக கருத்துகள் எத்துணைப் பொருத்தமானது என்பதைச் சுட்டிக் காட்டி யுள்ளார். எனினும், 1936-ல் இருந்து வந்த உலகச் சூழ்நிலையில் அதை அவர் உலகெங்கும் பறைசாற்ற விரும்ப வில்லை. குறிப்பிட்ட நாடுகள் மட்டுமே வாணிகத்தால் பயனடைய முடியும்; உலகம் முழுவதும் அதனுல் பயனடையும் என்று எதிர்பார்ப்பது வீண் ஆசை என்பதை அவர் ஒத்துக் கொள்ளத் தயங்கவில்லை.

சாதகமான வாணிகக் கொடுக்கல் நிலையில் கண்ணுங் கருத்துமாக இருந்தவர்கள் வாணிகர்கள். ஆயின், மந்தத்திலிருந்து விடுபடும் முயற்சிகளுக்கு அக் கொள்கை உறுதுணையாக இருந்து உதவக் கூடியது. பொருளாதாரம் உயிர்ப்பிக்கப்பட வேண்டுமாயின் முதலீட்டுக்கான தூண்டுதல்களைப் பலப்படுத்த வேண்டும். உள் நாட்டில் ஈடுபடுத்தப்படுவதாயினும் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுவதாயினும் முதலீடு தூண்டப்படுவது அவசியம். காலப் போக்கில் வட்டிவீதம் குறைந்து வந்தாலன்றி உள்நாட்டில் முதலீட்டைத் தூண்டுவது கடினம். கொடுக்கல்நிலை சாதகமாக இருந்தாலன்றி அயல்நாட்டு முதலீட்டைப் பெருக்க இயலாது. உள்நாட்டு வட்டிவீதம் ஓரளவு பணத்தினளவினால் நிருணயிக்கப்படும். ஆனால், கொடுக்கல் நிலையிலுள்ள சாதகபாதகங்களைப் பொறுத்துப் பணத்தினளவு அதிகரிக்கவோ சுருங்கவோ செய்யலாம். எனவே, இருமுனைகளிலும் சாதகமான கொடுக்கல் நிலையால் பொருளாதாரச் சீரமைப்புத் துரிதப்படுத்தப்படும். இது கீன்ஸது நம்பிக்கை. அதாவது, கொடுக்கல்நிலை சாதகமாக இருந்தால் உள்நாட்டில் வட்டி வீதத்தைக் குறைத்து முதலீட்டைத் தூண்ட முடியும்; அயல்நாட்டு முதலீட்டையும் பெருக்க முடியும் என்பது கீன்ஸது கருத்து.

1946 ஜுன் மாதம் பொருளாதாரப் பத்திரிகையில் (Economic Journal) வெளியிட்ட 'அமெரிக்காவின் அயல்நாட்டுக் கொடுக்கல் நிலை' (Balance of Payments of United States) என்ற கட்டுரையில் தொன்மைப் பொருளாதாரிகள் வகுத்த மருந்துவகைகள் வெற்றி கரமாக வேலை செய்யுமென்று நம்ப வழியில்லை; அவற்றைச் சார்ந்தி ருக்க வேண்டிய அவசியமில்லை என்று கீன்ஸ் குறிப்பிட்டிருப்பது கவனத்திற்குரியது. துரிதமாக வேலை செய்யக்கூடிய மருந்துகள் நமக்குத் தேவை. அதிகமாக வருத்தித் தொல்லை கொடுக்கக்கூடிய மருந்து வகைகளையும் தவிர்ப்பது நல்லது என்றார் கீன்ஸ். இக் கண் ணோட்டத்தின் பேரில்தான் இணக்கமுள்ள நாணயமாற்றுவீதம் இறக்குமதிக் கட்டுப்பாடு போன்ற கொள்கைகளைப் பரிந்துரை செய்ய லானார். தொன்மைப் பொருளாதாரிகள் குறித்த மருந்துகள் நாளடைவில் வேலை செய்யுமானால் உடனடியாகப் பயன் தரக்கூடிய மருந்து மூலிகைகளையும் குறுக்கு வழிகளையும் அதிகமாக நாடவேண்டி தில்லை என்பது கீன்ஸ் அக் கட்டுரையில் வெளியிட்டுள்ள கருத்து களாகும்.

## மேலும் படித்தற்குரியவை

1. Dillard D., Op. Cit. Chapter XI.
2. Hariss S. E., Op. Cit. Chapters XX to XXIX.

# 9. பொருளாதார மந்தத்துக்குக் கீன்ஸ் குறித்த மருந்துகள்

*[வேலையின்மைக்குத் தொன்மைப் பொருளாதாரிகள் காட்டிய காரணங்கள் — தொன்மைப் பொருளாதாரிகள் குறித்த மருந்தில் கீன்ஸ் கண்ட குறைபாடுகள் — கூலிவெட்டினால் வேலையினளவு அதிகரிக்குமா? — பணக்கூலிக்கும் உண்மைக் கூலிக்குமுள்ள உறவு — கீன்ஸ் குறித்த மருந்துகள் — உண்மைக் கூலிவெட்டு — வட்டிவீதக் கட்டுப்பாடும் பணப்பெருக்கமும்—பற்றுக்குறை நிதியாக்கம்—பொதுத் துறைச் செலவுகள் — பொதுத்துறை முதலீடுகள் – பணவீக்கமுறைகளால் வேலையின்மையைப் போக்க முடியுமா? — முற்போக்கான வரிகளால் சமதர்மம் மலருமா? — மேற்பூச்சான மருந்துகள்]*

முதலாளித்துவப் பொருளாதாரம், வரலாற்றில் அதற்கு முன்னுலிருந்த பொருளாதார அமைப்புகளைக் காட்டிலும் முற்போக்கு வாய்ந்தது என்பதில் ஐயமில்லை. முதலாளித்துவத்தின்கீழ் முதலீடு அதிகரித்தது; தொழிலறிவு பெருகியது; உழைப்பில் சிக்கனம் உண்டாக்கக்கூடிய தொழில் முறைகளும் நிருவாக அமைப்புகளும் புகுந்தன; ஆக்க சக்தி அதிகரித்தது; நாட்டு வருவாயும் வளர்ந்தது. ஆனுல், இவ்வாறு பொருள்வளம் பெற்றுவந்த முதலாளித்துவப் பொருளாதாரங்களில் பங்கீடு சீராக இல்லை. ஒருபுறம் விவசாயத்துக்கும் தொழிலுக்குமிடையே முரண்பாடு வளர்ந்தது. நீண்ட காலத்தில் வாணிக மாற்றுவீதம் விவசாயத்துக்குப் பாதகமாகத் திரும்பியது. நாட்டுவருவாயில் விவசாயத்தின் பங்கு குறைந்து வந்தது. தனிநபர் வருவாயில் ஏற்பட்ட ஏற்றத்தாழ்வு அதைவிடக் கணிசமாக மிகுந்தது.

தொழில்களின் ஆக்கமும் சீராகப் பகிரப்படவில்லை. தொழிலாளியின் ஆக்கசக்தி உயர்ந்து வந்ததெனினும் அவனது மெய்வருவாய் அதற்கேற்ப அதிகரிக்கவில்லை. அதன் பயனுகத் தொழிலாளர் மூலம் கிடைத்த வருவாயில் முதலாளிகளின் பங்கு அதிகரித்தது. தொழில்களின் சர்வாதீனப் போக்கும் தொழிலாளர் இயக்கத்தின்

பலவீனமுமே இத்தகைய ஏற்றத்தாழ்வுக்கு மூலகாரணம். அத்துடன், இயந்திரங்களின் வரவால் வேலை இழந்தோரின் எண்ணிக்கை பெருகி வந்தது. ஆதலின், நாட்டு வருவாயில் தொழிலாளரின் பங்குவீதம் குறைந்துபோயிற்று. வருவாயானது செலவிடத் துடிக்கும் தொழிலாளிகளின் கையிலிருந்து மீதம்பிடிக்கும் முதலாளிகளின் கைக்கு மாறிவந்தது. அதன் விளைவாக நாட்டுவருவாயில் சேமிப்பின் வீதம் அதிகரித்தது; நுகர்ச்சியின் பங்கு குறைந்து வந்தது.

சேமிப்பை முதலீடு செய்யக்கூடிய வாய்ப்புகளும் தேய்ந்து கொண்டே வந்தன. தொழிற்புரட்சியால் பிறந்தவேகம் கொஞ்சங் கொஞ்சமாகத் தணிந்தது. புதிய பல கண்டுபிடிப்புகள் அவ்வப் போது புத்துயிரூட்டி வந்தனவெனினும், மொத்தத்தில் திரண்டு வந்தமூலதனத்துக்கேற்ற வாய்ப்பு உருவாகவில்லை. அத்துடன் உழைப்பாளரின் மெய்வருவாயும் குன்றிவரவே மக்களின் வாங்கும் சக்தி குறைந்து வந்தது. போதிய தேவை இல்லாதபோது மேன்மேலும் முதலீடு செய்வதெப்படி? முதலீடு செய்தாலும் அதன் இறுதிநிலைத்திறன் விளக்கமுறுமா? எனவே முதலீடு செய்யக்கூடாத சேமிப்புப் சோம்பிக் கிடந்தது. முதலீடு செய்பவர்களும் உற்சாக மிழந்து வந்தனர்.

முதலாளித்துவ நாடுகள் பலவும் ஒன்றோடொன்று கடும் போட்டியில் ஈடுபட்டு வந்தன. ஒவ்வொரு நாடும் சுங்கச்சுவர் எழுப்பி வாணிகப் போர் முறைகளால் பிறரை வறியராக்கித் தான் மட்டும் கொழுக்க விரும்பியது. இலாப வேட்கையும் ஆதிக்க வெறியும் கொண்ட மூலதனம் அண்டை அயல்நாடுகளில் புகுந்து அந் நாடுகளின் அரசியல் பொருளாதார வாழ்க்கையின் உயிர் நாடிகளைக் கைப்பற்றி அவற்றைச் சுரண்டுவதோடு அந் நாட்டு மக்களின்மீது ஆணை செலுத்தவும் முயன்றன. இருப்பினும், பொருள்களுக்கு இருந்துவந்த உலகத்தேவை போதிய அளவில் வளர்வதாக இல்லை.

இலாபம் கிடைக்குமென்ற நம்பிக்கை இல்லாவிட்டால் எந்த முதலாளியும் முதலீடு செய்ய முன்வரமாட்டான் என்பது தெளிவு. உற்பத்தி தளராமல் வளர்வது எதிர்காலத் தேவையைப் பற்றி முதலாளி என்ன நினைக்கிறான் என்பதையே பெரிதும் பொறுத் திருக்கிறது. இன்றுள்ள தேவை குன்றினால் அல்லது செலவினங்கள் ஆக்கசக்தியைக் காட்டிலும் வேகமாக முன்னேறினால் எதிர்காலத்தில் கிடைக்கக்கூடிய இலாபத்தைப் பற்றிய நம்பிக்கை தளரும். எனவே, சேமிப்பு முதலீடு செய்யப்படாமல் ஆங்காங்கே தேங்கி நிற்பதன் காரணமாக வாங்கும் சக்திகுன்றி வருகின்ற நிலையில் எதிர்காலத்தைப்

பற்றிய நம்பிச்சையும் தகர்ந்தால் பொருளாதாரம் மந்தப் படுகுழியை நோக்கி விரையும் என்பதில் சந்தேகமில்லை. பொதுவாக, மந்தம்பிடித்த பொருளாதாரத்தில் வருவாய் குன்றும்; விலைவாசிகள் படுக்கும்; வேலையின்மை பெருகும்; பொருளாதாரத்தில் எச்ச வல்லமை மிகுதியாகும்; இயந்திரங்கள் சோம்பிக் கிடக்கும். குறிப்பாக, வேலையின்மையே மந்தத்தின் முக்கிய அறிகுறி என்றால் மிகையாகாது.

## வேலையின்மைக்குத் தொன்மைப் பொருளாதாரிகள் காட்டிய காரணங்கள்

இத்தகைய மப்பும் மந்தமும் தோன்றக் காரணம் என்ன என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டவர்கள் பலர் நம்மிடையே உள்ள நாட்டு வைத்தியர்களைப் போன்று பல வேடிக்கையான காரணங்களைக் கற்பிக்க முற்பட்டனர். "எட்டுக் கிரகங்களும் ஒன்று கூடுவதால் உலகமே அழியப் போகிறது," என்று பயமுறுத்திய பண்டிதர்களைப் போன்று, பொருளியற்பண்டிதர் சிலர் கதிரவனில் காணப்படும் கரும் புள்ளிகளுக்கும் வயலிலே வளரும் பயிர்பச்சைகளுக்கும் தொடர்பு உண்டு என்று சாதிக்க முற்பட்டனர். ஏனையோரும் யானை பார்க்கப் போன குருடரைப்போன்று அரைகுறையான விளக்கங்கள் வழங்க முற்பட்டனர். அளவுக்கு மிஞ்சிய முதலீடுதான் மந்தத்துக்குக் காரணம் என்றனர் ஒருசிலர். ஆக்கப்படும் பொருள்களை வாங்கி அனுபவிக்காமல் கஞ்சத்தனம் பண்ணுவதனால்தான் பொருள்கள் விற்பனையாகாமல் தேங்கிக் கிடக்கின்றன என்று வலியுறுத்தி வந்தனர் வேறுசிலர். கண்டிப்பான கடன் கொள்கைதான் மந்தத் துக்குக் காரணம் என்றனர் ஒரு சாரார். தெளிவற்ற எதிர்காலத்தைப் பற்றிய அச்சமோ சந்தேகமோ முதலாளிகள் உள்ளத்தில் குடிகொள்ளுவதால், முதலீட்டில் முனைப்பில்லாமல் போகவே அதனால்தான் பொருளாதாரம் மந்தப்படுகிறது என்று உளநூல் வாயிலாக விளக்க முற்பட்டனர் மற்றொரு சாரார். முதல் திரட்சியே முதலீட்டுக்கு விலங்கிடுகிறது என்பது கால்மார்க்ஸின் கருத்து. இக் கருத்துகளை இங்கே விவரிக்க முற்படவில்லை. ஆனால், அடிப்படையில் வேலை பற்றியக் கீன்ஸீயக் கோட்பாடு தொன்மைப் பொருளா தாரிகளின் கருத்துகளுக்கு மறுப்புக்கூறும் வகையில் அமைந்திருப் பதால் வேலையின்மைக்கான காரணங்களைப் பற்றித் தொன்மைப் பொருளாதாரிகள் என்ன கருத்து கொண்டிருந்தார்கள்? அவற்றைக் களைவதற்கு என்னென்ன பரிகாரங்களை வகுத்து வந்தார்கள்? அவற்றை ஏன் கீன்ஸ் ஏற்றுக்கொள்ளவில்லை? மந்தத்துக்கு கீன்ஸ் காட்டும் காரணங்களெவை? குறிக்கும் மருந்துகள் எவை? என்பன போன்ற கேள்விகளுக்கு இந்த அத்தியாயத்தில் விடை காண முயல்வோம்.

தொன்மைப் பொருளாதாரத்தின் தந்தையும் தனையருமாக விளங்கிய ஆதம் ஸ்மித், ரிக்கார்டோ போன்றவர்கள் முதலாளித்துவத்தின்மீது அலாதியான பற்றுக்கொண்டு அதன் நீண்டகால நலன்களில் தங்கள் கருத்தைச் செலுத்தியதன் பயனாக, உழைப்பின் திரட்சியே முதல் என்பதை நன்கு உணர்ந்திருந்தார்கள். எனினும், உழைப்பாளருக்கு அத்தியாவசியமான அளவுக்கு அதிகமாகக் கூலி கொடுத்தால் அவர்களது நீண்டகால நலன்களுக்குக் குந்தகம் விளையும் என்று அவர்கள் நம்பினார்கள். இக் கருத்தைக் கூலி நிருணய இரும்பு விதியைக் (Iron Law of Wages) கொண்டு விளக்கினார்கள். இவ் விதியை எடுத்துரைத்த விதத்தில் அவர்களிடையே சில வேறுபாடுகள் காணப்பட்டபோதிலும், அடிப்படையில் பிழைப்புக் கூலிக்குமேல் ஊதியம் அளிப்பது தவறு என்ற கருத்தைப் பொறுத்த அளவில் அவர்களிடையே ஒற்றுமை இருந்து வந்தது. உடலும் உயிரும் ஒட்டியிருப்பதற்கு அத்தியாவசியமான செலவுகளைச் சரிகட்டுவதற்குப் போதிய ஊதியமே பிழைப்புக்கூலியாகும் என்றனர் ஆதம்ஸ்மித், மால்த்தஸ் போன்றவர்கள். சிறிதளவாவது வசதிகளையும் சேர்த்துக் கொள்வது விரும்பத்தக்கது என்று ரிக்கார்டோவைப் போன்றவர்கள் பரிந்துரை செய்தனர். அதிகமாகக் கொடுத்தாலும் உழைப்புத்திறன் மேம்படுமாதலால் செலவில் சிக்கனமுண்டாகும் என்று சுட்டிக் காட்டினர். பிரேசி பிரபு (Lord Brassy) போன்றவர்கள் தொழிலாளரது அவல நிலையைக் கண்டு மனமிரங்கி அனுதாபப்பட்டதன் விளைவாகவே உயர்கூலியினால் விளையும் சிக்கனத்தைப் (Economy of Higher Wages) பற்றி அவர்கள் பேச முன்வந்தார்கள். இத்தகைய கருத்தைத் தழுவியே பின்னால் இறுதிநிலை உற்பத்தித் திறனுக்கு (Marginal Productivity) மேல் கூலி உயரக்கூடாது என்ற கருத்து வடிவம் பெற்றது. பிழைப்புக்கூலி, (Subsistance Wage) கூலிநிதி, (Wages Fund), உழைப்பின் இறுதிநிலையாக்கத்திறன் (Marginal Productivity of Labour) என்பன போன்ற பலபோர்வைகளால் மூடப்பட்டிருந்தாலும் உழைப்பாளருக்கு ஒரு குறைந்தபட்ச அளவுக்குமேல் கூலி கொடுத்தால் உழைப்பாளரின் நீண்டகால நலன்களுக்கும் பங்கமேற்படும்; பொருளாதார வளர்ச்சிக்கும் குந்தகம் விளையும் என்ற கருத்துத் தொன்மைப் பொருளாதாரக் கோட்பாடுகளில் பொதிந்திருந்தது.

இவ்வாறு கூலிக்கு வரையறை விதிக்க விழைந்தவர்கள் இலாபத்துக்கு உச்சவரம்பு எதுவும் வகுக்கவில்லை. மாறாக, இலாபம் குறைந்து விடக்கூடாதே என்று கவலைக் கொண்டிருந்தனர். நீண்டகாலப் போக்கில் இலாபவீதம் குறைந்துபோகும் போலிருக்கிறதே என்று அஞ்சினர். எனவேதான் சிக்கனத்தைப் போற்றினர்; சேமிப்பை

வரவேற்றனர். முதலீட்டுக்கான வாய்ப்புகளின்றிச் சேமிப்புத் தேங்கி விடுமோ என்ற பயம் அவர்களை வாட்டியதில்லை. வட்டிவீதம் நெகிழ்ந்து கொடுப்பதால் சேமிப்பும் முதலீடும் சமநிலைப்படுத்தப்படும் என்று அவர்கள் முழுதும் நம்பினார்கள். அதைப்போலவே, பொன் திட்டத்தினடியாக நிருணயிக்கப்படும் விலைவாசிகள் அயல்நாட்டு வாணிகமாற்றுவீதங்கள் ஆகியவை தாமாகவே முடுக்கிவிடப்பட்ட கடிகாரத்தின் சமன்செய் சக்கரத்தைப் போன்று அங்காடியின் அசைவுகளின்மூலம் பொருளாதாரத்தின் பல்வேறு உறுப்புகளையும் ஒன்றோடொன்று சுமுகமாக இணைத்துக்கொண்டு இயங்கவல்லன என்பதில் அவர்கள் அசையாத நம்பிக்கை கொண்டிருந்தனர்.

எனவே, வேலையின்மை என்ற பிரச்சினை தொன்மைப் பொருளாதாரத்தில் முக்கிய இடம் பெறவில்லை. ஏன்? நிறைவேலை வேலை என்பதை முற்கோளாகக் கொண்டது தொன்மைப் பொருளா தாரம். வேலைக்கு இலக்கணம் கூறிய வகையிலேயே வேலையின்மை என்ற நிலையை இல்லாமற் செய்துவிட்டார்கள். வேலை செய்ய மனமில்லாத சோம்பேறிகளை வேலையின்றித் திண்டாடுபவர்கள் என்று கூற இயலாது; பிறழ்ச்சி காரணமாக வேலையிழப்பது தற்காலிக மானதோர் நிகழ்ச்சி; பொருள்களின் விலைவாசிகளும் உற்பத்திச் சாதனங்களுக்குரிய ஊதியங்களும் நெகிழ்ந்து கொடுக்கும் தன்மை பெற்றவை என்ற நம்பிக்கை நிலவியதால், வேலையை நாடிவரும் எந்தநபரும் பொருளுற்பத்தியில் ஈடுபடத் தயாராக இருக்கும் எந்த சாதனமும் வேலையின்றிச் சோம்பிக்கிடக்க அவசியமே இல்லை என்பது தொன்மைப் பொருளாதாரிகளின் கருத்து. அக் கருத்தின்படி யாராவது வேலையில்லாமலிருந்தால் ஒன்று, அவர்கள் வேலை செய்ய விருப்பமில்லாத சோம்பேறிகளாகவோ, உலுத்தர்களாகவோ இருக்க வேண்டும்; அல்லது தங்கள் உழைப்புக்கேற்பக் கூலியைக் குறைத்துக் கொள்ள மறுப்பவர்களாக இருக்கவேண்டும் என்று வலியுறுத்தப் பட்டு வந்தது.

உழைப்புக்குரிய ஊதியம் இதுதான் என்று திட்டவட்டமாக நிருணயிக்கமுடியும் என்று தொன்மைப் பொருளாதாரிகள் நம்பினார்கள். உழைப்பாளரின் இறுதிநிலையாக்கத்திறனைக் கொண்டு கூலியை நிருணயிக்க வேண்டும் என்பது அவர்களது கருத்து. அதன்படி உழைப்பின் இறுதிநிலையாக்கத்துக்குச் சமமான கூலியைத் தொழிலாளர் ஏற்றுக்கொள்ளச் சம்மதித்தால், வேலை தேடிவரும் அத்தனைபேரும் வேலையிலமர்த்தப்படுவார்கள் என்பது பொருளாகும். இதிலிருந்து கூலிவீதம் உழைப்பின் இறுதிநிலையாக்கத்திறனுக்கு அதிகமாக இருந்தால், வேலையின்மை தலைகாட்ட இடமுண்டு என்று அனுமானிக்கலாம். அத்துடன், உரிய அளவுக்குமேல் உயர்ந்திருக்கும்

கூலிவீதத்தைக் குறைப்பதில் சிக்கல்கள் ஏற்பட்டால் வேலையின்மையைத் தவிர்க்க இயலாது என்பது எளிதில் புலனாகும். எனவே, வேலையின்மைக்குக் காரணம் நெகிழ்ந்து கொடுக்காத கூலிவீதம் என்றும் அதை ஒழிப்பதற்கான மருந்து கூலிவெட்டு என்றும் தொன்மைப் பொருளாதாரிகள் வலியுறுத்தி வந்தனர்.

நிறைவேலை நிலைக்கு உகந்ததோர் மொத்த உண்மைத் தேவை (Real aggregate demand) ஒன்று உண்டு என்று தொன்மைப் பொருளாதாரிகள் நம்பினார்கள். விலைவாசியைக் குறைக்காமல் மொத்த உண்மைத் தேவையைக் கணிசமாக அதிகரிப்பது இயலாது. விலைவாசிகளைக் குறைப்பதற்குப் பணவாட்டம் (deflation) ஏற்பட வேண்டும். பணவாட்டத்தால் கடன் கொடுப்போர் வாழவும், கடன் படுவோர் அவதிப்படவும் செய்தனர். ஆனால், பணவாட்டம் கணிசமான அளவில் ஏற்பட்டால் விலைவாசிகள் விரும்பத்தக்க அளவு குறைந்து மொத்த உண்மைத் தேவையை வளரச் செய்யும். அத்தகைய பணவாட்டத்துக்கும் விலைவாசிகளின் வீழ்ச்சிக்கும் உறுதுணையாக இருப்பது கூலிவெட்டு. எனவே, கூலி குறைந்தால் அதன் பயனாக அங்காடியில் இயங்கிவரும் சக்திகள் சலனமுறும்; நடவடிக்கை காரணமாகத் தேவைப்படும் பணத்தினளவு குறையும்! பணவாட்டம் ஏற்படும்! விலைவாசிகள் சரியும்; எனவே, மொத்த உண்மைத் தேவை நிறைவேலையை நிலைநாட்டக்கூடிய அளவாக அதிகரிக்கும் என்பது தொன்மைப் பொருளாதாரிகளின் வாதம். எனவே, நிறைவேலை நிலையை எய்துவதற்கு உறுதுணையாக உதவுவது மெய்க்கூலி வெட்டாகும் என்பது தொன்மைப் பொருளாதாரிகளின் அடிப்படையானதோர் கருத்து. கீன்ஸின் பொதுக்கோட்பாடு வெளிவந்தபின்னர்கூட (1938-ல்) பிகு (Pigon) போன்ற பொருளறிஞர்கள் கூலிவெட்டின்மூலம் தனிப்பட்ட நிறுவனங்களில் இலாப வீதங்கள் விழிப்புறுவதோடல்லாமல், பொருளாதாரம் முழுவதிலும் முதலீடும் வேலைக்கான வாய்ப்புகளும் பெருகுவதற்கு ஏதுவாக இருக்கும் என்று எடுத்துரைத்து வந்தார்கள் என்பது குறிப்பிடத் தக்கது.

### தொன்மைப் பொருளாதாரிகள் குறித்த மருந்தில் கீன்ஸ் கண்ட குறைபாடுகள்

கூலிவெட்டைப் பற்றித் தொன்மைப் பொருளாதாரிகள் மேற்கொண்ட முற்கோள்களும் முதற்கோள்களும் எவை? கீன்ஸ் அவற்றை ஏன் ஏற்றுக் கொள்ளவில்லை? தொன்மைப் பொருளாதாரிகளுக்கும் கீன்ஸுக்கும் இருந்த கருத்து வேறுபாடுகளெவை? வேலையின்மைக்குக் கீன்ஸ் காட்டிய காரணங்களெவை? குறித்த மருந்துகள் எவை? என்பனவற்றைப் பற்றி இரண்டாவது அத்தியாத்தில் சுருக்க

மாக விளக்கியுள்ளோம். இனி அவற்றைச் சற்று விரிவாக ஆராய்வது அவசியம். அத்தகைய ஆராய்ச்சியில் இறங்கு முன்னர் ஒரு முக்கியமான உண்மையைக் கோடிட்டுக் காட்டுவது பயன் தருவதாகும்.

அடிப்படையில் வேலையின்மைக்குக் காரணம் கண்டுபிடிக்க முற்பட்ட தொன்மைப் பொருளாதாரிகள் வளைந்து கொடுக்காத கூலிவீதமே வேலையின்மைக்கு மூலகாரணம் என்று சுட்டிக் காட்டினர். மாறாக, கீன்ஸ், போதாத் தேவையே வேலையின்மைக்கு வழி வகுக்கிறது என்பதை வலியுறுத்தினார் என்று மூன்றாவது அத்தியாயத்தில் கண்டோம். மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது தொன்மைப் பொருளாதாரிகளும் கீன்ஸும் காட்டிய காரணங்கள் ஒன்றுக்கொன்று நேர் முரணானவைபோலத் தோன்றும். குறிப்பாகக் கோட்பாட்டு ரீதியில் காணப்பட்ட கருத்துவேறுபாடுகளினடியாகப் பிறந்த கொள்கைகளை ஆராயப் புகுந்தால் அப்படி ஒன்றும் அடிப்படையான வேறுபாடுகள் இருப்பதாகச் சொல்ல இயலாது. சான்றாக, தொன்மைப் பொருளாதாரப் பண்டிதர்கள் வளைந்து கொடுக்காத கூலிவீதமே வேலையின்மைக்கு மூலகாரணம் என்று எண்ணியதால் வேலையின்மைக்கு மருந்தாகக் கூலியைக் குறைக்க வேண்டுமென்றனர். கீன்ஸ், கூலிக்குறைப்பை அடியோடு எதிர்க்கவில்லை. நேரடியாகப் பணக்கூலியை வெட்டுவதற்குப் பலத்த எதிர்ப்பு இருக்குமாதலால், பண மாயையைப் பரப்பிப் பணவீக்க முறைகளைக் கையாளுவதன் மூலம் உண்மைக் கூலியைக் குறைக்கலாம் என்று பணவீக்க மருந்தை பிரபலப்படுத்த முயன்றார். இதிலிருந்து இரு சாராருமே கூலிவெட்டைத்தான் விரும்பினார்கள்; தொன்மைப் பொருளாதாரிகள் நேரடியாகப் பணக்கூலியை வெட்ட வேண்டுமென்றனர். ஆயின், கீன்ஸ், பணமாயைப் பரப்பி உண்மைக் கூலியை வெட்ட முன்வந்தார். இந்த உண்மையை மனதிலிருத்தி மேற்கொண்டு ஆராய்ச்சியில் புகுவோம்.

தொழிற்சங்கங்களின் தில்லுமுல்லுகளும் அரசின் தலையீடுமே கூலிவெட்டுக்குக் குறுக்கே நிற்கும் முட்டுக்கட்டைகளாகும் என்று தொன்மைப் பொருளாதாரிகள் எண்ணி வந்தார்கள். இவற்றுள் தொழிற்சங்கங்களின் பிடிவாதமான மனப்பான்மையும் அடாபிடிச் செயல்முறைகளுமே பணக்கூலியைக் குறைப்பதன்மூலம் வேலையின்மையைப் போக்குவதற்குத் தடையாக உள்ளன என்று அவர்கள் வலியுறுத்தி வந்தார்கள். இக் கருத்துகள் நடைமுறைக்கு ஒவ்வாதவை என்பது கீன்ஸின் அபிப்பிராயம்.

**கூலிவெட்டால் வேலையினளவு அதிகரிக்குமா ?**

தொழிற்சங்கங்கள், மக்களாட்சி அமைப்புகளின் பிரிக்க முடியாத தோர் உறுப்பு என்பது ஒரு புறமிருக்க, கூலிவெட்டைத் தொழிற் சங்கங்கள் எதிர்த்துப் போராடின என்று கூறுவது உண்மைக்கு மாறானது என்று கீன்ஸ் சுட்டிக்காட்டினார். சான்றாக, பெரும் பொருளாதார மந்தத்தின்போது வேலையில்லாமல் வருந்திய கோடிக்கணக்கான தொழிலாளர் பட்டினியால் வாடிய தருணத்திலும் கூலிவெட்டை ஏற்றுக்கொள்ள மறுத்தார்கள் என்று கூறுவது பொருந்தாது என்று வாதாடினார். இதை வெறும் விதண்டாவாதம் என்று எளிதில் தட்டிக் கழித்துவிட முடியாது. உழைப்புக்குள்ள தேவையிலோ உழைப்பின் ஆக்க சக்தியிலோ கணிசமான மாறுதல்கள் இல்லாத நிலையில்கூட, வேலையின் அளவில் கணிசமான மாறுதல் களைக் காணலாம் என்பது கீன்ஸின் கருத்து. அதாவது கூலிக்கும் உழைப்பின் ஆக்க சக்திக்கும் வேலையினளவுக்கும் அவ்வளவு நெருங்கிய சம்பந்தம் இருப்பதாகக் கீன்ஸுக்குத் தெரியவில்லை.

மாறாக, தொழிற்றுணிவு கொண்டு பொருளுற்பத்தியில் ஈடு படுபவர்கள் தாங்கள் உற்பத்தி செய்த பொருள்களின் மதிப்பைப் பற்றிக் கவலை கொண்டவர்கள். எனவே, விலைவாசிகள் இறங்கும் போது அதற்கேற்பக் கூலி வீதமும் குறைந்துபடாவிட்டால், கூலி, உழைப்பின் இறுதியாக்கத் திறனுக்கும் அதிகமாக இருக்கும்; அதன் பயனாகத் தொழிலதிபர்கள் மேற்கொண்டு தொழில்களை வளர்ப் பதற்குப் பதிலாக மூடுவதற்கு முற்படுவார்கள்; இதிலிருந்து கூலி வீதத்தில் ஏற்படும் சிக்கலே வேலையின்மைக்கு வழிவகுக்கிறது என்பது தெரிய வரும்; இத்தகைய சிக்கலுக்குத் தொழிற்சங்கங்களின் மனோபாவமும் செயல்முறைகளுமே முக்கிய காரணம்; எனவே, தொழிற்சங்கங்களின் நடவடிக்கைகளே கூலிவீதத்தின் நெகிழ்ச்சி யற்ற தன்மைக்கும் அதன் பயனாகத் தலைதூக்கும் வேலையின்மைக்கும் காரணம் என்பது தொன்மைப் பொருளாதாரிகளின் வாதம்.

கூலியைக் குறைப்பதால் மட்டும் நிறைவேலையை நிலைநாட்டி விடலாம் என்று கீன்ஸ் நம்பவில்லை; அதற்கு ஒரு சில காரணங்களும் காட்டுகிறார். முதலாவதாக, கூலி குறைவதன் காரணமாக ஒரு குறிப்பிட்ட முதலாளியின் இலாபமோ இலாபவீதமோ மேம் பட்டாலும் பொருளாதாரம் முழுவதையும் எடுத்துக்கொண்டால் தொழிலாளரின் வாங்கும் சக்தி குன்றுவதன் காரணமாகப் பொருளாதாரத்தை நிறைவேலை நிலைக்கு இழுத்துச் செல்வதற்குப் போதிய தேவை இருக்காது. இரண்டாவது, பணக்கூலி குறையும் போது விலைவாசிகளும் அதற்கேற்பக் கீழே இறங்கும். எனவே, உண்மைக்கூலி முன்பிருந்ததைக்காட்டிலும் குறைவாக இருக்கும்

என்று நிச்சயமாகச் சொல்ல இயலாது. உண்மைக்கூலி குறைந்தாலன்றி வேலையினளவு பெருகும் என்று எதிர்பார்ப்பது தவறு. ஆதலின் பணக்கூலி குறையும்போது உண்மைக்கூலியும் அதற்கேற்பக் குறைந்து படாவிட்டால், வேலையினளவில் விரும்பத் தக்க மாற்றங்களைக் காண்பதரிது. மூன்றுவது, விலைவாசிகள் சரியும்போது முதலினச் சொத்துகளின் மதிப்புக் கூலியைக் காட்டிலும் வேகமாகக் குறைந்து வருமானுல் கூலிவெட்டுப் புத்தம்புது முதலீடுகளைத் தூண்ட இயலாது என்பதும் கீன்ஸின் கருத்து.

பணக்கூலியை வெட்டுவதன்மூலம் வேலையின்மைக்கு முடிவு கட்டுவது கடினம் என்று பொதுப்படையாக வாதாடி வந்தாரெனினும், கூலிக்குறைப்பால் வேலைக்கான வாய்ப்புகளைப் நெருக்கவே இயலாது என்ற கண்டிப்பான நிலையில் கீன்ஸ் நிற்கவில்லை. உண்மையில் பொதுக்கோட்பாட்டின் பத்தொன்பதாவது அத்தியாயத்தில் பணக்கூலிக்கும் வேலையினளவுக்கும் ஓரளவு சம்பந்தம் உண்டு; ஆனுல், அத் தொடர்பு தொன்மைப் பொருளாதாரிகள் கருதியதுபோல நேரடியானது அன்று; முதலீட்டின் இறுதி நிலைத்திறன், வட்டிவீதம் ஆகியவற்றின்மூலம் மறைமுகமாகப் பணக்கூலியைக் குறைப்பால் வேலையினளவை அதிகரிக்கமுடியும் என்று கீன்ஸ் ஒப்புக் கொள்ளுவதாகத் தெரிகிறது. பயனுள்ள தேவை அதிகரித்தால், வேலையினளவும் அதிகரிக்கும் என்பது கீன்ஸின் கருத்து என்று கண்டோம். முதலீட்டு இறுதிநிலைத்திறன், இறுதிநிலைநுகர்வு நாட்டம், வட்டிவீதம் போன்ற மாறிகளால் பயனுள்ள தேவை பாதிக்கப்படும் என்பதும் தெரிந்ததே. எனவே, பணக்கூலியைக் குறைப்பதன்மூலமாக மேற்கண்ட மாறிகளில் எதையாவது மாற்ற முடியுமானுல் மறைமுகமாக வேலைக்கான வாய்ப்புகளையும் தூண்ட முடியும் என்பது அவரது கருத்து. பணக்கூலி குறைவதால் விலைவாசிகள் சரியும்; அதன் விளைவாக நடவடிக்கை நோக்கத்தினடியாகப் பிறக்கும் ரொக்க விருப்பம் குன்றும்; எனவே வட்டிவீதம் வீழும்; முதலீடு தூண்டப்படும்; அதன்பயனுக வேலையினளவு அதிகரிக்கும் என்பது கீன்ஸின் கருத்து. கோட்பாட்டு ரீதியில் பணக்கூலி வெட்டுக்கும் வேலையினளவுக்கும் மறைமுகமான தொடர்பு உண்டென ஒத்துக்கொண்டபோதிலும், அத்தகைய தொடர்பு அவ்வளவு அழுத்தமானது என்று சொல்ல இயலாது; உண்மையில் உண்மை, முதலீடு, உண்மைவருவாய், உண்மை நுகர்வு ஆகியவற்றின் அளவைப் பொறுத்தது. எனவே, பணக்கூலி வெட்டால் உண்மை வருவாயோ உண்மைத் துய்ப்போ அதிகரிக்காத வகையில், உண்மை முதலீடு தூண்டப்படும் என்று எண்ணுவதற்கில்லை. மேலும், முதலீட்டு இறுதிநிலைத்திறன் முதலீட்டினளவில் ஏற்படும் மாற்றத்துக்கும் உற்பத்தியினளவில் ஏற்படும் மாற்றத்துக்கும் உள்ள

உறவினடியாக அமைவதால், பணக்கூலியை வெட்டினல் நேரடியாகவோ மறைமுகமாகவோ முதலீடு தூண்டப்படும் என்று சொல்லுதற்கில்லே.

இருப்பினும், பணக்கூலிவெட்டினுல் உண்மை முதலீடு மூன்று விதமாகப் பாதிக்கப்படலாம் என்பதைக் கீன்ஸே உணர்ந்திருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது. முதலாவது, பணக்கூலியில் ஏற்படும் மாற்றத்தால் தொழில் முனைவர்களின் நம்பிக்கை வலுக்கலாம். ஆனல், எவ்வளவு தூரம் வலுக்கும் என்று அளவிட முடியாது. இரண்டாவது, பணக்கூலி குறைவதால் ஏற்றுமதிப் பொருள்களை ஆக்கிப் படைத்து வெளிநாடுகளுக்கு அனுப்பிவைக்கும் பணிகளில் முனைந்திருக்கும் தொழில்நிறுவனங்களின் ஆக்கச் செலவுகள் குறையும். அதன் பயனக, அவர்கள் அயல்நாடுகளுடன் வெற்றிகர மாகப் போட்டியிட முடியும். எனவே, ஏற்றுமதி அதிகரிக்கும்; அதையொட்டி ஏற்றுமதிப் பொருள்களின் உற்பத்தியில் ஈடுபட்டுள்ள தொழில்களில் வேலைக்கான வாய்ப்புகள் பெருகும் என்று எண்ண இடமுண்டு. ஆனல், வாணிகப் போட்டியில் ஈடுபட்டுள்ள அயல் நாடுகளும் கூலிவெட்டு, நாணயமாற்றுக்கட்டுப்பாடு போன்ற வாணிகப் போர் முறைகளைக் கையாள முற்பட்டால் கூலிவெட்டால் கிட்டிய போட்டி நலன்கள் ஆவியாகப் பறந்து மறையும். மூன்ருவது, ஏற்கனவே குறிப்பிட்டதுபோல் பணக்கூலி குறைவதால் நடவடிக்கை நோக்கமாக வேண்டப்படும் ரொக்கப்பணம் குறையும். அதன் காரணமாக, ஊகவாணிக நோக்கத்தைப் பூர்த்தி செய்வதற்காக அளிக்கப்படும் பணம் தேவைக்கு (ரொக்க விருப்பத்துக்கு) மிஞ்சிய தாக இருக்குமாதலால், வட்டிவீதம் குறையும். அதன் பயனக, முதலீடு தூண்டப்பட்டு வேலைக்கான வாய்ப்புகளுக்கு வழிவகுக்கும். இருப்பினும், பொதுவாகப் பணக்கூலி குறைகின்றபோது பயனுள்ள தேவையும் குறைந்துபடுமாதலால், முதலீடு செய்பவர்களின் எதிர் பார்ப்புகளில் உற்சாகம் தென்படாது. இறுதிநிலை நுகர்வு நாட்டம் ஒன்ருக (Unity) இருந்தால் மட்டுமே பயனுள்ள தேவை குன்ருது என்று எண்ண இடமுண்டு. அதைப்போலவே கூலிவெட்டின் பயனக வட்டிவீதம் குறையும் என்று எதிர்பார்க்கலாமென்ருலும் குறைந்த வட்டியினுல் ரொக்கப் பணத்துக்கான தேவை நெகிழ்ந்து கொடுக்கு மானல் (Elasticity of Demand for Cash) மொத்தத்தில் முதலீடு தூண்டப்படுமோ என்பது சந்தேகம். இத்தகைய சிக்கல்களினுல் தான் வேலையில்லாமையை விரட்டுவதற்குப் பணக்கூலிவெட்டை நம்பிப் பயனில்லை என்று கீன்ஸ் கருதினுர் போலும்.

போதிய தேவை இல்லாவிட்டால் வேலையின்மையைப் போக்க இயலாது என்ற கருத்தைப் பலவாருகக் கீன்ஸ் வெளியிட்டுள்ளார்.

பயனுள்ள தேவையின் மொத்த அளவை உற்பத்தி, வருவாய், செலவு ஆகிய பல கோணங்களில் பார்க்கலாம். அதன்படி, பணக்கூலி குறைந்துபடுகின்ற வேளையில் முதலீடும் அதிகரிக்காவிட்டால், வருவாய்குன்றி நுகர்வு-முதலீடு ஆகிய வகையில் மேற்கொள்ளப்படும் மொத்த செலவு குன்றும் என்று எதிர்பார்க்கலாம். அதன்படி, பணக்கூலிவெட்டினுல் மொத்த வருவாய் குன்றும் என்பது இலை மறைகாய்போல உணர்த்தப்படுவதாகும். இருப்பினும், பணக்கூலி வெட்டு என்பது கீன்ஸ் எண்ணியதுபோல் பொருளாதாரம் முழுவதிலும் வியாபித்திருக்கக்கூடிய நடவடிக்கையாக இருக்க வேண்டும் என்ற கட்டாயமில்லை. ஒரு சில குறிப்பிட்ட துறைகளில் மட்டும் கூலியைக் குறைக்க முடியும். அப்படிச் செய்தால் மொத்தச் சம்பளப்பட்டியலோ உழைப்பாளரின் சராசரி ஊதியமோ குறைய வேண்டும் என்ற நிர்ப்பந்தமுமில்லை என்பது ஒரு சிலரின் வாதம். அதிக ஊதியம் பெறக்கூடிய உழைப்பாளருக்கான தேவை அதிகரிக்கின்ற அதேசமயத்தில் குறைந்தகூலி கிடைக்கக்கூடிய வேலைகளுக்கான வாய்ப்புகள் குறைந்துபடலாம். பணக்கூலி சிறிதளவு குறைவதன் பயனுக மொத்தத்தில் வேலையினளவு கணிசமாக அதிகரிக்கலாம். குறிப்பாக, பணக்கூலியை சற்றே வெட்டுவதால் தொழில்களிலுள்ள எச்சவல்லமையைப் பேரளவில் பயன்படுத்த முடியுமாஞல், மொத்தத்தில் வேலையினளவும் உழைப்பாளரின் ஊதியமும் கூடிவருமே ஒழிய குறையாது. மேலும், கூலி குறைவதால் ஏனைய உற்பத்திச் சாதனங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது உழைப்பு மலிவாகத் தோன்றும். எனவே, அத்தகைய சாதனங்களுக்குப் பதிலாகத் தொழில்நிறுவனங்கள் உழைப்பை மிகுதியாகப் பயன்படுத்த விழையும். தொழிலாளரது நுகர்வு நாட்டம் ஏனையோரைக் காட்டிலும் தொனிப்பாக இருக்குமாதலால், மொத்தத்தில் நுகர்வும் அதற்கான செலவும் அதிகரிக்கும். அதன்பயனுக முதலீடு தூண்டப்பட்டு வேலைக்கான வாய்ப்புகளும் பெருகும் என்பது புலனுகும். ஆனுல், இத்தகைய முதலீட்டுப்பயன் பலிக்க வேண்டுமானுல், ஏனைய உற்பத்திச் சாதனங்களின் விலைகள் மாருமலிருக்க வேண்டும். அவ்வாறின்றி, கூலிவெட்டுக்கேற்ப அதன் பயனை ஈடுசெய்யும் வகையில் ஏனைய உற்பத்திச் சாதனங்களின் ஊதியங்களும் வளைந்து கொடுக்குமானுல் (குறையுமானுல்) வேலையினளவு அதிகரிக்குமென்று எதிர்பார்க்க இயலாது. இத்தகைய சூழ்நிலையில்தான் பணக்கூலிவெட்டைப் பற்றிய கீன்ஸீயக் கருத்துகள் மிகவும் பொருத்தமாகத் தோன்றும்.

பணக்கூலிவெட்டு நிகழ்வதையொட்டிய ஏனைய உற்பத்திச் சாதனங்களின் ஊதியங்களும் வளைந்து கொடுக்கலாமென்ருலும், முதலீட்டின் பயனுக உழைப்புக்கு ஏற்படும் தேவை எவ்வளவு

நெகிழ்ச்சி பொருந்தியதாக இருக்கும் என்பதைப் பொறுத்துதான் வேலையினளவு உண்மையிலேயே அதிகரிக்குமா? இல்லையா? என்பதைப்பற்றித் தெளிவாகக் கூற இயலும். அத்தகைய நெகிழ்ச்சியினளவு ஒன்றுக்கு மேலாக இருந்தால் வேலையினளவு அதிகரிக்குமென கொள்ளலாம். இதைப்பற்றிய புள்ளிவிவரங்களை அலசி ஆராய்ந்த ஏ. சி. பிகு, பால்டக்ளஸ் (Paul Dauglas) பதிலீட்டுப்பயனின் (Substitution Effect) காரணமாக உழைப்புக்கு ஏற்படும் தேவை மும்மடங்காக அதிகரிக்கும் என்று கணித்தனர். இருப்பினும், உழைப்புக்கான தேவையில் காணப்படும் நெகிழ்ச்சியைக் கணக்கிடுவது எளிதன்று. எத்தனையோ முற்கோள்கள் எண்ணிறந்த முதற்கோள்கள் உண்டு. அவ்வவற்றின் உண்மையான தன்மைகளையும் மதிப்பையும் கணிக்காவிட்டால், அவற்றினடியாகக் கணிக்கப்படும் நெகிழ்ச்சியின் அளவும் காலில்லாப் பந்தல் போலவே அமையும். எனவேதான் பணக்கூலிவெட்டினால் பதிலீட்டுப்பயன் எத்துணைப் பலம் பெற்று விளங்கும் என்று கணிக்க முடிவதில்லை.

அதைப்போலவே பணக்கூலி குறைவதால் மொத்த வருவாய் எவ்வகையில், எவ்வளவில் பாதிக்கப்படும் என்று கணிப்பது கடினம். இதைத்தான் வருவாய்ப்பயன் (Income effect) என்பர். தொன்மைப் பொருளாதாரிகள் இத்தகைய வருவாய்ப்பயனைப் புறக்கணித்தார்கள் என்று கூறமுடியாது. ஆயினும், அப் பயனை விளக்கிய முறையிலே கீன்ஸுக்கும் தொன்மைப் பொருளாதாரிகளுக்கும் ஒரு முக்கியமான வேறுபாடு இருந்தது. பணத்தினளவு மாறுதிருக்குமென்பது கீன்ஸீய ஆராய்ச்சியின் அடிப்படையான முதற்கோளாகும். மாறாக, கூலிவெட்டின் காரணமாகப் பொருளாதாரத்திலுள்ள எச்சவல்லமைகள் பயன்படுத்தப்படும். அதற்கேற்ப உண்மை வருவாயும் அதிகரிக்கும். வளர்ந்து வரும் வருவாய்க்கு இணையாகப் பணத்தினளவும் அதிகரிக்கும் என்பது தொன்மைப் பொருளாதாரிகளின் கருத்து. அதாவது பொருளாதாரம் விறுவிறுப்படைவதன் காரணமாக மிகுதியான பொருள்கள் கைமாறும். அத்தகைய நடவடிக்கைகள் (T) சிக்கலின்றி நடைபெறும் வகையில் பணத்தினளவும் (M) அதிகரிக்கும் என்பது அவர்களது கருத்து. அத்தகைய பணப்பெருக்கத்துக்கு இணையாகப் பொருள்பெருக்கமும் ஏற்படுமாதலால், மொத்தத்தில் பணவீக்கம் எதுவும் நிகழும் என்று எண்ண இயலாது; இந் நிலையில் பணக்கூலிவெட்டின் பயனாகக் கூலிப் பட்டியலின் மொத்த அளவு முன்னைவிட அதிகரிக்கும் என்று அவர்கள் நம்பியதில் வியப்பொன்றுமில்லை. பணப்பெருக்கத்தைப் பற்றித் தொன்மைப் பொருளாதாரிகள் கொண்டிருந்த முதற்கோள் எத்துணைப் பொருத்தமானது என்று கேட்பவர்கள் பலருண்டு. ஆனால், இம் முதற்கோள் எவ்வளவு தூரம் நடைமுறைக்கு ஏற்றது

என்று சோதித்தறிவது சுலபமன்று. ஏனெனில், பணப்பெருக்கத்துக்குப் பல காரணங்களுண்டு. எனவே, உழைப்பாளருக்குள்ள தேவைதான் பணப்பெருக்கத்துக்கான மூலகாரணம் என்று அழுத்தந் திருத்தமாகக் கூற இயலாது.

பணக்கூலிக்கும் மெய்க்கூலிக்கும் உள்ள உறவு

பணக்கூலிவெட்டால் வேலையின்மையைப் போக்க முடியாது என்பதற்குக் கீன்ஸ் கையாண்ட மற்றொரு முக்கியமான வாதத்தை மனதிலிறுத்துவது அவசியம். உண்மைக் கூலி குறைந்தாலன்றி வேலையினளவு அதிகரிக்க இயலாது என்பது கீன்ஸின் கருத்து. அதன்படி பணக்கூலி குறைந்தால் மட்டும் போதாது; பணக்கூலி வீதம் குறைவதற்கிணங்க, விலைவாசிகளும் குறைந்துபட்டால் அதன் பயனாக உண்மைக்கூலியில் எவ்விதமான மாற்றமும் ஏற்படாமல் போகலாம். அப்படியானால், பணக்கூலி குறைந்தாலும் அதற்கேற்ப உண்மைக்கூலி குறைய வேண்டும் என்ற கட்டாயமில்லை. உண்மைக் கூலி குறையாத நிலையில் வேலையினளவு அதிகரிக்குமென்று எண்ண இடமில்லை என்பது அவரது கருத்து.

இக் கருத்து இறுதிநிலையாக்கக் கோட்பாட்டின் (Marginal Productivity Theory) அடியாக அமைவது என்பது குறிப்பிடத்தக்கது. அதன்படி வேலையினளவு அதிகரிக்கும்போது உழைப்பின் இறுதியாக்கம் குறைந்து வரும். அதன் பயனாக இறுதியாக்கச் செலவுகள் (Marginal Cost of Production) அதிகரிக்கும். எனவே, விலைவாசிகள் உயரும். அதன் விளைவாக உண்மைக்கூலி குறைந்துபடும். மாறாக, உழைப்பின் இறுதியாக்கம் மேம்படும் என்றதோர் சூழ்நிலை இருந்தால், வேலையினளவோடு உழைப்பின் இறுதியாக்கமும் அதிகரிக்கும். அதன் பயனாக இறுதியாக்கச் செலவுகள் குறையும். விலைவாசிகள் படுக்கும். உண்மைக்கூலி அதிகரிக்கும். எனவே, உழைப்பின் இறுதியாக்கம் கூடிவரும்போது பணக்கூலி மாறாமல் இருந்தால், அல்லது சற்றே குறைந்துபட்டால், வேலையினளவு அதிகரிக்கும்போது உண்மைக்கூலியும் கூடிவரும் என்று எதிர்பார்க்கலாம். ஆனால், கீன்ஸின் வாதம், குறைந்துவரும் உழைப்பின் இறுதியாக்கக் கோட்பாட்டினடியாகப் பிறந்தது என்பது தெளிவு.

இரண்டாவது, பொருளுற்பத்தியில் ஈடுபட்டிருப்பவர்களிடையே தங்குதடையற்ற நிறைவுப் போட்டி (Perfect Competition) நடைபெறுமென்பதைக் கீன்ஸ் முதற்கோளாக மேற்கொண்டுள்ளார். அதன்படி ஆக்கச் செலவில் ஏற்படும் சிக்கனங்களுக்கேற்ப விலைவாசிகள் குறையுமே ஒழிய இலாபம் அதிகரிக்காது. உண்மையில்

நிறைவுப்போட்டியின்கீழ் இயல்பான இலாபவீதத்துக்குமேல் எதையும் எதிர்பார்க்க இயலாது. ஆனால், பணக்கூலிவெட்டின் காரணமாக நிகழ்காலத்தில் ஏற்படும் விலைவீழ்ச்சி எதிர்காலத்தில் எதிர்பார்க்கப்படும் இலாபத்தையும் வேலைக்கான வாய்ப்புகளையும் குறுக்கும் என்று எண்ண இடமுண்டு. ஆனால், பணக்கூலியில் வெட்டு விழுந்தால் விலைவாசிகள் உடனடியாகக் குறைவானேன் என்பதற்குக் கீன்ஸ் கொடுத்த விளக்கம் அவ்வளவு தெளிவாக இல்லை என்பது சிலரது கருத்து. கீன்ஸின் கருத்துக்குப் பரோஸ் (Burrows) என்பவர் பின்வருமாறு பொருள் கூறியுள்ளார். குறைந்த பணக் கூலியால் இறுதியாக்கச் செலவுகள் குறையும்; ஆனால், பொருளுற்பத்தியில் ஈடுபட்டிருப்பவர்களிடையே நிறைவான போட்டி மனப்பான்மை நிலவுவதால், குறைந்துவரும் உற்பத்திச் செலவுக் கேற்பப் பொருள்களின் விலைவாசிகளைக் குறைப்பர். அதன் விளைவாகப் பணக்கூலி குறைந்தாலும் உண்மைக்கூலி குறையாது; இலாபமும் மேம்படாது; எனவே, தொழில் முனைவர்கள் தங்கள் முதலீட்டை அதிகரிப்பதன்மூலம் வேலைக்கான வாய்ப்புகளைப் பெருக்குவர் என்று எதிர்பார்க்க இயலாது என்பது பரோஸின் விளக்கம்.

இக் கட்டத்தில் கீன்ஸ் ஒரு முக்கியமான நடைமுறையை மறந்து விட்டதைக் காணலாம். அதாவது கூலிவெட்டு நிகழ்ந்த மாத்திரத்தில் விலைவாசிகள் சரியும் என்று கீன்ஸ் நினைப்பதாகத் தெரிகிறது. உண்மையில் கூலியில் ஏற்படும் வெட்டு, விலைவாசிகளை உடனடியாகப் பாதிக்க இயலாது; சற்றுக் காலதாமதத்தின் பின்னரே கூலிவெட்டின் பலன் விலைவாசிகளில் பிரதிபலிக்கும். இந்த இடைப்பட்ட காலத்தில் இறுதியாக்கச் செலவுகளைக் காட்டிலும் பொருள்களுக்குள்ள விலைவாசிகள் அதிகமாக இருப்பதைக் காணலாம். எனவே உற்பத்தியைப் பெருக்குவது இலாபகரமானது என்பது அவர்களுக்குத் தெரியும். மேலும், சர்வாதீன சக்திகளும் ஏகபோகமுதலாளித்துவமும் பலம் பெற்று விளங்குகின்ற பொருளாதாரங்களில் செலவுகளிலே ஏற்படும் சிக்கனங்களுக்கேற்ப விலைவாசிகள் குறையுமென்று எதிர்பார்ப்பது நடைமுறைக்கு அவ்வளவு ஏற்றதன்று என்றால் மிகையாகாது. இவ்வாறு நிறைபோட்டியை முதற்கோளாக வைத்துக் கீன்ஸ் வளர்த்த வாதம் எத்துணை வலிமைப் பெற்றது என்பது தெற்றெனத் தெரிவதாகும்.

குறுகிய கால அளிப்பு வளைகோடு (Short Period Supply Curves) இடமிருந்து வலமாக மேல்நோக்கிச் செல்லும் என்பது கீன்ஸின் முதற்கோள்களுள் ஒன்றாகும். அதன்படி பணக்கூலி வெட்டப்படும் போது அதை ஈடு செய்து மீறிச் செல்லும் வகையில் இறுதிநிலை முதன்மைச் செலவு (Marginal Prime Cost) அதிகரிக்கும். எனவே,

மொத்தத்தில் இறுதியாக்கச் செலவு குறையாது; ஆதலின் வேலையினளவும் அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கலாகாது என்று கீன்ஸ் எடுத்துரைத்துள்ளார். பொருளாதாரத்தில் பயன்படுத்தப்பட்டு வரும் நுட்பவினை முறை (Technique) தேக்கமுற்றாலன்றி, இத்தகைய முதற்கோள் பொருத்தமாகாது என்பது ஜேக்கப் வைனர் (Jacob Viner), டன்லப் (Dunlop), டார்ஷிஸ் (Tarshis) போன்ற பொருளாதாரப் பண்டிதர்களின் கருத்து.

பொதுவாகப் பணக்கூலிக்கும் உண்மைக்கூலிக்குமுள்ள உறவு இவ்விதமாகத்தானிருக்கும் என்று எளிதில் கூற முடிவதில்லை. பணக்கூலி குறையும்போது விலைவாசிகள் விழுமாதலால் மெய்க்கூலி அதிகரிக்கும் என்பது கீன்ஸின் கருத்து. ஆனால், புள்ளிவிவரங்களை அலசிப்பார்க்கும்போது அத்தகைய உறவு சரியென்றோ தப்பென்றோ உறுதியாகச் சொல்வதற்கில்லை. டன்லப் மேற்கொண்ட ஓர் ஆராய்ச்சியின்படி சில சமயங்களில் பணக்கூலியும் உண்மைக் கூலியும் ஒரே திக்கில் செல்லுவதைக் காணலாம்; வேறுசில வேளைகளில் அவை எதிர்த்திக்குகளில் செல்லுவதைக் காணலாம் என்று தெரிய வந்தது. ஆனால், டார்ஷிஸின் கணிப்பின்படி பணக்கூலியும் உண்மைக் கூலியும் எப்போதும் ஒரே திக்கில்தான் செல்லும் என்று கூறியுள்ளார். எனவே, புள்ளிவிவரங்கள் காட்டும் முடிவுகள் எல்லாரும் ஒத்துக் கொள்ளக்கூடிய வகையில் அமையவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

பணக்கூலியை வெட்டுவதால் போட்டிச் சக்திகள் தலைகால் தெரியாமல் ஆட்டம் போடுவதன் பயனாக விலைவாசிகள் தலைகுப்புற விழுந்து விடுமோ எனத் தொன்மைப் பொருளாதாரிகள் அஞ்சினர். விலைவாசிகளின் அத்தகைய போக்குப் பொருளாதாரத்தைச் சின்னாபின்னமாக்கிச் சிதைத்து விடமுடியும் என்பதை அவர்கள் நன்குணர்ந்திருந்தார்கள். குறிப்பாக, விலைவாசிகள் மேன்மேலும் குறைந்து கொண்டே போகுமோ என்ற பயம் குடிகொண்டால் முதலீடு செய்பவர்களும் துணிந்து செயல்பட இயலாது. நுகர்வோரும் செலவிடத் தயங்குவார்கள். எனவே, பணக்கூலிவெட்டு என்ற பாணத்தை அடிக்கடி பிரயோகம் செய்வதற்கு அவர்கள் விரும்பவில்லை. கூலிவெட்டு, அவசியமென்று பட்டால் கொஞ்சங்கொஞ்சமாகக் கூலியைக் குறைப்பதைவிட ஒரேயடியாக விரும்பிய அளவில் கூலியை வெட்டுவது விரும்பத்தக்கது என்று அவர்கள் கருதி வந்தனர். எனினும், கூலிவெட்டினால் ஆக்கச் செலவுகளின் அமைப்பு மாறுவதுடன் பணவாட்டமும் ஏற்படுமாதலால், பொருளாதாரம் நோய்வாய்ப்பட்டு அல்லற்பட ஏதுவாகும் என்பதை மறந்துவிட முடியாது. எனவேதான் பணக்

கூலியை வெட்டுவது என்ற கொள்கையைக் கீன்ஸ் கடுமையாக எதிர்த்து வந்தார் என்று தெரிகிறது.

**வேலையின்மைக்குக் கீன்ஸ் குறித்த மருந்துகள் :**

**உண்மைக்கூலி வெட்டு :** பணக்கூலிவெட்டை எதிர்த்ததற்கு வேறு சில காரணங்களுமுண்டு. முதலாவது, குறிப்பிட்ட நிறுவனங்களிலும் தொழில்துறைகளிலும் மட்டுமே பணக்கூலிவெட்டைப் புகுத்த முடியும். பொருளாதாரம் முழுவதிலுமுள்ள தொழிலாளரனைவரையும் ஒரே சீராகப் பாதிக்கக்கூடிய வகையில் உழைப்பாளரின் பணக்கூலியைக் குறைக்க முடியாது. மாறாக, பணக்கூலியில் கைவைக்காமல் அப்படியே விட்டுவிட்டுப் பணவீக்க முறைகளைக் கையாண்டால் உழைப்பாளரின் உண்மைக்கூலி ஒரே சீராகப் பாதிக்கப்படும் என்பது கீன்ஸின் கருத்து. தொழிலாளரின் மனோபாவத்தையொட்டிக் கீன்ஸ் கொண்டிருந்த அபிப்பிராயங்களினடியாக அமைவது இக் கொள்கை. பொதுவாகப் பணக்கூலியை மட்டந்தட்டும் பொருட்டு மேற்கொள்ளப்படும் முயற்சிகளைக் கண்டு தொழிலாளர் வாளாவிருப்பதில்லை; கடுமையாக எதிர்த்துப் போராடுவர் என்பது கீன்ஸின் நம்பிக்கை. தொழிலாளரின் இத்தகைய மனோபாவத்துக்குரிய காரணங்களுண்டு.

சான்றாக, பணக்கூலிவெட்டு ஒரு சில நிறுவனங்களையோ தொழில்களையோ பாதிக்குமேயல்லாது தொழிலாளரனைவரையும் பாதிப்பதன்று. எனவே, பாதிக்கப்பட்டவர்கள் அதிருப்தியுற்றுப் பணக்கூலிவெட்டை எதிர்த்துப் போராட முற்படுவார்கள். மாறாக, பணவீக்க முறைகளால் பரப்பப்படும் மாயை தொழிலாளரின் வாங்கும் சக்தியைக் குடித்தபோதிலும் உண்மை வருவாய் உறிஞ்சப்படுகிறது என்பதைத் தொழிலாளர் எளிதில் உணருவதில்லை. மேலும், வாடிவரும் வாங்கும் சக்தி ஒரு சிலரை மட்டும் பாதிப்பதன்று. தொழிலாளரனைவரையும் ஏன், வட்டி, வாரம் ஆகிய ஊதியங்களைப் பெறுபவர்களையும்கூட பாதிப்பதாக உள்ளது. எனவே, பணவீக்கத்தால் வற்றி வரும் உண்மைவருவாயைப் பாதுகாக்கும் வகையில் போராட்டங்கள் வெடிப்பதில்லை என்பது கீன்ஸின் அபிப்பிராயம். குறிப்பாக, ஒரு குறிப்பிட்ட தொகுதியினரைப் பாதிக்கக்கூடிய உண்மைக்கூலிவெட்டை எதிர்ப்பதுபோல் அனைவரையும் பாதிக்கக்கூடிய உண்மைக்கூலிவெட்டைத் தொழிலாளர் அவ்வளவு காரசாரமாக எதிர்ப்பதில்லை என்பது கீன்ஸின் கருத்து.

மேலும், பணவீக்கத்தைக் கொஞ்சங்கொஞ்சமாக மேற்கொள்ள முடியும். அதன் பயனாக, விலைவாசிகள் கொஞ்சங் கொஞ்சமாக ஏறி வருமானால் அதைக் கண்டு தொழிலாளர் திடுக்கிட்டுப் பரபரப்படைந்து போராட்டப் பாதையை நாடுவதில்லை. மாறாக,

விலைவாசிகள் விண்ணென்று ஏறி வருமானால் அது எல்லாரையும் ஒரே சீராகப் பாதித்தாலுங்கூட தொழிலாளர் போராட்டங்கள் ஆங்காங்கே வெடித்துப் பொருளாதாரம் முழுவதையும் பற்றிப் பரப்பும் என்று எதிர்பார்க்கலாம். நிதானமாகக் கையாளப்படுமானால், ஒரு குறிப்பிட்ட தொகுதியினரை மட்டும் பாதிக்கக்கூடிய பணக்கூலி வெட்டை எதிர்ப்பதைப்போல் தொழிலாளரனைவரையும் பாதிக்கக் கூடிய பணவீக்க முறைகளைத் தொழிலாளர் எதிர்த்துப் போராடுவதில்லை என்பது கீன்ஸின் அடிப்படையானதோர் கருத்தாகும். எனவேதான் வேலையின்மையைப் போக்குவதற்குத் தொன்மைப் பொருளாதாரிகள் குறித்த பணக்கூலிவெட்டு என்ற மருந்தை நிராகரித்துக் கீன்ஸ் பணவீக்க முறைகளின்மூலம் தொழிலாளரனைவரின் உண்மை வருவாயையும் வற்றச் செய்யும் முறையை வேலையின்மையைப் போக்கக்கூடிய ஒரு சமயசஞ்சீவியாகக் கருதலானார். இந்த அடிப்படையிலேதான் கீன்ஸ் குறித்த ஏனைய மருந்துகளும் வடித்தெடுக்கப்பட்டன என்றால் மிகையாகாது.

ஆயின், தொழிலாளரனைவரையும் ஒரே சீராகப் பாதிக்கக்கூடிய வகையில் உண்மைக்கூலியை வெட்டுவது என்ற கீன்ஸீயக் கொள்கையைப் பலரும் பலவாறாக விமர்சனம் செய்துள்ளனர். முக்கியமாக, அனைவரையும் பாதிக்கக்கூடிய பணவீக்க முறைகளை தொழிலாளர் எதிர்க்க மாட்டார்கள் என்று எண்ணுவது பகற் கனவாகும் என்பது அவர்களது வாதம். நுகர்வுப் பொருள்களின் விலைவாசி உயருவதைக் கண்டு வாளாவிருக்கும் தொழிலாளரைக் காண்பதரிது. மேலும், பணவீக்கம் தொழிலாளர் அனைவரையும் ஒரே சீராகப் பாதிக்கும் என்று எண்ணுவதும் தவறாகும் என்று அவர்கள் சுட்டிக்காட்டியுள்ளனர். பொருளாதாரம் சீராக இயங்குவதற்குச் சராசரி கூலியோ, சராசரி விலையோ ஒன்றுக்கொன்று ஏற்றவகையில் தொடர்பு கொண்டிருந்தால் மட்டும் போதாது. அதைவிட, குறிப்பிட்ட பொருளின் விலைக்கும் ஏனைய பொருள்களின் விலைகளுக்குமுள்ள உறவையோ ஒரு குறிப்பிட்ட தொழிலில் நிலவிவரும் கூலிவீதத்துக்கும் ஏனைய தொழில்களில் காணப்படும் கூலிவீதத்துக்கும் உள்ள உறவையோ, ஒரு குறிப்பிட்ட தொழிலில் கூலிவீதத்துக்கும் அத் தொழிலில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களின் விலைவாசிகளுக்கும் உள்ள உறவையோ உன்னிப்பாகக் கவனித்து வருவது மிகுந்த பயனளிப்பதாகும். உண்மையில், பொருளாதாரம் முழுவதையும் குறிக்கின்ற சராசரி உறவுகள் அப் பொருளாதாரத்தின் உறுப்புகளினிடையே காணப்படும் முரண்பாடுகளையும், சீரழிவுகளையும் சிக்கல்களையும் மூடிமறைப்பதுபோல் இருக்கும் என்று சிலர் கீன்ஸ் கையாண்டு வந்த ஆராய்ச்சி முறையைப் பற்றிக் குறைகூற முற்பட்டனர்.

வளைந்து கொடுக்கக் கூடிய பணக்கொள்கையை விட்டுவிட்டு, வளைந்து கொடுக்கக்கூடிய கூலிக் கொள்கையைக் கடைப்பிடிக்க

முயல்வது அறிவீனமாகும் என்பது கீன்ஸது வாசகமாகும். பணக் கூலியை வெட்டுவது அநியாயமான செயல் என்றுகூட அங்கலாய்த் துள்ளார்! அதே சமயத்தில் உண்மைக் கூலியை வெட்டுவதற்கு அவர் தயங்கியதே இல்லை. உண்மையில் பணவீக்கத்தைக் கொண்டு ஒரே வேட்டில் இரண்டு பறவை என்பதுபோல, வட்டிக்குக் கடன் கொடுக்கும் கடன்காரர்களை ஏய்ப்பதன்மூலம் கடன்பளுவையும் குறைக்கலாம்; அதேசமயத்தில் உழைப்பாளரின் உண்மை வருவாயையும் உறிஞ்சலாம்! தொழிலாளரின் வயிற்றிலும் அடி விழும் என்ற உண்மையைக் கீன்ஸ் பகிரங்கமாகப் பறைசாற்றுமல்,மூடி மறைக்கவே விரும்பினுர் என்று சொல்ல வேண்டும். மற்றபடி, உண்மைக் கூலியை வெட்டுவது நியாயமானது என்று எடுத்துரைக்க முடியுமா? மாருக, லேவாதேவி செய்பவர்கள், தொழிற்றுணிவு கொண்டவர்களைப்போன்ற ஆக்கமான துறைகளில் தங்கள் சேமிப்புகளைப் புகுத்தாமல் வட்டிக்குவட்டி வாங்கும் கொடியவர்கள் என்ற எண்ணம் கீன்ஸிடம் ஆழமாக வேறூன்றியிருந்தது. எனவே பணவீக்க முறைகளின்மூலம் வட்டிக்கடைக்காரர்களின் அடிமடியைத் தடவினுலும் பரவாயில்லை; அது நியாயமானதுங்கூட என்று கீன்ஸ் வாதாடி வந்தார் போலும்.

### வட்டிவீதக்கட்டுப்பாடும் பணப்பெருக்கமும்

கூலியை வெட்டும்போது வட்டிவீதமும் குறைந்துபட்டாலன்றி, வேலைக்கான வாய்ப்புகள் பெருகுவதரிது என்பது கீன்ஸீயக் கருத்துகளிலொன்று. மாருக, கூலியைக் குறைக்கும்போது வட்டிவீதம் கூடி வருமானுல், வேலையின்மையைப் போக்க இயலாது என்பது அவரது நம்பிக்கை. ஒரு பொருளாதாரத்திலுள்ள உற்பத்திச் சாதனங்களில் காணப்படும் எச்சவல்லமைகளை முழுவதுமாகப் பயன்படுத்த வேண்டுமானுல் ஒரு சாதனத்தின் விலையை மட்டும் சாதகமாக மாற்றினுல் போதாது; ஏனைய சாதனங்களின் ஊதியங்களையும் சாதகமாக மாற்றுவது அவசியம் என்பதைக் கீன்ஸ் வலியுறுத்தினுர். அதன்படி வட்டிவீதத்தைக் குறைத்தால்தான் முதலீடு தூண்டப்படும்; வேலைக்கான வாய்ப்புகள் பெருகும் என்று பொருளாகும். அதாவது, நிறைவேலையை நிலைநாட்ட வேண்டுமானுல் சொத்துகளின் உண்மை மதிப்பு மாருமல் பாதுகாக்க வேண்டும். நீண்டகால வட்டிவீதம் அளவுக்கதிகமாக இருந்தால், முதலினச் சொத்துகள் எப்படித் தங்கள் மதிப்பை இழக்க நேரிடும் என்பதை முந்திய அத்தியாயத்தில் கண்டோம். வேலையின்மை மிகுந்திருக்கும்போது முதலினச் சொத்துகளின் மதிப்புக்குன்றியிருக்கும் என்பது புலனுகும். அந் நிலையில் மந்தத்தைப் போக்கவேண்டுமாயின் முதலினச் சொத்துகளின் மதிப்பை உயர்த்தும் வகையில் வட்டிவீதத்தை மட்டந்தட்ட வேண்டும். வட்டிவீதம் குறைந்தால் முதலீடு தூண்டப்படும்.

எனவே, வருவாயும் வேலைக்கான வாய்ப்புகளும் பன்மடங்காகப் பெருகும். முதலினச் சொத்துகளின் மதிப்பு உயருவதால் அச் சொத்து களுக்கு உடையவர்களின் உழைப்பில்லாத வருமானம் (unearned income) அதிகரிக்கும். அதன் பயனாக, நுகர்வு நாட்டம் மேலும் பலப்பட்டு முதலீட்டைத் தூண்டி சுபிட்சப் பாதைக்கு இழுத்துச் செல்லும் என்பது கீன்ஸின் திடமான நம்பிக்கை.

உருப்படியான பணக்கொள்கையின்மூலம் வட்டிவீதத்தின் கொட்டத்தை அடக்கலாம் என்பது கீன்ஸின் கருத்து. முதலீட்டி னளவை நிருணயம் செய்வதில் வட்டிவீதத்துக்கும் முக்கிய மானதோர் பங்கு உண்டு என்று கண்டோம். முதலினச் சொத்துகள் பெருகுவதன் காரணமாக முதலீட்டின் இறுதிநிலைத்திறன் குன்றி வருமானால், வட்டிவீதத்தைக் குறைப்பதன்மூலமாக அச் சோர்வைப் போக்கி முதலீட்டைத் தூண்டினால் வருவாயும் வேலைக்கான வாய்ப்புகளும் மேன்மேலும் பெருக ஏதுவாகும் என்பது கீன்ஸின் துணிபு. ரொக்க விருப்பத்தின் காரணமாக, குறிப்பாக, ஊகவாணிக நோக்கத்தினடியாகப் பிறக்கும் ரொக்க விருப்பத்தின் காரணமாக வட்டிவீதம் வளரும் நிலையிலிருந்தாலும் பணத்தினளவைப் பொறுத்த மான அளவில் பெருக்கினால், வட்டிவீதத்தைக் கட்டுப்படுத்தி மட்டந் தட்டலாம் என்பது அவரது நம்பிக்கை.

பணக்கொள்கையை ஏற்றவகையில் நிருணமாணித்து அமைத்து நிருவகிக்கும் ஆற்றலும் அதிகாரமும் படைத்த மையவங்கியினால் தான் பணத்தினளவைக் கட்டுப்படுத்துவதன்மூலம் வட்டி வீதத்தையும் கட்டுப்படுத்தமுடியும் என்று கீன்ஸ் வலியுறுத்தி வந்தார்.

மறுகழிவு வீதத்தைக் குறைப்பது, கடன்பத்திரங்களை வாங்குவது, வாணிகவங்கிகள் சட்டவரம்புக்கு உட்பட்டு வைத்திருக்க வேண்டிய காப்புநிதியினளவைக் குறைப்பது போன்ற பல கருவி களைக் கையாள்வதன்மூலம் வங்கிமுறை முழுவதுமே தாராளமான கடன்கொள்கையைக் கடைப்பிடிக்கும்படி தூண்டமுடியும். அவ்வாறு பணத்தினளவைக் கட்டுப்படுத்தினால் வட்டிவீதத்துக்கு மூக்கணாங்கயிறு போட்டது போலாகும் என்று கீன்ஸ் கருதிவந்தார். பணம்பற்றிய சித்தாந்தத்தில் இடம் பெற்ற இக் கருத்து பொதுக் கோட்பாட்டில் மேலும் வலியுறுத்தப்பட்டது என்னலாம்.

ஆனால், உண்மையிலேயே இதுகீன்ஸீயக் கோட்பாட்டுக்கு ஆதரவு தருவதாகத் தெரியவில்லை. சான்றாக, 1938-40 வரையுள்ள காலத்தில் ஆக்ஸ்போர்ட் பல்கலைக்கழகத்தினர் நடத்திய புள்ளிவிவர ஆராய்ச்சியின்படி வட்டிவீதத்துக்கும் (கடனுக்குக் கொடுக்கப்படும் விலைக்கும்) முதலீட்டுக்கும் அவ்வளவு நெருங்கிய தொடர்பு இருந்த தாகத் தெரியவில்லை.

மேலும், அளிக்கப்படும் பணத்தினளவு மாருத நிலையில் வட்டி வீதம் குறைவதால் மட்டும் வேலைக்கான வாய்ப்புகளைப் பெருக்க முடியும் என்று நம்ப இயலாது. பணத்தினளவு அதிகரிக்காதபோது வட்டிவீதம் குறைந்தால் ரொக்கப் பணத்தையே ஒரு சொத்தாக மதித்து அவ் வடிவில் நிகழ்காலச் சேமிப்புகளைப் பதுக்கிவைக்கப் பலர் முற்படுவார்கள் என்று எதிர்ப்பார்க்கலாம். ஆதலின், வட்டிவீதம் குறையும்போது பணத்தின் அளவையும் ஏற்றவகையில் அதிகரித்தால் தான் விரும்பிய பலன்கிட்டும் என்பது விளங்கும். சுருங்கக் கூறின், கூலியும் குறையாமல் பணத்தினளவும் பெருகாத நிலையில் வட்டி வீதத்தைக் குறைப்பதால் வருவாயும் வேலையினளவும் குறையுமே யன்றிக் கூடாது என்பது குறிப்பிடத்தக்கது. எனவே, வட்டிவீதத்தைக் குறைப்பதால் மட்டும் வேலையின்மையைப் போக்கலாம் என்று மனப்பால் குடிப்பது தவறு. பணப்பெருக்கமும் ஏற்றவகையில் ஏற்பட்டால்தான் வேலைக்கான வாய்ப்புகளை அதிகரிக்கமுடியும் என்பது கவனிக்கற்பாலது. இக் கோணத்தில் நோக்கும்போது கீன்ஸ் அளவுக்கு மிஞ்சி வட்டிவீதத்தின் முக்கியத்துவத்தை வலியுறுத்தினுர் என்பது புலனுகும்.

அரசாங்கப் புள்ளிவிவரங்களும் கீன்ஸீயக் கோட்பாட்டைப் பொய்ப்பிப்பதாகவே உள்ளன. வட்டிவீதம் குறைந்தால் வேலைக் கான வாய்ப்புகள் பெருகும் என்பது கீன்ஸது கருத்து. ஆனுல், இரண்டாவது உலகப்போருக்குப் பின்னுலுள்ள புள்ளிவிவரங்கள் அத்தகையதோர் தொடர்பை நிலைநாட்டுவதாக இல்லை. இத்தொடர்பைப் பின்வரும் பட்டியலில் காணலாம்.

பட்டியல் 4

வட்டிவீதத்துக்கும் வேலையின்மையின் வீதத்துக்குமுள்ள உறவு

| ஆண்டு | வட்டிவீதம் | வேலையின்மையின் வீதம் |
|---|---|---|
| 1949 | 1·49 | 5·5 |
| 1950 | 1·45 | 5·0 |
| 1951 | 2·16 | 3·0 |
| 1952 | 2·33 | 2·7 |
| 1953 | 2·52 | 2·5 |
| 1954 | 1·58 | 5·0 |
| 1955 | 2·19 | 4·0 |
| 1956 | 3·31 | 3·0 |
| 1957 | 3·81 | 4·3 |
| 1958 | 1·54 | 6·8 |

மேலும் பொருத்தமான வங்கிக்கொள்கையின்மூலமாக மட்டும் வட்டிவீதத்தைக் குறைக்க முடியுமென்று சிலர் நம்பவில்லை. கீன்ஸுக்கும் இது புலப்படாமலில்லை. அத்துடன் வட்டிவீதத்துக்கும் முதலீட்டுக்கும் அவ்வளவு நெருங்கிய உறவு கிடையாது என்பதும் கீன்ஸுக்குத் தெரிந்திருந்தது. கீன்ஸைக் காட்டிலும் அவரது மாணவ பரம்பரைக்குத்தான் பணக்கொள்கையிலுள்ள குறைபாடுகள் சரிவரத் தெரியவந்தது என்பது சிலரது அபிப்பிராயம். பணக் கொள்கையின் ஆற்றலைப் பற்றிக் கீன்ஸ் தமது சந்தேகத்தை வெளிப்படுத்தினர் என்பது உண்மை. இங்கிலாந்தில் இருந்துவந்த சூழ்நிலையில் பணக்கொள்கை அவ்வளவாக வெற்றி பெறவில்லை என்பதே அத்தகைய அவநம்பிக்கைக்கு மூலகாரணம். எனவே, அந்த அனுபவம் எக் காலத்துக்கும் எல்லா நாடுகளுக்கும் பொருத்த மானது என்று சொல்ல இயலாது.

பணவியல் சீர்திருத்தப்பற்றிய சிந்தனைகளை வெளியிட்டபோது கீன்ஸுக்கு வங்கிக்கொள்கையின் வலிமையின்மீது அலாதி நம்பிக்கை யிருந்தது. பணம் பற்றிய சித்தாந்தத்திலும் அந் நம்பிக்கை தளராமல் பலம் பெற்று விளங்கியது. அதன் பின்னல் ஏற்பட்ட பெரும் பொருளாதார மந்தம் அந்த நம்பிக்கையை அடியோடு உலுக்கிவிட்டதாகத் தெரிகிறது. அதன் காரணமாகத்தான், பொதுக் கோட்பாட்டில் பணக்கொள்கையின்மீது அவநம்பிக்கை தெரிவிக்க லானர்போலும். ஆனல், பணக்கொள்கையின்மீது அவருக்கு ஏற்பட்ட அவநம்பிக்கை அளவுக்கு மிஞ்சி மிகைப்படுத்தப்பட்டிருப் பதாகச் சிலர் அபிப்பிராயப்படுகிருர்கள். உதாரணமாக, நெடுங்கால வட்டிவீதம் அவ்வளவு எளிதாக அசைந்து ஆட்டங்கொடுக்கும் என்று சொல்ல இயலாது. அப்படியிருக்க அதனடியாகப் பிறக்கும் எதிர்பார்ப்புகள் மட்டும் ஏன் சூருவளியிற் சிக்கிய மரக்கலம்போல அலசடிப்படவேண்டும் என்பது புரியவில்லை என்பது அவர்களது கருத்து.

முதிர்ச்சியுற்ற பொருளாதாரங்களில் முதலினச்சொத்துகள் எண்ணிறந்து காணப்படுவதால் புதிதாக உருவாக்கப்படும் முதலீடு களின் இறுதிநிலைத்திறன் வேகமாகக் குன்றிவருவது இயல்பு. எனவே, வட்டிவீதம் வளைந்து கொடுத்தாலுங்கூட முதலீட்டு இறுதிநிலைத் திறனில் ஏற்படும் வீழ்ச்சியை ஈடுசெய்ய இயலாது. மேலும், நெடுங்கால வட்டிவீதம் குறைந்தாலும் அதன் பயனுகத் தூண்டப் படும் முதலீட்டு முயற்சிகள் சித்திபெறுவதற்குக் காலம் பிடிக்கும். அத்துடன், பொருளாதார மந்தத்தின்போது முதலீட்டு இறுதிநிலைத் திறன் மிகவும் தாழ்ந்து போகுமாதலால், அதன் போக்கை நிவர்த்தி செய்து முதலீட்டு முயற்சிகளில் மறுமலர்ச்சி ஏற்படுத்தவேண்டு

மானால் மையவங்கிகள் பேரளவில் வெளிச்சந்தை நடவடிக்கைகளில் ஈடுபடவேண்டும். மையவங்கியின் மனோபாவம் கடன்பத்திரங்களைக் கையாள்பவர்களுக்கு நன்றாகத் தெரியுமாதலால் மையவங்கி அப் பத்திரங்களை அதிக விலை கொடுத்து வாங்கி, மலிவாக விற்க வேண்டியநிலை ஏற்படும். அதன் விளைவாக மையவங்கிப் பேரளவில் நஷ்டமடைவதுடன், மையவங்கியின் தூண்டுதலுக்கு இசைந்து செயல்படுபவர்களும் நட்டப்பட நேரிடும். மாறாக, மையவங்கியுடன் ஒத்துழைக்க மறுப்பவர்கள் மட்டும் இலாபமடைவார்கள். இது வேடிக்கையானதோர் விளைவு என்பது தெளிவு. பணக்கொள்கையிலுள்ள இத்தகைய சிக்கல்களினால்தான் கீன்ஸ் அதன் ஆற்றலில் அவநம்பிக்கை கொள்ளலானார் என்று எண்ண இடமுண்டு.

பற்றுக்குறை நிதியாக்கம்

பொதுத்துறையைப் பொறுத்த அளவில் பொதுமக்களிடமும் வங்கிகளிடமும் கடன்வாங்குதல், செலாவணியைப்பெருக்குதல் ஆகியவையே பற்றுக்குறை நிதியாக்கம் எனப்படும். இப்படித் திரட்டப்படும் பணம் தனியாரின் கையில் முடங்கிக் கிடக்கும் பணத்தை மிஞ்சாத நிலையில், பொருளாதாரம் முழுவதையும் பொறுத்த அளவில் பற்றுக்குறை நிதியாக்கம் எதுவும் நிகழ்வதாகக் கொள்ள முடியாது என்பது தெளிவு. இருப்பினும், அரசு வரவுக்கு மிஞ்சிச் செலவு செய்வதால் ஏற்படும் பற்றுக்குறையைத் தனியாரின் துறையிலுள்ள சேமிப்பைக் கொண்டு நிரப்ப முயல்கின்றது.

குறிப்பாக, கடன் வாங்கிச் செலவு செய்வதால் சோம்பிக் கிடக்கும் சேமிப்புச் செயல்படுத்தப்படுகின்றது. இதில் தனிப்பட்டவரின் சேமிப்பு, அரசின் பற்றுக்குறையை நிவர்த்திசெய்ய உதவுகிறது. அரசின் கடன்பத்திரங்களை வாங்கியவர்கள் பத்திரத்தில் குறித்த காலத்தில் வட்டியும் முதலுமாகத் தங்களுக்குச் சேரவேண்டிய தொகையைத் திருப்பிப்பெற வாய்ப்பு உண்டு. அரசின் கடனைச் சுமக்கும் பொறுப்பு, பெரும்பாலும் வருங்காலக் குடிகளையே சாரும். அத்தகைய கடன்பளு ஏழைகளையே மிகுதியாக அழுத்தும் என்று எண்ண இடமுண்டு. இருப்பினும், தனியாரின் துறையில் சோம்பிக் கிடக்கும் சேமிப்பைச் செயல்படுத்தும் வகையில் பொதுத்துறையின் கடன் கொள்கையை மேற்கொண்டு பொதுத் துறையின் செலவில் ஏற்படும் துண்டை ஈடுசெய்வதால், மந்தப்பட்ட பொருளாதாரம் சுறுசுறுப்படையும் என்பது கீன்ஸின் கருத்து.

தனிப்பட்டவர்களின் கையில் தேங்கிக் கிடக்கும் சேமிப்பைத் திரட்டுவதுடன் வங்கிகளின் பணப்பெட்டிகளில் தூங்கிக்

கொண்டிருக்கும் பணத்தையும் அரசு தட்டி எழுப்ப முடியும். அத்துடன், மையவங்கியின் துணைகொண்டோ தனது சொந்தப் பொறுப்பிலோ அரசு செலாவணியையும் நாணயங்களையும் வெளியிட்டு அவற்றின் உதவியால் தனது செலவுகளைச் சரிக்கட்ட முற்படலாம். சுருங்கக் கூறின், அச்சு இயந்திரமும் காகிதமும் கைவசமுள்ளவரையில் செலாவணியைப் பற்றி அரசு கவலைப்பட அவசியமில்லை. 'பின்னால் தருகிறேன்' என்று கூறும் அரசுக்குக் கொடுத்துதவும் வங்கிகள் இருக்கும்வரை கடனுக்குக் கஷ்டமில்லை. இவ்வாறு பற்றுக்குறை நிதியாக்கத்தின் துணைகொண்டு மேற்கொள்ளப்படும் அரசின் செலவுகள் எந்த அளவில் இருக்க வேண்டும்? எவ்வளவு காலம் நீடித்திருக்க வேண்டும்? என்ற கேள்விகள் எழலாம். முதற்கேள்விக்குத் தனியாரின் துறையில் எவ்வளவு பணம் முடக்கப்படுகின்றதோ அதற்கு இணையாக அரசு பற்றுக்குறை நிதியாக்கம் செய்ய வேண்டும் என்பது கீன்ஸின் அபிப்பிராயம். பதுக்கல் அதிகமாக இருந்தால் அதற்கேற்ப அரசு, வரவுக்கு மிஞ்சிய செலவை மேற்கொள்ளவேண்டும் சிறிதளவே சோம்பிக் கிடந்தால் அதற்கேற்ப அரசு தனது செலவில் ஏற்படும் துண்டையும் சுருக்கிக் கொள்ளலாம் என்பது அவரது கருத்து.

ஒருமுறை முடுக்கிவிட்டாலே போதுமான பெட்ரோல் உள்ள மோட்டார் வண்டியைப்போல பொருளாதாரம் தானாகத் தொடர்ந்து இயங்கிக்கொண்டிருக்கும் என்று சிலர் கூறி வந்தனர். உண்மை அப்படியில்லை. சாவியால் இயங்கும் விளையாட்டுக்காரைப் போன்றது மந்தம் பிடித்த பொருளாதாரம்; தொடர்ந்து சாவி கொடுத்துக் கொண்டேயிருந்தாலன்றி இயங்காது என்பது மற்றொரு சாராரின் கருத்து. உண்மை இந்த இரண்டு நிலைகளுக்கும் இடைப் பட்டது எனலாம். அரசின் தூண்டுதல் காரணமாகத் தனியார் துறையில் எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கை பலப்பட்டு, அதன் பயனாக உற்பத்தியும் வருவாயும் வளரத் தொடங்கினால் அரசு கொஞ்சங்கொஞ்சமாகத் தனது செலவுகளைக் குறைத்துக் கொள்ள ஏதுவாகும் என்பது கீன்ஸின் அபிப்பிராயமாகும். பற்றுக் குறை நிதியாக்கம் எவ்வளவு தற்காலிகமானது என்ற கருத்தை மாக்மில்லன் குழுவில் அங்கம் வகிக்கும்போதே கீன்ஸ் வெளியிட் டார் என்று தெரிகிறது. இருப்பினும் ஏ. ஈ. கான் (A. E. Khan) வருவாய்ப் பெருக்கியைப் பற்றி வெளியிட்ட கருத்துகளை ஒட்டிக் கீன்ஸீயக் கருத்துகள் தெளிவடைந்து பொதுக்கோட்பாட்டில் இடம் பெற்றுள்ளன என்னலாம்.

### பொதுத்துறைச் செலவுகளைப் பெருக்குதல்

பொருளாதாரம் முழுவதையும் எடுத்துக் கொண்டால் செலவினங்களைத் தனியாரின் நுகர்ச்சி, தனியாரின் முதலீடு, அரசு

நுகர்ச்சி, அரசு முதலீடு, அயல்நாட்டு முதலீடு என்று ஐந்து வகையாகப் பகுக்கலாம். மந்தத்தின் அறிகுறிகள் தென்படும்போது, முதலாவது தனியாரின் முதலீடும் தனியாரின் நுகர்ச்சியும் குறைபடும். அதேசமயத்தில் தனியாரின் சேமிப்பும் வங்கிகளில் அவர்கள் வைப்பாகப் போட்டு வைத்திருக்கும் தொகையும் குவியும். இவ்வாறு தனியாரின் செலவினங்கள் குன்றி, சேமிப்புச் செம்முவதால் பலரது வருவாய் அடைபடும். இக் குறையை ஈடுசெய்ய வேண்டுமானுல் அரசின் செலவை அதிகரிக்க வேண்டும் அல்லது அயல்நாட்டு முதலீட்டைப் பெருக்க வேண்டும் என்பது கீன்ஸ் குறித்த மருந்துகளுள் ஒன்றுகும்.

இறக்குமதியை மிஞ்சிய ஏற்றுமதி, ஈட்டுறுதி, கடற்கடவு, கடனுக்குவட்டி போன்ற சேவைகளின் வாயிலாகக் கிடைக்கும் நிகர வருவாய் ஆகிய வரவினங்களைக் கொண்டே அயல்நாட்டு முதலீட்டை அதிகரிக்க முடியும். இதைப் பற்றி ஏற்கெனவே விவரித்துள்ளோம்.

அரசின் செலவுகளை நடப்புச் செலவுகள், முதலினச் செலவுகள் என்று பகுக்கலாம். நடப்புச் செலவுகளில் நிருவாகம், இராணுவம், கல்வி, சுகாதாரம் ஏனைய பொதுநலச் செலவுகள், கடனுக்குவட்டி முதலியன அடங்கும். முதலினச் செலவுகளில் முதலீடும், கடன் வழங்குதலுமே முக்கியமானவை. பொருளாதார மந்தத்தைப் போக்க வேண்டுமாயின் மக்களது வாங்கும் சக்தியைப் பெருக்க வேண்டும். வேலை இழந்தோருக்கு நிவாரணம் வழங்குவதன்மூலம் அவர்களது வாங்கும் சக்தியை நேரடியாகப் பலப்படுத்தலாம். அத்துடன், முதியோருக்கு உபகாரச்சம்பளம், சமூகப்பாதுகாப்பு, தாய், சேய் பராமரிப்பு, கட்டாய இலவசக் கல்வி, இலவச வைத்தியவசதி போன்ற பொதுநலச் சேவைகளிலும் அரசு ஏராளமாகச் செலவிட வாய்ப்பு உண்டு.

அமெரிக்கப் பொருளாதாரத்தின் அடித்தளத்தையே ஆட்டி வைத்த பெரும் பொருளாதார மந்தத்தைப் போக்குவதற்கு ஜனதிபதி பிராங்களின் ரூஸ்வெல்ட் (President Franklin Roosvelt) மேற்கொண்ட புதுத்தீர்ப்பில் (New Deal) கீன்ஸீயக் கருத்துகள் நடைமுறையில் செயற்படுத்தப்பட்டன என்பது குறிப்பிடத்தக்கது. குறிப்பாக, நேரடியாக விவசாயிகளுக்கும் வேலையில்லாதவர்களுக்கும் முன்னுள் போர்வீரர்களுக்கும் அளிக்கப்பட்ட பணஉதவிகளும் முதியோருக்கு . உபகாரச்சம்பளம் அளித்தல்போன்ற சமூகப் பாதுகாப்பு நடவடிக்கைகளும் பெரிதும் வெற்றி பெற்றன என்பது வரலாறு கண்ட உண்மை. அவ் வழியைப் பின்பற்றியே பெவரிட்ஜ் திட்டம் (Beveridge Plan) போன்ற பல திட்டங்கள் இங்கிலாந்திலும் உருவாயின.

### பொதுத்துறை முதலீடுகள்

தனியாரின் முதலீட்டில் நம்பிக்கையிழந்த கீன்ஸ் முதலீட்டை பொதுமயமாக்க வேண்டுமென்ற புரட்சிகரமான கருத்தை வெளியிட்டார் என்பது குறிப்பிடத் தக்கது. பொதுமயமாக்குவது என்றால் என்ன என்பதைத் தெளிவுற விளக்கவில்லை என்பது உண்மை. செயல்முறையில் தனித்துறையிலுள்ள முதலீட்டு முயற்சிகள் சோர்வுறும்போது அதை மேற்கொண்டு விறுவிறுப்பூட்டும் வகையில் பொதுத்துறை முதலீட்டைப் பெருக்க வேண்டும் என்ற அடிப்படையிலேயே கீன்ஸும் அவரது மரபைப் பின்பற்றியவர்களும் தங்கள் கொள்கைகளை அமைக்கலாயினர். பொதுத்துறையில் சாலை போடுதல், வீடுகட்டுதல், ஆடுகளம் அமைத்தல், பூங்காவை உருவாக்குதல், காடு வளர்த்தல், மண்ணரிப்பைத் தடுத்தல் போன்ற பொதுநலப் பணிகள் முதலினத்தைச் சாரும்.

பெரும்பாலும் முதலாளித்துவப் பொருளாதாரங்களில் அரசு மேற்கொள்ளும் முதலீடுகளை நேரடியாக இலாபங் கிடைக்காத துறைகளிலேயே செலுத்துபவர் இலாபகரமானவற்றைத் தனியாரின் கையில் விட்டுவிடுவதே பொருத்தமானது என்பது முதலாளித்துவ அரசுகளின் நம்பிக்கை.

பொருளாதாரத்தை, மந்தத்திலிருந்து விடுவிக்கும் பொருட்டு மேற்கொள்ளப்படும் முதலீட்டுச் செலவுகள் கட்டாயம் இலாபம் விளைவிப்பதாகவோ பொதுநலம் பற்றியதாகவோ இருக்க வேண்டு மென்ற நியதியில்லை. வெட்டிச் செலவானாலும் செலவிட்டால் போதும். பிரமிடுகள், கோவில்கள், கோபுரங்கள், கோட்டை கொத்தளங்கள், பள்ளிவாசல்கள், பகோடாக்கள் போன்ற எதுவாயினும் சரி, பணத்தை அள்ளி வீசி மக்களது வாங்கும் சக்தியைப் பெருக்குவதற்கு ஏதுவாக இருந்தால் போதுமானது. எனவேதான், ஆழமான பள்ளங்களைத் தோண்டி அதனடியில் பணத்தைப் புதைத்து வைத்து மண்ணால் மூடிப் பின் அவற்றைத் தோண்டி எடுப்பதற்கு ஏற்பாடு செய்தாலும் பரவாயில்லை; வேலைக்கான வாய்ப்புகளும் வாங்கும் சக்தியும் வளர்ந்தால் போதுமானது என்றெல்லாம்கூட கீன்ஸ் கருதலானார் போலும்!

இக் கருத்தினை ஒட்டியே புதுத்தீர்ப்பின்கீழ் வெள்ளம், மண்ணரிப்பு ஆகியவற்றைத் தடுப்பது, பொருளாதாரம், சமூகம், கலாச்சாரம் போன்ற பன்னோக்கங்களைக் கொண்ட மின்சார நீர்ப்பாசன அணைத் திட்டங்களைக் கட்டுவது போன்ற பொதுத்துறை முதலீடுகள் மேற்கொள்ளப்பட்டன. அவற்றுள் டென்சி நதியில் நிருமாணிக் கப்பட்ட திட்டம் தலையாயது; உலகப் பிரசித்திப் பெற்றதும் ஆகும்,

அத்துடன், நாடெங்கிலுமுள்ள போக்குவரத்துகளைப் பலப்படுத்தக் கூடிய தேசிய முக்கியத்துவம் வாய்ந்த சாலைகள், பாலங்கள் ஆகியவற்றை அமைப்பதும், பொதுநலம் பயக்கக்கூடிய விமான நிலையங்கள், பூங்காவனங்கள், நீர்நிலைகள், பொதுக்கட்டடங்கள், ஆட்டக்களங்கள் ஆகியவற்றை அமைப்பதும் முக்கிய இடம்பெற்றது என்பது குறிப்பிடத்தக்கது. கீன்ஸீயக் கருத்துக்களினடிப்படையிலேயே சமீப காலத்தில் அரசுகள் பல, இராணுவச் செலவுகளைப் பெருத்த அளவில் ஏற்றி வைப்பதன்மூலம் தங்கள் பொருளாதாரங்கள் சரிந்து விழாமல் முட்டுக்கொடுத்துப் பாதுகாத்து வருகின்றன என்பதும் குறிப்பிடத்தக்கது.

பணவீக்க முறைகளால் வேலையின்மையைப் போக்க முடியுமா?

பொதுத்துறை முதலீடுகளுக்கு இத்துணை முக்கியத்துவமளிக்கப்பட்ட போதிலும், வேலையின்மையைப் போக்குவதில் அவை குறிப்பிடத்தக்க சாதனைகளை அடைந்ததாகச் சொல்வதற்கில்லை. சான்றாக, புதுத்திர்ப்பின்கீழ் பற்றுக்குறை நிதியாக்கத்தின்மூலம் மேற்கொள்ளப்பட்ட பொதுச்செலவுகளும் அமெரிக்காவில் விரும்பிய பலனைக் கொடுத்ததாகத் தெரியவில்லை.

பட்டியல் 5

பற்றுக்குறை நிதியாக்கமும் வேலையின்மையும்

| ஆண்டு | பற்றுக்குறை நிதியாக்கம் (பில்லியன் டாலர்) | வேலையில்லாதோர் (மில்லியன்) | உழைப்பாளரின் தொகையில் வேலை இல்லாதோரின் வீதம் |
|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) |
| 1931 | 0·5 | 8·0 | 15·9 |
| 1932 | 2·7 | 12·1 | 23·6 |
| 1933 | 2·6 | 12·8 | 24·9 |
| 1934 | 3·6 | 11·3 | 21·7 |
| 1935 | 2·8 | 10·6 | 20·1 |
| 1936 | 4·4 | 9·0 | 16 9 |
| 1937 | 2·8 | 7·7 | 14·3 |
| 1938 | 1·2 | 10·4 | 19·0 |
| 1939 | 3·9 | 9·5 | 17·2 |
| 1940 | 3·9 | 8·1 | 14·6 |

மேற்கண்ட பட்டியலில் கணிசமான அளவில் பற்றுக்குறை நிதியாக்கம் செய்யப்பட்ட ஆண்டுகளில் வேலையின்மையும் மிகுதியாக

இருந்து வந்தது என்பதைக் காணலாம். அட்டவணையில் கண்ட பத்து ஆண்டுகளில் சராசரி 9.9 மில்லியன் உழைப்பாளர் வேலையின்றி வாடி வந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது. உழைப்பாளரின் மொத்த தொகையில் வேலையில்லாதவர்களின் வீதம் சராசரி 18.6 சதவீதமாக இருந்தது. உழைப்பாளரில் ஐந்திலொருவர் வேலையில்லாமல் திண்டாடினால் பொருளாதாரத்தின் உற்பத்திச்சாதனங்கள் எவ்வளவு தூரம் சோம்பிக் கிடந்திருக்கும் என்பதை எளிதில் புரிந்து கொள்ளலாம்.

பணக்கூலிவெட்டைக் காட்டிலும் பணவீக்க முறைகளே சிறந்தது என்ற கீன்ஸீய மருந்து அவ்வளவு சிறப்பானது என்று கொள்ளலாகாது என்பது ஜேக்கப்வைனரின் கருத்து. கீன்ஸீயக் கொள்கையை ஏற்றுக்கொண்டால் எப்போதும் செலாவணி அச்சகம் தொழிற்சங்கத் தலைவர்களை முந்திக் கொண்டிருக்க வேண்டியது வரும். மேலும், அச்சகத்தின் துணையைக் கொண்டு பெருக்கப்படும் வாய்ப்புகளால் வேலையினளவோடு அதன் தரமும் தன்மையும் மேம்பட்டதாக இருக்குமென்று சொல்வதற்கில்லை என்பது வைனரின் அபிப்பிராயமாகும். உண்மையில் வைனரது முற்கூற்று அப்படியே பலித்துவிட்டது என்று சொல்லலாம். வேலையின்மை ஒழிந்ததோ இல்லையோ அரசு அச்சகமும் தொழிற்சங்கங்களும் ஒன்றையொன்று முந்தவேண்டும் என்ற போட்டியில் ஓடிக்கொண்டிருக்கின்றன என்றால் மிகையாகாது. அச்சகத்தின் உதவி இவ்வளவு தாராளமாகக் கிடைத்தபோதிலும் வேலையின்மையை அடியோடு விரட்டியடித்து விட்டதாகவும் யாரும் ஜம்பமடிக்க முடியாது. மேலும், பற்றுக்குறை நிதியாக்கக் கொள்கைகள் இவ்வளவு ஆழமாக வேரூன்றியபோதிலும், தொன்மைப் பொருளாதாரக் கருத்துகள் மேலோங்கி நின்ற காலத்தில் இருந்ததுபோலவே பின்னரும் மந்தப்பட்ட காலத்தில் அரசு செலவுகள் சுருங்குவதும் விறுவிறுப்புத் தோன்றும்போது அதிகரிப்பதுமாகவே உள்ளன. அதே சமயத்தில், பணவீக்க முறைகளால் உயர்ந்துவரும் வாழ்க்கைச் செலவுகளை உடனுக்குடன் ஈடுசெய்ய வேண்டுமென்ற கோரிக்கைகளை முன்வைத்துப் போராடி வருகின்றன. ஆக்கப் பெருக்கத்திலும் தங்களுக்கு "உரிய" பங்கைக் கேட்பதற்குத் தொழிற்சங்கத் தலைவர்கள் தயங்கியதில்லை.

ஆரம்பத்தில் நிறைவேலை நிலைநாட்டப்படும்வரை பணப் பெருக்கத்தால் எச்சவல்லமை பயன்படுத்தப்பட்டு வேலையினளவு அதிகரிக்குமே ஒழிய விலைவாசிகள் ஏறாது என்று கீன்ஸ் கூற முற்பட்டார். பின்னர், குறிப்பிட்ட உற்பத்திச் சாதனங்களைப் பயன்படுத்துவதிலுள்ள சிக்கல்களினால் நிறைவேலை ஏற்படுமுன்னரே

விலைகாட்டி உயரத் தொடங்கலாம் என்பதை ஒத்துக் கொண்டார். இருப்பினும் பணவீக்கம் வேலையின்மையைப் போன்று அவ்வளவு கொடுமை வாய்ந்ததன்று என்று கூறிவந்தார். மேலும், நிறைவேலையை எட்டியதும் பணவீக்க முறைகளைக் கைவிட்டுவிடலாம் என்றும் அவர் நம்பி வந்தார். ஆனால், நடைமுறையில் பணவீக்க முறைகளில் பழக்கப்பட்ட அரசுகள், கஞ்சா, அபின், ஆகியவற்றைச் சாப்பிடப் பழகியவர்களைப் போன்று, அப் பழக்கத்திலிருந்து எளிதில் விடுபட முடிவதில்லை. முதலாளித்துவப் பொருளாதாரம் அமைந்துள்ள வகையிலும் இயங்கிவரும் விதத்திலும் பணவீக்கமுறைகளைக் கைவிட்டால் குடித்து வெறித்தவர்கள் போதை தெளிந்ததும் சோர்வுற்றிருப்பதுபோலத் தயக்கமுற நேரிடும். எனவே, மேலும் பணவீக்க முறைகளுக்குத் திரும்புவது இன்றியமையாததாகிவிடும். இத்தகைய நடைமுறை கீன்ஸீயக் கருத்துகளுக்கு முரணானவை என்பதை விளக்க வேண்டிய அவசியமில்லை.

உண்மையில், பணவாட்டக் கொள்கையால் எதிர்காலத்தில் விலைவாசிகள் எவ்வளவுதூரம் விழும் என்ற நிச்சயமிருக்காதோ, அதைப்போலவே பணவீக்கக் கொள்கையால் எதிர்காலத்தில் விலைவாசிகள் எவ்வளவு தூரம் உயரும் என்ற நிச்சயமுமிருக்காது. எவ்வளவு காலம் பணவீக்கம் நீடிக்கும்? எவ்வளவு வேகத்தில் பணப் பெருக்கமேற்படும்? இறுதியில் பணத்தின் மதிப்பு எந் நிலையிலிருக்கும்? என்ற கேள்விகள் பொருளாதாரத்தில் முக்கியமான முடிவுகளை எடுக்கவேண்டிய அனைவருக்குமே பெரும்புதிராக இருக்கும். அக் கேள்விகளுக்குத் தெளிவான, திட்டவட்டமான விடை கூறமுடியுமானால், பணவீக்கத்தைக் கொண்டு எச்சவல்லமையைப் பயன்படுத்துவதும் எளிதன்று.

மேலும், கண்மூடித்தனமான பணவீக்கக் கொள்கையால் அயல் நாட்டு நாணயமாற்றுவீதமும் தள்ளாடி ஆட்டங் கொடுக்கும். அதன் காரணமாக, ஊகவாணிகம் தலைதூக்கும்; அதன் பயனாகத் தொழிற்றுணிவு கொண்டவர்கள் மலைக்க நேரிடும்; முதலீடு தயங்கும். இத்தகைய நிச்சயமற்ற தன்மையைப் போக்கி முதலீட்டு முயற்சிகளைத் தூண்டும் பொருட்டு அயல்நாட்டு நாணயமாற்று வீதத்தைக் கட்டுப்படுத்த வேண்டியது அவசியமாகலாம்.

பணவீக்கத்தின் முழுத்தன்மைகளும் இப்போதும் பூரணமாக வெளிப்படுவதில்லை. பணவீக்கத்தின் கோரத்தன்மையை மட்டுப் படுத்தும் நோக்கத்தோடு ஆங்காங்கே கட்டுப்பாடுகள் புகுத்தப்படு மானால் அத்தோடு கள்ளச்சந்தைகளும் முளைக்கத்தொடங்கும். கட்டுப் பாடுகளைச் சரிவர செயற்படுத்தும் பொருட்டுத் தட்டுப்பாடுள்ள

பொருள்களையும் அயல்நாட்டு நாணயமாற்றுப் போன்ற முக்கியமான சாதனங்களையும் குறிப்பிட்ட வாயில்களின் வழியாகச் செலுத்தும் பொருட்டு லைசன்ஸ் (உரிமம்) வழங்கப்பட்டால், அவற்றோடு இலஞ்சமும், ஊழலும் தாண்டவமாடும். அத்துடன் வருவாய் பகிரப் படும் முறையிலும் பல அநீதிகள் காணப்படும். பொதுவாக, பண வீக்கத்தால் நாட்டுவருவாய் நிலையான ஊதியம் பெறுபவர்களின் கையிலிருந்து இலாப வேட்டையாடும் வணிகர், முதலாளிகள் முதலினச் சொத்துக்களைக் கையாளுபவர் ஆகியோரின் கைக்கு மாறும் என்று எதிர்பார்க்கலாம். எனவே, கடன்கொடுப்போர் தங்கள் முதல் கரைந்து போவதைக் காண்பார்கள். எனவே, வருவாயில் மீதம் பிடித்து மற்றவர்களுக்குக் கடன் கொடுக்க வேண்டும் என்ற தூண்டுதலும் இருக்காது. மாதச் சம்பளக்காரர்களும் பாட்டாளிகளும் தங்கள் மெய்வருவாய் வற்றுவதைக் கண்டு அங்கலாய்த்துப் போராட்டங்களிலிறங்குவர். அத்துடன் கொடுக்கல் நிலையும் கெட்டு, ஏற்றுமதியில் ஈடுபட்டிருப்பவர்களுக்கும் பாதகம் விளையும். இத்தகைய எதிர்ப்புகளும் அதிருப்திகளும் நிச்சயமற்ற தன்மைகளும் போராட்டங்களும் வலுக்குமானால் ஜனநாயக முறைக்கே ஆபத்து விளையும் என்று எதிர்பார்க்கலாம் என்பது ஒரு சிலரது அபிப்பிராயம்.

இவ்வாறு, பலரது உண்மை வருவாயைத் தேய்ப்பதன்மூலம் சிலரின் நடவடிக்கைகளைத் தூண்டும் முறை எவ்வளவு அநீதி என்று சொல்லத் தேவையில்லை. பொருளுற்பத்திக்கு உறுதுணையான மூலதனமும் முதலினச் சொத்துகளும் சிலரின் கையில் சிக்கி யிருப்பதால் அச் சாதனங்களை முழுவதுமாகப் பயன்படுத்துமாறு அவர்களைத் தூண்டுவதற்காகச் சமுதாயத்தின் ஏனைய பகுதியினர் தங்கள் மெய்வருவாயைக் குடித்துவரும் பணவீக்க முறைகளைக் கண்டு வாளாவிருக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுவது விசித்திர மானதுதான். கீன்ஸீயக் கொள்கைகள் கொலுவீற்றிருக்கும் முதலாளித்துவ நாடுகளில் உற்பத்திச் சாதனங்கள் பல்கிப் பெருகி யுள்ளன என்பது உண்மை. மொத்தத்தில் மேற்கத்திய நாடுகளின் வாழ்க்கைத்தரம் வளர்ந்து வருவதும், கண்கூடு. இத்தகைய முன்னேற்றங்கள் பெரும்பாலும் விஞ்ஞானம், தொழில்நுணுக்க அறிவு, நிருவாக அமைப்புகள் ஆகியவற்றில் ஏற்பட்டுள்ள புரட்சிகர மான முன்னேற்றங்களினாலேயே சாத்தியமாயிற்று என்றால் மிகையாகாது. பணவீக்கம், பொதுத்துறைச் செலவுகள் ஆகியவற்றின் விளைவுகள் அவ்வளவு ஆக்கமுள்ளவையாக இருந்தன என்று எண்ண இயலாது. ஆனால், நிறைவேலையை நிலைநாட்டுவது என்ற பெயரால் மாபெரும் அநீதிகள் புகுத்தப்பட்டுள்ளன என்பது சிலரது கருத்து.

## முற்போக்கு வரிகளால் சமதருமம் மலருமா?

கீன்ஸீயத் திட்டத்தின்படி வரிவிதிப்பினுல் மக்களது வாங்கும் சக்தி பாதிக்கப்படாமல் பார்த்துக் கொள்ளுவதன் அவசியம் வலியுறுத்தப்படுகிறது. எனவே, நுகர்ச்சியின்மீதுள்ள வரிகளைக் குறைப்பதும், சேமிப்பின்மீதுள்ள வரிகளை அதிகரிப்பதும் அவசிய மாகிறது. பொதுவாகப் பணம்படைத்தவர்களே அதிகம் சேமித்து வைப்பார்களாதலால் இத்தகைய வரிக்கொள்கை பணக்காரரின்மீது வரிப்பளுவை ஏற்றி ஏழையின்மீதுள்ள சுமையைக் குறைக்க முற்படு வதாகத் தோன்றும். வளர்வீத வருமானவரி, மரணவரி போன்ற முற்போக்கான வரிகளின் துணைகொண்டு வருவாயிலுள்ள ஏற்றத் தாழ்வுகளைக் குறைக்க முற்படுவதால் இக் கொள்கையைச் சமதர்மத்தின் சலசலப்பு என்று சிலர் பறைசாற்றுவதுண்டு.

ஆனுல், ஒரு சில வரிகளின் வீதங்கள் முற்போக்காக அமைந்தி ருப்பதைக் கொண்டு அவற்றின்மூலம் சமதர்மம் மலருவதாக மனப்பால் குடிப்பது தவறு. முதலாவது, வருமானவரியும், மரணவரியும் முதலாளித்துவ அரசுகள் கையாளும் வரி முறையின் ஒரு சிறு பகுதியே ஆகும். சொத்துவரி, சுங்கவரி, ஆயவரி, விற்பனைவரி போன்ற பல வரிகளும் மிகவும் பிற்போக்குத் தன்மை வாய்ந்தவை. எனவே, மொத்தத்தில் முதலாளித்துவ நாடுகளில் நிலவிவரும் வரிமுறைகள் முற்போக்கு வாய்ந்தவைதானு என்பது சந்தேகம். இரண்டாவது, வருமானவரி, மரணவரிகளில்கூட எண்ணிறந்த விலக்குகளும், கழிவுகளும், தள்ளுபடிகளும் உண்டு. அத்துடன், வருவாய் மிகுந்த தொழிலதிபர்களும், செல்வர் களும் அரசிடமிருந்து பெறும் கொடைகளும், சன்மானங் களும் தூண்டுதல்களும் ஏராளமுண்டு. மேலும், பொதுத்துறையின் நடவடிக்கைகள் பல, தனியாரின் முதலீடுகளைத் தூண்டும் வகையிலேயே மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. எனவே மொத்தத்தில் அரசு நடவடிக்கைகளாக 'உள்ளவனெவனே அவனுக்குக் கூடக்கொடுப்பது; இல்லாதவனெவனே அவனிடத்தி லிருந்து உள்ளதையும் எடுத்துக் கொள்ளுவது' என்ற முறை நீடித்து வருகிறது என்பது பொருளாதாரத்தின் உள்ளமைப்புகளின் இயக்க விதிகளைத் துருவி ஆராய்ந்தவர்களுக்கு எளிதில் புலனுகும்.

முற்போக்கான வரிமுறைகளால் பொருளாதார நெருக்கடியைச் சமாளித்துவிடலாம் என்று எண்ணுவது தவறு. முதலாவது, மிகத் தீவிரமாக ஏறிவரும் அரசின் செலவுகளனைத்தையும் வரிவிதிப்பின் மூலம் ஈடுசெய்வதென்பது இயலாத காரியம். மேலும், பணக்கார வர்க்கம் பதவியில் வீற்றிருக்கும்போது தங்களைப் பாதிக்கக்கூடிய வரிகளைக் கண்டபடி உயர்த்தவிடமாட்டார்கள். அரசு விரும்

பினுல்கூட அத்தகைய வரிக்கொள்கைக்கு ஏற்படும் எதிர்ப்பைச் சமாளிப்பது அவ்வளவு எளிதாக இருக்காது. எனவே அரசின் செலவுகளை ஈடுசெய்யப் பணவீக்க முறைகளைக் கையாளும்படி தூண்டப்படுகின்றனர்.

மேற்பூச்சான மருந்துகள்தானு ?

கீன்ஸின் கோட்பாடுகளினடியாக எழுந்த இக்கொள்கைகள் இன்றுவரை நின்று நிலவி வருவது கண்கூடு. பெரும் பொருளாதார மந்தத்திலிருந்து தம்மை முழுவதுமாக விடுவிக்க முடியாமல் திணறிக் கொண்டிருந்த முதலாளித்துவப் பொருளாதாரங்களை இரண்டாவது உலகப்போர் உன்னதமானதோர் பொருள் பெருக்கத்துக்கு இழுத்துச் சென்றது. பின்னர், கெடுபிடிப்போரின் பயனுக ஏற்பட்ட ஆயுதப் பெருக்கம் அவற்றைச் சறுக்கி வீழாமல் தற்காத்து வந்தது. கொரியாப் போரைப்போன்ற குட்டிச்சண்டைகளும், வியத்னும் போர் போன்ற வெட்டிச்சண்டைகளும் முதலாளித்துவப் பொருளாதாரங்களின் முன்னணியிலுள்ள அமெரிக்கப் பொருளாதாரத்தை முட்டுக் கொடுத்துத் தாங்கி வந்தன, ஏன், இன்றுவரை தாங்கி வருகின்றன. பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் மறைந்து வருவதற்கான அறிகுறிகள் கொஞ்சங்கூட இல்லை; எனினும் முற்போக்கான ஒரு சில வரிகளும், பொதுநலச்சேவைகளும் முதலாளித்துவ அரசுகளின் வரவு—செலவில் நிலைபெற்றுவிட்டன. இன்ன பல காரணங்களால் கிட்டத்தட்ட நாற்பது ஆண்டுகளாக முதலாளித்துவப் பொருளாதாரம் மந்தநோயால் சின்னுபின்னமாகாமல் வாழ்ந்து வருகிறது. உண்மையில், இரண்டாவது உலகப்போர் முடிந்த காலத்தில் பணவீக்கத்தை எப்படி மட்டுப்படுத்துவது என்ற கவலையே பெரும் பாலான முதலாளித்துவ அரசுகளை வாட்டி வதைத்து வந்தது. ஆனுல், சமீபத்தில் அமெரிக்கப் பொருளாதாரத்தில் தோன்றிவரும் மந்தம் கீன்ஸீய மருந்துகளால் குணமடைவதாகத் தெரியவில்லை.

இந் நிலையில் கீன்ஸ் குறித்த மருந்துகள் பெரும்பொருளாதார மந்தத்தை மட்டும் போக்குதற்குரிய 'சமயசஞ்சீவியா'? 'காய கல்பமா?' அல்லது நோயின் ஆணிவேரைக் களைய முடியாது மேற்போக்காக பூசப்படும் மருந்துகள்தானு? என்ற பல கேள்விகள் எழுவது இயல்பு. இக் கேள்விகளுக்கு எதிர்காலமே ஏற்ற பதிலை அளிக்கவல்லது. எனினும், அடிப்படையில் சில உண்மைகளை மனதிற்கொள்வது அவசியம். மொத்தத்தில், கீன்ஸ் சொத்துரிமையில் கைவைக்க விரும்பவில்லை. ஆனுல், சொத்துள்ளவர்கள் தாமாகச் செயல்பட்டுப் பொருளாதாரத்தைச் சீராக இயங்கச் செய்து நிறை வேலைநிலைக்கு இழுத்துச் செல்லும் சக்தியற்றிருப்பதைக் கண்டார்

முதலீட்டைச் சமுதாய மயமாக்கவேண்டும் என்று முனகினு ரென்றாலும் அத் துறையில் தமது கவனத்தைத் திருப்பவில்லை. மாறாக, சொத்துள்ளவர்களை முதலீடு செய்யுமாறு தூண்டுவதெப்படி என்பதிலேயே தமது கவனத்தைச் செலுத்தலானார். எனவேதான் வட்டிவீதத்தைக் குறைத்து முதலீடு செய்பவர்களின் கடன்பளுவைக் குறைக்க முயன்றார்; பணவீக்க முறைகளின்மூலம் உண்மை வருவாயை உழைப்பாளர், கடன்காரர் கையிலிருந்து முதலீடு செய்ப வர்களின் இலாபங்களைப் பெருக்கும் வகையில் மாற்றுவதில் முனைந்தார். மந்தத்தைப் போக்கிப் பொருளாதாரத்தில் விறுவிறுப்பை ஏற்படுத்துவதற்குப் போதிய தேவை வேண்டுமென்று உணர்ந்தாரெனினும், பெரும்பாலும் அதை முதலீட்டின்மூலமே உருவாக்க முனைந்தார். முற்போக்கான வரிகள் சில புகுந்தன என்றாலும் அவை சொத்துரிமை, வருவாய் ஆகியவற்றிலுள்ள ஏற்றத் தாழ்வுகளைப் போக்குவதாக அமையவில்லை. சுருங்கக் கூறின், மந்த நோயின் ஆணிவேர், தனியாரின் கையிலுள்ள சொத்துரிமைகளிலும் அவற்றிலுள்ள ஏற்றத்தாழ்வுகளிலுமிருந்தது. ஆனால், கீன்ஸ் குறித்த மருந்து மேலும் தனிஉடைமையைப் பலப்படுத்துவதாகவே அமைந்தது. அதனால், சமுதாயத்தில் ஏற்பட்ட அநீதிகள் பல இன்றும் குமுறி வெடித்துக் கொண்டிருக்கின்றன. அதே சமயத்தில், பற்றுக்குறை நிதியாக்கத்தால் மேற்கொள்ளப்பட்ட செலவுகள் பல, அழிவுத்தன்மை வாய்ந்ததாக உள்ளன. ஏகபோக முதலாளிகள் தங்கள் சர்வாதீனச் சக்திகளைப் பயன்படுத்திக் கொள்ளை இலாபம் அடிப்பதால் அவர்களது ஆதிக்கம் ஓங்கியுள்ள தொழில்களில் எச்ச வல்லமை மிகுந்து வருகிறது. ஆண்டுதோறும் அமெரிக்க அரசு பாதுகாப்புக்காக மட்டும் செலவிடும் பணம் 75,000 கோடி ரூபாய்க்கு மேலாகும். வியட்னும் போரில் மட்டும் பணம் 20,000 கோடி ரூபாய்க்குமேல் விரயம் செய்யப்பட்டது. ஆக்கிய பண்டங்களை விற்பதற்குக்கூட அமெரிக்கப் பொருளாதாரத்தில் கிட்டத்தட்ட 10,000 கோடி ரூபாய் செலவிடப்படுகிறது! உலகமெங்கும் அமெரிக்கா தனது பொருளாதார, இராணுவ ஆதிக்கங்களை நிலைநாட்ட விரும்பு வதால் கொடுக்கல்நிலை நாளுக்குநாள் சீர்கெட்டு வருகிறது. அயல் நாடுகளைச் சுரண்டுவதன்மூலம் அமெரிக்க ஏகபோக முதலாளிகளின் இலாபத்தைப் பாதுகாப்பதற்குச் செய்யப்படும் முயற்சிகளுக்கும் வளர்ச்சியுறும் நாடுகளிடையே எதிர்ப்பு வலுத்து வருகிறது. இவ்வாறு ஆக்கமற்றச் செலவுகளின் துணைகொண்டு எவ்வளவு காலந்தான் முதலாளித்துவப் பொருளாதாரத்தை முட்டுக் கொடுத்துத் தாங்க முடியும்? முதலாளித்துவத்தின் அடிப்படை நோய், சொத்துரிமை. அதிலுள்ள ஏற்றத்தாழ்வுகளே அத்தகைய பொருளாதாரங்களைப் புற்றுநோய்போல் தின்று வருகிறன்றன. இந் நோய்க்கு மேற்பூச்சாக மருந்து இடுபவர்களும் உண்டு; அறுவை

வைத்தியத்தை நாடுபவர்களும் உண்டு. முதலாளித்துவத்தை வாட்டிவரும் ஆணிவேர் எங்கே உள்ளது என்று நன்ருக உணர்ந்திருந் தாரெனினும் அதைப் பிடுங்கி எறிவதற்குத் துணியாமல் மேற்போக்கான பரிகாரங்களையே கீன்ஸ் காண முயன்ருர் என்ருல் மிகையாகாது.

## மேலும் படித்தற்குரியவை


1. Dillard D., Op. Cit. Chapters IX & X.
2. Hansen A. H., Op, Cit. Chapter X.
3. Hariss S. E., Op. Cit., Chapters XIV, XVI. XIX, XXXVIII, XXXIX, XL & XLI
4. Hazlitt H., *The Critics of New Economics*. Op. Cit. Chapters IV, V & XIX.
5. Hazlitt H., *The Failure of New Economics*, Op. Chapters II, III, IV, XIX, XX, XVIII, & XXVIII.
6. Hutt W. H., Op. Cit. Chapters II, III, IX & XIV.
7. Keynes J. M., Op. Cit. Chapters XIX, XX, XXI.
8. Klein L. R., Op. Cit. Chapters III & VII.
9. Kurihara K. K., Op. Cit., Chapter X.
10. Leizonhurud A., Op. Cit., Chapters II 3, Vi, V. 2 & VI. 2.
11. Murad, Op. Cit., Chapters III & VII.

# 10. கீன்ஸீயக் கருத்துகளுக்கு மார்க்ஸீய எதிர்ப்பு

*[தொன்மைப் பொருளாதார பரம்பரை — முதலாளித்துவத்தை வாட்டி வந்த பீடைகள் — முதலாளித்துவ முறையில் கீன்ஸ் கண்ட குறைபாடுகள் — முதலாளித்துவத்தின் பாதுகாவலன்—அரசு தலையீட்டுக்கு வரவேற்பு — சமதர்மத்தின் வைரி — பணமாயையைப் பரப்பியவர் — ஏகபோக முதலாளிகளுக்குக் கொண்டாட்டம் — சகலவிதமான வேலையின்மையையும் போக்க முயலாததேன்? — மாய்மாலமான கொள்கை ஜாலம் — இருகோடுகள்.]*

பொருளியலறிஞர்களைப் பலவாருகப் பிரிக்கலாம். எத்தகைய பொருளாதார முறையை அல்லது பொருளாதார அமைப்பை விரும்புகிருர்களோ அதற்கேற்ப முதலாளித்துவ கூட்டுறவு சமதர்மப் பொதுவுடைமைவாதிகள் என்று பிரிப்பது ஒரு வகை. வாணிகர்கள் தலையிடாக்கொள்கையையும் தடையில்லா வாணிகத்தையும் விரும்புவர்கள், ஒரு வரையறைக்குட்பட்ட அரசு தலையீட்டை வரவேற்பவர்கள், உற்பத்திப் பரிவர்த்தனைப் பங்கீடு ஆகிய பல்வேறு பொருளாதார நடவடிக்கைகளையும் அரசின் கட்டுப் பாட்டுக்கு உட்பட்டு நடத்துவதே நல்லது என்று கூறுப வர்கள், பொருளாதாரத்தின் பல்வேறு நடவடிக்கைகளுக்கும் அடிப்படையாக இருந்து உதவும் உற்பத்திச் சாதனங்களனைத் தையும் நாட்டுடைமை அல்லது பொதுவுடைமையாக்க வேண்டும் என்று கோருபவர்கள், என்றும் பாகுபாடு செய்யலாம். அவ்வாறின்றி, தொன்மைப் பொருளாதாரிகள், புதுச் சம்பிரதாயக் கருத்தோர், நவீன கருத்தோர் என்றும் பொருளியல் மேதைகளைக் குறிக்கலாம். இப் பாகுபாட்டின்படி ஒரு வகையில் கார்ல்மார்க்ஸ், கீன்ஸ் இருவருமே தொன்மைப் பொருளாதாரிகள்தாம். இருப்பினும் கீன்ஸைப் புதுச்சம்பிரதாயக் கருத்தோர் என்று சிலர் குறிப்பிடு வதுண்டு. ஒருவகையில் கீன்ஸ் தொன்மை, புதுச்சம்பிரதாயப் பொருளாதாரக் கருத்தோட்டங்களில் தோய்ந்தவர்தானென்ருலும்

சம்பிரதாயப் பொருளாதாரக் கோட்பாடுகளின் அடிப்படையை மாற்றியமைத்துப் புதுப் (நவீன) பொருளாதாரக் கோட்பாடுகளை உருவாக்க உதவினர் என்றும் கூறலாம். கார்ல்மார்க்ஸ், காலத்தால் கீன்ஸுக்கு ஒரு தலைமுறை முந்தியவராக இருப்பினும், இன்று நிலவி வரும் முதலாளித்துவக் கருத்துகளோடு மோதிப் போராடி வெற்றி கொள்ளக் கூடிய பேராற்றலும் செயல்முறையும் பொதிந்த புரட்சிகரமான கருத்தோட்டங்கள் சுரக்கும் வற்ருச் சுனையாக இருந்து வருகிருர் என்ருல் மிகையாகாது.

## தொன்மைப் பொருளாதாரப் பரம்பரை

பிரிட்டிஷ் பொருளியல்மேதைகளில் தொன்மைப் பொருளாதாரிகளின் பட்டியலில் இடம் பெற்றவர்களுள் ஆதம்ஸ்மித், ரிக்கார்டோ, மால்த்தஸ், ஜான்ஸ்டூவர்ட்மில், கார்ல்மார்க்ஸ் போன்றவர்கள் முக்கியமானவர்களாவர். ஒருவகையில் புதுச் சம்பிரதாயக் கருத்தினரும் தொன்மைப் பொருளாதாரிகளின் அடிச்சுவட்டைக் கடைப்பிடித்தவர்கள்தாம். மார்ஷல் பிகு, கீன்ஸ் ஆகியோர் இப் பரம்பரையில் வந்தவர்களே. முதலாளித்துவப் பொருளாதார வளர்ச்சியின் பல்வேறு பருவங்களையும் போக்கையும் இயக்கவிதிகளையும் அதையொட்டி மக்களது சமூக, கலாசார, சமுதாய, அரசியல் துறைகளில் ஏற்பட்டுவந்த மாறுதல்களையும் மனமாற்றங்களையும் ஊன்றிக் கவனித்து வந்த மேதைகளே தொன்மைப் பொருளாதாரிகள்.

இவர்களுள் முதலாளித்துவப் பொருளாதாரம் தனது இளமைப் பருவத்தில் இங்கிலாந்தில் மட்டுமின்றி உலக அரங்கிலும் அடைந்து வந்ததன் இரகசியமென்ன என்ற கேள்விக்கு விடையளிக்கும் வகையில் கோட்பாட்டு ரீதியில் முதலாளித்துவப் பொருளாதாரத்தின் இயக்க விதிகளை விளக்கிய பெருமை ஆதம்ஸ்மித்தையும் ரிக்கார்டோவையும் சாரும். செல்வம் செழிக்கின்ற இடத்திலே மனிதன் நசித்துப் போகிருன் என்பது கோல்ட்ஸ்மித் (Goldsmith) என்ற ஆங்கிலப் புலவரின்கூற்று. அக் கூற்றில் அடங்கிய தத்துவத்தை மனதிற்கொண்டு பொருளை மையமாக வைத்து வளையப்பட்ட பொருளியலை 'சைத்தானின் வேதம்' 'இருண்ட அறிவியல்' என்று பழித்தனர், கார்லைல் (Carlyle), ரஸ்கின் (Ruskin) போன்றவர்கள். இவர்கள் பொருளறிஞர்கள் அல்லரெனினும், முதலாளித்துவப் பொருளாதாரம் உருவாக்கி வந்த பணப்பித்தைக் கண்டு வெகுண்டெழுந்து பணவேட்கையைப் பலமாகக் கண்டிக்கலாயினர். மாருக, மால்த்தஸ் என்பார் ஒரு பாதிரியாக இருந்தபோதிலும் செல்வத்தை சேர்த்து வைப்பதில் முனைந்து நின்ற முதலாளித்துவத்தை எதிர்த்துத் தாக்க முற்படவில்லை; பதிலாக, உணவுப்

பெருக்கத்தைக் காட்டிலும் பன்மடங்கு வேகமாகப் பெருகிவந்த மக்கள்தொகைப் பெருக்கத்தைக் கண்டு பீதியடைந்து பஞ்சம், பசி, பட்டினி, கொள்ளைநோய், கொடும்போர் ஆகியவற்றுக்கு உள்ளாகி மனிதவர்க்கமே அடியோடு அழிய நேரிடுமோ என்று அஞ்சினர்.

தனிமையுடைய தலையிடாக்கொள்கை தங்குதடையற்ற அயல் நாட்டு வாணிகம் என்ற அடிப்படையில் முதலாளித்துவப் பொருளாதாரத்தை ஆதரித்து வந்தவர்கள் ஆதம்ஸ்மித்தும் ரிக்கார்டோவும். மாறாக, தனியுடைமை, தனியாரின்முயற்சி என்ற அடிப்படையில் இயங்கிவரும் முதலாளித்துவப் பொருளாதாரத்துக்கு அவ்வப்போது அரசு தலையீட்டுக்கு அவசியமேற்படலாம் என்று கூறியவர் ஜான் ஸ்டுவர்ட்மில். அரசின் தலையீடு அவசியம் என்ற அதே கருத்தை ஜெர்மனியில் பிரெட்ரிக்லிஸ்ட் (Fredrick List) என்பவரும், ரஷ்யாவில் கவுண்ட் செர்ஜியஸ்விட்டி (Count Sergius Witte) என்பவரும், அமெரிக்காவில் அலெக்ஸாண்டர் ஹாமில்டன் (Alexandar Hamilton) என்பவரும் எதிரொலிக்கலாயினர். கீன்ஸும் தங்குதடையற்ற தனியாரின் முயற்சிலும் தலையிடாக் கொள்கையிலும் கொண்டிருந்த நம்பிக்கையைக் கொஞ்சங் கொஞ்சமாகக் கைவிட்டு, முதலாளித்துவம் உயிர்வாழ்வதற்கு அரசின் தலையீடு இன்றியமையாதது என்று எடுத்துரைத்தார். எனவே தங்குதடையற்ற முதலாளித்துவம் தன்னியல்பாகவே சிக்கலின்றிச் சுமுகமாக இயங்க வல்லது என்ற கருத்து கீன்ஸது முக்கியமான பொருளாதார நூல்களில் இடம்பெறவே இல்லை என்று எலி ஹெக்ஷர் (Eli Hecksher) ஆணித்தரமாக எடுத்துரைத்துள்ளார். கீன்ஸீயக் கண்ணோட்டத்தைக் கூர்ந்து நோக்கினல் அது வாணிகக் கருத்துகளை ஒத்திருப்பதைக் காணலாம்.

தலையிடாக் கொள்கையைத் தட்டிக்கழித்த கீன்ஸ் தனி உடைமையைக் கைவிடுவதாக இல்லை. பட்டமரங்களை வெட்டியெறிவதில் அவருக்குச் சற்றேனும் தயக்கமில்லையென்றாலும் முதலாளித்துவப் பொருளாதாரத்தின் உடைமை முறையை அடியோடு மாற்றி அமைப்பதற்கு அவர் தயாராக இல்லை. இருப்பினும், தங்குதடையற்ற முதலாளித்துவம் நிலைதவறிச் சீர்கெட்டுச் சிக்கிச் சின்னபின்னமாகும் என்று எண்ணி வந்தாராதலால் அப் பொருளாதாரத்தின் பல்வேறு பகுதிகளையும் சமூக, அரசின் கட்டுப்பாட்டின்கீழ் வைத்திருப்பதே சிறந்தது என்று நம்பினர். இத்தகைய கண்ணோட்டத்தினடியாகப் பிறந்த கீன்ஸீயக் கொள்கைகளும் கோட்பாடுகளும் முதலாளித்துவப் பொருளாதாரங்களுக்குப் புத்துயிரூட்டும் சமயசஞ்சீவியாக விளங்கியதில் வியப்பொன்றுமில்லை.

கார்ல்மார்க்ஸும் தொன்மைப் பொருளாதாரிதாமென்றாலும் முதலாளித்துவத்தின் வைரியாக விளங்கினார் என்றால் மிகையாது. முதலாளித்துவப் பொருளாதாரத்தின் இயக்கவிதிகளைக் கூர்ந்து கவனித்து வந்த மார்க்ஸ், முதல்திரட்சியின் அடிப்படையே சுரண்டல் என்பதை நன்குணர்ந்தார். உழைப்பே பொருள்களுக்கெல்லாம் மதிப்பூட்டுகிறது; அந்த உழைப்புக்குரிய ஊதியம் முழுவதையும் கூலியாகக் கொடுக்காமல் எஞ்சிய உழைப்பைக் கைவசப்படுத்துவதாலேயே முதல் மேன்மேலும் திரட்சியுறுகிறது; எனவே, சுரண்டலால் முதல் திரளுகிறது; திரண்டுவரும் முதலை ஆட்கொள்ளுபவர்கள் மேன்மேலும் சுரண்டுவதற்கு வாய்ப்புகள் பெருகுகின்றன; சுரண்டலும் வலுக்கிறது என்பது மார்க்ஸீயக்கருத்து. வேறுவிதமாகக் கூறவேண்டுமாயின், உழைப்பின் திரட்சியே மூலதனம். ஆனால் அம் மூலதனம் தனியாரின் (முதலாளிகளின்) கையில் சிக்குவதாலேயே அம் முதலினச் சொத்துகளை இயக்கிவரும் உழைப்பாளரைச் சுரண்டுவதற்கு ஏதுவாகிறது என்பதை நன்குணர்ந்தவர் கார்ல்மார்க்ஸ். எனினும், சுரண்டுபவர்களைக் காட்டிலும் சுரண்டப்படுபவர்கள் மிகுந்திருப்பதால் காலப்போக்கில் சுரண்டலை எதிர்த்துப் போராடி சுரண்டலுக்கு அடிப்படையாக உள்ள தனிஉடைமையை அடியோடு மாற்றிப் பொதுவுடைமைச் சமுதாயத்தைச் சமைப்பார்கள் என்று மார்க்ஸ் நம்பினார். அத்துடன், முதல் திரட்சி அதிகரிக்க அதிகரிக்க வருவாயில் உழைப்பாளரின் பங்கு குறைந்து வருமாதலால் பெருகிவரும் முதலினச் சொத்துகளின் உதவியால் ஆக்கப்படும் பொருள்களனைத்தையும் விலை கொடுத்து வாங்கி நுகர்வதற்குப் போதிய சக்தி உழைப்பாளரிடையே (நுகர்வோரிடையே) இருக்காதாகையால் முதலாளித்துவப் பொருளாதாரத்தின் வளர்ச்சி வேகம் தணிந்து, மந்தப்பட்டு நெருக்கடி முற்றும் என்று அவர் முன்னறிவிக்கலானார். சுருங்கக் கூறின், மார்ச்ஸ், கீன்ஸ் இருவருமே தொன்மைப் பொருளாதாரப் பரம்பரையின் சாயலிலே வளர்ந்தவர்கள்தாமென்றாலும் மார்க்ஸ், சுரண்டலை அடிப்படையாகக் கொண்ட முதலாளித்துவப் பொருளாதாரம் இழைத்து வந்த அநீதிகளையும் அக்கிரமங்களையுங் கண்டு வெகுண்டெழுந்து அச் சுரண்டலுக்கு உறுதுணையாக உள்ள தனிஉடைமையை ஒழித்துப் பொதுஉடைமையை நிலைநாட்ட விரும்பினார். மாறாக, கீன்ஸ் முதலாளித்துவத்தில் காணப்பட்ட குறைபாடுகளை மேலெழுந்த வாரியாக, அரசு தலையீட்டின் மூலம் மட்டுப்படுத்த விரும்பினாரென்றாலும் தனிஉடைமையைக் கைவிடத் தயாராக இல்லை. இரத்தினச் சுருக்கமாகக் கூறவேண்டுமாயின் கீன்ஸ் முதலாளித்துவத்தில் பீடைகளைக் களைந்து பேணிப் பாதுகாக்க விரும்பினார். கார்ல்மார்க்ஸ், சுரண்டலை மையமாகக் கொண்டு இயங்கிவரும் முதலாளித்துவத்தை ஒழித்துப் பொதுவுடைமைச் சமுதாயத்தை உருவாக்க விரும்பினார்.

## முதலாளித்துவத்தை வாட்டிவந்த பீடைகள்

முதலாளித்துவத்தை ஒழித்துக் கட்டுவதா? வாழவைப்பதா? என்பதைப்பற்றி மார்க்ஸும் கீன்ஸும் முரண்பட்ட கருத்துகளைக் கொண்டிருந்தபோதிலும் அப் பொருளாதாரத்தை வாட்டிவந்த பீடைகள் எவை என்பதைப்பற்றி அவர்களிடையே மிகுந்த கருத்து ஒற்றுமை காணப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. சான்றாக, அளவுக்கு மிஞ்சிய முதல்திரட்சியே போதாத்தேவைக்கு மூல காரணம் என்பது அவர்களது கருத்து. முதல் திரட்சியால் முதலீட்டுக்கான தூண்டுதல் பலவீனப்படுகிறது என்பது அக் கருத்தின் சாரமாகும். முதலாளித்துவத்தின் முன்னேற்றம் முதல்திரட்சியைச் சார்ந்துள்ளது. ஆனால், முதல்திரட்சி வருவாயிலும் செல்வத்திலும் கணிசமான ஏற்றத்தாழ்வுகள் வளருவதற்கு வழிகோலுகிறது. அதன் பயனாகச் சேமிப்புப் பேரளவில் பெருகுவதற்கு வாய்ப்புகள் பெருகுகின்றன. ஆனால், அதற்கேற்ப முதலீட்டுக்கான வாய்ப்புகள் பெருகுவதில்லை. வருவாய் பங்கிடப்படும் விதத்தில் பெரிய ஏற்றத்தாழ்வுகள் காணப் படுவதால் வருவாயும் செல்வமும் செலவிடத் துடிப்பவர்களின் கையிலிருந்து சேமிக்கத் துடிப்பவர்களின் கையில் போய் ஒதுங்குகிறது. அதன்பயனாக, ஆக்கப்படும் பொருள்களுக்குள்ள தேவை ஒடுங்குகிறது. இலாபகரமாக முதலீடு செய்யக் கூடிய வாய்ப்புகள் சுருங்குகின்றன. அதன் விளைவாகத்தான் உற்பத்திச் சாதனங்கள், குறிப்பாக, உழைப்பாளர், வேலையின்றி வாட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படு கிறது. முதலாளித்துவப் பொருளாதாரத்தின் பொருளாதாரம் சுமுகமாக இயங்க வேண்டுமாயின் வருவாயின் பங்கீட்டிலுள்ள ஏற்றத்தாழ்வுகள் குறையவேண்டும் என்பதை மார்க்ஸும் கீன்ஸும் நன்குணர்ந்திருந்தனர். ஆனால், நோய்க்குப் பரிகாரம் தேடும்போது இருவரும் அடிப்படையில் வேறுபட்ட மருத்துவ முறைகளை வகுக்க லாயினர்.

## முதலாளித்துவ முறையில் கீன்ஸ் கண்ட குறைபாடுகள்

கீன்ஸ், முதலாளித்துவம் இழைத்து வந்த அநீதிகளைக் கண்டு சீறி எழவில்லை. சொத்துரிமையின் காரணமாகவும் அதன் பயனாகப் பொருளுற்பத்தியில் முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்கு மிடையே ஏற்படும் உறவின் காரணமாக நடைபெறும் சுரண்டலே முதலாளித்துவப் பொருளாதாரத்தின் அடிப்படைக் கோளாறு என்று கீன்ஸ் ஒருபோதும் எண்ணியதில்லை. உண்மையில், முதலாளித்துவ முறையின்கீழ் உழைப்பாளர்கள் சுரண்டப்படுகிறார்களே என்று அவர் கவலைப்பட்டதும் கிடையாது. போதாத் தேவையின் காரண மாகக் கோடிக்கணக்கானவர்கள் வேலையின்றி வாட வேண்டிய நிலை ஏற்படுகிறதே; பொருளாதாரம் ஒரே சீராக இயங்காமல் சிக்கலு

றுவதால் உழைப்பாளர் ஆக்கப்பணிகளில் ஈடுபட முடியாமல் தவிப்பதுடன் ஆக்கிய பண்டங்களை அனுபவிக்க இயலாமல் அல்லல் படுகிறார்களே என்று மிகவும் மனம் புழுங்கினார். அதன் காரணமாகக் கார்ல்மார்க்ஸின் அடிச்சுவட்டைப் பின்பற்றி, உழைப்பே, பொருள் களுக்கு மதிப்பூட்டுகிறது என்ற கோட்பாட்டில் நம்பிக்கை வைக்க வில்லை; சுரண்டல் ஒழிய வேண்டுமென்று கோஷமிடவுமில்லை. சுரண்டலை அடிப்படையாகக் கொண்ட முதலாளித்துவத்தை அடியோடு மாற்றியமைத்து பொதுவுடைமைச் சமுதாயத்தைச் சமைக்கவும் அவர் விரும்பவில்லை.

மாறாக, போதாத் தேவைக்கான காரணங்களைமட்டும் மேற் போக்காக ஆராய்ந்து அவற்றைக் களைய விரும்பினார். குன்றிவரும் முதலீட்டு இறுதிநிலைத்திறனும் குறைந்துவரும் இறுதிநிலை நுகர்வு நாட்டமுமே மந்தத்துக்கான முக்கிய காரணங்கள் என்று கீன்ஸால் குறிக்கப் பட்டது. எனவே, முதலீட்டைத் தூண்டி நுகர்வைப் பெருக்கும் முயற்சியில் அவர் முனையலானார். நுகர்வுக்கும் வருவாயின் பங்கீட் டுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டென்பதை அவர் நன்குணர்ந்த வராதலால் வருவாயிலுள்ள ஏற்றத்தாழ்வுகளைக் குறைப்பதன்மூலம் நுகர்வுநாட்டத்தைப் பலப்படுத்த முடியும் என்றும் அப்படிச் செய்வ தனால் பொருள்களுக்குள்ள தேவை அதிகரித்துப் பொருளாதாரம் சுறுசுறுப்படையும் என்றும் அவர் நம்பினார். ஆனால், நேரடியாக இலாபத்தைக் குறைத்துக் கூலியைக் கூட்டும் கொள்கை எதையும் அவர் வகுக்க விரும்பவில்லை. பதிலாக, பணப்பெருக்கம், முற்போக் குத்தன்மை வாய்ந்த வரிக்கொள்கை, பற்றுக்குறைநிதியாக்கம் போன்ற கொள்கைகளின்மூலம் வாங்கும் சக்தியைப் பலப்படுத்தலாம் என்ற கருத்துக்கே முக்கியத்துவம் கொடுக்கலானார்.

முதலாளித்துவத்தின் பாதுகாவலன்

உண்மையில், இலாபத்தைப் பாதிக்கக்கூடிய கொள்கை எதையும் கீன்ஸ் ஆதரிப்பதாக இல்லை. முதலாளித்துவ முறையின் அடிப் படையைப் பழுதுபடாமல் பாதுகாக்க விரும்பியதே அதன் காரண மாகும். எனவே, வருவாயில் இலாபத்தின் பங்கைக் குறைக்கக்கூடிய வகையில் கோரிக்கைகளை முன்வைத்து இயக்கம் நடத்தி வந்த தொழிற்சங்கங்களின் கொட்டத்தை அடக்க வேண்டும் என்று பலமுறை வெளிப்படையாகக் கூறி வந்தார். ஆனால், நடைமுறையில் பணக்கூலியைக் குறைப்பது சாத்தியமாக இல்லை. சர்வாதிகார அரசின்கீழ் மட்டுமே கூலிக் கொள்கையில் விரும்பிய மாற்றங்களைப் புகுத்தமுடியும் என்பது அவரது கருத்து. சந்தையைச் சார்ந்து இயங்கும் முதலாளித்துவப் பொருளாதாரத்தில் ஒவ்வொரு பொரு

ளுக்கும் உற்பத்திச் சாதனத்துக்குமுள்ள தேவை—அளிப்பு ஏனைய உற்பத்தி உறவுகளைப் பொறுத்து இலட்சக்கணக்கான விலை வாசிகளும் கூலிவீதங்களும் நிலவும் என்று எதிர்பார்க்கலாம். அதுவும் ஒரே நிலையிலில்லாமல் கணந்தோறும் மாறுபடுவதுமுண்டு. அத்துடன், விலைவாசிகளிடையேயும் கூலிவீதங்களிடையேயும் உள்ள உறவும் இவ் விதமாகத்தான மாறும் என்று சொல்ல இயலாது. எனவே, விலையோடு விலையையும் கூலியோடு கூலியையும் பொருத்தி இணைப்பது பகீரதப் பிரயத்தனமாகவே முடியும். ஆதலின், பணக் கூலியில் கைவைக்காமல் மெய்க்கூலியை மட்டம் தட்டவேண்டும் என்பது கீன்ஸீயக் கோட்பாட்டின் அடிப்படைகளுள் ஒன்றாகும். இதிலிருந்து, கீன்ஸ், பொதுவாக இலாபத்தைப் பாதுகாத்துக் கூலியைக் குறைக்க விரும்பினார் என்பது எளிதில் புலனாகும். உண்மையில் கூலிக்கொள்கையைப் பொருத்தமட்டில் கீன்ஸுக்கும் தொன்மைப் பொருளாதாரிகளுக்கும் அடிப்படையில் வேறுபாடு இருந்ததாகக் கூறமுடியாது. இருசாராருமே கூலிவெட்டை ஆதரித்தவர்கள்தாம். ஆனால், தொன்மைப் பொருளாதாரிகள் பணக்கூலிவெட்டைப் பலமாக ஆதரித்தார்கள். மாறாக, கீன்ஸ், மறைமுகமாக மெய்க் கூலியை வெட்டுவதற்கான விசித்திரமான வழிமுறைகளை எடுத்துரைக் கலானார். எனவே, நுகர்வை நேரடியாகப் பலப்படுத்துவதற்கு, இலாபத்தைக் குறைத்தாலென்ன என்ற கருத்து முற்றிலும் புறம்பானது என்பது குறிப்பிடத்தக்கது.

உண்மையில் முதலாளித்துவத்தின் அச்சாணி போன்று விளங்கிய இலாபவேட்கையைப் பாதுகாப்பதில் கீன்ஸ் கண்ணுங்கருத்துமாக இருந்து வந்தார் என்றால் மிகையாகாது. முதலாளித்துவமுறையில் பாதுகாக்கப்பட வேண்டிய அம்சங்களுள் இலாபவேட்கை அடிப்படை யானது என்பது கீன்ஸது கருத்து. இலாபவேட்கையால் கேடொன்று மில்லை. அதைத் தூண்டிவிடுவதன்மூலம் பொருளாதாரத்தைச் சுறுசுறுப்படையச் செய்யலாம் என்று அவர் நம்பினார். உண்மையில், பணம்பற்றிய ஆராய்ச்சி என்ற தமது நூலில் பெரும்பகுதியைத் தொழிற்றுணிவைப் போற்றி அதன்மூலம் பொருளீட்டுவது எப்படி என்ற கேள்விக்கு விடையளிப்பதிலேயே செலவிட்டுள்ளார்.

இலாபவேட்கையைப் பாதுகாக்க விரும்பியது போலவே முதலாளித்துவத்தின் வேறுபல அம்சங்களையும் கீன்ஸ் ஆதரித்துக் காக்க விரும்பினார். அவ்வப்போது வாணிகச்சுழல்களில் சிக்கி வந்தபோதிலும் முதலாளித்துவம் திறமையாக இயங்கக்கூடிய தோர் பொருளாதார அமைப்புதான் என்பது கீன்ஸது திடமான நம்பிக்கை. அன்று உலக அரங்கில் இயங்கி வந்த பொருளாதார முறை எதற்கும் முதலாளித்துவம் இளைத்ததன்று என்று கீன்ஸ்

மார்தட்டிப் பேசி வந்தார். பொதுவாக, முதலாளித்துவ முறையில் உற்பத்திச் சாதனங்கள் வீண்விரயமாவதில்லை என்பது கீன்ஸது கருத்து. சந்தையைச் சார்ந்து இயங்குவதால் விலைவாசிகள் சமன் செய் சக்கரம்போல் வேலைசெய்து உற்பத்திச் சாதனங்களைச் சிக்கனமாகப் பயன்படுத்த உதவுகின்றன என்பது அவரது வாதம். எனவே, சந்தையும் அதனடியாக நிருணயிக்கப்படும் விலைவாசிகளும் பாதுகாக்கப்பட வேண்டும் என்பது கீன்ஸது விருப்பம். அத்துடன், விரும்பிய பொருள்களைப் பெறும் உரிமை நுகர்வோருக்கு இருக்க வேண்டும். அவ்வாறு நுகர்வோரின் விருப்புவெறுப்புகளுக்கேற்பப் பொருளுற்பத்தியும் விநியோகமும் நடைபெறுமானால் "நுகர்வோரே மன்னராவர்" என்ற நிலையை அணுக முடியும் என்று அவர் நினைத்தார் போலும். இலாபவேட்கையால் தூண்டப்படும் முதலீடும் நுகர்வோரின் விருப்புக்குட்பட்டுச் சந்தையைச் சார்ந்து இயங்குகின்ற பொருளுற்பத்தியும் உற்பத்திச் சாதனங்களின் கலப்பும், பங்கீடும், பரிவர்த்தனையும் முதலாளித்துவப் பொருளாதாரத்தின் பலமிக்க தூண்களெனலாம். அவற்றுக்கு அடித்தளமாக அமைவது தான் தனிவுடைமை. அத்தகையை அடிப்படையையும் அதன்மீது எழுப்பப்பட்ட பொருளாதார அமைப்பையும் பழுதுபடாமல் பேணிப் பாதுகாத்து அதன் இயக்கத்திறனை மேம்படுத்துவதே கீன்ஸது தலையாய குறிக்கோளாகும் என்று தயங்காமல் கூறலாம்.

### அரசின் தலையீட்டுக்கு வரவேற்பு

சந்தையைச் சார்ந்து இயங்கிவந்தபோதிலும் தன்னியல்பாக ஒரே சீராகச் சுபிட்சப் பாதையில் செல்லும் சக்தி முதலாளித்துவத்துக்கில்லை என்பதை முதலாவது உலகப் பெரும் போருக்குப் பின்னரே நன்குணர்ந்தார் கீன்ஸ். எனவேதான் தலையிடாக் கொள்கையின் சகாப்தம் முதலாம் உலகப்போரோடு முடிவடைந்தது என்று அவர் கூறி வந்தார். தலையிடாக் கொள்கைக்குச் சமாதி கட்டியதை யொட்டி ஆங்காங்கே அரசின் தலையீடு பலமுனைகளில் அவசியமாயிற்று. பெரும் பொருளாதார மந்தத்தின் குழந்தையாக வடிவெடுத்த பொதுக்கோட்பாட்டில், குன்றிவரும் முதலீட்டு இறுதி நிலைத் திறனையும், குறைந்துவரும் நுகர்வு நாட்டத்தையும் ஊக்குவித்துப் பலப்படுத்தி ஒப்புரவாக வைத்திருக்கும் வகையில் அரசின் தலையீடு அமைய வேண்டும் என்று வலியுறுத்தலானார்.

முதலாளித்துவப் பொருளாதாரத்தை மந்தப்படுகுழியிலிருந்து தூக்கிவிட்டுச் சுபிட்சப்பாதையில் ஒரே சீராக இயங்கச் செய்வதே கீன்ஸின் குறிக்கோள். அதற்கு நுகர்வுநாட்டத்தைப் பலப்படுத்துவதும் முதலீட்டைத் தூண்டுவதும் அவசியமாகிறது. சந்தையின் சலன சக்திகளை நம்பினால் இக் குறிக்கோள் வெற்றிபெறாது.

அதற்காக, முதலாளித்துவத்தின் அடிப்படையை மாற்றி அமைக்கவோ அதன் ஆணி வேரையோ அடிமரத்தையோ பலமிக்க கிளைகளையோ வெட்டி எறியவோ அவசியமில்லை; பட்டமரங்களை வெட்டியெறிந்து கிளைகளை நட்டு அரசு தலையீட்டின்மூலம் உரமிட்டு நீர்பாய்ச்சிப் பேணிப் பாதுகாத்தாலே விரும்பிய பலன்கிடைக்கும் என்பது கீன்ஸின் கருத்து.

கீன்ஸ், துணிவுகொண்ட தொழில்முதலாளிகளைப் போற்றிப் பாராட்டியவர்; 'துணிவுகொண்ட நெஞ்சிளுய் வா, வா, வா' என்று பாரதி போற்றி வரவேற்றது போன்று தொழிற்றுணிவு கொண்டவர் கள்தாம் முதலாளித்துவத்தின் உயிர்நாடி போன்றவர்கள் எனக் கீன்ஸ் கருதி வந்தார். ஆக்ககரமான வகையில் செயற்பட்டுவந்த தொழில்முதலாளிகளைப் பேணிப் பாதுகாத்துப் பலப்படுத்த விரும்பிய அவர், உற்பத்தியில் ஆக்கமான பங்கு எதுவும் கொள் ளாமல் உழைக்காத உலுத்தர்களைப் போன்று முதலாளித்துவப் பொருளாதாரத்தை அட்டைகள்போல் உறிஞ்சி வந்தவர்களை ஒழித்துக்கட்ட வேண்டும் என்று கோரத் தயங்கியதில்லை. 'பட்ட மரங்களை வெட்டி எறிய வேண்டும்' என்று அடிக்கடி அவர் கூறி வந்தது குறிப்பிடத் தக்கது. பொதுவாக, வட்டிக்குவட்டி வாங்கி வாழ்க்கை நடத்தும் நிதிமுதலாளிகளைக் கீன்ஸ் வெறுத்தொதுக்கி வந்தார். நிதிமுதலாளிகளை முதலாளித்துவத்தின் பிரிக்கமுடியாதோர் அங்கமாகக் கருதலாகாது. முதலாளித்துவப் பொருளாதாரத்தில் புரையோடி அழிக்க முயலும் புற்றுநோயாகவே கருத வேண்டும் என்று கீன்ஸ் குறிப்பிட்டுள்ளார். முதலினச் சொத்துகள் ஒரு தலைமுறையிலிருந்து மற்றொரு தலைமுறைக்குக் கைமாறுவதையும் கீன்ஸ் விரும்பவில்லை. புற்றுநோய்தானென்றாலும் அதை ஒழிப்பதற்கு அறுவைசிகிச்சையை அவர் நாடவில்லை. வருவாயில், வட்டியின் பங்கைக் குறைப்பதெப்படி என்ற கோணத்திலேயே தமது கருத்தைச் செலுத்தி வந்தார். அதைப்போலவே, அத்துமீறிய ஊகவாணிகத்தி னாலும் பங்குச்சந்தையில் நடைபெறும் தில்லுமுல்லுகளினாலும் தொழிற்றுணிவு பெரிதும் பாதிக்கப்படுகிறது என்பது கீன்ஸது கருத்து. பயனற்ற அத்தகைய நடவடிக்கைகளை அத்துமீறிப் போகாமல் மட்டுப்படுத்துவதன் அவசியத்தையும் அவர் நன்குணர்ந் திருந்தார்.

முதலாளித்துவத்தின் பயனற்ற உறுப்புகளையும் விரும்பத்தகாத வளர்ச்சிகளையும் களைவதோடு பொருளாதாரத்தின் போக்கைக் கட்டுப்படுத்திச் செம்மையான பாதையில் செலுத்தும் வகையில் அரசு தலையிடுவது அவசியம் என்று வற்புறுத்தி வந்தார். நீண்டகாலக் கண்ணோட்டத்தில் நோக்கினல், நாட்டுவருவாயில் எப் பகுதியைச்

சேமிக்க வேண்டும்? சேமிப்பையும் முதலீட்டையும் இணைப்ப தெப்படி? வங்கிக் கொள்கையை எவ் வகையில் வகுக்க வேண்டும்? மக்கள்தொகையை எவ்வளவில் மட்டுப்படுத்த வேண்டும்? என்பது போன்ற பரந்த அடிப்படையான பிரச்சினைகளிலும் பொருளாதாரத்தின் பல்வேறு துறைகளிலும் பயன்படத்தக்க புள்ளிவிவரங்களைச் சேகரித்து அளிப்பதிலும் அரசு அதிக அக்கறை காட்ட வேண்டும் என்பது கீன்ஸின் கருத்து.

குறுகிய காலத்திலும் அரசு தலையிடாக்கொள்கையைக் கைவிட்டுவிட்டு வெளிநாட்டு வாணிகம், பணத்தினளவு, வட்டிவீதம் ஊகவாணிகம், பங்குச்சந்தை போன்ற பல்வேறு துறைகளிலும் பொருத்தமான கட்டுப்பாடுகளைப் புகுத்திப் பொருளாதாரத்தை முடுக்கிவிடவேண்டும் என்று கீன்ஸ் வலியுறுத்தி வந்தார். அத்துடன், வரிக்கொள்கை, செலவீட்டுக்கொள்கை ஆகியவற்றின்மூலம் வருவாயையும் அதன் பங்கீட்டையும் அதன்மூலம் மறைமுகமாக நுகர்வையும் முதலீட்டையும் அரசு தூண்ட முற்பட வேண்டும் என்பதும் கீன்ஸீயக் கருத்துகளில் முக்கியமானவையாகும்.

எல்லாவற்றுக்கும் மேலாக, முதலினச் சொத்துகளின் உடைமையைப் பொதுவாக்குவதற்குப் பதிலாக முதலீட்டைப் பொதுமயமாக்குவதே மேலானது என்பது கீன்ஸின் வாயிலாக வெளிவந்த நூதனக் கருத்துகளுள் முதன்மையானது என்னலாம். தனியாரின் துறையில் ஏற்படும் போதாத் தேவையைப் பொதுத்துறைச் செலவுகளைக் கொண்டு ஈடு செய்யலாம் என்ற கருத்தே இக் கொள்கையின் அடிப்படை. ஆனால், பொதுத்துறைச் செலவுகளில் ஒரு பகுதி கல்வி, சுகாதாரம் போன்ற பொதுத்துறை நுகர்வுகளிலும் பொதுநலப்பணிகளிலும் சமூகப்பாதுகாப்புத் திட்டங்களிலும் செலவிடப்படும். ஆனால், பொதுத்துறைச் செலவில் கணிசமான பகுதி, முதலினச் சொத்துகளை நாடிச் செல்வது இன்றியமையாதது என்பதைக் கீன்ஸ் நன்குணர்ந்தார். அத்தகைய பொதுத்துறை முதலீட்டினளவு எவ்வளவாக இருக்க வேண்டும்? எந்தெந்தத் துறைகளில் புகுதல் வேண்டும்? எவ்வெவ்வடிவங்களை எடுத்தல் வேண்டும் என்ற கேள்விகளுக்கும் கீன்ஸ் விடையளிக்க முயன்றார். பொதுவாக இலாபகரமான முதலீடுகளைத் தனியாரின் கையில் ஒப்படைத்துவிட்டு இலாபமற்ற முதலீடுகளைப் பொதுத்துறையில் மேற்கொள்ள வேண்டும் என்பதே கீன்ஸ் வகுத்த வரையறையாகும்.

தனிவுடைமையையும் இலாபவேட்கையையும் பாதுகாப்பதில் கீன்ஸ் எவ்வளவு கண்ணுங்கருத்துமாக இருந்து வந்தார் என்பதற்குப் பொதுத்துறை முதலீடு பற்றிய அவரது கொள்கைகள் சிறந்ததோர்

எடுத்துக் காட்டாகும். பொருளாதார மந்தத்தால் தனிவுடைமைக்கு ஏற்பட்டு வந்த ஆபத்தைப் புரிந்து கொண்ட கீன்ஸ், பொதுத்துறை முதலீட்டின்மூலம் மந்தத்தைப் போக்குவதற்குக் கொஞ்சமும் தயங்கவில்லை. ஆனால், பொதுத்துறை முதலீட்டை இலாபகரமான துறைகளில் செல்லவிடாமல் தடுப்பதன்மூலம் தனியாரின் முயற்சிக்கும் இலாபவேட்கைக்கும் அரணாக நின்று உதவியது அக் கொள்கை என்றால் மிகையாகாது. எனவே, அக் காலத்தில் நிலவி வந்த முதலாளித்துவப் பொருளாதாரமுறை அடியோடு அழிந்து போகாமல் பாதுகாக்கவும் தனியாரின் முயற்சிகளுக்கு அரணாக இருந்து ஆதரவளிக்கவும் அரசின் தலையீடு இன்றியமையாதது என்ற காரணத்தால், கீன்ஸ் அதை வரவேற்றாரேயன்றிச் சமதர்மத்தை நாடியதால் அன்று என்பது எளிதில் விளங்கும். உண்மையில் நிறை வேலை நிலையை எய்தியபின் தொன்மைப் பொருளாதாரக் கோட்பாடுகளைப் பழைய பாணியிலேயே நடைமுறைக்குக் கொண்டு வரமுடியும் என்று அவர் நம்பினார்.

**சமதர்மத்தின் வைரி:** கீன்ஸ், சமதர்மத்தை ஆதரிக்கவே இல்லை. சமதர்மத்தின் எதிரி என்றுகூட அவரை அழைக்கலாம். சமதர்மம் வேலையின்மையைப் போக்கலாம்; ஆனால், அதன் பயனாகப் பொருளா தாரத்தின் இயக்கத் திறனும் தனியாரின் உரிமைகளும் பறிபோகும் என்று அவர் அஞ்சினார். எனவே, தனிவுடைமையைப் பாதுகாக்கும் பொருட்டுத் தலையிடாக் கொள்கையை மனதாரக் கைவிட்டாரென்றாலும் பொதுவுடைமையை அடியோடு எதிர்த்தார். பதிலாகப் பொதுத்துறை முதலீட்டின்மூலம் தனிவுடைமையையும் தனியாரின் முயற்சிகளையும் தனிப்பட்டவர்களின் சுயநலத்தையும் பாதுகாக்க விரும்பினார். அரசின் தலையீட்டைப் பற்றிய கீன்ஸீயக் கண்ணோட்டமே விசித்திரமானதுதான். தலையிடாக் கொள்கையை மறுதலித்தார்; ஆனால் தனிவுடைமையை வெறுக்கவில்லை; அரசின் தலையீட்டை விரும்பி வரவேற்றார்; ஆனால், பொது உடைமையை வெறுத்தொதுக்கினார். சுருங்கக் கூறின், அரசின் தலையீட்டைத் தவிர முதலாளித்துவம் சாகாமல் உயிர்ப்பிச்சை அளிக்க வேறுவழியில்லை என்பதைத் தெளிவாக உணர்ந்து செயல் பட்டவர், கீன்ஸ். எனவேதான் பொருளாதாரத்தின் உயிர்நாடிகளைத் தனியாரின் கையில் வைத்துப் பாதுகாக்கும் வகையில் அரசின் தலையீட்டுக்கு எல்லை வகுக்கலானார். இக் கோணத்தில் பார்க்கும் போது எவ்வளவு தூரம் முற்போக்குத் தன்மை வாய்ந்தது என்பதில் எளிதில் விளங்கும்.

முதலாளித்துவத்தைக் கண்மணிபோல் காக்க விரும்பிய கீன்ஸ் தொழிலாளரின் நலன்களிலும் அவர்களது நலன்களைப் பிரதிபலிக்கத்

கூடிய கருத்தோட்டங்களிலும் கொஞ்சமேனும் அக்கறை காட்டிய தாகத் தெரியவில்லை. முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்கு மிடையே உள்ள உற்பத்தி உறவுமுறை எப்படிச் சுரண்டலுக்கு வழி வகுக்கிறது என்று அவர் எண்ணிப் பார்த்ததாகத் தெரியவில்லை. உற்பத்தி உறவுகளைக் காட்டிலும் பொருளாதாரத்தின் பல்வேறு மாறிகளான நுகர்வு, சேமிப்பு, முதலீடு போன்றவற்றின் உறவுகளே முக்கியமானவை; மாறாக, சுரண்டலை விளக்குவதற்குப் பயன்படக் கூடிய 'எச்ச மதிப்பு' (Surplus Value) போன்ற மார்க்ஸீயக் கருத்து களைத் துச்சமாக மதித்துத் தூக்கி எறிய முயன்றுள்ளார். சான்றாக, கார்ல்மார்க்ஸின் உலகப் பிரசித்தி பெற்ற நூலான 'மூலதனத்தை' (Capital) அறிவின்பாற்பட்டதன்று என்றும் கவைக்குதவாத பத்தாம்பசலி நூல் என்றும் வருணித்துள்ளார். உலகெங்குமுள்ள பொதுவுடைமைவாதிகள் 'மூலதனத்தை' வேதமாகக் கருதிவந்த போதிலும் கீன்ஸுக்கு அந் நூல் பொருளற்ற பித்தலாட்டமாகவே காணப்பட்டது. பணப்பித்தை ஒரு மதமாகப் போற்றுவது மார்ஸீயப் பொருளாதாரம் என்பது அவரது கருத்து. இலாப வேட்கையை அடிப்படையாகக் கொண்ட முதலாளித்துவத்தின் தத்துவ அடிப்படை அவ்வளவு மோசமாக அவருக்குத் தென்படாதது விந்தைதான்.

முதலாளிகளுக்கும் (உள்ளவர்களுக்கும்) தொழிலாளருக்கும் (இல்லாதவர்களுக்கும்) இடையே உள்ள உறவு எப்படிச் சுரண்டலுக்கு அடிகோலுகிறது? உற்பத்தி பொதுமையான நடவடிக்கையாக இருக்கும்போது இலாபம் மட்டும் தனியாரின் கையில் ஒதுங்குவதால் ஏற்படும் சிக்கல்களென்ன? குறிப்பாக, கூலியும் இலாபமும் முரண்பட்டிருப்பதேன்? தொழிலாளியும் முதலாளியும் எதிரணியில் நின்று போராடுவதேன்? என்பன போன்ற கேள்விகளுக்கு அரசியல், பொருளாதார, தத்துவ ரீதியில் விளக்க முற்பட்டவர் கார்ல் மார்க்ஸ். அவரது கோட்பாட்டினடியாக உலகத்தொழிலாள ரனைவரும் அநீதி நிறைந்த முதலாளித்துவத்தை எதிர்த்துப் போர்க் கொடி உயர்த்தி வர்க்கப்போர் நடத்தி ஆங்காங்கே வெற்றி வாகை சூடி வந்ததைக் கண்ட கீன்ஸ் வாளாவிருக்கவில்லை. 'மீனுக்குப் பதிலாகச் சகதியை நான் எப்படி விரும்ப முடியும்? முன்னேற்றப் பாதையில் மனித சமுதாயம் கண்டுள்ள சாதனைகளுக்கும், வாழ்க்கையை வளப்படுத்திச் சோபையூட்டும் பண்பாட்டுக்கும் குணநலன்களுக்கும் வித்தாக விளங்கும் முதலாளிகளையும் அறிஞர் களையும் விட்டுவிட்டுக் கலாச்சாரம், பண்பாடு ஆகியவற்றில் பின் தங்கிக்கிடக்கும் பாட்டாளி வர்க்கத்தையா ஆதரிப்பேன்?' என்று கீன்ஸ் வினவியிருப்பது கவனிக்கத் தக்கது. மேலும், வர்க்கப்போர் ஒன்று நிகழுமானால் நான் நிச்சயமாகக் கல்வியறிவு பெற்ற

முதலாளிகளின் அணியிலேயே பங்கு கொள்வேன் என்று தெள்ளத் தெளிய எடுத்துரைத்திருப்பதும் குறிப்பிடத்தக்கது.

இதிலிருந்து கீன்ஸ், முதலாளித்துவத்தின் தோழன்; சமதர்மத்தின் வைரி என்பது புலனாகும். இத்தகைய கண்ணோட்டத்தின் காரணமாகத் தான் கீன்ஸ் தனியுடைமையை அரணிட்டுக் காக்க முற்பட்டார்; முதலாளித்துவத்துக்குத் தூபமிடக் கூடிய கொள்கைகளையும் கோட்பாடுகளையும் வகுத்தார் என்பது விளங்கும். முதலாளித் துவத்தின் ஆணிவேரை அசைத்து வந்த பொருளாதார மந்தத்தி லிருந்து விடுவிப்பதற்காக அரசின் தலையீட்டையும் கட்டுப்பாடு களையும் ஏற்றுக்கொண்டாரென்றாலும், நிறைவேலை நிலையை எய்திய பின் தொன்மைப் பொருளாதாரக் கொள்கைகளுக்குத் திரும்பு வதற்குத் தயங்கவில்லை. மாறாக, "நான், தலையிடா வாணிகத்தில் நம்பிக்கை கொண்டவன்; நீண்டகாலக் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது அதுதான் கோட்பாட்டு ரீதியில் பழுதற்றது; அறிவின் பாற்பட்டதுமாகும்" என்று ஆணித்தரமாக அடித் துரைத்து வந்தார். முதலாளித்துவத்தை ஆதரித்தவர்தாமென்றாலும் ஏனைய மிதவாதிகளைப் போன்று எவ்விதமான சீர்திருத்தங் களையும் ஏற்கமாட்டோம் என்று கண்மூடித்தனமாகக் கீன்ஸ் முதலாளித்துவத்துக்கு வக்காலத்து வாங்கவில்லை. மாறாக, அடிப்படையை அசைக்காத வகையில் முதலாளித்துவத்தைச் சீர்திருத்த விரும்பியவர் கீன்ஸ். அறிவோடு அதை மேற்பார்வை செய்தால் முதலாளித்துவம் வேறெந்தப் பொருளாதார முறையைக் காட்டிலும் திறமையாகச் செயலாற்ற முடியும் என்பது கீன்ஸின் நம்பிக்கை.

**பணமாயையைப் பரப்பியவர்:** முதலாளித்துவம் அநீதி நிறைந்ததோர் பொருளாதார முறையாகும் என்பதைக் கீன்ஸ் ஒருபோதும் ஏற்றுக் கொள்ளவில்லை. தொழிலாளர் சுரண்டப்படுகிறார்கள் என்பது உண்மைதானா? எப்படிச் சுரண்டப்படுகிறார்கள்? சுரண்டலை ஒழிப்பது எப்படி? என்பன போன்ற கேள்விகளுக்குச் செவிகொடுக்கவில்லை. பொருளாதார மந்தத்தைப் போக்குவதெப்படி? என்பதே அவரது பெருங்கவலையாக இருந்து வந்தது. வேலையின்மையே மந்தத்தினால் விளையும் பெருங்கேடாகும் என்பது வெள்ளிடைமலையாகும். போதாத் தேவையே வேலையின்மைக்கான அடிப்படைக் காரணம் என்பதை நன்குணர்ந்த கீன்ஸ் முதலீட்டை இலாபகரமாக்கும் வகையில் தூண்டுவதன்மூலம் வேலைக்கான வாய்ப்புகளைப் பெருக்க எண்ணினார். முதலீட்டை இலாபகரமானதாகச் செய்வதற்குக் கூலிவெட்டு அவசியம் என்பது அவருக்குத் தெரியும். ஆனால், பணக்கூலிவெட்டுக்குத் தொழிற்சங்கங்கள் இடையூறாக இருப்பதை

நன்குணர்ந்தார். தொழிற்சங்கங்களின் எதிர்ப்பை முரியடிக்கக் கூடிய சர்வாதிக்காரச் சக்திகளை உருவாக்குவது சாத்தியமில்லை (விரும்பத் தகாததுங்கூட) என்பது அவருக்குத் தெரியும். எனவேதான் பணமாயையைப் பரப்புவதன்மூலம் மெய்க்கூலியை வெட்டும் உபாயத்தைக் கையாள முற்பட்டார். நுகர்வை அதிகரிப்பதன் மூலமாகவும் போதாத் தேவையைப் பூர்த்தி செய்யலாம் என்பது அவருக்குத் தெரியும். ஆனால், அதற்காகக் கூலியை உயர்த்தவோ, கூலியைப் பாதிக்கக் கூடிய வரிவகைகளைக் கைவிடவோ அவர் முன்வரவில்லை. வருவாயில் கூலியின் பங்கு உயர்ந்தால், முதலீடு இலாபகரமாக இருக்காது என்பது அவரது பயம். எனவே, தனியாரின் துறையில் நுகர்வில் ஏற்படும் குறைபாடுகளைப் பொதுத் துறைச் செலவுகளின்மூலம் ஈடுசெய்ய எண்ணினார். அதன் விளைவாக அரசுகள் வரவை மிஞ்சிச் செலவு செய்ய வேண்டியதாயிற்று. அரசு துறையில் ஏற்பட்ட பற்றுக்குறையைப் பணவீக்கமுறை களினால் ஈடுசெய்ய விரும்பினார். எனவே, முதலீட்டைத் தூண்டு வதற்கும் நுகர்வை அதிகரிப்பதற்கும் பணவீக்கம் துணை செய்தது. அதனால் வேலைக்கான வாய்ப்புகள் பெருகிய போதிலும் தொழிலாளரின் மெய்வருவாய் குன்றிவந்ததன் பயனாக நாட்டு வருவாயில் கூலியின் பங்கு உயர்ந்து வந்ததாகச் சொல்ல இயலாது. ஆனால், பணக்கூலி உயர்வையும் வேலைக்கான வாய்ப்புகளின் பெருக்கத்தையும் பொதுவாகத் தொழிலாளர் வரவேற்க வேண்டிய நிலை ஏற்பட்டது. ஆனால், உண்மைக்கூலி குறைந்து வருவதை அவர்களால் எளிதில் உணரமுடிவதில்லை. உணர்ந்தாலும் வலிமைமிக்க போராட்டங்களை உருவாக்குவது அவ்வளவு எளிதன்று. எனவே பணமாயையைப் பரப்புவதன்மூலம் தொழிற்சங்கங்களின் போர் வெறியைத் தணிக்கலாம் என்று கீன்ஸ் எண்ணினார் போலும். இவ் வகையில் பார்த்தால் பணவீக்கம் சுரண்டலை வலுப்படுத்தக் கூடிய இரகசிய ஆயுதமாகும் என்பது எளிதில் புலனாகும்.

இருப்பினும், கீன்ஸீயக் கொள்கையினடியாகப் பணக்கூலிக் கூடிவருவதைக் கண்ட பொருளாதாரிகள் சிலர் மார்க்ஸீயக் குறிக்கோள்கள் சமாதானமான வழியில் நிலைநாட்டப்படுவதாகப் பறைசாற்றி வந்தார்கள். இவர்களுள் பிரான்பென்பிரன்னர் (Bronfenbrenner) முக்கியமானவர். சங்கமாக ஒன்றுபட்ட தொழிலாளரும் விவசாயிகளும் பணவீக்கத்தால் பயன்பெற முடிகிறது என்பது அவரது கருத்து. எனவே, பணவீக்கத்தைச் சமுதாயத்தின் தலைநோவைப் போக்கும் தலைசிறந்தோர் தைலம் என்று பொருள்படும் வகையில் அவர் பாராட்டியுள்ளார். ஆனால், உழைப்பாளரின் உண்மைக் கூலி எவ்வாறு பணவீக்கத்தால் உறிஞ்சப் படுகிறது? பணவீக்கத்தின் காரணமாக நாட்டுவருவாயில்

உழைப்பாளரின் பங்கு அதிகரிப்பதாகக் கூற முடியுமா? என்ற கேள்விகளுக்குத் திருப்திகரமான விடைகாண விழையவில்லை. புள்ளி விவரங்களை நோக்கினுல் பத்தொன்பதாம் நூற்ருண்டில் நிகழ்ந்தது போலவே இரண்டாம் உலகப்போருக்குப் பின்னரும் பணவீக்கம் கொடுமையும் கடுமையும் நிறைந்ததோர் ஆயுதமாகப் பயன் படுத்தப்பட்டு வந்துள்ளது என்பது புலனுகும். பணவீக்கத்தின கொடுமையை அதனுல் பாதிக்கப்படுவர்கள் இடும் ஓலத்தைக் கொண்டுமட்டும் அளவிட முடியாது என்பதை மறந்து விடக் கூடாது. மாயையைப் பரப்பி மதியை மயக்குவதால்தான் பணவீக்கத்தைப் பணமாயை என்று அழைக்கிருேம்.

### ஏகபோக முதலாளிகளுக்குக் கொண்டாட்டம்

பணவீக்கத்தால் ஏற்பட்டுவந்த ஏற்றத்தாழ்வுகளைப் பற்றிக் கீன்ஸ் கவலைப்படடதில்லை. ஏற்கனவே சர்வாதீனச் சக்திகள் முதலாளித்துவப் பொருளாதாரங்களில் புரையோடி வந்தன. உற்பத்தியைக் கட்டுப்படுத்துவது, சந்தைகளைப் பங்குபோடுவது உற்பத்தியைக் குறைத்து அமிதஇலாபவகையில் விலைகளை நிருணயம் செய்வது, ஆளுக்கொரு விலைகூறுவது, பொருள்களின் உருவை மாற்றி ஏமாற்றுவது, ஏகபோக ஆதிக்கம் கொண்டுள்ள சந்தைகளில் உயர்ந்த விலையும் போட்டியும் வலுவாக உள்ள சந்தைகளில் குறைந்த விலையுமாக வசூலித்துக் கழுத்தறுப்புப் போட்டிகளின் மூலம் சர்வாதீனச் சக்திகளை உலகெங்கும் பரப்புவது, ஏழை எளிய நாடுகளைத் தங்கள் உடும்புப்பிடிக்குள் வைத்துச் சுரண்டுவது போன்ற பல்வேறு ஆயுதங்களைப் பயன்படுத்துவதன்மூலம் கீன்ஸீயக் கொள்கைகள் ஏகபோக முதலாளிகளின் கொடுங்கரங்களை மேலும் பலப்படுத்துவதாக அமைந்தன என்பர். சுங்கச்சுவர், வாணிகப்போர், பணவீக்கம் போன்ற பல்வேறு கருவிகளும் சர்வாதீனச் சக்திகளுக்கு உறுதுணையாகவே இருந்து வந்ததாக எண்ண இடமுண்டு. உண்மையில் கீன்ஸீயக் கொள்கையின்கீழ் உள்நாட்டில் மட்டுமன்றி உலகெங்கணும் சர்வாதீனச் சக்திகள் படர்ந்து பரவிவருவது கண்கூடு.

இருப்பினும், ஏகபோக முதலாளிகளின் முதலீட்டைத் தூண்டு வதன்மூலம் நிறைவேலையை நெருங்கி வரலாம் என்பது எளிதன்று. உற்பத்தியைச் சுருக்குவதன்மூலம் பொருள்களுக்குள்ள தட்டுப் பாட்டை அதிகரித்து அதன்மூலம் அமிதஇலாபம் காண்பவர்கள் ஏகபோக முதலாளிகள். அப்படியிருக்க மந்தப்பட்டபோது முதலீட்டு இறுதிநிலைத்திறனை மேம்படுத்துவதன்மூலம் அவர்களது முதலீட்டைத் தூண்டுவது விரும்பிய பலனை அளிக்காது என்பது நிக்கலஸ் கால்டரது (Nicholas Kaldor) கருத்து. இயல்பாகவே சர்வாதீனச்

சக்திகளின் பிடிப்பிலுள்ள தொழில்களில் எச்சவல்லமை மிகுந்திருப்பதுண்டு. பொருளாதாரம் மந்தப்படுகுழியின் அடி மட்டத்தில் உராய்ந்து வரும்போது எச்சவல்லமை மேன்மேலும் மிகுதியாகும். பொருளாதாரம், மந்தத்திலிருந்து மீண்டுவரும்போது எச்சவல்லமையுடன் இயங்கிவரும் தொழில்நிறுவனங்கள் தங்கள் எச்சவல்லமையைப் பயன்படுத்துமேயொழிய புதிதாக முதலீடு செய்யும் என்று எதிர்பார்க்க இயலாது. இந் நிலையில் தனியாரின் துறையிலுள்ள முதலீட்டைத் தூண்டுவது என்பது எளிதன்று. முதலாளித்துவ வளர்ச்சிக்கு முதலாளித்துவமே விலங்கிடுவது போன்ற இந் நிலையில் தனியாரின் துறையில் முதலீட்டுக்குள்ள தயக்கத்தை மேற்கொள்ள வேண்டுமாயின் பேரளவில் பொதுத் துறை முதலீட்டைப் பெருக்குவது இன்றியமையாததாகும் என்பது கால்டரது கருத்து. எனவேதான் முதலாளித்துவத்தைச் சுறுசுறுப்பாக இயங்கச் செய்ய வேண்டுமாயின் முதலாளித்துவத்தை ஒழித்தாக வேண்டும் என்று சிலர் கூறலாயினர் போலும்.

**சகலவிதமான வேலையின்மையையும் போக்கமுயலாததேன்?**

நிறைவேலை நிலையை நாடிய கீன்ஸ் அந் நிலைக்கு இலக்கணம் கூறிய வகையில் வேலையில்லாமல் வாடக்கூடிய பலரைப் புறக்கணித்தார் என்னலாம். வேலையை நாடி வந்தும் வேலை கிடைக்கப் பெறுதவர்களே வேலையில்லாதவர்கள் என்று வகுத்த காரணத்தால் வேலையின்றி வாழும் இலட்சக்கணக்கான பாட்டாளிகளை வேலையில்லாதோரின் கணக்கில் சேர்க்காமல் விட்டுவிடுவது வழக்கம். திடகாத்திரமாக இருந்தும் வேலைசெய்ய மறுக்கும் உலுத்தர்களைப் புறக்கணிப்பதால் தவறு ஒன்றும் நிகழ்ந்துவிடாதுதான். ஆனுல், பிறழ்ச்சி காரணமாக எண்ணிறந்தவர்கள் வேலையில்லாமல் திணறுவது அனைவரும் அறிந்ததே. ஆனுல், அத்தகையோர் ஒரு சில மாதங்களுக்குமேல் வேலையின்றி வாட அவசியமில்லை என்பது கீன்ஸது கருத்து. ஆனுல், அன்றூட வாழ்க்கையில் இவ் வகையைச் சேர்ந்தவர்கள் ஒருசில மாதங்களென்ன ஆண்டுக்கணக்கில் வேலையின்றி வாட நேரிடுகிறது என்பது குறிப்பிடத்தக்கது. அத்துடன், நுட்பத்தொழிலில் ஏற்பட்டு வரும் புரட்சிகளின் காரணமாகவும் ஆயிரக்கணக்கானவர்கள் தங்கள் வேலைகளைப் பறிகொடுத்துத் தெருவில் நிற்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுவதுமுண்டு. இக் காலத்தில் இத்தகையவர்களின் எண்ணிக்கை பெருகிவருவது கண்கூடு. மொத்தத்தில் உழைப்பாளரின் தொகையில் 5 முதல் 6 சதவீதத்தினர் பல்வேறு காரணங்களினுலும் வேலையின்றி வாடுவார்களேயாஞல் அதைச் சர்வசாதாரணம் என்று எண்ணி அரசுகளும் பொருளறிஞர்களும் வாளாவிருப்பதுண்டு. வேலையின்மையைப் போக்கவேண்டும் என்று கங்கணங்கட்டிய கீன்ஸே

இவ்வளவு வேலையின்மையைத் தவிர்க்க முடியாதது என்று கருதுகிறாரென்றால் வியப்புதான்.

கீன்ஸீய சகாப்தத்தில் நிலவிவரும் இத்தகைய வேலையின்மை அக்காலத்தில், மார்க்ஸ் குறிப்பிட்ட 'வேலையில்லாதோரின் படையை' ஒத்திருப்பது கவனிக்கற்பாலது. கூலியை ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேல் உயரவிடாமல் மட்டந்தட்டுவதற்கே அக் காலத்தில் வேலையில்லாதோரின் படை பயன்பட்டது. நாள்தோறும் பாடுபட்டு உழைத்து உயிர்வாழ வேண்டியவர்கள் பாட்டாளி மக்கள். எனவே, வேலைக்கான வாய்ப்புகள் தோன்றும்போது காலியாக உள்ள ஓர் இடத்துக்குப் பலபேர் போட்டியிடுவதன்மூலம் பிழைப்புக் கூலிக்குமேல் உழைப்பாளரின் ஊதியம் உயராமல் தடுக்க முடிந்தது. இக் காலத்தில் தொழிற்சங்கங்கள் தொழிலாளரின் அடிப்படை உரிமைகளைப் பாதுகாப்பதில் கண்ணுங்கருத்துமாக இருப்பது உண்மை. முதிர்ச்சியுற்ற மேற்கத்திய முதலாளித்துவ நாடுகளில் வேலையில்லாதோருக்கு நிவாரணம் வழங்கப்படுவதுமுண்டு. வேலையில்லாதவன் என்ற அவமானத்துக்குட்பட்டு மனம்புழுங்கி வாழ வேண்டினும் பசியும் பட்டினியுமாகப் பரிதவிக்கவேண்டியதில்லை. இருப்பினும், பொதுவாகப் பார்த்தால் வேலையில்லாதோரின் தொகை அன்றிருந்தது போலவே இன்றும் கூலியைக் கீழ்நோக்கி அமுக்கி வைக்க உதவி வருகிறது என்றால் மிகையாகாது. முதலாளிகளின் நலன்களில் மிகவும் அக்கறை கொண்டவராதலால் கூலியை மட்டந்தட்டும் நோக்கத்தோடுதான் கீன்ஸ் வேலையின்மையை அறவே ஒழிக்க வேண்டிய புரட்சிகரமான மாறுதல்களை நாடவில்லை என்று சிலர் அவர்மீது குறை கூறியுள்ளனர்.

### மாய்மாலமான கொள்கை ஜாலம்

வாங்கும் சக்தியைப் பலப்படுத்துவதன்மூலம் வேலையின்மையைப் போக்கலாம் என்று நம்பிவந்த கீன்ஸ் உழைப்பாளரின் மெய் வருவாயை நேரடியாகப் பெருக்கக்கூடிய வழிவகைகளைக் கடைப்பிடிக்க முயலாதது விந்தைதான். நுகர்வைப் பாதிக்கக்கூடிய மறைமுகவரிகளைக் கைவிடுவதன்மூலம் தொழிலாளரின் மெய் வருவாயை உறிஞ்சிக் குடிக்கக்கூடிய பணவீக்க முறைகளை மேற்கொள்ளாமல் நேரடியாக மெய்க்கூலியைக் கூட்டக்கூடிய வகையில் உழைப்பாளரின் ஊதியத்தில் தாராள மனப்பான்மை காட்டியிருக்கலாம். ஆனால், இவ்விரு முறைகளிலும் கீன்ஸ் விருப்புக் கொள்ளவில்லை. தங்கள் இலாபத்தைப் பாதிக்கக்கூடிய எந்தச் சீர்திருத்தத்தையும் முதலாளிகள் வரவேற்கமாட்டார்கள் என்பதே அதன் காரணம். மேலும், இலாபவேட்கையைச் சுக்கானாகக்

கொண்டு முதலாளித்துவப் படகை ஓட்ட முயன்றார் கீன்ஸ். எனவே, முதலாளிகளின் இலாபத்துக்குப் பங்கம் விளைவிக்கக்கூடிய எந்தத் திட்டத்தையும் அவர் மேற்கொள்ள விரும்பியதில்லை. அதனால்தான் பணமாயையைப் பரப்பக்கூடிய வகையில் பற்றாக்குறை நிதியாக்க முறைகளைக் கையாண்டு மெய்க்கூலியை வாட்டி முதலீட்டை இலாபகரமானதாகும் வகையில் தூண்ட முற்பட்டார். இப் போக்கைக் கண்டித்தவர்கள், கீன்ஸ், தொழிலாளரின் நலன்களை எதிர்க்காததுபோல் மாய்மாலம் பண்ணியபோதிலும் அவரது சாயம் எளிதில் வெளுத்துவிடுகிறது என்று கூறியுள்ளனர். முதலாளித்துவ முறையில் கீன்ஸ் கொண்டிருந்த அசைக்கமுடியாத பற்றுதான் முதலாளிகளுக்கு நன்மை பயக்கத்தக்கக் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் வகுக்குமாறு அவரை உந்தித்தள்ளி ஊக்குவித்தது என்னலாம். அதனால்தான் கீன்ஸது விருப்புவெறுப்புகளை நன்கு அறிந்த ஈட்டன் (Eaton) போன்றவர்கள் அவரை முதலாளித் துவத்தின் தோழனாகவும் தொழிலாளர் இயக்கத்தின் எதிரியாகவும் கருதி வந்தனர் போலும்.

## இருகோடுகள்

உருவகமாகக் கூறவேண்டுமாயின், கார்ல்மார்க்ஸ், கட்டியை அறுத்து எறியக்கூடிய இரண சிகிச்சையில் நம்பிக்கை கொண்டவர். மாறாக, கீன்ஸ் மேற்பூச்சாகப் பூசிக் கட்டியை அமுக்கிவிடக்கூடிய மருந்து மூலிகைகளைக் கடைந்தெடுத்தவர். ஆக்கசக்திக்கும் வாங்கும் சக்திக்குமுள்ள முரண்பாடு தனிவுடைமையால் ஏற்படுவது; தனியாரின் கையில் திரண்டுவரும் மூலதனத்தைப் பொதுவுடைமை ஆக்கினாலன்றிச் சமுதாயத்தில் ஆக்கிய பண்டங்களனைத்தையும் அனுபவிக்க முடியாமற் போகும்; எனவே, உடைமை முறையின் அடிப்படையை அடியோடு மாற்றி முதலீட்டைப் பொதுமயமாக்க வேண்டும் என்பது மார்க்ஸது கருத்து. மேலும், முதலாளித்துவத்தின் கீழ் தனிப்பட்ட முதலாளிகள் தங்களுக்கு எவ்வளவு இலாபங் கிடைக்கும் என்று கணக்குப் பார்த்தே முதலீடு செய்ய முற்படு வார்கள். பொருளுற்பத்தியை இவ்வாறு தனிப்பட்ட முதலாளிகளின் இலாபவேட்கையோடு இணைப்பது சமூகநலன்களுக்கு உகந்ததன்று என்பது மார்க்ஸது கருத்து. மக்களது அன்றாட அவசியங்களுக் கேற்பப் பொருளுற்பத்தி அமைதல் வேண்டும். இவ்வாறு பொருளுற் பத்தியைத் தனியாரின் இலாபவேட்கையிலிருந்து விடுவிக்க வேண்டுமாயின் உற்பத்திச் சாதனங்களனைத்தையும் பொதுவுடைமை யாக்கவேண்டும் என்பது கார்ல்மார்க்ஸ் குறித்த மருந்தாகும். உற்பத்திச் சாதனங்களைப் பொதுவுடைமையாக்கினால் எஞ்சிய உழைப்புத் தனியாரின் கையில் சிக்காமல் பொதுநலத்துக்காகப் பயன்

படுத்தப்படும்; சுரண்டல் ஒழியும்; முதலீடும் உற்பத்தியும் மக்களது தேவைகளுக்கேற்ப அமையும்; பொருளாதாரம் ஒரேசீராக இயங்கி வளரும்; சமுதாயத்திலுள்ள ஏற்றத்தாழ்வுகள் குறையும்; எனவே, முதலாளித்துவத்தை வாட்டிவரும் பீடைகளைப் போக்கவேண்டுமாயின் தனிவுடைமையை ஒழித்துப் பொதுவுடைமையை நிலை நாட்டுவதே பொருத்தமானது என்பது கார்ல்மார்க்ஸின் கணிப்பு.

வருவாய் பயக்கக்கூடிய சொத்துகளைப் பொதுவுடைமையாக்க அவசியமில்லை; விரும்பத்தகாததுங்கூட என்பது கீன்ஸது கருத்து. தனிவுடைமையின் அடிப்படையில் அமைந்த முதலாளித்துவ முறையில் விரும்பத்தகாத பல அம்சங்கள் இருக்கத்தான் செய்கின்றன என்பதைக் கீன்ஸ் ஏற்றுக்கொண்டாரென்றாலும் அவற்றை நீக்குவதற்காகத் தனிவுடைமையைக் கைவிட அவசியமில்லை; அரசு கட்டுபாட்டின்மூலமாகவே முதலாளித்துவத்தின் குறைகளைப் போக்கமுடியும் என்பது கீன்ஸது நம்பிக்கை.

கார்ல்மார்க்ஸும் கீன்ஸும் முதலாளித்துவத்தின் உள்ளப் போக்கையும் அவற்றின் இயக்கவிதிகளையும் பிரதிபலிக்கும் இரு கண்ணோட்டங்களை வகுத்தவர்களாவர். மார்க்ஸ், அநீதிகள் நிறைந்த முதலாளித்துவ முறையை ஒழித்துச் சுரண்டலற்ற சமதர்ம சமுதாயத்தைச் சமைக்க விரும்பினார். மாறாக, சுழலுக்குட்பட்டு இயங்கிவரும் முதலாளித்துவத்தின் மந்தத் தன்மையைப் போக்கிச் சுறுசுறுப்பாக்கிச் சுபிட்சப் பாதையில் சுமுகமாக இயங்கச் செய்ய வேண்டுமென்பது கீன்ஸது குறிக்கோள். இவ்விரண்டினுள் மார்க்ஸது கருத்துகள் தொழிலாளரின் நலன்களை மையமாகக் கொண்டது. கீன்ஸது கொள்கைகளும் கோட்பாடுகளும் தனிவுடைமையும் இலாபவேட்கையையும் அடிப்படையாகக் கொண்டது. இவ்விரு கருத்தோட்டங்களும் இன்றும் உலக அரங்கில் போட்டியிட்டு ஒன்றோடொன்று மோதிவருகின்றன. கீன்ஸ் உயிருடனிருக்கும் போதே சமதர்மக் கொள்கை உலகமக்களில் மூன்றிலொரு பகுதியினரைக் கவர்ந்துவிட்டதைக் கண்டார். பொதுவுடைமை கவர்ச்சிகரமானதோர் கருத்துதான் என்பதைப்பற்றி அவர் சந்தேகப்படவில்லையெனினும் சீர்திருத்தப்பட்ட முதலாளித்துவ முறையே உரிமை, திறமை ஆகியவற்றை ஒருங்கே பொருத்தியதாக அமையும் என்று கருதியவர். அந்த அடிப்படையில் உருவானதுதான் பொதுக் கோட்பாடும் அதையொட்டி வகுக்கப்பட்ட கொள்கைகளும். மேற்கத்திய முதலாளித்துவ நாடுகளனைத்துமே கீன்ஸ் காட்டிய வழியைப் பின்பற்றி வருகின்றன என்றால் மிகையாகாது. இருப்பினும் சமதர்ம நாடுகள் முதலாளித்துவ நாடுகளைக் காட்டிலும் வேகமாக முன்னேறி வருகின்றன என்பது நாட்டுவருவாய் பற்றிய புள்ளி

விவரங்களின் வாயிலாகக் காணக் கிடக்கின்றது. ஆனால், முதலாளித்துவ நாடுகளே உலக அரங்கில் இன்றும் செல்வமிக்க நாடுகள் என்ற அந்தஸ்தை வகித்து வருகின்றன. வாணிகச் சுழல்களும் நெருக்கடிகளும் அவ்வப்போது மிரட்டிவந்த போதிலும் அச்சு இறுந்த சகடம்போல் அசைய இயலாமல் சிக்கிச் சீரழியும் நிலையை முதலாளித்துவம் அடைந்துவிட்டதாகக் கூறிவிட முடியாது. இருப்பினும், உள்நாட்டிலும் முதலாளித்துவ நாடுகளிடையேயும் உள்ள ஏற்றத்தாழ்வுகளும் முரண்பாடுகளும் முற்றி வருவதாகவே எண்ண இடமுண்டு. இருந்தாலும் தயங்கிவரும் முதலாளித்துவ முறைக்கு முட்டுக்கொடுத்துத் தாங்கும் வகையில் இன்றுவரை கீன்ஸீயக் கொள்கைகள் பக்கபலமாக நின்று உதவி வருகின்றன என்றால் மிகையாகாது. குறிப்பாக, பெருகிவரும் இராணுவச் செலவே அமெரிக்க முதலாளித்துவத்தின் ஆயுள் காலத்தை நீடிக்கச் செய்துவருகிறது என்பர் சிலர். அதே சமயத்தில் சமதர்ம நாடுகள் சுபிட்சப் பாதையில் ஒரே சீராகச் சுமுகமாக இயங்கி வருகின்றன என்பதில் சந்தேகமில்லை. வாணிகச் சுழல்கள் அப் பொருளாதாரங்களை வாட்டுவதில்லை. வேலையின்மை என்ற பிரச்சினையே அங்குத் தலைகாட்டுவதில்லை. சமாதானம் நீடிக்குமாயின் சமதர்ம நாடுகள் மேன்மேலும் வேகமாக முன்னேறிவரும் என்றும் முதலாளித்துவ நாடுகளிலுள்ள முரண்பாடுகளும் நெருக்கடியும் மேன்மேலும் முற்றிவரும் என்றும் எதிர்பார்க்கலாம். இத்தகைய சிக்கல்கள் முற்றி அழிந்து போகாமல் முதலாளித்துவப் பொருளாதாரங்களை முட்டுக் கொடுத்துத் தாங்குவதற்குக் கீன்ஸீயக் கொள்கைகள் இன்னும் எத்தனை காலம் உதவ முடியும் என்ற கேள்விக்கு வரலாறே பதிலளிக்க வல்லது.

## மேலும் படித்தற்குரியவை


1. Dillard D., Op. Cit., Chapter XII pp 316-333
2. Eaton J., *Marx Against Keynes*, Lawrence & Wishart Ltd Londan, 1951.
3. Hansen A. H., Op. Cit. Chapter XIII.
4. Hariss. S. E., Op. Cit. Pp. 107-109; 544-549, 204-205.
5. Hazlitt. H., *Failure of New Econmics*, Op, Cit. pp. 385-392; 275-278.
6. Keynes J M., Op. Cit. Chapter XXIV.
7. Keynes J.M., *Essays in Persuasion*, Macmillam, London 1931 Part IV.
8. Klein L.R., Op. Cit. Chapters III & VII.

## 11. முடிவுரை

இன்றைய உலகின் அரசியல், பொருளாதார வானில் ஒளிவிட்டு இலங்கும் விண்மீன்கள் வரிசையில் ஒப்பற்றதோர் இடம் பெறுபவர் கீன்ஸ் என்ருல் அது மிகையாகாது. முதலாளித்துவப் பொருளாதாரங்களின் கருத்தரங்கில் சற்றேறக்குறைய அரை நூற்ருண்டுக் காலமாகச் செல்வாக்குப் பெற்று விளங்கும் பெருமை கீன்ஸுக்கே உண்டு. முதலாளித்துவத்தின் தாயகமாக விளங்கிய இங்கிலாந்தில் பிறந்து வளர்ந்தவராதலால் கீன்ஸ், முதலாளித்துவப் பொருளாதாரத்தின் பொதுப்படையான இயக்க விதிகளிலும் நடைமுறைகளிலும் இயல்பாகவே ஈடுபாடு கொண்டிருந்தார். மார்ஷலின் மரபில் வந்த மாணவஞதலால் தொன்மைப் பொருளாதாரக் கருத்துகளில் தோய்ந்திருந்ததில் வியப்பில்லை. ஆனல், நடைமுறையை உன்னிப்பாகக் கவனித்து வந்த அவர், தொன்மைப் பொருளாதாரக் கோட்பாடுகளில் கொஞ்சங்கொஞ்சமாக நம்பிக்கையிழந்து, ஒவ்வொன்ருகக் கைவிட்டுக் கடைசியில் அடிப்படையில் மாறுபட்டதோர் பொதுக்கோட்பாட்டை வகுப்பதில் முனைந்து நின்ருர் என்னலாம்.

முதலாம் உலகப்போருக்குப் பின்னர் முதலாளித்துவப் பொருளாதாரம் சிக்கலின்றித் தன்னியல்பாகவே இயங்கும் சக்தியை இழந்துவிட்டது என்பது கீன்ஸுக்குப் புலஞயிற்று. பொன் (நாணய) திட்டம் பணவாட்டத்துக்கு வழிவகுத்தது. அதன் சட்டதிட்டங்களைப் பலர் மீற முற்பட்டனர். பொன் (நாணய) திட்டத்தோடு தளையப்பட்ட பணவாக்கக் கொள்கைகளும் பயனற்றவையாயின. குறிப்பாக, வட்டிவீதம் மந்தசக்திகளை மேற்கொள்ளும் வலிவிழந்து நின்றது. பெரும் பொருளாதாரத்தின்போது முதலாளித்துவப் பொருளாதாரத்தின் அடிப்படைக் கோளாறுகளும் தொன்மைப் பொருளாதாரப் பரிகாரங்களின் பயனற்ற தன்மையும் பளிச்சென்று தெரிந்தன. எனவே, தங்குதடையற்ற தலையிடாக் கொள்கையின் மூலமாக முதலாளித்துவப் பொருளாதாரங்களை மந்தப்படுகுழியிலிருந்து விடுவிக்க முடியாது என்பதைக் கீன்ஸ் நன்குணர்ந்தார்,

பொருளாதாரத்தின் ஆக்கத்திறனுக்கும் வாங்கும்திறனுக்குமுள்ள முரண்பாடே மந்தத்துக்கான மூலகாரணம் என்பது அவருக்குத் தெரிந்தது. முதலாளித்துவத்தின் இளமைப் பருவத்தில் நாட்டுவருவாயின் பங்கீடு முதலினச் சொத்துகளை ஆட்கொண்டவர்களுக்குச் சாதகமாக இருந்ததாலேயே, முதலினச் சொத்துகளின் முழுச்சக்தியையும் பயன்படுத்துவதற்குப் போதிய தேவை இல்லாமல் போகிறது என்பது கீன்ஸுக்குத் தெரியும். எனினும், தனிவுடைமையில் பற்றுக் கொண்டவராதலால் முதலினச் சொத்துகளைப் பொதுவுடைமையாக்கி, வருவாய்ப் பங்கீட்டைச் சீரமைத்து, விலைவாசிகளைக் கட்டுப்படுத்தி பொருளாதாரத்தின் உற்பத்திச் சாதனங்களனைத்தும் பாமர மக்களின் வாழ்வை வளப்படுத்தும் வகையில் அமைந்திட கீன்ஸ் செயற்படவில்லை. மாறாக, உடைமையின் அடிப்படையை மாற்றாத வகையில் கூடியமட்டும் அங்காடியின் அசைவுகளுக்குட்பட்டு மந்தத்தைப் போக்கும் வழிவகைகளையே அவர் நாடலானார்.

பொருள்களுக்குள்ள தேவை, நுகர்வுநாட்டம், முதலீட்டு இறுதி நிலைத்திறன், வட்டிவீதம் ஆகியவற்றைப் பொறுத்து மாறுபடும் என்றார், கீன்ஸ். நுகர்வுநாட்டத்தை அதிகரிக்க வேண்டுமானால் வருவாயைச் சேமிக்க விரும்புபவர்களின் கையிலிருந்து செலவிட விரும்புபவர்களின் கைக்கு மாற்றும் வகையில் பங்கீட்டு முறையை மாற்றி அமைக்க வேண்டும் என்பது அவருக்குத் தெரியாமலில்லை. ஆனால், நேரடியாகக் கூலியின் பங்கை அதிகரித்தால் சொத்துக்காரர்களின் முதலீட்டு முயற்சிகள் சோர்வுற நேரிடுமோ என்று அஞ்சினார் போலும். ஆனால், பங்கீட்டு முறையிலுள்ள ஏற்றத்தாழ்வுகள் மேலும் அதிகரித்தால் மந்தச்சக்திகள் பலப்படும் என்பதை அவர் நன்குணர்ந்தார். இருப்பினும், உடைமையால் ஏற்படக்கூடிய ஏற்றத்தாழ்வுகளை அரசிறைக் கொள்கையின்மூலம் மட்டுப்படுத்தினால் போதும் என அவர் நம்பியதாகத் தெரிகிறது.

முதலீட்டைப் பொதுமயமாக்கலாமேயொழிய, முதலினச் சொத்துகளைப் பொதுவுடைமையாக்கக் கூடாது என்பது கீன்ஸின் கருத்து. தனிவுடைமையைப் பாதிக்காத முறையில் முதலீட்டைப் பொதுமயமாக்குவதெப்படி என்பதை அவர் தெளிவாக வரையறுக்கவில்லை. மாறாக, முதலீட்டைத் தூண்டுவதெப்படி, என்பது அவரது கருத்தைக் கவர்ந்த கேள்விகளுள் ஒன்றாகும். வட்டிவீதமும் வருங்காலம் பற்றிய எதிர்பார்ப்புகளும் முதலீட்டுக்கான தூண்டுதலைப் பாதிக்கும் என்பது அவருக்குத் தெரிந்ததே. வட்டிவீதம் வலியற்றிருந்தது; எதிர்காலம் பற்றிய மனோபாவம் ஆற்றுமணல் போல நிலையற்று விளங்கியது. மேலும், எச்சவல்லமை மிகுந்துள்ள நிலையில்

முதலீட்டைத் தூண்டுவதால் விரும்பிய பலன் கிடைக்குமா என்ற சந்தேகம் வலுத்து வந்தது. ஆயின், பணத்தினளவை அதிகரிப்பதன் மூலம் ஓரளவு வட்டிவீதத்தைக் குறைத்து முதலீட்டைத் தூண்டலாம் என்று அவர் நம்பினர்.

தனியாரின் துறையிலுள்ள நுகர்விலும் முதலீட்டிலுமுள்ள குறைபாடுகளை அரசு தலையீட்டின்மூலம் நிவர்த்தி செய்யலாம் என்பது கீன்ஸின் கருத்து. கல்வி, சுகாதாரம் போன்ற பொதுநலப் பணிகளில் மேற்கொள்ளப்படும் செலவுகளைப் பெருக்குவதுடன் பேரளவில் முதலீட்டைப் பெருக்குவதும் அரசின்பொறுப்பாகும்என்று அவர் எண்ணினர். ஆனல், நடைமுறையில் இலாபகரமான துறைகளில் அரசு முதலீட்டைச் செலுத்தும் வகையில் எவரும் செயல்படவில்லை. பதிலாக, இராணுவம்போன்ற வெட்டிச் செலவுகளிலும், போக்குவரத்து, மின்சாரம், நீர்ப்பாசனம் போன்ற பொதுநலம் பயக்கும் துறைகளிலும் அரசின் முதலீடு சென்றது. மேலோங்கி நிற்கும் மந்தசக்திகளை முரியடிக்கும் வகையில் மேற்கொள்ளப்படும் அரசு செலவுகளின் காரணமாக ஏற்படக் கூடிய பற்றுக்குறையைப் பணப்பெருக்கத்தின் வாயிலாக ஈடு செய்வது நல்லது எனக் கீன்ஸ் கருதினர். பற்றுக்குறைநிதியாக்கத்தின்மூலம் பரப்பப்படும் பண மாயையைக் கொண்டு தொழிலாளரின் உண்மை வருவாயைக் குடிப்பதுடன் முதலீட்டுத் தூண்டுதலையும் பலப்படுத்தலாம் என்பது அவரது நம்பிக்கை. பொதுத்துறைக் கடன்களைப் பேரளவில் பெருக்குவதன்மூலம் எதிர்காலத்தை நிகழ்காலத்துக்கு அடகு வைத்தாலும் பாதகமில்லை என்று அவர் எண்ணினர். பணவீக்க முறைகளால் ஏழைகளின் நலன்களுக்கு எவ்வளவு பாதகம் விளையும் என்பது குறித்து அவர் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை.

கீன்ஸீயக் கருத்தோட்டங்கள் பொருளாதாரம் முழுவதையும் பற்றியவை. மொத்தத் தேவையைப் பலப்படுத்துவதன்மூலம் வருவாயையும் வேலையினளவையும் அதிகரிக்கலாம் என்று நம்பியவர் அவர். தேவையை நுகர்வின் வாயிலாகவும் முதலீட்டின் வாயிலாகவும் பெருக்கலாமாதலால், ஒன்றிலுள்ள குறைபாட்டை, மந்தத்தைக் கொண்டு ஈடு செய்யலாம் என்பது அவரது எண்ணம். தேவை இன்றியமையாததா? பயன்தரத்தக்கதா? ஆக்கசுரமானதா? என்பனவற்றைப் பற்றிக் கீன்ஸ் கவலைப்பட்டதில்லை. மொத்தத் தேவை நிறைவேலை நிலையை நெருங்குவதற்குப் போதிய அளவில் இருந்தாலே போதுமானது என்பது அவரது எண்ணம்.

இத்தகைய கண்ணேட்டத்தால் விளைந்த விபரீதங்கள் பலவாகும். முதற்கண், பெருகிவரும் வருவாய் யார் கையில் போய் முடங்குகிறது என்பதைப் பற்றியோ உற்பத்தி உறவிலுள்ள முரண்

பாடுகளால் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளைப் பற்றியோ கீன்ஸீயப் பரம்பரையினர் மனதை அலட்டிக் கொள்ளுவதில்லை. இரண்டாவது, எந்த இனத்தவர் அல்லது வகுப்பினர் வேலைக்கான வாய்ப்புகளால் பயனடைகின்றனர்? என்ற கேள்வியும் அவர்களது மனத்தை வாட்டுவதில்லை. கல்வியறிவும் வினைநுட்பத்திறனும், தொழில் திறமையும் கொண்டவர்களோ குறிப்பிட்ட ஓர் இனத்தவரோ வேலைக்கான வாய்ப்புகளைச் சுருக்கினாலும் பரவாயில்லை; வேலையினளவு உயர்ந்தால்போதும் என்பது அவர்களது கருத்து. மூன்றாவது, பொருளுற்பத்தி எத்துணைப் பயனுள்ளது என்று அவர்கள் எண்ணிப் பார்ப்பதுமில்லை. உற்பத்தியைப் பெருக்கும் வகையில் ஒருபுறம் அரசாங்கம் கொடைகளையும் மானியங்களையும் வழங்கும்; மற்றொரு புறம் ஆக்கிய பண்டங்களை அழிப்பதற்கும், நிலத்தைத் தரிசாக்கு வதற்கும் உதவித் தொகையளிக்கும். விளம்பரத்துக்காகச் செலவிடப் படும் தொகை எவ்வளவு பயனற்றது என்பதும் தெளிவு. பசியும் பட்டினியும் வாட்டிவரும்போதே கோடானுகோடி ரூபாயைப் பாதுகாப்பு என்ற வகையில் கொட்டியளப்பதன் கொடுமையையும் விளக்கவேண்டிய அவசியமில்லை. இத்தகைய இராணுவச் செலவுகளால் பெரிதும் பயன் பெறுவது மட்டற்றச் சக்திபெற்ற மாபெரும் ஏகபோக முதலாளிகள்தாம் என்பது குறிப்பிடத்தக்கது. அதைப் போலவே முதலீட்டுக்கான தூண்டுதல் என்ற பெயராலேயே உலக அரங்கில் திளைத்து விளையாடிவரும் தொழில்திமிங்கலங்கள் பல பல்கிப் பெருகி வருகின்றன. அதனால் சின்னஞ்சிறு நாடுகள் பலவற்றின் அரசியல், பொருளாதார சுதந்திரத்துக்கு எவ்வளவு குந்தகம் விளைகிறது என்பதை எளிதில் கணக்கிட இயலாது.

கீன்ஸீயக் கருத்துகளால் விளைந்த இத்தகைய விபரீதங்கள் முதிர்ச்சியுற்ற முதலாளித்துவப் பொருளாதாரங்களோடு ஒடுங்கிய தன்று. பின்தங்கிய நாடுகள் பல, கீன்ஸீயக் கோட்பாடுகளினடியாகத் தங்கள் பொருளாதார வளர்ச்சியைத் தூண்டக்கூடிய கொள்கை களையும் நடைமுறைகளையும் உருவாக்க முயன்று வருகின்றன. பழமை மிக்கதும் மக்கள் பெருக்கம் மிகுந்ததுமான இந்தியாபோன்ற நாடு களில் வேலையின்மையும் வேலைக்குறைவும் பேரளவில் காணப்படுவது கண்கூடு. ஆனால், இத்தகைய வேலையின்மை போதாத்தேவையால் ஏற்படுவதன்று; மாறாக, இத்தகைய பொருளாதாரங்களில் தேவை, அளிப்பை மிஞ்சி நிற்பதுண்டு. இவ்வாறு வேலையின்மையோடு பண வீக்கமும் ஒருமித்திருப்பது முதிர்ச்சியுற்ற பொருளாதாரங்களின் அனுபவத்திற்கு முரணானது. மேலும், பின்தங்கிய நாடுகளில் சேமிப்பு, முதலீட்டுக்கான வாய்ப்புகளின்றிச் செம்மிக் கிடப்பதில்லை. போதிய சேமிப்பு இல்லாமல் தேக்கமுறுவதே பின்தங்கிய நாடுகளின் முக்கியமான இயல்பாகும். இவ்வாறு அடிப்படையில் மாறுபட்ட

தன்மைபடைத்த பின்தங்கிய பொருளாதாரங்களுக்கு வலிவூட்டி வளர்ப்பதற்குக் கீன்ஸீய மருந்துகள் பயன்படுத்தப்பட்டு வருவது பொருத்தமன்று.

பின்தங்கிய பொருளாதார வளர்ச்சிக்குச் சமூக, பொருளாதார கலாச்சார அடிப்படை, அரசு நிருவாக அமைப்பு ஆகியவை ஆக்ககரமான முறையில் மாற்றியமைக்கப்பட வேண்டுவதன் அவசியத்தை வற்புறுத்தி வந்தபோதிலும், முதலாக்கத்துக்கே கீன்ஸீயப் பரம்பரையினர் முக்கியத்தும் கொடுத்து வந்துள்ளனர். சமூக, பொருளாதார அமைப்பை மாற்றியமைக்க வேண்டும் என்று கூறியவிடத்தும் முதலாளித்துவத்தைக் குறிப்பிடுவதில்லை. மாறாக, முதலாளித்துவத்துக்கு முற்பட்ட பழங்குடிமக்களின் அல்லது நிலப்பிரபுத்துவப் பொருளாதார அமைப்புகளையும் அதையொட்டிய மனோபாவங்களையுமே பெரும்பாலும் மனதிற் கொண்டிருந்தனர். முரண்பாடு மிக்க முதலாளித்துவத்தையோ, தனியாரின் இலாப வேட்கையையோ கைவிட்டுவிட்டுச் சமதர்ம அடிப்படையில் பொரு ளாதார வளர்ச்சியைத் தூண்டும் வழிவகைகளை அவர்கள் நாடிய தில்லை. மாறாக, தொழில்முனைவர்களை ஊக்குவித்து அவர்கள் வெற்றிகரமாகச் செயல்படுத்துவதற்கான சூழ்நிலையை உருவாக்கும் வகையில் அரசின் தலையீடு அமைய வேண்டும் என்பதே அவர்களது கருத்து.

பொருளாதார வளர்ச்சியையே தனிநபரின் மெய்வருவாயின் பெருக்கம் என்று விளக்குவது கீன்ஸீயப் பரம்பரை. வருவாய் எப்படி பங்கிடப்படுகிறது என்பது உடனடியான பிரச்சினை அன்று என்பது அவர்களது கருத்து. ஆதலின், நாட்டுவருவாயும் தனிநபர் மெய்வரு வாயும் பெருகுவதற்குக் கணிசமான முதல்திரட்சி இன்றியமையாதது என்பர். முதல் திரட்சியுற வேண்டுமாயின் ஆண்டாண்டுதோறும் புத்தம்புது முதலினங்கள் உருவாக்கப்பட வேண்டும். முதலாக்கத் துக்கு அடிப்படை, சேமிப்பு. உள்நாட்டின் சேமிப்புப் போதிய அளவில் இல்லாவிட்டால் அயல்நாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய வேண்டும் என்பர். பன்னாட்டுப் பொருளாதார அமைப்புகளையும் உறவுகளையும் வகுப்பதில் கீன்ஸ் பெரும்பங்கு வகித்து வந்தார் என்பது உலகறிந்த உண்மை. ஆனால், அடிப்படையில் இத்தகைய அமைப்புகள் பணக்கார நாடுகள் மேன்மேலும் வாழவும் ஏழை எளிய நாடுகள் தேயவுமே வழிவகுத்து வருகின்றன. அயல்நாடுகளைச் சார்ந்திருப்பதால் பின்தங்கிய நாடுகளின் விடுதலை வாழ்க்கைக்கு விளையக்கூடிய விபத்து களோ தன்னிறைவு, தற்சார்புபோன்ற குறிக்கோள்களுக்கு ஏற்படக் கூடிய கேடுகளோ கீன்ஸீயப் பரம்பரையினரை வாட்டியதில்லை.

மேற்கத்திய நாடுகளிலுள்ள கீன்ஸீயப் பரம்பரையினரைப் போன்று முதலீடு, அரசின்செலவு ஆகியவை ஆக்ககரமான துறைகளில் சென்றாலும் சரி, அழிவுத்துறையில் செலுத்தப்பட்டாலும் சரி, அதைப்பற்றிக் கவலையில்லை என்று கருதுவோருமுண்டு. பொருளுற்பத்தி ஆக்ககரமான முதலீட்டைச் சார்ந்திருப்பதால் அத்தகைய முதலீட்டின் அவசியத்தைச் சிலர் வலியுறுத்தி வந்துள்ளனர். ஆனால், இலாபகரமானதும் விரைவில் பயன்தரக்கூடியது மான முதலீட்டைத் தனியாரின் முயற்சிக்கு விட்டுவிட்டுப் பொது நலம் பயக்கக் கூடியதும் விரைவில் பயன்தரக் கூடாததும் பேரளவில் முதலீட்டை உறிஞ்சக்கூடியதுமான முதலீடுகளைப் பொதுத்துறையில் மேற்கொள்ள வேண்டும் என்று கோரி வருகின்றனர். அதன்படி, போக்குவரத்து, நீர்ப்பாசனம், மின்சாரம் போன்ற முதலீடுகள் பொதுத்துறையைச் சாரும். அத்துடன், பேரளவில் முதலை ஈடுபடுத்த வேண்டிய உலோகங்கள், மின்சாரம், இரும்பு, பொறியியல், இரசாயனம், எண்ணெய் போன்ற கனரகத் தொழில்களும் பொதுத் துறையில் இடம் பெற்றுள்ளன. எனினும், தனியாரின் கையிலுள்ள இலாபகரமான துறைகளுக்கு உரமூட்டி, நீர்பாய்ச்சி, களையெடுக்கும் வகையில் பொதுத்துறை அமைந்திருப்பது கண்கூடு. தனியாரின் முதலீடுகள் சிலரின் பிடியில் சிக்கி வருவதைப்பற்றி அவ்வப்போது மனம் நொந்த போதிலும் பெரும் முதலாளிகளின் ஆதரவின்றித் துரிதமான தொழில் வளர்ச்சியைத் தூண்ட முடியாது என்பர். திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சிக்கு அரசின் கட்டுப்பாடுகள் இன்றியமையாதவை என்பதை உணர்ந்த போதிலும், சந்தையைச் சார்ந்து செயற்பட்டாலன்றிப் பொருளாதாரம் திறமையாக இயங்க இயலாது என்பதையே அவர்கள் மூலமந்திரமாகக் கொண்டுள்ளனர்.

பணவாக்கக் கொள்கையிலும் அரசிறைக் கொள்கையிலும் கீன்ஸின் செல்வாக்கு மேலோங்கி நிற்பதைக் காணலாம். முதற்கண், முதலீட்டைத் தூண்டுவதற்குக் குறைந்த வட்டிவீதம் இன்றியமை யாதது என்பர். சோம்பிக் கிடக்கும் சேமிப்பைச் செயற்படுத்த முடியாமல் திக்குமுக்காடும் முதிர்ச்சியுற்ற முதலாளித்துவப் பொரு ளாதாரங்களுக்கே பொருத்தமான இம் மலிவான கடன்கொள்கையை (Cheap Money Policy) போதிய சேமிப்போ, முதலாக்கமோ இன்றித் தவிக்கும் பின்தங்கிய நாடுகளில் புகுத்த முயன்றது விந்தைதான். மேற்கத்திய முதலாளித்துவ நாடுகள் மந்தச் சேற்றில் மூழ்கியிருந்த காலத்தில் தோன்றிய ரிசர்வ் பாங்க் ஆப் இந்தியா (Reserve Bank of India) 1935-1951 வரை வட்டிவீதத்தை 3 சதவீதமாக வைத் திருந்தது கீன்ஸீயக் கொள்கையின் செல்வாக்குக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகும். இன்றுகூட வட்டிவீதம் 6 சதவீதத்துக்கு மேலில்லை என்பது குறிப்பிடத் தக்கது. இக் குறைந்த வீதத்தைக்கூட

கீன்ஸீயப் பரம்பரையினர் பலர் கடுமையான வட்டிவீதம் என்று வருணிப்பதுண்டு. இந்தியாவில் முதலுக்கு எவ்வளவு பஞ்சம் என்பது தெற்றெனத் தெரிந்ததொன்றாகும். எனவே, பொதுவாக வட்டிவீதம் இத்தகைய முதல் பஞ்சத்தைப் பிரதிபலிக்கும் வகையில் கடுமையாக இருக்கவேண்டும். அப்படி இருந்தால் மட்டுமே சேமிப்பு (முதல்) சிக்கனமாகச் செலவிடப்படும்.

ஏழை எளியவர்களுக்குப் பயன்படக்கூடிய வகையில் வட்டி வீதத்தை மட்டுப்படுத்தினால் அதை வரவேற்கலாம். ஆனால், இன்று வங்கிக்கடன் வழங்கப்படும் வகையில் வங்கிக்கடனால் பயன்பெறும் முதலாளிகளும் வணிகருமே இத்தகைய மலிவான கடன் கொள்கையைக் கண்டு மனங்குளிர முடியும்.

சேமிப்பை அதிகரிக்க வேண்டுமானால் நுகர்வை மட்டந்தட்டிச் சேமிப்பைத் தூண்ட வேண்டும் என்பதும் கீன்ஸீயப் பரம்பரை யினடியாக எழுந்ததோர் கொள்கைதான். சேமிப்புச் சம்பந்தமாக கீன்ஸ் வகுத்த அரசிறைக் கொள்கைகளுக்கும் இன்று கீன்ஸீயப் பரம்பரையினர் பின்தங்கிய நாடுகளில் கடைப்பிடித்துவரும் கொள்கைக்கும் அடிப்படையில் முக்கியமான வேறுபாடுகள் உண்டு. செம்மிக் கிடக்கும் சேமிப்பைச் செயற்படுத்துவதெப்படி என்பதே முதிர்ச்சியுற்ற முதலாளித்துவப் பொருளாதாரங்களின் மாபெருங் கவலைகளுள் ஒன்றாக இருந்து வருகிறது. எனவே தனியாரின் துறையிலும் பொதுத்துறையிலும் நுகர்வுக்கான செலவினங் களைப் பெருக்குவதெப்படி என்பது அரசிறைக் கொள்கையின் அடிப்படையான பிரச்சினைகளுள் ஒன்றாகும். வளர்வீதவருமானவரி, பொதுத்துறைச் செலவுகள், அரசின் பொதுக்கடன் பெருக்கும், பற்றாக்குறைநிதியாக்கம் போன்றவை அத்தகைய அரசிறைக் கொள்கையின் பல்வேறு அம்சங்களாகும். ஆனால்,இக் கொள்கைகளைப் பின்தங்கிய பொருளாதாரங்களில் செயற்படுத்துவதில் ஒருசில முக்கியமான மாற்றங்கள் கவனத்திற்குரியவை. முதற்கண், பின்தங்கிய நாடுகளிலும் வளர்வீதவருமானவரிகள் உண்டென்றாலும் மொத்தத்தில் வளர்வீதநேர்முகவரிகளுக்கு அவ்வளவு முக்கியத் துவம் அளிப்பதில்லை. இரண்டாவது, பொதுத்துறைச் செலவுகளில் நுகர்வைக் காட்டிலும் வளர்ச்சிக்கு அடிப்படையான முதலீடே தொனித்து நிற்கவேண்டுமென நாடுவர். மூன்றாவது, தனியாரின் துறையில் திரண்டுவரும் சேமிப்பைப் பெரும்பாலும் அத் துறை யிலேயே முதலீட்டைப் பெருக்கும் வகையில் ஈடுபடுத்த விரும்புவர். அவ்வாறு ஈடுபடுத்த முடியாத சேமிப்பையே அரசுபொதுக்கடனாகத் திரட்ட முயலும் அல்லது சிறுசேமிப்புத் திட்டங்களின்மூலம் நுகர்வை மட்டுப்படுத்திச் சேமிப்பை அதிகரிக்க முயலும். மொத்தத்தில்

செம்மிக் கிடக்கும் சேமிப்பைச் செயற்படுத்துவதே முதிர்ச்சியுற்ற முதலாளித்துவப் பொருளாதாரங்களின் அரசிறைக் கொள்கையின் முக்கியமான அம்சமாகும்; மாருக, நாட்டுவருவாயில் நுகர்வின் பங்கைக் குறைத்துச் சேமிப்பைப் பெருக்குவதே பின்தங்கிய நாடுகளில் கடைப்பிடிக்கும் அடிப்படையான அரசிறைக் கொள்கையாகும். சான்ருக, பின்தங்கிய பொருளாதாரங்களின் நாட்டுவருவாயில் சேமிப்பின் பங்கை 5 சதவீதத்திலிருந்து 12 சதவீதமாக உயர்த்த வேண்டுமானுல் மறைமுக வரிகள், பணவீக்க முறைகள் ஆகியவற்ருல் நுகர்வைக் குறைக்க வேண்டும் என்பது ஆர்தர்லீயி (Arther Lewis) போன்றவர்களின் வாதம். நுகர்வை மட்டந்தட்டுவதென்ருல் அதற்காகப் பிழைப்பு வருவாய்க்கே வழியில்லாமல் பசியும் பட்டினியுமாக வாடும் பாமரரின் வயிற்றை இறுக்கும் வகையில் வரிக்கொள்கையை வகுக்க வேண்டுமே என்பது பற்றிக் கீன்ஸீயப் பரம்பரை கவலை கொள்ளவில்லை.

பணமாயையைப் பரப்புவதன்மூலம் உண்மைவருவாயை வாட்டுவதுடன் முதலீட்டையும் தூண்டலாம் என்பது கீன்ஸீயக் கண்ணேட்டமாகும். வேலையின்மையைப் போக்குவதற்குக் கீன்ஸ் குறித்த மூலிகைகளில் முக்கியமானது பற்ருக்குறைநிதியாக்கம். பண வாட்டம் மிகுந்த முதிர்ச்சியுற்ற முதலாளித்துவப் பொருளாதாரத் துக்குக் குறித்த இம் மருந்தைப் பணவீக்கச் சக்திகள் வீறுகொண்டு நிற்கும் பின்தங்கிய பொருளாதாரங்களின் வேலையின்மையையும் குறைவேலையையும் குறைக்கும் பரிகாரமாகப் பயன்படுத்தினர். மிஞ்சி நிற்கும் மக்கள்சக்தி, மறைந்து கிடக்கும் மூலதனம் என்பது உண்மையான வாசகமாகும். மக்கள், வளத்தைக் கொஞ்சமும் வீணுக்காமல் காடுகள் வளர்த்தல், சாலைகள் அமைத்தல், நீர்ப் பாசனவசதிகளைப் பெருக்குதல் போன்ற முதலீட்டு முயற்சிகளில் ஈடுபடுத்தியதே சமதர்ம நாடுகள், குறிப்பாக சீன, பொருளாதார வளர்ச்சிப்பாதையில் அடைந்துவரும் வெற்றிகளுக்கு அடிப்படை யான காரணமாகும். ஆனுல் சமதர்மநாடுகளில் உள்ளதுபோலப் பொருளாதார, சமுதாய அடிப்படையை மாற்றியமைப்பதன் மூலம் உபரிமக்களை ஆக்கத்துறைகளில் பயன்படுத்துவதற்குப் பதிலாகப் பற்ருக்குறைநிதியாக்கத்தின்மூலம் அத்தகைய முதலாக்க முயற்சிகளைத் தூண்டலாம் என்பது கீன்ஸீயவாதிகளின் கருத்து. ஆர்தர் லூயி, ராக்னர் நர்க்சே (Ragner Narkse) ஆகியோர் வகுத்துள்ள வழிவகைகள் ஆகும். அவை இத்தகைய அடிப்படையில் அமைந்தவை தான். பணவீக்க சக்திகள் மேலோங்கி நிற்கும் பொருளாதாரங்களில் அத்துமீறிய பற்ருக்குறைநிதியாக்க முறைகளால் விலைவாசிகள் உயரும்; நுகர்வோரின் வாங்கும்சக்தி வற்றும்; பாட்டாளிகளின் உண்மைக் கூலி குன்றும்; மாருத வருவாயைக் கொண்ட நடுத்தர

வகுப்பாரின் உண்மை வருவாய் உறிஞ்சப்படும். இன்னபல விளைவுகளால் முதலாளிகளும் சொத்துவசதிபடைத்தவர்களும் மேலும் பலம்பெற்று விளங்குவதும் ஏழை எளியவர்களின் கழுதை தேய்ந்து கட்டெறும்பாவதுபோலத் தேய்வதும் கண்கூடு. இந் நிலையில் பணக்காரரின் கை ஓங்குவதையும் பாமரரின் கை தாழ்வதன் காரணமாகச் சமுதாயத்தில் முரண்பாடுகளும் போராட்டங்களும் மலிவது இயல்பு. சுருங்கக் கூறின் தனிவுடைமையால் ஏற்படும் முரண்பாடுகளையும் சிக்கல்களையும் நீக்குவதில் கீன்ஸ் வெற்றி கண்டாரெனச் சொல்ல இயலாது. வளர்வீதவரிகள், பொதுநலப் பணிகள், சமூகப் பாதுகாப்பு ஆகியவற்றின்மூலம் பொருளாதார முறையிலும் சமுதாய அமைப்பிலுமுள்ள அநீதிகளை முரியடிக்க முடியவில்லை. மாருக, உற்பத்தி உறவுகளுக்கும் உற்பத்தி சக்திகளுக்குமுள்ள முரண்பாடுகள் மேன்மேலும் முற்றி வருகின்றன என்று எண்ண இடமுண்டு. உலக அரங்கிலே பின்தங்கிய நாடுகள் ஏகாதிபத்திய நாடுகளின் ஆதிக்கத்தை எதிர்த்து வருகின்றன; முதலாளித்துவப் பொருளாதாரங்களின் தலைமைப்பீடத்தில் அமர்ந்துள்ள அமெரிக்காவை உள்நாட்டு நெருக்கடிகள் பல பயமுறுத்திவருகின்றன. பின்தங்கிய நாடுகளிலும், உள்ளவர்களுக்கும் இல்லாதவர்களுக்குமுள்ள முரண்பாடுகள் முற்றி வருகின்றன. இத்தனை குறைபாடுகள் காணப்பட்டபோதிலும் முதலாளித்துவத்தின் வாழ்நாள் இன்றுவரை நீடிக்கப்பட்டிருக்கிறது என்ருல் அதற்குக் கருத்தளவிலும் கொள்கை வடிவிலும் கீன்ஸ் ஏற்படுத்திய புரட்சியே காரணமென்ருல் அது மிகையாகாது. அத்தகைய அனுபவமே பின்தங்கிய நாடுகளின் பொருளாதார வளர்ச்சிக்கான கொள்கைகளையும் செயல்களையும் வகுக்கும்படி கீன்ஸீயப் பரம்பரையினரை ஊக்குவித்து வருகிறது. தனிவுடைமையை அடிப்படையாகக் கொண்ட கீன்ஸீயப் பரம்பரையின்மூலம் பொருளாதார வளர்ச்சியையும் சமூக, பொருளாதார சமத்துவத்தையும் ஒருங்கே அடைய முடியும் என்ற நம்பிக்கையுடன் கீன்ஸீயப் பரம்பரையினர் பொருளாதாரத் திட்டங்களைத் தீட்டி, அவற்றைச் செயற்படுத்தும் வகையில் தங்கள் சக்திகளைச் செலவிட்டு வருகின்றனர். மாருக, சொத்துகள் ஒரு சிலரிடமே குவிந்திருக்கும் வரை பொருளாதார வளர்ச்சியும் விறுவிறுப்பாக இராது; ஏற்றத்தாழ்வுகளும் மறையாது என்பது கார்ல்மார்க்ஸின் மரபில் வந்தவர்கள் விடுக்கும் எச்சரிக்கையாகும்.

ஏற்றத்தாழ்வுகள் குறையவேண்டும் என்பதை மார்க்ஸூம் கீன்ஸூம் நன்குணர்த்திருந்தனர். ஆனால், நோய்க்குப் பரிகாரம் தேடும்போது இருவரும் அடிப்படையில் வேறுபட்ட மருத்துவ முறைகளை வகுக்கலாயினர்.

## முதலாளித்துவ முறையில் கீன்ஸ் கண்ட குறைபாடுகள்

கீன்ஸ், முதலாளித்துவம் இழைத்து வந்த அநீதிகளைக் கண்டு சீறி எழவில்லை. சொத்துரிமையின் காரணமாகவும் அதன் பயனாகப் பொருளுற்பத்தியில் முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்குமிடையே ஏற்படும் உறவின் காரணமாக நடைபெறும் சுரண்டலே முதலாளித்துவப் பொருளாதாரத்தின் அடிப்படைக் கோளாறு என்று கீன்ஸ் ஒருபோதும் எண்ணியதில்லை. உண்மையில், முதலாளித்துவ முறையின் கீழ் உழைப்பாளர்கள் சுரண்டப்படுகிறார்களே என்று அவர் கவலைப்பட்டதும் கிடையாது. போதாத் தேவையின் காரணமாகக் கோடிக்கணக்கானவர்கள் வேலையின்றி வாடவேண்டிய நிலை ஏற்படுகிறதே. பொருளாதாரம் ஒரே சீராக இயங்காமல் சிக்கலுறுவதால் உழைப்பாளர் ஆக்கப்பணிகளில் ஈடுபட முடியாமல் தவிப்பதுடன் ஆக்கிய பண்டங்களை அனுபவிக்க இயலாமல் அல்லல்படுகிறார்களே என்று மிகவும் மனம் புழுங்கினார். அதன் காரணமாகக் கார்ல் மார்க்ஸின் அடிச்சுவட்டைப் பின்பற்றி, உழைப்பே பொருள்களுக்கு மதிப்பூட்டுகிறது என்ற கோட்பாட்டில் நம்பிக்கை வைக்கவில்லை; சுரண்டல் ஒழியவேண்டுமென்று கோஷமிடவுமில்லை. சுரண்டலை அடிப்படையாகக்கொண்ட முதலாளித்துவத்தை அடியோடு மாற்றியமைத்துப் பொதுவுடைமைச் சமுதாயத்தைச் சமைக்கவும் அவர் விரும்பவில்லை.

மாறாக, போதாத் தேவைக்கான காரணங்களைமட்டும் மேற்போக்காக ஆராய்ந்து அவற்றைக் களைய விரும்பினார். குன்றிவரும் முதலீட்டு இறுதிநிலைத்திறனும் குறைந்துவரும் இறுதிநிலை நுகர்வு நாட்டமுமே மந்தத்துக்கான முக்கியக் காரணங்கள் என்று கீன்ஸூக்குப்பட்டது. எனவே, முதலீட்டைத் தூண்டி நுகர்வைப் பெருக்கும் முயற்சியில் அவர் முனையலானார். நுகர்வுக்கும் வருவாயின் பங்கீட்டுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டென்பதை அவர் நன்குணர்ந்தவராதலால் வருவாயிலுள்ள ஏற்றத்தாழ்வுகளைக் குறைப்பதன்மூலம் நுகர்வுநாட்டத்தைப் பலப்படுத்த முடியும் என்றும் அப்படிச் செய்வதனால் பொருள்களுக்குள்ள தேவை அதிகரித்துப் பொருளாதாரம் சுறுசுறுப்படையும் என்றும் அவர் நம்பினார்.

# மேற்கோள் நூற்பட்டியல்

# (Bibliography of Keynes Writings)

## (1) Books And Pamphlets By J. M. Keynes


Indian Currency and Finance, 1913.

The Economic Consequences of the Peace, 1919.

A Treatise on Probability, 1921.

A Revision of the Treaty, 1922.

A Tract on Monetary Reform, 1923.

The Economic Consequences of Sterling Parity, 1925.

A Short View of Russia, 1925.

Reflexions sur le franc, 1928.

A Treatise on Money, 2 Vols., 1930.

Essays in Persuasion, 1931.

Essays in Biography, 1933.

The Means to Prosperity, 1933.

The General Theory of Employment, Interest, and Money, 1936.

How to Pay for the War, 1940.


## (2) Books And Pamphlets By Keynes With Others


Keynes, J. M., and D. H. Henderson : Can Lloyd George Do it? 1929.

How to Conquer Unemployment, 1929.

Keynes, J. M., Sir A. Salter, Sir J. Stamp, Sir B. Blackett, H Clay, Sir W. H. Bevridge; The World's Economic Crisis and the Way of Escape, 1932.

## (3) Contributions By J. M. Keynes To Official Reports

Annex to the Report of the Royal Commission on Indian Currency, 1914.

Testimony before the Colwyn Committee; *see* Final Report of the Committee on National Debt and Taxation, 1927, Minutes of Evidence, pp. 277—287, and 534—540.

Speeches before the House of Lords, on :

Clearing Union (May 18, 1943, Hansard Lords, Vol. 127).

Bretton Woods Agreement (May 23, 1944, Hansard Lords, Vol. 131, pp. 838—849).

Anglo-American Financial Arrangement (Dec. 18, 1945 Hansard Lords Vol. 138, pp. 777-794).

Report on British Finance and Industry (Macmillan Report), 1931 Cmd. 3897. (Keynes was a member of the committee and signatory of report and Addendum I without reservations.)

Plan for an International Clearing Union, 1943 (Keynes greatly influenced this Plan).

## (4) Reviews By J. M. Keynes of Official Reports Etc.

Review of Report of the National Monetary Commission of the United States, 1912, EJ,, Mar., 1912, pp. 150-151.

"Report on Indian Paper Currency" EJ, Mar., 1912, pp. 145-7

Review of Report Upon the Operations of the Paper Currency Department of the Government of India, 1910-1911, EJ, Mar., pp. 145-149.

"Reports on Irish Finance," EJ, Sept., 1912. (a review of three official reports).

Review of Report the Commission on the Cost of Living in New Zealand, EJ, Sept, 1912, pp. 595-9.

"Tables Showing for 1910-11 the Estimated Value of Imports and Exports of the United Kingdom at Prices of 1900," EJ, Dec., 1912, pp. 630-631.

Keynes on the Departmental Committee on Matters Affecting Currency of the British West African Colonies and Protectorates, and Minutes of Evidence, EJ, Mar., 1913, pp. 146-7.

Review of Departmental Committee......... : The Currency of British West Africa, EJ, Sept, 1913.

"The Forty-Third Annual Report of the Deputy Master of the Mint. 1912," EJ, Mar., 1914.

"Currency in 1914" EJ, Mar., 1914, pp. 152—157. (Review of Forty Third Annual Report of Deputy Master of the Mint,)

"The Trade of India, 1913—14" EJ, Dec., 1914 pp. 639—642.

"The Report of the Committee on the Currency and Bank of England Note Issues, 1925," EJ, June, 1925, pp. 299-304.

"The United States and Gold", in European Currency and Finance (Commission of Gold and Silver Inquiry, U. S. Senate), EJ, 1925.

"The Committee on the Currency : Comment on Report" EJ, June, 1925.

"The Colwyn Report on National Debt and Taxation," EJ June, 1927, pp. 198—212.

"The Report of the Bank for International Settlements, 1933—34, " EJ, Sept., 1934, pp. 514—518.

"The Supply of Gold ", EJ, Sept., 1936, pp. 412—418.

## (5) Books Reviewed By J. M. Keynes

Walter Bagehot : The Works and Life of Bagehot, EJ, Sept., 1915, pp. 369—375.

Sir D. Barbour : The Standard of Value, EJ, June, 1913, pp. 390—393.

Chen Huang-Chang : The Economic Principles of Confucius and His School, EJ, Sept., 1912, pp. 584—588.

C. R. Fay : English Economic History, EJ, June, 1940, pp. 259—261.

M. M. Fishel: Le Thaler de Marie-Therese, EJ, 1914, pp. 257—260.

I. Fisher: The Purchasing Power of Money, EJ, June, 1911, pp. 393—398.

I. Fisher and H. G. Brown: The Purchasing Power of Money, EJ, Sept., 1911, pp. 393—398.

H G. Funkhouser: Historical Development of the Graphical Representation of Statistical Data, EJ, June, 1938, pp. 281—282.

W. I. J. Gun: Studies in Hereditary Ability, N & A, Mar., 27, 1926.

R. G. Hawtrey: Currency and Credit, EJ, June, 1920, pp. 362—365.

Sir Alfred Hoare: Unemployment and Inflation, EJ, 1933, pp. 474—475.

J. A. Hobson: Gold, Prices, and Wages, EJ, June, 1913, pp. 393—398.

A. M. Innes: What is Money? EJ, Sept., 1914, pp. 419—421.

T. S. Jevons: Theory of Political Economy, EJ, Mar., 1912, pp 78—80.

T. S. Jevons: The Future of exchanges and the Indian Currency, EJ, Mar., 1923, pp. 60—65.

J. W. McIbraith: The Course of Prices in New Zealand, EJ, Sept., 1912, pp. 595—598.

J. E. Meade: Consumers' Credits and Unemployment, EJ, Mar., 1938, pp. 67—71.

F. C. Mills: The Behaviour of Prices, (NBER), EJ, Dec., 1928, pp. 606—608.

L. V. Mises: Theorie des Geldes, EJ, Sept., 1914, pp. 417—419, and F. Bendixen: Geld and Kapital, ibid.

T. Morison: The Economic Transition in India, EJ, Sept. 1911, pp. 426—431.

J. F. Shirras: Indian Finance and Banking, EJ, June, 1920. pp. 396—397.

Wārren-Pearson : Interrelationships of supply and Prices, EJ, Mar., 1929, pp. 92—95.

M.de P. Webb : The Rupee Problem, EJ, Sept., 1010, pp. 438—440.

## (5a) Miscellaneous Reviews, Inclusive of Semi-Official Items

Review of The Works of Walter Bagehot, EJ, Sept., 1915, pp, 369—375.

"An American Study of Shares vs. Bonds as Permanent Investments," N & A, May 2, 1925, (Review of E. L. Smith : Common Stocks as Long-Term Investments).

"Trotsky on England," N & A, Mar. 27, 1926. (Review of Where Is Britain Going?).

"Mr. Churchill on the War," N & A, Mar.5, 1927. (Review of The World Crisis, 1916—1918).

"Russia and Britain : A Contrast" (About Loveday's Britain and World Trade) N & A, Nov. 8, 1930.

"Is There Enough Gold"? The League of Nations Inquiry," N & A, Jan.19, 1929.

"Mr. Churchill on the Peace" N & A, Mar. 9. 1929 (Review of The World Crisis : The Aftermath).

"The Bank for International Settlements : Fourth Annual Report, 1933-34" EJ, Sept., 1934.

"The Report of the Union Corporation for 1935," and other publications. EJ, Sept., 1936, p. 412 (see "The Supply of Gold").

"Professor Tinbergen's Method" (Review of Tinbergen's Statistical Testing of Business Cycles, I), EJ, Sept., 1939, pp. 558—578.

Tinbergen's "Reply," ibik., Mar., 1940, pp. 141 et seq., and Keynes' "Comment," ibid., Mar., 1940, pp. 154—156.

"The Process of Captial Formation", EJ, Sept., 1939, pp. 569—74. (Review of League of Nations' Statistics Relating to Captial formation, 1938).

See also, below, Section 6 (p). )

## (6) Articles By Keynes I

### (A) EMPLOYMENT, UNEMPLOYMENT, ETC.

Keynes, J. M, "Currency Policy and Unemployment," N&A Aug. 11, 1923.

What Can Great Britain Do?" NR, Aug. 15, 1923.

Anon. "Unemployment, Protection, and Stable Money," N &A, Nov. 10, 1923.

Keynes, J. M."Does Unemployment Need a Drastic Remedy?" N&A May 24, 1924.

Anon. "The Government and Unemployment," N&A, May, 31, 1924.

Keynes, J. M. "A Drastic Remedy for Unemployment : Reply to Critics N&A, June 7, 1924.

Anon. "Unemployment: The Blind Spot," N&A JY.4, 1925.

"Trifling with Unemployment," N&A, Nov. 26. 1927.

"Unemployment and Industrial Progress," N & A, Mar. 17, 1928.

"The Problem of the Distressed Areas," N&A Apr. 7, 1928.

"Unemployment and Treasury Policy," N&A, Aug. 4, 1928.

"The Need for Economic Preparedness,"N&A, Sept. 8, 1928.

"Unemployment and the Housing Subsidy," N&A, Nov. 17, 1928.

"The Objections to Capital Expenditure," N & A, Feb. 23, 1929.

"The Slum, the Taxpayer, and the Unemployed,"N&A, Mar. 2, 1929.

---

1. Anonymous article which appeared in N & A during Keynes' chairmanship may have been written by him, or at least may have been discussed with him before publication. When they seem to have been written by him or greatly influenced by him they are included here. (Mr. H. D. Henderson undoubtedly was responsible for many of the anonymous articles.)

"Mr. Lloyd George and his Pledge," N &A, Mar. 9, 1929.

"Unemployment Fallacies in the Open," N &A, Mar. 23, 1929.

"Ninepence for Nothing," N & A, Apr. 6, 1929.

"Mr. Churchill's Secret," N & A, April 13, 1929.

"The School Age and Unemployment," N & A, Jy. 13, .929.

"The Issue," N & A, Mar. 16, 1929.

"Is There Any Unemploment?" N & A May 4, 1929.

"Can Mr. Thomas Conquer Unemployment?" N& A, Jy. 27, 1929.

"Unemployment, Mr. Thomas, and the Bank," N&A, Oct. 12, 1929.

"Unemployment and the Budget," N & A, Mar. 15, 1930.

Keynes J. M. "The Industrial Crisis," N & A, May 10. 1930

Letter to the Editor on "Mr. Baldwin and Unemployment," N & A, August 2, 1930.

Anon. "The Menace of the Dole," N & A, Aug. 16, 1930.

"The Challenge of Unemployment" N & A, Aug. 30, 1930.

Keynes, J. M. "The Great Slump of 1930," N & A, Dec. 20 and 27, 1930.

"The Causes of World Depression," *Forum*, Jy. 1931.

Anon. "Dole Gatherers," N & A, Fed. 7, 1931.

Keynes, J. M. "An Economic Analysis of Unemployment," in *Unemployment as a World Problem* (Ed. Q. Wright) 1931, pp. 3-42.

"The Problem of Unemployment," *The Listener*, Jan. 14, 1931.

"The World's Economic Outlook," *Atlantic Monthly*, May 1932.

"A Programme for Unemployment," NST&N, Feb. 4, 1933.

"Letter to President Roosevelt" NYT, Dec. 31. 1933 (reprinted in NICB: *American Affairs*, Apr; 1946.)

"Mr. Roosevelt's Experiments," TL Jan. 2, 1934 (see editorial, comment, *ibid.*, Jan. 2, 1934, and other comments, *ibid*, Jan. 81934).

"The Progress of the United States in the Direction of Recovery," LA, Aug., 1934.

"The General Theory of Employment," QJE, 1936-37, pp. 20 9-223.

"How to avoid a Slump," LA, Mar., 1937.

Keynes J. M., and N. Kaldor, "Professor Pigou on Money Wages in Relation to Unemployment." EJ, Dec 1937, pp. 743-745.

(B) WAGES AND PRICES

Keynes J. M., in discussion of R. H. Hooker, "The Course of Prices at Home and Abroad, 1890-1911," JRSSI 1911, pp. 45-47.

Keynes J. M. "The Measure of Deflation-An Enquiry into Index Numbers," N & A, Oct. 27, 1923.

Anon. "The Inflation Bogey and the Moral," N & A, Oct, 27, 1923.

Keynes, J. M. "Sheltered and Unsheltered Price Levels," N & A, Fed. 26, 1927.

Anon. "The Background of Trade and Prices," N & A, June 29, 1929.

Keynes J. M. "The Question of High Wages," PG, Jan, 1930-pp. 110-124.

"Professor Pigou on Money Wages in Relation to Unemployment" EJ, Dec. 1937, pp. 743-745.

"Relative Movements of Real Wages and Output," EJ, Mar., 1939 pp. 34-51,

"The Objective of International Price Stability", EJ, June, Sept., 1943, pp. 185—187.

Keynes J. M. "Note," EJ, Dec., 1944, pp. 429—30.

## (C) CONSUMPTION, SAVING AND INVESTMENT

Keynes J. M. "M. Robertson on Saving and Hoarding," EJ, Dec , 1933, pp. 699—701. (See Robertson, *ibid.*, Sept. 1933, pp. 399—413; and Hawtrey and Robertson, *ibid.*, Dec. 1933.)

"Fluctuations in Net Investment in the United States," EJ,Sept., 1936, pp. 540—547.

"Mr. Keynes's Consumption Function: Reply," QJE, Aug., 1938, pp. 708—709 (a reply to Holden, *ibid.*, Feb., 1938; *see alsoKeynes, ibid* , Nov , 1938, p. 160; and Hoden's Rejoinder, *ibid)*

"Mr. Keynes on the Distribution of Income and the Propensity to Consume: A Reply," Res., Aug. 1939 p. 129 (See Staple, *ibid* Aug , 1938, pp. 128—141; and Aug., 1939, pp. 129—1 0.)

## (D) PUBLIC SPENDING AND TAXATION

Keynes, J. Mr. "The Inflation of Currency as a Method of Taxation" MGCRE, July 27, 1922.

Anon. "The Cant of Economy " N &A Apr. 23, 1927.

Keynes, J. M. "A Note on Economy," N & A, Apr. 30, 1927, and May 21, 1927.

Anon. "Economy or Development," N & A, July 30, 1927,

"The Labour Party's Surtax," N & A, Sept. 24, 1927.

"The Truth About Economy," N & A Oct. 29, 1927.

"The Sinking Fund Wangle," N & A, Apr. 28, 1928.

"The League, Economy, and Humbug," N & A, July 7, 1928,

"The Issues of the Derating Scheme", N & A, Nov. 24, 1928.

"The Conversion to National Development," N & A, Jan. 26. 1929.

"The Objections to Capital Expenditure," N & A, Feb. 23, 1929.

"The Slum, the Taxpayer, and the Unemployed," N&A Mar. 2, 1929. (See also under Section 6 (a) above )

"The Government's Decision," N & A, Apr. 20, 1929.

Keynes, J. M. "Mr. Snowden and the Balfour Note," N & A, Apr. 20, 1929.

Anon, "How much Taxation?" N & A, July 20, 1929.

Keynes, J. M., and H. D. Henderson, "The Cost of the Liberal Scheme," N & A, May 11, 1929 (reprinted in Can Lloyd George Do It?).

Anon. "The Coming Deficit," N & A, Nov. 23, 1929.
The Limits of Insular Socialism," Nov. 30, 1929.

Keynes, J. M. "The Treasury Contribution to the White Paper," N & A May 18, 1929.

Anon. "A New Sort of White Paper," N& A, May 18, 1929.
"The Problems of the New Government," N & A, June 8, 1929.

"The Revolt of the Commons," N&A, Dec. 14, 1929.
"The Labour Party and Expenditure," N & A, Jan. 11, 1930.

"Mr. Snowden's Problem," N & A, Apr. 5, 1930.

"In private Life We cut Our Coat According to our Cloth; as a Nation We reverse the Process" N & A, May 3, 1930.

"Taxing the Rich," N & A, May 3, 1930.

Keynes J M. "Spending and Saving," *The Listener*, Jan. 21, 1931 (reprinted in *Essays in Persuasion*).

Anon. "Economy," N & A, Feb. 14, 1931.

Keynes, J. M. "Some Consequences of the Economy Report," NST & N, Aug. 15, 1931 (reprinted in *Essays in Persuasion*).

"The Budget," NST & N, Sept. 19, 1931 (reprinted in *Essays in Persuasion.*)

"The Means to Propensity," TL, Mar. 13-16, 1933. (reprinted in an enlarged version as a pamphlet; *see* also letters and comments, *ibid.*, in the weeks following, interrogation of Keynes in the House of Commons, Mar., 1933, as well as Keynes "Reply").

Keynes J. M. "The Multiplier," NST & N, Apr. 1, 1933.

## (E) WAR ECONOMICS

Keynes J. M. "War and the Financial System, Aug., 1914," EJ, Sept. 1914, pp. 460—486.

"The City of London and the Bank of England," QJE, Nov. 1914, pp. 48—71.

"The Economics of War in Germany," EJ, Sept., 1915, pp. 443—452.

"Compulsory Saving," TL, Nov. 14, Nov. 15, and Nov. 29, 1939 (reprinted in *How to Pay for the War*).

"The Income and Fiscal Potential of Great Britain," EJ, Dec., 1939, pp. 626—635 (with two appendices by E. Rothbarth); see also, *ibid*, June, 1940.

"The Concept of National Income : *A Supplementary Note*," EJ, Mar. 1940, pp. 60—65.

"The Concept of National Income," EJ, Sept. 1940, pp. 340—342; Mar., 1940, pp. 61—65, and June-September, p. 341; Keynes, *ibid*, Dec., 1939; and see A. L. Bowley, *ibid*, pp 340—341 also and p 342; Bowley in *Manchester Statistical Society*, Nev. 8, 1939,. ("The Measurement of Real Income").

"British Finances after a year of war," *London Calling*, Oct. 1940.

## (F) REPARATIONS, INTERALLIED DEBTS, ETC.

Keynes, J. M. "Europe After the Treaty," NR, Jan. 14, 1920.
"How to Mend the Treaty," NR. Jan. 21, 1920.

"The Peace of Versailles," *Everybody's Magazine*, Sept. 1920.

(See Tardieux, *ibid*, Nov., 1920, and Keynes, *ibid*, Jan., 1921.)

"German Reparations Again," LA, Mar 12, 1921.

"America and the Peace Conference," LA, Aug. 1, 1921.

"La reconstruction de l'Europe," MGCRE, 1922—23.

"The Reconstruction of Europe: A General Introduction," MGCRE, May 18, 1922.

"The Genoa Conference," MGCRE, June 15, 1922.

"Is a Settlement of the Reparation Question Possible Now?" MGCRE Sept. 23, 1922.

"Speculation in the Mark and Germany's Balances Abroad" MGCRE Sept., 23, 1922.

"The State of Opinion in Europe — The Underlying Principles," MGCRE, Jan. 4, 1923.

"The German Officer and the French Reply," N & A, May 12, 1923.

"The International Loan," N & A, May, 26. 1923.

"The Situation in Germany," N & A, June, 9, 1923.

"The German Loan Delusion," NR. June, 13, 1923.

"The Austrian Loan and Reparations in South-Eastern Europe," N & A, June, 16, 1923.

"The Diplomacy of Reparations," NR, June 27, 1923.

"Mr. Baldwin's Prelude," N & A, July 21, 1923.

"Is a Settlement of Reparations Possible?" N & A, July 28, 1923.

"The Legality of the Ruhr Occupation," N & A, Aug. 18 and Aug. 25, 1923, NR, Aug. 29, 1923.

"The American Debt," N & A, Aug. 4 and Aug. 18, 1923.

"The Reparations Plan," NR, Aug. 8, 1923.

"How much has Germany Paid?" N & A, Oct. 27, 1923; NR Nov. 7, 1923.

Anon. "Reparations : The Next Phase," N & A, Mar. 29, 1924.

Keynes, J. M., "The Experts, Reports," N & A, Apr. 12 and Apr. 19, 1924.

"How can the Dawes Plan Work?" NR, Apr. 23, 1924.

Keynes, J. M. "The London Conference and Territorial Sanctions," N & A, July 26, 1942.

"The American Debt," N & A, Aug. 4, 1924.

"The Reparation Recovery Act," N & A, Sept. 20, 1924.

"The Dawes Scheme and the German Loan," N & A, Oct. 4, 1924.

"What the Dowes Plan will Do," NR, Oct. 22, 1924.
"The Inter-Allied Debts," N & A, Jan. 10, 1925, NR, Jan. 21, 1925.

"The Balfour Note and the Inter-Allied Debts," N&A Jan. 24, 1925 (reprinted in *Essays in Persuasion.*)
"Germany's Coming Problem," N & A, Feb. 6, 1926; NR, Feb. 17, 1926.

"The Need of Peace by Negotiation," NR, May 19, 1926.

"The Progress of the Dawes Scheme," N & A, Sept. 11, 1926; NR; Sept. 29, 1926.

"The Progress of Reparations," N & A, July 16, 1927.

"The Coming Crisis in Reparations," NR, August 3, 1927.

"The Financial Reconstruction of Germany," N & A, Jan. 7, 1928; NR. Jan. 25, 1928 (A review of *C. Bergmann The History of Reparations, and H. Schacht : The Stabilisation of the Mark.)*

"The Finnacial Path to Peace," NR. Jan. 18, 1928.

"The War Debts," N & A, May 5, 1928 (reprinted in *Essays in Persuasion*).

"The London View of the War Debts," NR, May 23 and July 4, 1928.

Anon. "Back to Reparations," N & A, Nov. 3, 1928.

Keynes, J.M. "A Rejoinder" to *The Reparation Problem* by Ohlin, EJ, Mar., 1929, pp. 179-182. (*See also* Ohlin, *ibid*; Rueff, *ibid* and Keynes, *ibid.*, pp. 1-7.)

"A Reply to 'A Criticism of Mr. Keynes" "View on the Transfer Problem" by A. Rueff, EJ, Sept. 1929, pp. 404–408. (*See also* Rueff in *Revued' Economie Palitique*, 1929, pp. 1067-1081.)

Anon. "Great Britain and Reparations," N&A, May 11, 1829.

Keynes, J.M. "Mr. Snowden and the Balfour Note," N & A, Apr. 20, 1929. "The Reparations Crisis," NR, May. 1,1929.

Anon. "Mr. Snowden's Diplomacy," N & A, Aug. 17, 1929.

Keynes, J.M. "The Report on the Young Committee," N & A, June. 15, 1929.

Anon. "Mr. Snowden's Victory and After," N&A, Aug. 31, 1929.

"The Hague Balance Sheet," N & A, Sept. 14, 1229.

Keynes, J.M. "The Draft Convention for Financial Assistance by the League of Nations," N & A, Mar. 8 and Mar. 15, 1930.letter to the Editor on "The Draft Convention for Financial Assistance by the League of Nations," N & A Apr. 5, 1930.

Anon. "Germany and Geneva," N & A, Sept. 20, 1930.

Keynes, J & M "Reaping the Whirlwind of the Peace Treaty," *Golden Book Magazine*, Jan., 1932.

"An End of Reparations?" NST & E, Jan. 16, 1932.

"Britain for Cancellation," NR, Jan. 27, 1932.

"A Policy for Lausanne," TL, June 15, 1932.

"The World Economic Conference, 1933," NST & N, Dec. 24, 1932.

## (G) EXCHANGES AND GOLD


Keynes, J.M. "The Forward Market in Foreign Exchange," MGCRE, Apr. 20 1922.

"The Stabilisation of the European Exchanges," MGCRE, Apr. 20, and Dec. 7, 1922.

"The Theory of Exchanges and Purchasing Power Parity," MGCRE Apr. 20, 1922.

"The Foreign Exchanges and the Seasons," N & A, May 19, 1923.

"Gold in 1923," N & A, Feb. 2, 1924, NR. Feb. 27, 1924.

"The Prospects of Gold," N & A, Feb. 16, 1924, NR. Mar. 12, 1924.

"The Franc," N & A, Mar. 15, 1924; NR, Mar. 26, 1924 (reprinted in *Reflexions sur le franc*).

Anon. "Professor Cassel's Advice," N & A, June 21, 1924.

Keynes, J & M "The Return Towards Gold," N & A, Feb. 21, 1925; NR., Mar. 18, 1925.

"The Problem of the Gold Standard," N & A, Mar. 21, 1925.

"Is Sterling Overvalued?" N & A, Apr. 4 and 18, 1925.

"Is The Pound overvalued? NR, May 6, 1925.

"The Gold Standard," N & A, May 2, 1925.

"The Gold Standard-A Correction," N & A, May 9, 1825.

"England's Gold Standard," NR, May 20, 1925.

Anon. "Gold and the Trade Outlook," N & A, May 30, 1925.

Keynes J. M., "The Gold Standard Act," EJ, June, 1925, pp. 312-313.

"The Arithmatic of the Sterling Exchange," N & A, June 13, 1925.

"Great Britain's Cross of Gold," N.R, Sept. 16, 1925.

"The French Franc," N & A, Jan. 9, 1926 (reprinted in *Reflexions sur le franc*); also NR, Jan. 27, 1926

"The French Franc-A Reply," N & A, Jan 16, 1926 (reprinted in *Reflexions*).

"Last Reflexions About the Franc," N & A, Jan. 30, 1926 (Reprinted in *Reflexions*).

"The First-Fruits of the British Gold Standard," NR, June, 2, 1926.

"The First Fruits of the Gold Standard," N & A, June 26, 1926.

"The Franc Once More," N & A, July 17, 1926 reprinted in) *Reflexions*).

"The Future of the Franc," NR, July 17, 1926.

"The Autumn Prospects for Sterling," N & A, Oct. 23, 1926.

"The Stabilisation of the Franc," N & A, June. 30, 1928; NR, July 18, 1928 (reprinted in *Essays in Persuasion*).

"The French Stabilisation Law," EJ, Sept., 1928, pp. 490-494.

"Is there enough Gold," N & A, Jan. 19, 1929.

Anon. "The Rock of Gold" N & A, Oct. 4, 1930.

"Notes on the Situation," NST & N, Aug. 20, 1931.

Keynes, J.M. "On the Eve of Gold Suspension," *The Evening Standard*, Sept 10, 1931 (reprinted in *Essays in Persuasion*)

"A Gold Conference," NST & N, Sept. 12, 1931.

"The End of the Gold Standard," *The Sunday Express*, Sept. 27, 1931 (reprinted in *Essays in Persuasion*).

"After the Suspension of Gold," TL, Sept. 28, 1931 (reprinted in *Essays in Persuasion*).

"The Prospects of the Sterling Exchange," YRZ, Mar., 1932

"Reflections on the Sterling Exchange, LBMR, Apr. 1932.

"The World Economic Conference," NST & N, Dec. 24, 1932.

"President Roosevelt's Gold Policy," NST & N, Jan 20, 1934.

"The Future of the Foreign Exchange," LBMR, Oct. 1935.

"The Supply of Gold," EJ, Sept., 1936, pp. 412-418.

Letter in: W. Luck, *Monetare Unabhangigkeit*, 1939.

## (H) OTHER ASPECTS OF INTERNATIONAL ECONOMIC RELATIONS

Keynes, J.M. "The Foreign Trade of the United Kingdom at Prices of 1900," EJ, Dec. 1912.

Anon. "Mr. Baldwin on Protection," CN & A, Nov. 3, 1923. "Free Trade," N & A, Nov. 24, and Dec. 1, 1923.

Anon. "The Fear of Peace," N & A, Dec. 8, 1923. "Free Trade for England," NR, Dec. 19, 1923.

"Economic Notes on Free Trade," NST & N Mar. 28, and Apr. 11, 1931.

"Foreign Investment and National Advantage," N & A, Aug. 9, 1924.

"Some Tests for Loans to Foreign and Colonial Governments," N & A, Jan. 17, 1925.

"The Problem of the Export Trades" N& A, Aug. 22, 1925.

Keynes, J.M. "Will England Restrict Foreign Investments," NR, Dec. 1, 1926.

"A Model Form for Statement of International Balances," Ej, Sept. 1927, pp. 472-476.

Anon. "The Balance of Trade," N & A, Oct. 1, 1927.

Keynes, J.M. "The British Balance of Trade, 1925-27," Ej, Dec. 1927 pp. 551-565.

"Note on the British Balance of Trade," Ej, Mar., 1928. pp. 146-47.

Anon. "The Trade Setback," N & A, June, 2, 1928.

"The Tariff Trend," N & A, June, 23, 1928.

"The Cabinet and Protection," N & A, Aug. 11, 1928.

"How Does Free Trade Stand," N & A, Aug. 25, 1928.

Keynes, J.M. "The United States' Balance of Trade in 1927," Ej, Sept., 1928, pp. 487–489.

Anon. "The Labour Party and Free Trade, N & A, Dec. 22, 1928.

"The McKenna Duties," N & A, Jan. 14, 1930.

"Our Heresy," N & A, Jan. 18, 1930.

"Empire Free Trade," N & A, Feb. 8, 1930.

"Mr. Baldwin's Surrender," N & A, Mar. 8, 1930, pp. 755-756 (about protection).

"The Bankers' Resolution," N & A, July. 12, 1930.

"Mr. Baldwin's Ideal," N & A, July. 26, 1930.

"The Empire at the Crossroads," N & A, Sept. 27, 1930.

"Imperial Preference," N & A, Oct. 18, 1930.

Keynes, J.M. "Proposals for a Revenue Tariff," NST & N, Mar. 7, and Mar. 21, 1931 (the first section reprinted in *Essays in Persuasion.*)

"Economic Notes on Free Trade," NST & N, Mar. 28, Apr. 4 and Apr. 11, 1931.

"National Self-Sufficiency," NST & N, July 8, and 15, 1933; YR, Summer 1933, (German Trans;, *Schmollers Jahrbuch*, Aug., 1933.)

"Economic Sanctions," NST & N, Sept, 28, 1935.

"The Balance of Payments of the United States," EJ, June, 1946, pp. 172-187.

(I) MONEY

Keynes, J.M. "The Recent Economic Events in India," EJ, Mar., 1909.

"The Prospects of Money, Nov. 1914," EJ, Dec., 1914, pp. 610-34.

"The Influence on Society of Changes in the Value of Money," MGCRE, July 27, 1922.

"Professor Jevons on the Indian Exchange"' EJ, Mar., 1923, pp. 60-65.

"The Speeches of the Bank Chairman," N & A, Feb. 23, 1924 (reprinted in *Essays in Persuasion*.)

Keynes with Canan, Sir Ch. Addis, and Lord Milner: "Monetary Reform," EJ, 1924.

Keynes, J. M. "A Comment on Professor Cannan's Article Limitation of Currency or Limitation of Credit?" EJ, Mar., 1924, pp. 65-68, (See Canan, *ibid.*)

"The Policy of the Bank of England," N &A, July 19, 1924.

In a discussion about A. Hoare, "The Bearing of Labour Unrest upon......Sound Currency," NRSS, 1925, pp. 395-397.

Keynes, J. M. "Speeches of the Bank Chairmen," N & A, Feb. 21, 1925, (reprinted in Essays in Persuasion).

"Mr. Mckenna on Monetary Policy," N&A, Feb. 12, 1927 (reprinted in *Essays in Persuasion*).

"The Amalgamation of the British Note Issues," EJ June 1928, pp. 321-328.

In a discussion about R. G. Hawtrey *"Money and Index Numbers,"* JRSS, 1930, pp. 86-88.

"A Rejoinder" to D. H. Robertson, EJ, Sept, 1931, pp. 412-423. (See Robertson, "Mr. Keynes Theory of Money," *ibid.*)

"Member Bank Reserves in the United States," EJ, Mar., 1932, pp. 27-31.

